# நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன்



முனைவர்
ந. சுபா ரமேஷ்

This Book is Published with the Financial Assistance of Thirumala Tirupathi Devasthanams, Tirupathi under their Scheme "Aid to Authors" to Publish Religious Books.



"ஆய்வுகள் அச்சேறி அழகிய நூல் வடிவம் பெற

நிதி உதவி செய்து தந்த

திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு

என் உளங்கனிந்த நன்றி.

# சமர்ப்பணம்



ஈன்று புறந்தந்து

என்னைச் சான்றோனாக்கிய

தாய் தந்தைக்கு

இந்நூலைச்

சமர்ப்பிக்கின்றேன்.

# முன்னுரை

"ஆயர்தம் கொழுந்து" என்று ஆண்டாள் நாச்சியாரால் அறிமுகப்படுத்தப்பட்ட கண்ணன் அன்பர்க்கு அன்பன், வம்பர்க்கு வம்பன், அறிஞர்க்கு அறிஞன், காதலர்க்குக் காதலன், ஆசாரியனும் அவனே சீடனும் அவனே இப்படிப் பல பாத்திரங்களில் இந்திய இதிகாச புராணங்களில் பக்தி இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள கண்ணன் அவதாரம் பற்றி, அவன் பிள்ளைத் திருவிளையாடல் பற்றி, அவன் இந்திய, உலக நலவாழ்வுக்கு ஆற்றிய பணிகள் பற்றி பல நூல்கள் எழுந்துள்ளன; பல ஆய்வுகள் தோன்றியுள்ளன அந்த ஆய்வுகளுள் ஒன்றே இன்று உங்கள் கையில் திகழும் "நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன்" என்று முனைவர் ந. சுபா ரமேஷ் படைத்து உருவாக்கியுள்ள இந்த நூல். இஃது இவர்தம் முனைவர் பட்ட ஆய்வேடு.

இந்நூலில் பண்டைய இலக்கியங்களில் கண்ணன், வைணவ சமயத்தில் கண்ணன், ஆழ்வார்கள் அனுபவித்த கண்ணன் திருவிளையாடல்கள், ஆழ்வார்களின் பக்தி அனுபவங்கள், ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவம், ஆழ்வார்கள் உணர்த்தும் வழிபாட்டு நெறிகள் என்னும் பொருள்களை உரிய சான்றுகளுடன் விளக்கி, நிறுவியுள்ளார் முனைவர். சுபா ரமேஷ்.

'மாயோன் மேய காடுறை உலகம் எனத் தொல் காப்பியத்தில் முல்லை நிலத் தெய்வமாகக் குறிக்கப்பெறும் கண்ணன் பின்னர் அனைத்து நிலத்தார்க்கும் உரிய கடவுளாகப் பெருந்தெய்வமாக வழங்கப் பெற்ற வரலாற்றைப் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம் அடிப்படையில் நூலாசிரியர் எடுத்துரைக்கின்றார். சங்க இலக்கியங்களில் 'சிலம்பில் கண்ணன்' குருந்து ஒசித்தது, நப்பின்னைத் திருமணம், குரவைக் கூத்து, ததிபாண்டவன் கதை, சீமாலிகன் வதம் ஆகியன சிறப்பாக அமைந்துள்ளதை ஆசிரியர் தனித்தெடுத்துத் தெளிவு செய்துள்ளார், வைணவம் பரிபாடல் வழி தமிழகத்தில் தோன்றி வளர்ந்ததை அதன் கண் இடம் பெறும் பாஞ்ச

ராத்திரக் கொள்கை, ஐவகை நிலை, தத்துவம் இவற்றின் வழி புலப்படுத்தியுள்ளார்.

அவதாரக் கோட்பாட்டைத் தனது அடிப்படையாகக் கொண்ட வைணவ சமய பக்தி இலக்கியமாக ஆழ்வார்களால் அருளப் பெற்ற திவ்வியப் பிரபந்தம் மானுட நிலையினை உணர்வு பூர்வமாக வெளிப்படுத்தும் இலக்கியமாகத் திகழ்வதால் திவ்வியப் பிரபந்தம் பொதுமக்கள் இலக்கியமாக இடம் பெற்றிருப்பதை ஆசிரியர் தக்க ஆதாரங்களுடன் எடுத்து விளக்கியுள்ளார்.

கண்ணனின் இளமைக் குறும்புகள், அவன் வீரதீரச் செயல்கள், அவன் இறைமைத் தன்மை, தமிழ் நாட்டு வழக்குகள் சில – இவை ஆழ்வார்கள் அனுபவித்த கண்ணன் திருவிளையாடல் பகுதியில் அமைந்துள்ளன. பாகவதப் புராணச் செய்திகளோடு ஆழ்வார்கள் தாமே அறிந்த சில கண்ணன் பிள்ளைத் திருவிளையாடல்களை ஆழ்வார் பாடியிருப்பதை ஆசிரியர் துல்லியமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

ஆழ்வார் பாசுரங்களின் வழி அவர் கண்ணனுடன் கலந்து பெற்ற அனுபவம்– ''மானுட உடம்பிலேயே ஒருவன் இறைவனுடன் கலந்து, திவ்விய ஞானம், திவ்விய சக்தி, ஆகியவை பெறமுடியும் தெய்வீக மனோபாவம் மற்றும் தெய்வீக ஆனந்தம் அடைய முடியும்'' என ஆசிரியர் இந்நூலில் தெளிவு செய்துள்ளார்.

கண்ணன் எளிவந்த தன்மையன். 'கண்ணி நுண்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய வண்ணன்'. அவன் எளிவந்த தன்மையை, அழியாப் பேரழகில் ஆழங்கால்பட்டு ஆழ்வார்கள் உற்ற இனிய அனுபவம் எல்லாம் தாம் பெற்றவாறே அனைவரும் பெற வேண்டி அருளிய செயல்களில் புதைந்து கிடக்கும் அனுபவ ஊற்றைக் கொண்டு வந்து காட்டுவது ஆழ்வார்கள் பக்தி அனுபவங்கள் என்னும் பகுதி.

பக்தி பாங்குகளில் தலைசிறந்தது நாயக – நாயகி பாவம். சங்ககால காதல், வீர பாடு பொருள்கள் பக்தி வைராக்கியங்களாக வைணவ ஆழ்வார் பாடல்களில் சைவ நால்வர் பாடல்களில் இடம் பெறலாயின. சங்க இலக்கிய காதல் ஆழ்வார் பாடல்களில் இடம் பெற்ற பாங்கும், மேலும் சங்க அக இலக்கிய நெறிகளிலிருந்து மேலும் வளர்த்த தனிச்சிறப்பும்

நூலாசிரியர் தன் நுண்மாண் நுழைபுலத்தால் வெளிக் கொணர்ந்து உரைத்துள்ளார்.

ஆண்டாள் நாச்சியார் திருமொழி "வாரணம்!' ஆயிரத்தில் பாடியுள்ள கனவுநிலைப் பாடல்கள் தமிழ் மரபிலிருந்து மாறிப் புதுமையாய் அமைந்துள்ளதை ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

மேலும் பறவைகளைத் தலைவனிடம் தூது விடும் அக இலக்கிய மரபை அடியொற்றி இறைவனின் பரம, வியூகம் எனும் ஐவகை நிலைகளிலும் தூது அனுப்பி ஒரு புதிய கோணத்தைத் தமிழ் இலக்கியத்திற்கு அளித்துள்ள சிறப்பும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

ஆழ்வார்களும் திருமங்கை ஆழ்வார் 'மடல்' எனும் ஒரு புதிய பிரபந்தத்தை உருவாக்கி அளித்ததும் பெரியாழ்வார் 'பிள்ளைத்தமிழ்'ப் பிரபந்தத்திற்கு முன்னோடியாக அமைந்ததும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது இறுதியாக இந்த இயலில் பழைய மரபினைப் பின்பற்றி, அதே நேரத்தில் அம்மரபுகளை மீறி ஒரு புதிய சிந்தனையில் பாடி இலக்கிய வரலாற்றில் ஒரு வளர்ச்சியை ஆழ்வார்கள் உண்டாக்கியது கண்டுரைக்கப் பெற்றுள்ளது.

இறுதியாக ஆழ்வார்கள் வழி நின்று 'நின்னைச் சரண் அடைந்தேன் கண்ணா நின்னைச் சரண் அடைந்தேன்' என்னும் பிரபத்தி நெறியாகிய சரணாகதி நெறியும், பூசித்தல், திருநாமங்களை ஓதி பூசை செய்தல் முதலிய கண்ணன் வழிபாட்டு முறைகளும் சொல்லப் பெற்றுள்ளன.

இவ்வாறு, அன்று தொட்டு இன்று வரை தமிழில் இடம் பெற்றுள்ள கண்ணன் பற்றிய செய்திகளைத் திவ்வியப் பிரபந்தத்தை மையமாகக் கொண்டு வந்துள்ள இந்த நூல் தமிழ் இலக்கிய, ஆய்வு அகங்களில் தவறாமல் இடம் பெற வேண்டிய இன்றியமையாத ஓர் ஆராய்ச்சி நூலாகவும் இதனைப் பன்னூல் கற்று — எளிய இனிய நடையில் கற்றார்க்கு ஒரு இனியமுதாய் வழங்கியுள்ள முனைவர். சுபா ரமேஷ் இத்தகு ஆராய்ச்சி பல செய்து தம்மையும் தமிழையும் வளர்த்துக் கொண்டு 'பல்லாண்டு பல்லாண்டு' வாழத் திருவேங்கடவனை நெஞ்சில் நிறுத்தி வாழ்த்துகிறேன்.

**பொன். சௌரிராஜன்.**
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
திருவேங்கடம் பல்கலைக்கழகம் திருப்பதி.



முனைவர்: **சு. வேங்கட்ராமன்**
பேராசிரியர் – துறைத்தலைவர்
இக்கால இலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை – 625 021

# அணிந்துரை

மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன் பற்றி விரிவாகவும், ஆழமாகவும் இந்த நூல் பேசுகிறது. இந்தியா முழுவதிலும், வேத காலத்திற்கு முற்பட்டே கண்ணன் பற்றிய கதை வழக்குகள் மக்களிடையே பரவி இருந்தன. நம் தமிழகத்தில் முல்லை நிலத்தில் காடு வாழ்சாதியாக வேட்டையாடி உண்ணும் ஆயர் இனக்குலத்துத் தலைவனாகத் தொடக்காலத்தில் கண்ணன் விளங்கியிருக்கிறான். குரவைக் கூத்து ஆடுபவனாக, நப்பின்னை மணாளனாக, வெண்ணைக்கு ஆடும் பிள்ளையாகக் கண்ணனைப் பற்றிய பல்வேறு வழக்குகளைப் பழந்தமிழர் அறிந்திருந்தனர். சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையில், பெண்கள் கூடி, கண்ணனின் இளம்பருவ விளையாட்டை – வாலசரிதை நிகழ்ச்சிகளை – குரவைக் கூத்தாக ஆடினர். இந்த வாலசரிதை, பிற்காலத்தில் மகாகவி பாஸனால் பாலசரித நாடகமாக உருப்பெற்றது. தமிழ்நாட்டில் இருந்ததைப் போல இந்தியாவில் பல்வேறு பகுதிகளில் கண்ணனைப் பற்றிய வாய் மொழிக் கதைகள் உலவின, இந்தக் கதைகளையெல்லாம், ஹரிவம்சம், விஷ்ணுபுராணம், பாகவத புராணம் போல்வன

புராணக் கதைகளாக வடித்துத்தந்தன. ஆயர்களின் இனக் குழுத் தலைவனான கண்ணனையும் பலராமனையும் வாசுதேவ சங்கர்ஷணனாகப் பிற்கால இலக்கியங்கள் குறிப்பாக நாராயண சூக்தம் போன்றவை நெறிப்படுத்தி, பரம் பொருளான நாராயணனின் அவதாரமாகக் கண்ணனை ஆக்கின. இந்த அடிப்படையில் தான், பரம், வியூகம், விபவக் கோட்பாடுகள் உருப்பெற்றன.

மிகப்பழமையான தமிழரின் முல்லை நிலக் கடவுளான கண்ணனைப் பற்றிய வழக்காறுகள் சங்கப்பாடல்களிலும் சிலம்பிலும் நிறைய இடம் பெற்றன.

அவற்றை உள்வாங்கிக் கொண்டு, புராண இதிகாச நூற்கள் காட்டிய நாராயணப் பரம்பொருளின் அவதாரமான கண்ணனைப் பாடும் மரபு பரிபாடல், சிலம்பு போன்ற பிற்காலச் சங்க நூற்களில் இடம் பெற்றது. இந்த அடிப்படையில் ஆழ்வார்கள், கண்ணனை முல்லை நிலத் தலைவனாகவும், புராணப்பரம் பொருளாகவும் ஒன்றுபடுத்தி தமிழ் வைணவ மரபை உருவாக்கித் தந்தனர். ஆழ்வார்கள் ஒவ்வொருவரும் தத்தம் அனுபவத்திற்கேற்பக் கண்ணனைக் கண்டு அனுபவித்து நமக்கும் காட்டினர், சான்றாகப் பெரியாழ்வார் கண்ணனின் இளம் பருவ ஆடல்களை மிகுதியும் பாட அவர் பெற்றெடுத்த பெண் பிள்ளையான ஆண்டாள், கண்ணனின் வீரச்செயல்களில் ஆழங்காற்பட்டு, அவனைக் காதல் நாயகனாகவே பாடினார். இத்தகைய, ஆழ்வார்கள் கண்ணனை அனுபவித்த அனுபவ வேறுபாடுகளை எல்லாம் மிக நுட்பமாகப் படித்து **இந்த நூலில் திருமதி ந. சுபா ரமேஷ்** தந்துள்ளார். ஆழ்வார்களின் பாசுரங்கள், அவற்றிற்கான உரைகள் முன்னையோர் திறனாய்வு என அனைத்தையும் பழுதறக் கற்று, இந்த நூலை அவர் படைத்துள்ளார். ஒவ்வோர் இயலிலும் தமிழ் மரபை. அதன் தனித் தன்மையை ஆசிரியர் நன்றாக விளக்கியுள்ளார்.

தொடக்க நிலையில், புதுவைப் பல்கலைக் கழகத்தில், முனைவர் பட்டத்திற்கு ஆய்வேடாக வழங்கப்பட்ட இந்தப் பணி, இப்போது நூலாக வெளிவருகிறது. நூல் நெடுகிலும் ஆய்வாளரின் கடுமையான உழைப்பை நன்கு காண முடிகிறது.

பொதுவாக இளைஞர்கள், சமய இலக்கியங்களில் ஈடுபடுவதும், ஆய்வு செய்வதும் மிகக் குறைவு. அரிய சவாலான ஒன்றாக விளங்கும் சமய இலக்கியத் துறையைத் தேர்ந்தெடுத்து, அதில் கடுமையாக உழைத்து, என்றும் நின்று நிலவும் ஓர் ஆய்வைச் செய்ததற்காக இந்நூலாசிரியரையும், அவரை நெறிப்படுத்திய பேராசிரியரையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும். ஆழமான புலமையும் இடைவிடாத உழைப்பு முடைய இந்த நூலாசிரியை சுபா ரமேஷ் தொடர்ந்து இது போன்ற நல்ல ஆய்வு நூல்களை எழுதி வெளியிட வேண்டுமென்று வாழ்த்துகிறேன். திருவேங்கடவன் சீர் அருளுக்கு இலக்காகிய இந்நூலாசிரியரின் தமிழ்ப்பணி சிறக்க வாழ்த்துவதோடு, இந்த அரிய நூலைத் தமிழ் மக்கள் வரவேற்றுப் போற்றவும் வேண்டுகிறேன்.

மதுரை
21—08—02

**சு. வேங்கடராமன்**



முனைவர்.
**நாகப்பா. நாச்சியப்பன்**
பேராசிரியர்
சுப்பிரமணிய பாரதியார்
தமிழ்மொழி
இலக்கிய உயராய்வுப்புலம்
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி – 605 014

# வாழ்த்துரை

தமிழ் மொழியில் இலக்கிய ஆய்வு என்பது பண்டு தொட்டு நடந்து வருகின்ற ஒன்றாகும் தமிழ் இலக்கியத்தை முதன் முதலில் ஆய்வு செய்த பெருமைக் குரியவர்கள் இலக்கண ஆசிரியர்கள். இவர்கள் தாம் தமிழ் இலக்கியத்தை முறையே நன்கு ஆய்வு செய்து அதற்கு இலக்கணம் கண்டார்கள். இவர்கட்கு அடுத்து உரையாசிரியர்கள் தத்தம் துறையில் தோய்ந்து நின்று நூலுக்கு உரை காணுமுகமாக ஒரு பெரிய ஆய்வையே நிகழ்த்தியுள்ளனர். நூல்களைச் செம்மையாகப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களும் தத்தமளவில் ஆய்வு நோக்கோடு நூலைப் பகுத்து ஆய்ந்து பதிப்பித்துள்ளனர். இவ்வாறு ஆய்வு முறை என்பது வாழையடி வாழையென தொடர்ந்து தமிழ் உலகில் அமைதியாய் நடந்து கொண்டிருப்பது கண்கூடு.

தமிழ் இலக்கிய உலகில் மனித நேயத்தை அடிப்படையாக வைத்து மாந்த உறவுகள் பலப்படுவதற்காக தோன்றிய இலக்கியங்கள் பக்தி இலக்கியங்கள். பக்தி என்றாலே அன்பு, அருள் என்று பொருள்படும். இறைவனைப் 'பக்தி வலையிற் படுவோன் காண்க' என்பது திருவாசகம். பக்திக்கு முன்னால் சாதி,} இன, குலவேறுபாடுகள் எதுவுமில்லை. இவை பின்னர்

வந்த விரிவிலா அறிவினோர்கள் செய்த சிறுசெயல் என்றே கூற வேண்டும். இத்தகைய தன்னலவாதிகளின் பிற்போக்கு எண்ணத்தை வைத்துக் கொண்டு பக்தி இலக்கியத்தையே குறை கூறுவது ஒரு விதமான அரை வேக்காட்டுத் தனமாகும். பக்தி இலக்கியங்களில் பெரும் பங்கு வகிக்கும் சமயங்கள் சைவம், வைணவம். இவையிரண்டும் நம் மண்ணில் தோன்றி இன்று உலகையே வியாபித்து வளர்ந்து வந்து கொண்டிருக்கும் சமயங்களாகும்.

பக்தி இயக்கத்தில் சாதி, குல, இன வேறுபாடுகளை மறந்து அனைவரும் அடியவர்கள் என்ற எண்ணமே மேலோங்கி இருந்தது. 'அன்னவரே தலைவர் அவர்க்குச் சரண் நாங்களே' என்று ஆண்டவனைத் தலைமைப்படுத்தி அவருக்கு அடித் தொண்டு புரிவதிலேயே ஆன்ம இன்பம் கண்டவர்கள் அடியார்கள். ஆண்டவன் தலைமையை விடுத்து நாட்டை ஆள்பவன் தலைமைக்கு. என்று மக்கள் சமுதாயம் தம்மை ஆட்படுத்திக் கொண்டதோ அப்பொழுதே இச்சமுதாயத்தில் சாதி, குல, இன வேறுபாடுகள், உயர்வு தாழ்வு மனப்பான்மை தாழ்த்துவோர் தாழ்த்தப்படுவோர் என்ற சமுதாய நோய் பற்றிக்கொண்டது. அந்தக் கொடிய சமுதாய நோயினால் பாதிக்கப்பட்டோர், நோயைக் குறை கூறாது நோய் இருந்த பயிரையும் விளைந்த நிலத்தையும் குறை கூறத் தொடங்கினர். பாதுகாக்கின்ற ஆட்சியாளன் சரியாக இருந்தால் பயிரும் நிலமும் பாழ்பட்டுப் போயிருக்காது. ஆகவே பிற்கால பிற்போக்கு எண்ணங்களை உயர்ந்த நோக்குடைய பக்தி இலக்கியங்களில் பதித்துப் பார்க்கக் கூடாது. அவ்வாறு பார்ப்பது தோற்றப்பிழை.

நாலாயிரத் திவ்யபிரபந்தத்திலும் பன்னிரு திருமுறையிலும் சமுதாய உயர் நோக்குக் கொண்ட பிரசுரங்களும் பதிகங்களும் பொதிந்து உள்ளன. அவன் மனம் நமக்குக் கோயில் அவனுரை பலவும் வேதம், அவன் முயல் தொழில்களெல்லாம் அறத் தொழில் ஐயமில்லை என்று வேட்டுவத் தொழில் புரிந்த வேடுவனான திண்ணப்பரைத் தலைவனாகப் பார்த்து சிவகோசரியாரின் ஆகமநெறியினும் திண்ணப்பரின் அன்பு நெறியே உயர்ந்தது என்று காட்டியது சைவம். தமிழிசை பாடிய திருப்பாணாழ்வாரை வேதம் வல்ல வேதியர்கள் சுமந்துவர

திருவோலக்கம் கண்டவர் திருவரங்கமா நகருளார் என்பது வரலாறு கண்ட உண்மை. வேளாளர் குலத்தைச் சார்ந்த திருநாவுக்கரசரை வேதியர்குலம் சார்ந்த அப்பூதியடிகள் தலைவராகக் கொண்டார் என்பது சைவம். வேளாளர் குலத்தைச் சார்ந்த நம்மாழ்வாரை வேதியர் குலம் சார்ந்த மதுரகவியாழ்வார் இறைவனாகவே பார்த்தார் என்பது வைணவம்.

பரம்பொருளான கண்ணனே அரசவை விட்டு ஆய்ப்பாடியில் வளர்ந்து அனைவரும் சமம் என்பதை உணர்த்தினான். இத்தகைய அரும் பெருங்களஞ்சியமான ஆழ்வார்களின் அருளிச் செயல்களை பலர் பல நோக்கில் அனுபவித்து உரை எழுதியுள்ளனர், நூல்பல கண்டுள்ளனர். ஆய்வுகள் பல செய்துள்ளனர். தசாவதாரத்தில் ஓர் அவதாரமான ஆய்ப்பாடி நாயகனை ஆழ்வார்கள் எப்படியெல்லாம் பார்த்துள்ளனர் வைணவசமயம் எப்படியெல்லாம் இடமளித்துள்ளது. என்பதனைக்காண வேண்டி 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன், எனும் ஆய்வுத் தலைப்பில் திருமதி ந. சுபா ரமேஷ் அவர்கள் எங்கள் மையத்தில் முனைவர் பட்டத்திற்கு ஆய்வு செய்தார்கள். புதுவையின் புகழ் பூத்த விழாக்களுள் ஒன்றான' 'மாசிமகப் பெருவிழா' பற்றி ஆய்வு செய்து இவர்தம் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றார் இவர் தந்தையார் திரு. நரசிம்மன் அவர்கள் புதுவை அரசின் கல்லூரிகளில் தமிழியல் ஆய்வு தொடங்கப் பெருங் காரணமாய் அமைந்தவர். அவருடைய அன்றைய உழைப்பு இன்று பல ஆய்வாளர்கள் ஆய்வுப்பட்டம் பெறுதற்கு வாய்ப்பளித்துள்ளது.

வைணவ சமயத்தின் மீது இருந்த பற்றும் தமிழ் மொழியி விருந்த வேணவாவும் திருமதி ந. சுபா ரமேஷ் அவர்களை இன்று இவ்வுயர் நிலைக்குக் கொண்டு வந்துள்ளது. வைணவம் என்பது திளைக்கத் திளைக்கத் தெவிட்டா இன்பம் தருகின்ற தத்துவப் பெருங்கடல் இக்கடலில் மூழ்கி தத்துவ முத்துக்களை எடுத்த மகான் ஸ்ரீ இராமானுஜர், பிள்ளை உலகாசிரியர், முதலியோரும் உண்டு. பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை, நஞ்சீயர்; பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கரா சாரியார் போன்ற அறிஞர் பெருமக்களும் உண்டு. திருமதி ந. சுபா ரமேஷ் அவர்கள் உலகியல் பட்டம் பெறுதற் பொருட்டு

'நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில் கண்ணன்' எனும் இவ்வாய்வு நூலை இவண் வெளிக் கொணர்ந்துள்ளார். இந்நூல் வைணவப் பெருங்கடலில் இவர் அள்ளி முகந்த கையளவுக்' கடல்நீர், இன்னும் இவர்காண நன்முத்துக்களும் பவளங்களும் வைணவப் பெருங்கடலில் பொதிந்துள்ளன. ஸ்ரீமதே பூவராக மூர்த்திபோல் பொதிந்துள்ள உண்மைகளை இவர் உலகறியச் செய்ய வேண்டும். அழகும் அறிவும் ஆற்றலும் ஒருங்கிணைந்த ஸ்ரீ லட்சுமி நரசிம்மப் பெருமான் இவருக்கு மனத்திட்பமும் அறிவுக் கூர்மையும் தந்து இவரால் தமிழும் வைணவமும் தழைத்தோங்க அருள்பாலிக்க வேண்டும் என்று எல்லாம் வல்ல எம்பெருமானை வேண்டி வாழ்த்துகிறேன். வையகம் தழைக்க, வளர்தமிழ் தழைக்க வைணவம் சிறக்க வாழ்க பல்லாண்டு! வாழ்க பல்லாண்டு!

73, தூய ரோஸாரியோ வீதி
முத்தியால் பேட்டை
புதுச்சேரி 605003

அன்பன்

நாகப்பா, நாச்சியப்பன்

# என்னுரை

தமிழக வரலாற்றில் பல்லவர் காலத்தைப் பக்தி இயக்கத்தின் பொற்காலம் என்று கூறுமளவிற்கு ஆழ்வார்களின் இலக்கியத்தொண்டு சிறப்பிற்குரியதாகும். தமிழ் மண்ணில், வைணவ எழுச்சி தோன்றுவதற்கு ஆழ்வார்கள் காரணமாவர். அவர்கள் கண்ணனை நாராயணனாகக் கருதியும், நாராயணனைக் கண்ணனாகப் போற்றியும் வந்திருக்கின்றனர். ஆழ்வார்கள் கண்ணன் மீது கொண்ட ஆழ்ந்த பக்திக்குக் காரணம், கண்ணனது அழகியல் இன்பம் என்று கூறலாம். அந்த அளவிற்குக் கண்ணனின் செயல்களில் ஆழங்கால்பட்டு, கண்ணனை முழுமையாகவும், பல்வேறு கோணங்களிலும் அனுபவித்திருக்கின்றனர். இந்த வகையில் "நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன்" என்ற பெயரில் 1997–ல் புதுவைப் பல்கலைக்கழகத்தின் மூலமாக முனைவர் பட்டம் பெற்ற ஆய்வே தற்பொழுது நூல் வடிவம் பெற்றுள்ளது.

மங்களாசாசனம் (பாடல் பெற்ற) செய்யப் பெற்ற திவ்விய தேசங்களில் எழுந்தருளியுள்ள திருமால் வடிவங்களை, ஆழ்வார்கள் கண்ணனாகக் கண்டு பாசுரங்கள் அருளியுள்ளனர். கண்ணன் என்ற அழகிய உருவத்தைப் பல்வேறு நிலைகளில் அனுபவித்துப் பாடியுள்ளனர். ஆழ்வார்கள், திருமாலின் எல்லா உருவங்களையும் கண்ணன் என்றே எண்ணி வழிபட்டதையும், கண்ணனுடன் அவர்கள் கொண்ட அனுபவங்களையும் எடுத்துக் காட்டுவதே இந்நூலின் நோக்கமாகும்.

கண்ணன் வழிபாடு, தமிழ் மண்ணின் ஒரு நிலத்துத் தெய்வமாக உருவாகி, இன்று கடல் கடந்த அளவில் தனிப் பக்தி இயக்கமாக உருப்பெற்றுள்ளது. அந்த அளவிற்குக் கண்ணனின் செயல்கள் மக்கள் மனதை ஈர்த்துவிட்டன. பாகவத சமயமாகத் தோன்றிய கிருஷ்ண வணக்கமானது, வைணவ சமயத்தில் பெருந்தெய்வ நிலைக்கு உயர்ந்து, வைணவ வழிபாட்டில் கலந்துவிட்டது.

ஆய்வுலகில் வைணவ சமயத்தைப் பற்றிப் பல்வேறு ஆய்வுகள் வெளிவந்துள்ளன. வைணவ சமயத்தின் மூலக் கடவுளான திருமாலே கண்ணன் என்று கருதப்படுகிறது. திருமாலின் அவதாரமாகக் கருதப்படும் கண்ணனைப் பற்றியும் சிலர் ஆய்வுகள் செய்துள்ளனர். சு. வள்ளியம்மாளின் "வில்லி பாரதத்தில் கண்ணன்";இந்திரா பார்த்தசாரதியின் "தமிழிலக்கி யங்களில் கண்ணன்"; ச. அமிர்தவல்லியின் "சங்க இலக்கியத்தில் திருமால் நெறி" த. தனபாக்கியவதியின் "தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு ஓர் ஆய்வு" முதலியவை ஆய்வு முன்னோடிகளாகத் திகழ்கின்றன. இவ்வாய்வுகளின் தொடர்ச்சியாக ஆழ்வார்கள் அனுபவித்த கண்ணனை ஆய்வுப் பொருளாகக் கொள்வது என்று முடிவெடுக்கப்பட்டு, "நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன்" என்ற தலைப்பில் நூல் வடிவம் பெற்றுள்ளது.

திவ்வியப் பிரபந்தத்தில் இடம்பெறும் கண்ணனைப் பற்றிய குறிப்புக்களை மட்டும் முதன்மை ஆதாரங்களாகக் கொண்டு இந்நூல் ஆராய்கிறது. கண்ணனின் செயல்களைக் கூறும் முறையில் ஆழ்வார்களிடையே இருக்கும் வேறுபாட்டினை விளக்கமாக எடுத்துரைக்கிறது. மேலும், புராணங்களிருந்து ஆழ்வார்களின் கருத்துக்கள் வேறுபடுகின்றனவா அல்லது ஒன்றுபடுகின்றனவா என்ற நோக்கில் பாகவதம், விஷ்ணு புராணம், ஹரிவம்சம் முதலிய புராணங்கள் துணை புரிகின்றன. ஆய்வு முறையில் விளக்கமுறை, மற்றும் ஒப்பீட்டு முறையில் அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

இந்நூல், ஆறு இயல்களைக் கொண்டதாக அமைகிறது.

1. பண்டைய இலக்கியங்களில் கண்ணன்
2. வைணவ சமயத்தில் கண்ணன்
3. ஆழ்வார்கள் அனுபவித்த திருவிளையாடல்கள்
4. ஆழ்வார்களின் பக்தி அனுபவங்கள்
5. ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவம்
6. ஆழ்வார்கள் உணர்த்தும் வழிபாட்டு நெறிகள்

ஆழ்வார்கள் காலத்திற்கு முன்பு, கண்ணனின் செல்வாக்கு தமிழகத்தில் எவ்வகையில் நிலவி இருந்தது, சங்கப் புலவர்கள் கண்ணன் செயல்களை எடுத்துக் கூறிய முறை, பலராமன் -

கண்ணன் இணைவு, நப்பின்னையைக் கண்ணனோடு இணைத்துக் கூறிய முறை, ஆகியவற்றை விரிவாக எடுத்தியம்பு வதாக முதல் இயல் அமைகிறது. பண்டைய இலக்கியங்களில் குறிப்பிடப்படும் மாயோன் என்பது கண்ணனைக் குறிக்கிறது என்பதும் சுட்டிக் காட்டப்படுகிறது.

'வைணவ சமயத்தில் கண்ணன்' என்பது இரண்டாவது இயலாகும். வைணவ சமயத்தில் குறிப்பிடப்படும் இறைவனின் ஐவகை நிலைகள், அவதாரக் கருத்துக்கள், கண்ணன் அவதாரத்தின் சிறப்பு, வைணவ சமயத்தில் கண்ணனுக்குரிய சிறப்பிடம், ஆழ்வார்களின் ஈடுபாடு என்பன பற்றி எடுத்தியம்புவதாக இவ்வியல் அமைகிறது. வைணவ சமயத் தின் பரம்பொருளாகக் கருதப்படும் நாராயணனோடு கண்ணன் ஒன்றுபடுத்தப்பட்டுள்ளதால் இவ்வியல் உருவாக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்கள் அனைவரும் ஈடுபட்டது கண்ணன் அவதா ரத்தில் ஆகும். அவனுடைய திருவிளையாடல்கள், சௌலப் பிய நிலை ஆழ்வார்களைக் கொள்ளை கொண்டுள்ளதால், அவனது திருவிளையாடல்களை மீண்டும் மீண்டும் பாடி அனுபவித்துள்ளனர் என்பதனை "ஆழ்வார்கள் அனுபவித்த திருவிளையாடல்கள் என்ற மூன்றாவது இயல் எடுத்தியம்பு கிறது. கண்ணன் திருவிளையாடல்களைப் பேசுவதில் ஆழ்வார் களுக்குள்ள வேறுபாடு, புராணத் தாக்கம், கல்பபேதம், தமிழ் நாட்டு வழக்குகளில் இருந்த கண்ணன் செயல்கள் ஆகிய செய்திகள் பற்றி விரிவாக விளக்குமுகத்தான் இவ்வியல் அமைகிறது.

கண்ணனின் திருவிளையாடல்களில் ஆழங்கால்பட்டதன் விளைவாக ஏற்பட்ட பக்தி அனுபவங்கள், அகப்பொருள் அனுபவங்கள், மக்களை நெறிபடுத்தும் வழிபாட்டு நெறிகள் ஆகிய அனுபவங்களை ஆழ்வார்களிடத்துக் காண வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

"ஆழ்வார்களின் பக்தி அனுபவங்கள்" என்பது நான்காவது இயலாக அமைகிறது. ஆழ்வார்களின் மெய்யுணர்வு அனுபவங் களைப் பகுத்தும் தொகுத்தும், கண்ணனது திருவுருவ அழகு

பற்றி முதலில் விளக்கப்பட்டுள்ளது. அவ்வுருவ அழகில் தம்மை மறந்த நிலையில், அவனை அடைய அவர்கள் மேற் கொண்ட அனுபவ நிலைகள் சிறப்பாக எடுத்துரைக்கப் படுகின்றன. இதன் மூலம், அவர்கள் அனுபவித்த இறைவனை எல்லோரும் அனுபவிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் மக்களையும் ஆற்றுப்படுத்துகின்றனர் என்பது இதன் மூலம் தெரிய வருகிறது. கண்ணன் அருள் பெற விழைவதும், அவனது காட்சி கிடைக்கப்பெற்று அவ்விறையனுபவம் பற்றிப் பேசி மகிழ்வதும், மீண்டும் அவ்வின்பம் கிடைக்கப் பெறாமையால் புலம்புதலுமான உணர்வுகளை ஆழ்வார்கள் காட்டியுள்ளனர் என்பதனையும் இவ்வியலில் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

"ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவம்" என்பது ஐந்தாவது இயலாகும். இறைவனது அருள் கிடைக்க அவர்கள் மேற்கொண்ட முறைகளில் நாயக – நாயகி பாவனையும் ஒன்று. ஆழ்வார்கள், கண்ணனைக் கண்டு, தாம் பெண் நிலை ஏறிட்டுப் பேசிய இடங்கள் இவ்வியலில் சுட்டிக்காட்டப்படுகின்றன. நாயகி நிலையில் நின்று பேசியதோடு மட்டுமன்றித் தாய், நிலை, தோழி நிலை, ஆகிய பாவனைகளிலும் தம்மை மாற்றிக் கொண்டு பாசுரங்கள் அருளிச் செய்துள்ளனர். கண்ணன் அவதாரத்தைப் பற்றி பேசுவதால் 'கோபிகை' பாவனையிலும் ஏறிட்டுப் பாசுரங்கள் பாடியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். ஆகவே, இறைவன் மீது கொண்ட அதிக அளவான காதலன்பு – பகவத் காமம் இவற்றின் உணர்வே இவ்வாறு அகப்பொருள் நிலையில் பாடச் செய்துள்ளது. தமிழிலக்கிய அகப்பொருள் மரபினைப் பின்பற்றி அவர்கள் பாடியிருப்பினும், சில புதிய உத்திகளையும் பயன்படுத்தி, இவ்விறை உணர்வினை வலியுறுத்திக் காட்டியுள்ளனர்.

கண்ணனது அருள் கிடைக்கப் பெற்ற அவர்கள், தாம் பெற்ற அவ்விறை இன்பத்தை மற்றவர்களும் பெற முடியும் என்பதனை வலியுறுத்தவே விரும்பியுள்ளனர். அதன் விளைவு தான் அவர்கள் உணர்த்திய வழிபாட்டு நெறியாகும். மக்களால் எளிதில் அவனது திருவடியைப் பெற முடியும் என்பதற்காகத் தம் அனுபவங்களை எடுத்துக்கூறி, மக்களைப் பின்பற்றவும் அறிவுறுத்தினர். கண்ணன் திருப்பெயர் சிறப்பு, திருத்தலச் சிறப்பு, எளிமையான வழிபாட்டு முறைகள் ஆகியன பற்றி

விளக்குவதாக "ஆழ்வார்கள் உணர்த்தும் வழிபாட்டு நெறிகள்" என்ற இந்த ஆறாவது இயல் அமைந்துள்ளது.

இந்நூலின் ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அவ்வவ் வியலால் அறியலாகும் உண்மைகள் தொகுத்துக் கொடுக்கப் பட்டுள்ளன. இருப்பினும் வழக்கத்திற்காக ஆய்வு முடிபுகள் நிறைவுரைப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் 'கண்ணன்' என்ற பெயரைக் குறிக்கக் 'கிருஷ்ணன்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மேலும், 'யசோதையைக் குறிக்க' 'அசோதை' என்ற சொல்லும் 'திருமாலை'க் குறிக்க 'விஷ்ணு' என்ற பெயரும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

— ஆசிரியர்

# நன்றியுரை


திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன் பற்றிய முனைவர்ப்பட்ட ஆய்வை நூல் வடிவமாக வெளியிட அனுமதி அளித்த புதுவைப் பல்கலைக் கழகத்திற்கு நன்றியுடையேன்.

தமிழாய்வுப் பணியில் என்னைப் பயிற்றுவித்து, ஆய்வின் உருவாக்கத்திற்குப் பல்லாற்றானும் துணை நின்று என்னை நெறிப்படுத்தியும் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியும் சிறப்பித்த பேராசிரியர் முனைவர். நாகப்பா. நாச்சியப்பன் அவர்களுக்கு நன்றி கூறுவதில் வாழ்நாள் முழுவதும் கடமைப் பட்டுள்ளேன்.

என் ஆய்வுப் பணி செம்மையுற அரிய பல கருத்துக்களைக் கூறி ஆய்வின் செம்மைக்குத் துணை நின்ற நெறியாளர் குழுப் பேராசிரியர்சள் மதுரைக் கல்லூரிப் பேராசிரியர் Dr. இரா. அரங்கராஜன் அவர்களுக்கும் Dr. இரா. இராஜ கோபாலாச்சாரியார் அவர்களுக்கும் நன்றி கூறுவதில் பெருமை கொள்கிறேன்.

ஆய்வு செய்கின்ற காலத்தில் தக்க கருத்துக்களை எடுத்துச் கூறியும், பல நூல்களைத் தந்து உதவிய பேராசிரியர்களான Dr. சாரதாகலாவதி, Dr. ந. ஜெகதீசன், Dr. பத்மாசினி ஆகியவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்விற்குத் தேவையான பெரும்பாலான நூல்களைத் தேடித்தந்த புதுவைப் பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டு நிறுவனத்திற்கு (FRENCH INSTITUTE) எனது நன்றி.

எனது ஆய்வுப் பணி செம்மையான முறையில் நிறைவேற ஊக்கமளித்த எனது பெற்றோருக்கு மகளாகப் பிறந்ததில் பல்லாற்றானும் பெரும் பேறாகக் கருதுகிறேன்.

இந்த ஆய்வானது நூல் வடிவம் பெற பல்லாற்றானும் துணை நின்ற பேராசிரியர் Dr. சிலம்பு செல்வராசு, (புதுவை மொழியியல் பண்பாட்டு மையம்) அவர்களுக்கு நன்றி கூறிவதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறேன்.

இந்த ஆய்வினை நூல் வடிவமாக்க நிதி உதவி அளித்த திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் மனங்கனிந்த நன்றி.

இந்நூலுக்கு முன்னுரை வழங்கி சிறப்பித்த முனைவர். பொன். சௌரிராஜன் அவர்களுக்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன். மேலும், வாழ்த்துரை வழங்கிய மதுரைப் பல்கலைக்கழகப் பேராசிரியர். முனைவர் சு. வெங்கட்ராமன் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு செய்கின்ற காலத்தில் மனமுவந்து உதவி செய்த நண்பர்களான சா. ரகுராமன், ஆர். சிவக்குமார், ஆ. சுசித்ரா, அ. மலர் ஆகியோர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்க வார்த்தையே இல்லை.

ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின் ஒரு பெண் இருக்கிறாள் என்று கூறுவர். ஆனல், வாழ்க்கையில் ஒரு பெண்ணின் வெற்றிக்குப் பின் ஒரு ஆண் இருக்கிறான் என்பது (திருமணத்திற்கு முன்பு தந்தை, திருமணத்திற்குப் பின் கணவர்) உண்மையாகியுள்ளது. ஆகவே, சிறந்த முறையில் நூல் அச்சேறி வெளிவர இருக்கும் ஒவ்வொரு பணிக்கும் துணை நின்ற எனது கணவர். திரு. ரமேஷ் அவர்களுக்கு எழுத்தளவிலும் சொல்லளவிலும் மட்டும் நன்றி கூறஇயலாது. காரணம் அந்த அளவிற்கு என்னை ஊக்குவித்தவர், எனது வெற்றியெல்லாம் அவரையேசாரும் என்று கூறுவதில் பெருமை கொள்கிறேன்.

நூலின் அட்டைப்படம் செம்மையாக அமைய பல்லாற்றினும் உதவிபுரிந்த எனது தங்கை பத்மாவிற்கும், திரு. சதீஷ் (முத்ரா டைப் செட்டர்ஸ் புதுவை) அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவிக்கிறேன்.

நூலின் அட்டைப்படத்திற்காக கிருஷ்ணன் நிழற்படத்தைப் (Photo) பயன்படுத்திக் கொண்டத்திற்கு அகில கிருஷ்ண பக்தி இயக்கத்திற்கு (ISKCON) நன்றி தெரிவிக்கிறேன். சிறப்பாக அட்டைப்படத்தினை வடிவமைத்துக் கொடுத்த புதுவை அரவிந்த் கிராபிக்ஸ் உரிமையாளருக்கு எனது நன்றி.

இந்நூலினை விரைவில் வெளியிடுவதற்கு என்னை ஊக்கப் படுத்திய சேலம் ஏ. வி. எஸ். கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் தாளாளர் திரு. கே. இராஜவிநாயகம் அவர்களுக்கு நன்றி கூறுவதில் பெருமை கொள்கிறேன்.

நூலை சிறந்த முலறயில் அச்சேற்றி குறுகிய காலத்தே முடித்து தந்த சிதம்பரம். சுபம் பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. குருசாமி மற்றும் பணியாளர்களுக்கும் என் இனிய நன்றி.

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | — | அகநானூறு |
| அமலனாதி. | — | அமலனாதிபிரான் |
| அஷ்ட. | — | அஷ்டப்பிரபந்தம் |
| ஆசா. ஹிரு. | — | ஆசாரிய ஹிருதயம் |
| உ.ஆ. | — | உரையாசிரியர் |
| க.நு.சி. | — | கண்ணி நுண் சிறுதாம்பு |
| கலி. | — | கலித்தொகை |
| குறள். | — | திருக்குறள் |
| குறுந். | — | குறுந்தொகை |
| சிலப். | — | சிலப்பதிகாரம் |
| சிலப். ஆய்ச். குர. | — | சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை |
| சி.தி.ம. | — | சிறிய திருமடல் |
| சீவக. | — | சீவக சிந்தாமணி |
| சூ.எ. | — | சூத்திர எண் |
| திருச்.விருத். | — | திருச்சந்த விருத்தம் |
| திருப். | — | திருப்பாவை |
| திருப்பல். | — | திருப்பல்லாண்டு |
| திருவாய்.நூற். | — | திருவாய்மொழி நூற்றந்தாதி |
| திருவிருத். | — | திருவிருத்தம் |
| தி.கு.தா. | — | திருக்குறுந்தாண்டகம் |
| தி.நெ.தா. | — | திருநெடுந்தாண்டகம் |
| தொ. | — | தொகுதி |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நம.தி.வா.மொ. | — | நம்மாழ்வார் திருவாய்மொழி |
| நற். | — | நற்றிணை |
| நாச்.திரு. | — | நாச்சியார் திருமொழி |
| நான்.திரு. | — | நான்முகன் திருவந்தாதி |
| நூ.எ. | — | நூற்பா எண் |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| பதி.ஆ. | — | பதிப்பாசிரியர் |
| புறம் | — | புறநானூறு |

| | | |
|---|---|---|
| பூத.இ.தி.<br>பூ.இ.தி. | — | பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதி |
| பெரிய.திரு.மொ.<br>பெரி.திரு.மொ. | — | பெரிய திருமொழி |
| பெரியா.திரு.மொ. | — | பெரியாழ்வார் திருமொழி |
| பெரு.திரு. | — | பெருமாள் திருமொழி |
| பேய்.மூ.தி. | — | பேயாழ்வார்மூன்றாம் திருவந்தாதி |
| பொய்.மு.தி. | — | பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதி |
| மகா.சாந்தி. | — | மகாபாரதம் சாந்தி பருவம் |
| மணி. | — | மணிமேகலை |
| மதுரை. | — | மதுரைக்காஞ்சி |
| முமுட்சு. | — | முமுட்சுப்படி அல்லது முமுக்ஷுப்படி |
| மேற்படி. | — | மேலே குறிப்பிடப்பட்ட நூல் |
| ஸ்ரீவசன. | — | ஸ்ரீவசன பூஷணம் |
| P. | — | Page |
| Vol. | — | Volume |

## இயல் ஒன்று

# பண்டைய இலக்கியங்களில் கண்ணன்

இயல் அறிமுகம்:

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழ் மக்களது பண்பாட்டில் நாட்டை நான்கு வகைகளாகப் பகுத்து வாழும் நெறி காணப்பட்டு வருகிறது. அவை முறையே மலை, காடு, வயல்வெளி, கடல் பகுதி என்பன, பொதுவான மனிதப் பண்பு எல்லோருக்கும் ஒன்று எனினும், அவர்களின் மனவுணர்வு, உணவு, உடை ஆகியவற்றிற்கு ஏற்ப அவர்களது வாழ்க்கை நெறி அமைந்துள்ளது. அந்த வாழ்க்கை நெறியின் சிறப்புப் பண்புகளுள் ஒன்றாக, அவரவர், தத்தம் நிலத்துத் தெய்வத்தை வழிபடும் முறையினைக் குறிப்பிடலாம்.

இயற்கை நெறியினின்று தாம் வழிபடும் தெய்வத்திற்குத் தனிப்பட்ட வடிவம், பெயர், செயல்கள் முதலியவற்றைக் கொண்டு வழிபட்டு விழாக் கொண்டாடிய செயல்கள் தொல் காப்பியம், பாட்டும் தொகையுமான சங்கப் பாடல்கள் மற்றும் சிலப்பதிகாரம் மணிமேகலை வாயிலாக அறியலாகின்றன. மக்களது வாழ்க்கையானது நால்வகை நிலப்பகுப்பை அடிப்படை யாகக் கொண்டு அமைந்திருந்தது என்பதற்குத் தொல் காப்பியத்தையே சான்றாகக் கொள்ள வேண்டியுள்ளது. நிலங் களுக்குரிய தெய்வத்தையும் அவ்விலக்கண நூல் வழியே அறிந்து கொள்ளவும் முடிகிறது.

> "வழிபடு தெய்வம் நிற்புறம் காப்பப்
> பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
> பொலிமின்......" (தொல். செய். 109)

என்று புறநிலை வாழ்த்தாக வழிபாட்டு நிலை அமைவதைத் தொல்காப்பியம் எடுத்தியம்புகிறது.

இவ்வுலகத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நான்கு வகைகளாகப் பகுத்து நானிலம் என்று வழங்கிய பொழுதே திருமால் வழிபாடு தோன்றிவிட்டது. நான்கு நிலங்களையும் அவற்றிற்குரிய தெய்வங்களுடன் வைத்துக் கூறுமிடத்து,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையிற் சொல்லவும் படுமே"

(தொல். அகம். 5)

என்று கூறப்படுகிறது. இத்தெய்வ வழிபாடுகள் தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட காலத்திலேயே தமிழ் மக்களால் விரும்பி மேற்கொள்ளப்பட்டவை. ஈண்டு, மாயோனை முல்லைக்குரிய தெய்வமாக முதலில் வைத்து எண்ணப்படுவது நோக்கத்தக்கது.

முல்லை நிலம்:

காடும் காடு சார்ந்த பகுதியுமே முல்லை நிலம் எனத் தொல்காப்பியம் வரையறுக்கிறது. முல்லைக்குரிய திணை நில மக்களை 'ஆயர்' என்றும் குறிப்பிடுகிறது. முல்லை நில மக்கள் வாழும் காடும் காடு சார்ந்த பகுதியும் கருமையாக – கரும் பச்சையாகக் காட்சி இன்பம் அளிக்கின்றன. காடு முழுவதும் நிரம்பியிருக்கும் கருமை நிறம், மக்கள் உள்ளத்திலும் நிறைந்து தமது இறைவனைக் கரியதாகவே – மாயோனாகவே காண வைத்தது. முல்லை நிலத்தில் மறைந்து வளர்ந்த கண்ணனையே மாயோனாக, ஆயர்கள் தம் தொழுகுலத் தெய்வமாகக் கொண்டு வழிபடத் தொடங்கினர்.

முல்லை நிலத்தவர் வணங்கி வந்த மாயோனை முற்படக் கூறியதால் முல்லை நிலமும் அதன் தெய்வமும் சிறப்புப் பெற்றிருந்தது புலனாகிறது. முல்லையை முதலில் கூறியதால் மாயோனின் உயர்வு தெரிவிக்கப்படுகிறது. இக்கண்ணன் வழிபாடு தொல்காப்பியர் காலத்தே ஏனை நிலத்துக் கடவுளர் வழிபாடு களினும் சிறப்புடையதாயிருந்தது. ஐந்திணை ஐம்பது இயற்றிய மாறன் பொறையனாரும் "மல்லர்க் கடந்தா நிறம் போன்றிருண்

டெழுந்து'' எனத் திருமாலை முதலில் கூறி, முல்லை திணையைத் தொடங்குதலைக் காணமுடிகிறது.[1]

தொல்காப்பியர் காலத்தில் மாயோனை மன்னனுக்கு ஒப்பாகக் கூறி வந்தனர். காக்கும் தொழிலைச் செய்யும் திருமாலுடன் மக்களைக் காக்கும் மன்னனை ஒப்பாகக் கண்டனர் என்பதனை,

''மாயோன் மேஎய மண்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழுப் பூவை நிலையும்''
(தொல். அகம் 60)

என்ற புறத்திணைச் செய்தி வழி அறியப்படுகிறது. ''தொல் காப்பியத்தில் நான்முகன், சிவன் ஆகியோரைப் பற்றிக் குறிப் பில்லை. ஆடுமாடுகளைக் கொன்று அவற்றை உணவாக்கிக் கொள்ளும் நிலையிலிருந்து, அவற்றை பாற்பயனுக்குப் பயன் படுத்தத் தொடங்கிய காலத்தில் ஆநிரைகள் விழுமிய செல்வ மாயின்; கோவலர் காவலராயினர்; அவர்களின் கைக்கோல் செங்கோலாயிற்று, இந்நிலையில் மக்களைக் காக்கும் வேந்தன் கறவைக் காவலனாகிய மாயவனோடு உவமிக்கப்பட்டான். மன்னன் அடிப்படையில் ஒழுகிய சமுதாயம் ஆதலால் சங்ககாலச் சமூகம், சிவபெருமானைவிட மன்னனுக்கு உவமையாகக் கூறப்பெறும் திருமாலையே - மாயோனையே மிகுதியாகப் பேசியது'' என்ற கருத்திலிருந்து[2] முல்லை நிலச்சிறப்பு விளக்கப் படுகிறது. குறிப்பாக, மன்னனை மாயோனோடு ஒப்பிட்டுப் பேசுதல் அன்றைய பண்பாடாக விளங்கியது அறியத்தக்கது. இந்நிலை, பக்திக்காலத்திலும் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனை, 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே' என்ற நம்மாழ்வார் கருத்து இங்கு எண்ணத்தக்கது.

மாயோன் – பெயர் விளக்கம்:

முல்லை நிலத்து ஆயர்களின் வழிபடு தெய்வமாக மாயோன் விளங்கினான். காடு சார்ந்தஅடர்த்தியான கருமைப்பகுதியினைப் பழந்தமிழர் 'மாயோன்' என்றனர். மாமால் என்பது கருமை நிறத்தைக் குறிக்கிறது. என்னும், 'மாயோன் என்பது 'கரியவன்' என்று திராவிடச் சொல்லகராதி[3] குறிப்பிடுகிறது. நிறத்தைக் கொண்டு நிலத் தெய்வத்தைக் குறிப்பிட்டிருந்தனர். பழந்தமிழர் என்ற ஒரு கருத்துள்ளது. செந்நிறத்தைக் குறிப்பிடும் குறிஞ்சி நிலத் தெய்வம் சேயோன் என்பதும் இதனடிப்படையிலாகும்.

கரிய நிறத்தைப் பழிப்பதன்றிப் பாராட்டுதல் தொல்லாசிரியர் வழக்கன்று. தமிழிலோ எழில் பாராட்டி 'மாயோன்' எனவும், 'மாயோயே' எனவும் பழம்பாட்டுக்களில் கூறியிருப்பது சிந்திக்கத்தக்கது என்று சோமசுந்தர பாரதியார் கூறும் கருத்தானது[4] 'கரியவன்' என்ற சொற்பொருளுக்கு அரணாக அமைகிறது.

மாயோன் என்பதற்குப் பல பொருள்கள் உண்டு, 'மாயா' என்ற வட சொல்லிலிருந்து 'மாயன்' என்ற சொல் ஏற்பட்டு மாயோன் என்ற சொல் பிறந்ததாகக் ('ஆ' 'ஓ' வாதல் செய்யுளில் கூறுவதுண்டு) கூறப்படுகிறது. இந்த 'மாயா' என்ற சொல்லிற்கு மூன்று சொற்பொருள் விளக்கம் கூறப்படுகிறது[5].

அ) வியத்தற்குரிய அருஞ்செயல்களைச் செய்பவன்.

ஆ) மாயா என்பதற்குப் 'பிரகிருதி' என்ற பொருளுண்டு, பிரகிருதியான இயற்கையைத் தன் வசம்கொண்டவன்.

இ) மாயா – ஞானம்
ஞானமயமான ஆன்மாக்களைத் தனக்குச் சரீரமாக உடையவன்.

'மாயோன்' என்ற பெயரால் நம்முடைய முன்னோர்கள் திருமாலைக் குறிப்பிட்டிருந்தனர். காரணம், 'மாநிறம் உடையவன் என்பது 'மாயன், (மாயவன்), 'மாயோன்' என்னும் சொற்களுக்குரிய பொருளாகும். 'மாநிறம்' என்பது கரிய நிறத்தைக் குறிப்பிடுகிறது. இதனால், திருமாலைக் கரிய நிறக் கடவுளாகப் பண்டைத் தமிழர் கருதிவந்தனர் என்று கூறலாம்.

'மா' என்பதற்குப் பொருள் கூறுங்கால், செல்வம் கருநிறம், கமலை என்று நிகண்டில் செல்வத்திற்கும், கமலைக்கும் இடையில் திருமாலுக்குரிய கருநிறம் சொல்லப்படுகிறது.[6]

மாயோன் என்றால் மாயன், மாயவன் என்ற பொருள் இருப்பதாக முன்னரே கட்டிக்காட்டப்பட்டுள்ளது. 'மாய்' என்றால் 'மறைதல்' என்று பொருள் குறிக்கப்படுகிறது.[7] அத்தகைய ஆச்சரிய சக்தி உடையவன் என்றும் கொள்ளலாம். மாயோன் 'மாயன்' என்று பரிபாடலில் (32.1) கூறப்பட்டுள்ளது.

மாயோன் என்ற மாயவன் என்பது திருமாலைக் குறிக்கிறது. ஆனால் 'மா' என்ற சொல்லிலிருந்து வந்ததே தவிர 'மாயம்'

என்ற பொருளைக் குறிப்பதால் அல்ல'[8] என்ற ஒரு கருத்தும் கூறப்படுகிறது.

'மால்' 'என்கிற சொல்லே 'திரு' என்கிற அடைமொழி பெற்று திருமால் ஆகியது. 'திரு' என்கிற சொல் செல்வத்தின் தலைவியைக் குறித்தது. அத்தலைவியை உடையவன் திருமால் என்பது உறுதிப்படுகிறது. திருமால் எனினும், மாயோன் எனினும் ஒருவரையே குறிக்கும். இவ்விரு சொற்களைக் கொண்டே பழந்தமிழர் நெடுமாலின் பண்பையும் பெருமையையும் இணைத்துள்ளனர்[9] என்றகருத்துஅறியத்தக்கது.

'மால்' என்பது 'பிரம்மம்' என்பதற்குரிய தனித் தமிழ்ச் சொல்லாகும். மாயோன் திருமால் என்பன ஒரே பொருளைக் குறிப்பதால், மாயோன், என்ற பெயரால் திருமாலைக் குறிப் பிட்டிருந்தனர்.

மாயோன் – கண்ணன்:

மாயோன் என்பதும் கண்ணன் என்பதும் ஒரே பெயரைக் குறிப்பிடுகின்றன. கண்ணன் என்பது 'கிருஷ்ணன்' என்ற சமஸ்கிருதச் சொல் பிராகிருத மொழியில் கண்ணன் என்றாகித் தமிழ்ற் புகுந்தது என்பதனைத் தொல்காப்பியம் கொண்டு சான்று கூறமுடியும்.

''சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்''

(தொல். 402)

என்பதற்கு, நச்சினார்க்கினியர் ''சிதைந்து வரினுமெனப் பொதுபடக் கூறியதால் ஆனை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் பாகதமாய்ச் சிதைந்து வருதலைக் கொள்க'' என்று உரை கொடுக்கப்பட்டுள்ளதைக் கொண்டு அறியத்தக்கது.

முல்லை நிலத்து வழிபடு தெய்வமாக மாயோன் விளங்கினான். கண்ணனின் வரலாற்றுப் பின்னணியைக் கொண்டு பார்க்கும் பொழுது, கண்ணன் வளர்நத இடம் ஆயர்கள் நிறைந்த பகுதி என்பது உறுதியாகிறது. இதனடிப் படையில் நோக்கும் பொழுது, தொல்காப்பியர் குறிப்பிடும் 'மாயோன்' என்பது கண்ணனாகும் என்று ஊகிக்க இடமுண்டு. காரணம், கண்ணனைப் பற்றிய பல செய்திகள் பண்டைத் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததே ஆகும். மேலும்

சங்க காலச் சமூகத்தில் பாரதக் கதைகள் மற்றும் புராணக் கூறுகள் சில இடம்பெற்றிருந்தன. அக்கால கட்டத்தில், சமூகம் மன்னன் வழியிலே சென்று கொண்டிருந்தது. 'காக்கும் தொழிலைச் செய்யும் திருமாலை,[10] மன்னனுடன் ஒப்பிட்டு, மன்னனைத் தெய்வமாகக் கருதி வந்தனர். அதனால் மன்னன் தலைமையிடம் பெற்றான்.

திருமால் கரிய நிறமுடையவன் என்பதால் மாயோனுடன் ஒப்பிடப்பட்டான். இப்பெயர்கள் ஒரே பொருளைக் குறிப்பிடு வதால் இரண்டும் ஒன்றாக்கப்பட்டிருக்கலாம். மற்றும், திருமாலின் அவதாரங்களுள் கண்ணன் அவதாரம் சிறப்பான தாகக் கருதியதால் கண்ணனையும் மாயோனாகக் குறிப்பிட்டி ருக்கக்கூடும். 'கிருஷ்ண' என்ற சமஸ்கிருதச் சொல்லிற்குக் கருமைநிறம், என்பதே மூல முதற்பொருளாகும். அப்பொருள் அடியாகவே கரிய நிறமுடைய கடவுளை 'கிருஷ்ணா' என வடமொழியாளர்கள் போற்றினர்.[11] தமிழில் மாயோன் எனும் சொல்லும் அப்பொருளிலேயே வழங்கப்பட்டு வருகிறது என்பது இங்கு நினைக்கத்தக்கது.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே கண்ணனின் வரலாற்றுச் செயல்கள் தமிழகத்தில் பரவி இருக்கக்கூடும் என்பதால் கண்ணன் ஆயர் குலத்துத் தெய்வமாகப் போற்றப் பட்டு வந்திருக்கக்கூடும். அதனால்தான், தொல்காப்பியர் முல்லை நிலத்துத் தெய்வமாகக் கண்ணனைக் குறிப்பிடுகிறார். பிராகிருதச் சொல்லான கண்ணன் என்பது தமிழில் 'மாயோன்' என மொழிபெயர்த்திருக்கக்கூடும். பொருளடிப்படையில் இவ்விரு பெயர்கள் பொருத்தமுடையவனவாக அமைகின்றன. எனவே, 'கண்ணன்' என்ற பெயர் முதலில் இருந்திருக்கிறது. மாயோன் எனத் தமிழில் புகுந்திருக்கலாம் என ஊகிக்க இடமுண்டு. ஆகவே, மாயோன் என்பதும் கண்ணன் என்பதும் ஒரே பெயரைக் குறிப்பிடுகின்றன.

சங்க காலத்தில் பாரதக் கதைகள் மிகவும் பரவலாகச் செல்வாக்குப் பெற்ற நிலையில் இருந்தன. பாரதத்தில் கண்ணன் விஷ்ணுவோடு இனங்காணப்பட்டு நாராயணனாக – மூலப் பரம்பொருளாக உயர்த்தப்பட்டான். ஆதலால், சங்கப் பாடல்களில் கிருஷ்ணனைக் குறிப்பிடமால், மாயோன் என்ற பெயர்களே இடம்பெற்றிருந்தன. சங்க காலச் சமூகத்தில்,

மாயோன் வேறு; திருமால் வேறு; கண்ணன் வேறு என்ற எண்ணம் ஏற்படாமல், மூன்றும் ஒன்றே என்ற நிலையில் மக்கள் மாயோனைக் கண்டனர். குறிப்பிட்ட சமயத்தை மக்கள் பின்பற்றி வந்தனர் என்பதற்குரிய சான்றும் கிடைக்கப் பெறவில்லை. திருமாலின் மற்ற அவதாரங்களைக் குறிப்பிடமால். மாயோன் என்ற பெயர்களையே புலவர்கள் எடுத்தாண்டிருந்தனர். இருப்பினும், சங்கப் பாடல்களில் அதிகமான இடங்களில் குறிப்பிட்டிருக்கும் மால், மாயோன் என்ற பெயர்கள் கண்ணனையே சுட்டுவதாகக் கொள்ள முடியும். காரணம், கண்ணன் பெயர்கள், செயல்கள் ஆகியன மக்களிடையே அதிகமாகப் பரவியிருந்ததே ஆகும். குறிப்பாக சங்க காலப் புலவர்களின் பெயர்களில் 'கண்ணன் என்ற சொல் இணைந்திருந்தது[12] அப்பெயரின் செல்வாக்கினைக் காட்டுவதாகக் கூறலாம்.

இறையனார் அகப்பொருள் உரையில் இளம்பூரணர், 'முல்லை நிலத்துக் கடவுளான மாயோனை வசுதேவன் மகன் வாசுதேவனோடு ஒப்பிட்டு இருவரும் ஒருவரே என்று கருத்துரைக்கின்றார்' [13] முல்லை நிலக் கடவுளான மாயோனைத் திருமாலுடன் ஒப்பிடுவதைவிட கண்ணனுடன் ஒப்பிட்டுக் கூறுவது[14] சிறப்பிற்குரியதாகும் என்ற கருத்துமுள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களில் மால், மாயோன் என்ற பெயர்களைத் தவிர்த்து, மாயவன், மாயவண்ணன், அஞ்சன வண்ணன், பூவை வண்ணன், கரியவன், கடல் வண்ணன், முந்நீர் வண்ணன் என்ற பெயர்களும் இடம்பெற்றிருந்தன. ஆனால், கண்ணன், கிருஷ்ணன் என்ற பெயர்கள் இடம்பெறவில்லை. தொல்காப்பியர் சுட்டிய 'மாயோன்' என்ற பெயரே பக்தி இயக்கக் காலம் வரை காணப்பட்டு வந்தது. சிலப்பதிகார ஆசிரியர், நாராயணன், மாலவன், மாயோன், கோவலன் என்ற பெயர்களைப் பயன்படுத்திப் பாடியிருப்பது நினைக்கத்தக்கது. ஆழ்வார்கள் பாசுரங்களில் கண்ணன், நாராயணன், கிருஷ்ணன் என்ற பெயர்கள் கிடைக்கின்றன.

**மாயோனின் நிறம்:**

மாயோனின் நிறம் 'கறுப்பு' என்பதே சிறப்பாகக் கூறப்பட்டு வந்தது. கறுப்பு நிறத்தை அடிப்படையாகக் கொண்டு,

மாயோனுக்குப் பல நிறங்களும் பெயர்களும் கொடுக்கப்பட்டு வந்தன. அந்த நிறங்களோடு மாயோன் ஒப்பிடப்பட்டு உவமிக்கப்பட்டான்.

'மாயோனின் நிறமான கரிய நிறத்தைக் கருமை கலந்த நீல நிறத்தைக் காயாம்பூ, நீலம் கலந்த கடல் வண்ணம். நீருண்ட மேகத்தின் நிறம், தாமரை இலையின் நிறம், மலைக்குன்றின் நிறம் ஆகிய நிறங்களோடு ஒப்பிடுவது,[15] இயல்பானதாகும்.

தொல்காப்பியத்தில் மாயோனின் நிறத்தைக் காயம்பூ நிறத்தோடு ஒப்பிட்டுக் கூறுவது நோக்கத்தக்கது. (தொல், பொருள், புறம். 60)

"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்"
(தொல். பொருள். புறம். 60)

நம்மாழ்வாரின்,

"காயாமலர் வண்ணன்
பேயார் முலையுண்ட வாயான்மாதவனே"
(நம். தி. வா. மொ. 10.5.6)

என்ற பாசுரம் இதன்பாற்படும். பரிபாடலில் (1,3,4) காயம்பூ நிறத்தோடு மாயோன் குறிப்பிடப்படுவது ஒப்பு நோக்கத்தக்கது.

முல்லை நில ஆய்ச்சியர்கள் கற்பின் அடையாளமாக முல்லை மலர்களுக்குப் பதில் காயாம்பூவைச் சூடிக் கொள்கின்றனர். என்பதனைத் தண்டியலங்காரம்[16] எடுத்துரைக் கின்றது. பசுக்களுக்குத் துன்பமுண்டாகுமாறு இந்திரன் பெய்வித்த மழையினின்றும் காப்பாற்ற கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் காப்பாற்றியருளிய கண்ணனின் திருமேனி காயாம்பூ நிறத்தால் ஒப்பாகியது. அம்மலர்களை மகளிர் சூடிக்கொள்வதால் கண்ணனை நினைப்பூட்டுவதாகிறது. இதனால், கற்பிற்குரிய முல்லை நிலத்தில் கண்ணனை நினைப்பூட்டும் காயம்பூ மலரே ஆய்ச்சியர்களுக்கு உவப்பாயிற்று என்பது தெளிவாகிறது.

இதன் வழி மாயோனின் நிறம் கரிய நிறம், (இருள்) புசிய கடலின் நிறம், காயம் பூக்களின் நீல நிறம் ஆகிய நிறங்களின் உவமை வழியே காட்டப்பட்டது.

ஹரிவம்சம், பாகவதம் மற்றும் விஷ்ணுபுராணம் ஆகிய வற்றில் கிருஷ்ணனின் நிறம் கறுப்பு எனக் குறிப்பிடப்படுவது சங்க நூற்கருத்துக்களோடு ஒத்துள்ளது.

சங்கப் பாடல்களில் கண்ணன்:

சங்கப்பாடல்களில் கண்ணன் வரலாற்று நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு, கண்ணனைப் பற்றிய செய்திகள் பகுக்கப்பட்டு இவ்வியலில் எடுத்துரைக்கப்படுகின்றன.

ஆயர் குலத்தினை உயர்த்தியகண்ணனின் செயல்கள் தமிழகத்தில் பரவத் தொடங்கிய பொழுது, ஆயர் குலத்தினர் கண்ணனைத் தம் தொழுகுலத் தெய்வமாகப் போற்றினர். பாரதம் மற்றும் புராணங்களில் காணப்படும் கண்ணன் பற்றிய செய்திகள் மக்கள் மனதினை ஈர்த்தன. புலவர்கள் தமது பாடல்களுக்கு உவமைகளாகக் கண்ணனின் செயல்களைக் காட்டியிருந்தனர். சங்க காலம் வீரம் மிக்க காலமாக இருந்ததால், கண்ணனின் வீரதீரச் செயல்களே செல்வாக்குப் பெற்றிருந்தன. ஆயர்பாடிச் செயல்கள் (லீலைகள்) அதிகமாக இடம்பெறவில்லை என்று கூற வேண்டும்.

சங்க காலத் தொகை நூல்களான பத்துப்பாட்டு எட்டுத் தொகை நூல்களில் திருமாலின் இயல்புகள் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. கண்ணனைப்பற்றி, கலித்தொகை மற்றும் பரிபாடலில் அதிகமான சான்றுகள் கிடைக்கின்றன. கேசிவதம், குருந்தமரம் ஒசித்தது, குவலையாபீடம் என்ற யானையைக் கொன்றது, பாரதப் போரில் சங்க முழக்கம் செய்தது, குன்றம் எடுத்தது, ஆகிய செய்திகள் இடம்பெற்றிருக்கின்றன. 'தொகை யும் பாட்டும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றின என்பர்,[17] இக்காலத்திற்கு முன்பே பண்டைத் தமிழகத்தில் கண்ணன் அறிமுகமாயிருந்தான். குறிப்பாக, பாரத நிகழ்ச்சி களோடு கண்ணன் போற்றப்பட்டு வந்தான். மற்ற கூறுகள் (புராணக் கூறுகள்) சிறிது சிறிதாகப் பரவத் தொடங்கியதால், அந்நிகழ்ச்சிகளை – அச்செயல்களைப் புலவர்கள் தமிழகப் பண்பாட்டிற்கு ஏற்றாற்போலப் பாடியிருப்பது அறியத்தக்கது. அவை அச்சமூகத்தில் நிலவி வந்த வழக்காகவும் இருக்கலாம். எடுத்துக்காட்டாக நப்பின்னை திருமணம், தழிபாண்டவன் கதை, குரவைக் கூத்து முதலியவற்றைக் கூறலாம்.

சங்கப் பாடல்களில் பாரதக் கூறுகள்:

கண்ணன் பற்றிய செய்திகள் முதலில் மகாபாரதத்தில் இடம்பெற்ற பின்புதான் பாகவதம் போன்ற புராணங்களில் இடம்பெறத் தொடங்கின என்ற கருத்துள்ளது. மகாபாரதத்தில் ஆயர்பாடிச் செயல்கள் அதிகமாகக் கூறப்படவில்லை. காரணம், பாண்டவர்களின் கதையாக இருந்ததால், கண்ணன் இடம் பெற்ற குறிப்பிட்ட நிகழ்ச்சிகளே இடம்பெற்றிருந்தன. கண்ணன் புத்திக் கூர்மையுடன் செயல்பட்டு, பாண்டவர்களுக்கு நண்பனாக இருந்து, மகாபாரதப் போரினை வெற்றிப்பெறச் செய்த செயலே முதன்மைக் கருத்தாக மகாபாரதத்தில் இடம் பெற்றுள்ளது. ஆகவே, கண்ணனின் பால்ய பருவத் திருவிளை யாடல்களை அனுபவிக்க எழுந்ததே புராணங்கள் ஆகும். கண்ணன், தோற்றம் முதல் அவன் செய்த திருவிளையாடல்கள் அனைத்தையும் சிறப்பாக எடுத்துரைக்கும் பெருமை புராணங் களைச் சார்ந்துள்ளது.

பாரத காலத்தில் வசுதேவ கிருஷ்ணனாகக் கண்ணன் விளங்கினான். அக்காலக் கட்டத்தில், கண்ணன் நாராயணன் என்ற நிலைக்கு உயர்த்தப்பட்டு தெய்வ நிலையின் உறுதித் தன்மையைப் பெற்றான் என்பது அவனது வரலாற்றுப் பின்னணியைக் கொண்டு அறிய முடிகிறது. பாண்டவர்களின் நண்பன் – தூதுவன் – வீரன் – தேரோட்டி ஆகிய செயல்களில் ஈடுபட்டவனாக விளங்கினான். ஆகவே, வீரமிக்க பாரதக் கண்ணன் சங்ககால மக்களிடையே அதிகம் பேசப்பட்டு வந்திருக்கிறான்.

குறிஞ்சிக் கலியில், துரியோதனின் சூழ்ச்சியை அறிந்த கண்ணன் அவனது மல்லர்களைக் கொன்றான் (கலி. குறிஞ்சி. 17, 1–5) என்ற மகாபாரதக் கதையைக் காணமுடிகிறது.

"முறஞ்செவி மறைப்பாய்பு முரண் செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குரங்கறுத் திடுவான் போல் கூர்நுதி மடுத்ததன்
நிறஞ்சாடி முரண் தீர்ந்த நீண் மருப்பெழியானை
மல்லரை மறஞ்சாய்த்த மால் போல்"

(கலி. குறிஞ்சி. 17, அ.எ. 1–5)

இப்பகுதியில், கண்ணனது செயலை ஒரு உவமையாகப் பாடலாசிரியர் எடுத்துரைப்பது நோக்கத்தக்கது.

கண்ணன் சூரியனை மறைத்த செய்தி மகாபாரதத்தில் இடம்பெற்றுள்ளது. இச்செய்தியினை, மாறோக்கத்து நப்பசலை யார், வேறு முறையில் கூறியிருப்பது நோக்கத்தக்கது. புறநானூற்றுப் பாடலில், (புறம் 174, 1–5)

"அணங்குடை யவுணர் கணங்கொண் டொளிந்தனர்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
இருள் கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பை கொள் பருவரறீரக் கடுந்திறல்
அஞ்சன வுருவன் தந்து நிறுத்தாங்கு"

(புறம். 174, அ.எ. 1-5)

என்ற அடிகளில், கண்ணனின் இரக்கக் குணம் மற்றும் இறைத் தன்மை சுட்டிக் காட்டப்படுகிறது. அசுரன் சூரியனை ஒளித்ததும், ஞாயிற்றைக் காணாது, இருளானது உலகத்தாரதுக் கண்ணை மறைத்தது. இவ்வுலகை இருளிலிருந்து காக்க, அஞ்சனம் போலும் நிறத்தையுடைய கண்ணன் அந்த ஞாயிற்லறைக் கொண்டு வந்து ஆகாயத்தில் நிறுத்தினன் என்பது இவ்வாசிரியர் கூறும் செய்தியாகும். இதற்கு வடமொழிப் புராணங்களில் ஆதாரமில்லை.

இதே கருத்துடையதாய், சற்று வேறுபட்ட கோணத்தில் இக்கருத்து மகாபாரதத்தில் இடம்பெற்றுள்ளது. அருச்சுனன் தன் மகனைக் கொன்ற ஜயத்ரதனைக் கொல்வதற்காக, கண்ணன் தன் ஆழியால் கதிரவனை மறைத்தான். மாலை வந்தது என மயங்கிய ஜயத்ரதன், தான் ஒளிந்திருந்த இடத்தி லிருந்து வெளியே வந்தான். மறைத்த நேமியை கிருஷ்ணன் எடுத்தவுடன் மீண்டும் கதிரவன் தோன்றி பகலைத் தோற்று வித்தான். அர்ச்சுனன் அங்கு நின்றிருந்த ஜயத்ரதனைக் கொன்றான் என்பது பாரதக் கதையாகும்.[18]

மேலும், இச்செய்தி பிற சங்க நூல்களிலும்[19] குறிப்பிட் டிருப்பது ஒப்பு நோக்கத்தக்கன, இவ்வாறு சங்க காலத்தில் வியாசர் பாரதம், தமிழ் மக்களிடையே பரவியிருந்ததோடு அன்றி, இதிகாசக் கண்ணனை அவர்கள் அறிந்திருந்தனர் என்பதும் தெளிவாகின்றது.

தன் வெற்றியை உணர்த்துவதற்காக் பல போர்களில் சங்க முழக்கம் செய்த கிருஷ்ணனை பாரதம் மற்றும் புராணங்கள் சிறப்பாகப் பேசுகின்றன. இச்செயலைக் காட்டுவதாக,

"வள்ளுருள் நேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்கும் கரி நெற்றிக் காரி"
(கலி. முல்லைக்கலி. 5, 9-10)

என்ற அடிகள் விளக்குகின்றன. பாரதப் போரின் தொடக்கத்திலும் முடிவிலும் சங்க முழக்கம் செய்து பார்த்தசாரதியாய் கோலம் கொண்ட கண்ணனை, ஆழ்வார்களும் சிறப்புடன் எடுத்துரைத்துள்ளதை இங்கு நினைவிற்கொள்ளத்தக்கது.

சங்கப் பாடல்கள் காட்டும் புராணக் கதைகள்:

கிருஷ்ணனுடன் தொடர்பு கொண்ட புராணக் கதைகள் சில சங்க நூல்களில் காணக் கிடைக்கின்றன.

கண்ணன் ஆயர் குலத்தினிடையே வளர்ந்து வந்ததும், அக்குலத்தில், வெற்றியுடைய வீரனாக இருந்து வந்ததும் குறித்து, கண்ணனைக் 'கோவல' என்ற பெயரைப் பரிபாடல் குறிப்பிடுவது அறியத்தக்கது. கண்ணன் ஆயர் குலத்தினில், ஆடுமாடுகளை மேய்க்கும் தொழிலைச் செய்து வந்த செயல் மக்களைக் கவர்ந்தது, அதனால், கண்ணனைக் 'கோபாலன்' என்றனர். பரிபாடலில் ஓரிடத்தில் மட்டும், திருமால் 'கோவல' எனக்குறிப்பிடக் காணமுடிகிறது. இச்சொல் (பரி.3.83.) கண்ணைக் குறித்து இடம்பெற்றுள்ளது.

அ. கேசிவதம்:

கம்சனால் ஏவப்பட்ட அசுரன் கேசி என்பவன். குதிரை முகமுடைய இந்த அசுரனின் வாயைப் பிளந்து கொன்ற கண்ணனின் வீரத்தைப் புராணங்கள் பேசுகின்றன. இவ்வீரச் செயலை, முல்லைக்கலி மற்றும் பரிபாடல் போற்றுகின்றன.

"மேவார் விடுத்தந்த கூந்தல் குதிரையை
வாய்புகுத் திட்டுப் புடைத்த ஞான்றின்னன்
கொல் மாயோன்"
(முல்லைக்கலி.3 53-55)

இப்பாடலில் 'கேசி' என்ற பெயர் குறிப்பிடப்படவில்லை. முல்லைக் கலித் தலைவி, தலைவனை மாயோனாகவே கருதி மயங்கி நோக்குவதாக சுட்டப்படுகிறது. இங்கு, மன்னனுக்கு உவமையாகப் பேசப்பட்டு வந்த மாயோன், சராசரி மனிதனுக்கும் உவமமாகக் கருதப்பட்டு வந்த வழக்கம் இப்பாட்டில் இடம் பெற்றுள்ளமை கவனிக்கத்தக்கது. இவ்வாறு,

மக்களுக்குச் சமமாகப் பேசும் இவ்வழக்கு பிற்காலத்தில் சிலப்பதிகாரத்திலும் இடம்பெற்றிருப்பது அறியத்தக்கது. கோவலன் கண்ணகியை மாயோன் நப்பின்னையாக ஆய்ச்சேரி மக்கள் கருவதாகக் கிடைக்கும் சான்று இங்கு நினைக்கத்தக்கது.

முல்லைக்கலிப் பாடலோடு பரிபாடல் அடிகளும் ஒப்பு நோக்கத்தக்கது.

பரிபாடலில்,

"கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்
எரிசினங் கொன்றோய்" (பரி. 3.31-32)

முல்லை கலியில் குதிரை முகமுடைய அசுரனைக் கொன்ற முறை தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பரிபாடலில், 'கூந்தல் என்னும் பெயரோடு' என்று சுட்டிக்காட்டப்படுகிறது. 'பிடரிமயிரோடு கூடிய, குதிரை வடிவம் கொண்ட அசுரன் என்ற பொருள்பட அமைந்துள்ளது. புராணங்களில் குறிப்பிடும் கருத்துக்கள் மேற் கூறப்பட்டுள்ள சங்க நூற்கருத்துக்களுடன் ஒத்துள்ளமையைக் காண முடிகின்றன.

ஆ) மற்போரும் குவலயாபீடம் என்ற யானையைக் கொன்ற செயலும்:

கம்சன், தன் அரண்மனை மல்லர்களைக் கொண்டு கிருஷ்ணனைக் கொல்லத் திட்டமிட்டான். இதனால், மற்போர் போட்டி ஒன்று ஏற்படுத்தி கிருஷ்ண-பலதேவரை மதுராவிற்கு வரவழைத்தான். மற்போர் நிகழும் முன்பு, அரண்மனை யானையை கிருஷ்ணன் மீது ஏவினான். யானையை அடக்கிய பின்பு, கம்சனின் நண்பர்களான மல்லர்களையும் மற்போரில் வென்றான். இவ்விரு செயல்கள் குறித்துக் கலித்தொகை சான்று பகர்கின்றது. (கலி. நெய்தல். 17, 1-3)

"மல்லரை மறஞ்சாய்த்த மலர்த் தண்டா ரகலத்தோன்
ஒல்லாதாருடன்றோட வுருவத்துட னெறிதலிற்
கொல்யானை யணி நுத லழுத்திய ஆழிபோற்"
(கலி. நெய்தல். 17, அ.எ. 1-3)

என்றடிகளில் சக்கரப்படை எறிந்து யானையைக் கொன்றான் என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது.

இ) அவுணரை அழித்த கிருஷ்ணன்:

பத்துப்பாட்டு நூல்களுள் மதுரைக் காஞ்சியில் குறிப்பிடப் படும் அவுணரை அழித்த செயல் கிருஷ்ணனைச் சுட்டுவதாக அமைந்துள்ளது. அப்பாட்டிற்கு விளக்கம் கூறுகையில், தன் மகன் அநிருத்தனின் திருமணத்திற்காக நிகழ்ந்த போரில் பாணாசுரன் என்ற அவுணரைக் கொன்ற செயல் இதன்பாற் படுகிறது.

"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்" (மதுரை 590–591)

என்றடிகளில் அவுணன் பெயர் குறிப்பிடவில்லை. அவுணனை அழித்த வீரச் செயலுக்கு சிறப்பிடம் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், மாயோன் ஓண நன்னாளைச் சார்ந்தவன் என்ற சுட்டியிருப்பது நோக்கத்தக்கது. மாயோன் என்ற பெயர் கிருஷ்ணனோடு ஒப்பிட்டுக் கூறுவதாக அமைகிறது. அவுணரை அழித்த செயலைப் பாகவதம், விஷ்ணுபுராணம் மற்றும் ஹரிவம்சம் ஆகியன விரிவாகப் பேசுகின்றன. 'ஓண நன்னாள்' என்று குறிப்பிடுவதால் வாமன அவதாரத்தையும் குறிப்பிடுவ தாகக் கொள்ளலாம்.

ஈ) குன்றம் எடுத்ததும் கன்று எறிந்ததும்:

முல்லைப் பாட்டின் தனிப்பாடலொன்று, கண்ணன் குன்றம் எடுத்த நிலையையும், விளாமரம் உருவில் நின்ற அசுரனை அழித்த செய்தியையும் எடுத்தியம்புகின்றது.

"வண்டு அடைந்த கண்ணி வளர் ஆய்ச்சி வாள்நெருங்கண்
சென்று அடைந்த நோக்கம் இனிப் பெறுவது என்ற கொல்
கன்று எடுத்து ஓச்சி. கனி விளவின் காய் உகுத்து,
குன்று எடுத்து நின்ற நிலை? (முல்லை. வெண்பா.1)

இச்செயல்கள் ஆயர்பாடியில் வளர்ந்த பொழுது, கண்ணன் நிகழ்த்திய திருவிளையாடல்களுள் ஒன்றாகப் புராணங்கள் எடுத்துரைக்கின்றன.

பரிபாடலில் வைணவம்:

கிறித்துப் பிறந்த இரண்டு நூற்றாண்டுகளில் பரிபாடல் தோன்றியதால் வேண்டுமென்பர் தமிழறிஞர்கள். பரிபாடலில் திருமாலின் வராக, நரசிம்ம அவதாரங்களைப் பற்றிய

குறிப்புக்கள் இடம்பெற்றிருக்கக் காணலாம். திருமாலின் வியூக நிலையைப் பாஞ்சராத்திர ஆகமம் விளக்குகிறது. தமிழில் அவ்விளக்கத்தைக் கொண்ட பழைய நூல் பரிபாடல் ஆகும்.

கடுவன் இளவெயினனார் இயற்றியுள்ள மூன்றாவது பாடலில் பாஞ்சராத்திர ஆகமத்தில் குறிப்பிடப்பட்டுள்ள இறைவனின் நால்வகை வெளிப்பாடுகளான வாசுதேவன், சங்கருடணன், பிரத்யும்நன், அநிருத்தன் ஆகிய பெயர்கள் தமிழ் வடிவில் இடம்பெற்றிருக்கக் காணலாம்.

"செங்கட்காரி கடுங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்" (பரி. 3, 81–82)

இவ்வடிகளில், செங்கட்காரி என்பது வாசுதேவன்; கருங்கண் வெள்ளை என்பது பலராமன்; பொன்கட் பச்சை என்பது பிரத்யும்நன்; பைங்கண் மாஅல் என்பது அநிருத்தன் ஆகும். இந்நால்வரும் உறவினர்களாவர். இந்நால்வரும் விருஷ்ணி குலத்தைச் சார்ந்தவர்கள் என்பது வரலாற்று மரபாகும். அவ்வினத்தில், கண்ணனுடைய பிள்ளையான சாம்பனை இணைத்து இப்பஞ்சவீரர்களைத் தம் குலத்துத் தலைவர்களாகக் கொண்டு வழிபட்டு வந்தனர். இப்பஞ்சவீர வழிபாடு ஒரே குலத்தாரிடை ஏற்பட்டு, பிற்காலத்தில் எங்கும் பரவிவிட்டது. தமிழகத்தில், குறிப்பாக பல்லவர் காலத்தில் இப்பஞ்சவீரர் வழிபாடு மேலோங்கி இருந்ததை, சென்னைப் பார்த்தசாரதி கோயில் மற்றும் கும்பகோணம் அருகிலுள்ள நாச்சியார் கோயில் ஆகிய இரண்டையும் சான்று காட்டுவர். பாகவத மரபினரிடையே இருந்த இப்பஞ்சவீரர் வழிபாடு தமிழக மக்களிடையே இருந்தமைக்கு மேற்சொன்ன பரிபாடல் அடிகளே சான்று பகர்கின்றன.

தமிழகத்தில் வைணவ சமய ஆகமத்தின் தொடக்கம் பரிபாடல் காலத்திலேயே தொடங்கி விட்டது என்று கூற முடியும். இறைவனின் ஐவகை நிலைகளைப் பற்றிய குறிப்பும் பரிபாடலில் கிடைக்கின்றது. பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை ஆகிய ஐவகை நிலைகளைப்[20] பரிபாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன.

பரத்வம்

"நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீடுபேறு துறக்கம்" (பரி. 15, 16–17)

வியூகமும் விபவமும்

"செங்கட்காரி! கருங்கண் வெள்ளை
பொன்கட்பச்சை! பைங்கண் மாஅல்" (பரி. 3, 81-82)

அந்தர்யாமி

"தீயுனுள் தென்றல் நீ; பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ" (பரி. 3, 63-64)

என்று இப்பாடலடிகள் விளக்குகின்றன.

பரிபாடலில் விஷ்ணு, நாராயணன், கிருஷ்ணன் ஆகிய உருவங்களும் ஒன்றாக இணைத்தே பேசப்படுகின்றன. ஐவகை நிலைகள் ஏற்பட்டவுடன் திருமாலின் அவதாரக் கருத்துக்கள் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றன.

கண்ணன் – பலராமன்:

கண்ணனுடன் பிறந்தவனாக – கண்ணனின் மூத்த சகோதரனாகப் பலராமன் கருதப்பட்டு வருகிறான். பண்டைய தமிழகத்தில் பலராமன் கண்ணனோடு இணைத்தே பேசப்பட்டு வந்திருக்கிறான்

பலராமனைச் சங்க நூல்கள் பால்நிற வண்ணன் (முல்லைக் கலி. 4 8) பாலன்ன மேனியோன் (நெய்தற்கலி. 7.1): கடல் வளர் புரிவளை புரையும் மேனி (புறம். 56 3) என்றும் உரைக்கின்றதால் பலராமனுடைய நிறம் 'பால்வண்ணம்' என்று குறிப்பிடுகின்றன. விஷ்ணு தன் தலையினின்று வெள்ளை மற்றும் கரிய நிறமுடைய முடியை நிலமகள் மீது விட்டெறிந்து, அவ்வெண்முடி பலராமனாகப் பிறக்கும் எனக் குறித்ததாக விஷ்ணுபுராணம் (5.1) காட்டுவது சங்க நூல்கள் கூறும் கருத்தோடு ஒப்பு நோக்கத்தக்கதாகும். மேலும், வலிமையுடையவனாக இருப்பதால் 'பலராமன்' என்ற பெயர் ஏற்பட்டது எனப் பாகவத புராணம் (10:8–12) கூறுகிறது. இதே கருத்திற்கேற்ப, அவன் வலிமைபொருந்தியவன் என நற்றிணை காட்டுவதும் நோக்கத்தக்கது.

"வாலியோன் அன்ன வயங்கு வெள்ளருவி" (நற். 32.2)

என்று குறிப்பிடுவதில், 'வாலியோன்' என்ற பெயர் பலராமனைச் சுட்டுகிறது.

பலராமன் பனைக்கொடியுடையவனாதலால் 'பனைக் கொடியோன்' என்றும் கூறப்படுகிறான். (தொல். எழுத்து 285).

"கொடிமுன் வரினே ஐஅவண் நிற்பின்
கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி"

(தொல். எழுத்து. 285)

என்று தொல்காப்பியத்தில் பனைக்கொடி இடம்பெற்றிருக்கிறது. 'தொல்காப்பியர் காலத்திலேயே மக்களுக்குப் பனைக்கொடியும் பனைக்கொடியோனாகிய பலராமனும் அறிமுகமாகி இருந்தமையை உணர்த்துகிறது.[21] ஆனால், பலராமன் என்ற பெயர் குறிப்பிடப்படவில்லை என்பது நோக்கத்தக்கது.

கிருஷ்ண – பலராமரின் இணைத் தோற்றம்:

சங்கப் பாடல்களில் இருவரும் இணைத்தே பேசப்பட்டு வந்துள்ளனர். இரு அரசர்கள் இணைந்த தோற்றம், இரு அருவிகளின் ஓட்டம் ஆகியவற்றை விளக்க முற்படும் சங்கப் புலவர்கள் கண்ணன் பலராமன் இணைந்த தோற்றத்தை உருவகமாகப் பயன்படுத்தியுள்ளனர் பலராமனைத் தெய்வமாகப் பண்டைத்தமிழ் மக்கள் போற்றி வந்தனர். குறிப்பாக, கண்ணனையும் பலராமனையும் இரு பெருந் தெய்வமாகக் கருதி வந்தனர் (புறம். 58, 14–17).

"பானிற உருவின் பனைக்கொடி யோனும்
நீனிற உருவின் நேமியோனும் என்று
இருபெருந் தெய்வமும் உடன் நின்றாங்கு
உருகெழு தோற்றமொடு உட்கு வரவிளங்கி"

(புறம். 58; 14-17)

எனும் புறநானூற்று அடிகள் சோழனும் பாண்டியனும் சேர்ந்திருந்த காட்சியை வியந்து, கிருஷ்ண – பலராமருக்கு இணைத்துக் காட்டுகின்றன. கண்ணன் – பலராமன் இருவரையும் இணைத்து நற்றிணை (32, 1–2), முல்லைக்கலி (5: 9–12) ஆகிய பாடலடிகள் எடுத்துரைப்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். புறநானூற்றில் (56. 1–8) சிவன் முருகனுக்கு இணையாகக் கிருஷ்ண – பலராமன் வணக்கம் சிறந்திருந்தமையும் தெரிவிக்கின்றது.

கண்ணனும் பலதேவனும் ஒன்றே என்ற கருத்துப்பட பரிபாடலில் கீரந்தையார் பாடிய பாடல் அறியத்தக்கது.

"நீயே, வளையொடு புரையும் வாலியோற்கு அவன்
இளையவன் என்போர்க்கு இளைய ஆதலும்,
புதை இருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு
முதியை என்போர்க்கும் முதுமை தோன்றலும்"
(பரி. 2. 20-23)

என்றடிகளில், பலராமனைக் கிருஷ்ணனின் இளையனாயினும் இளையன் என்றும், முதியவனாயினும் முதியன் என்றும் காட்டுகிறார். புராணங்களில், பலராமனைக் கண்ணனுக்கு முன் பிறந்தவனாகவே காட்டப்படுகிறது. சங்ககால மக்கள் இவ்விருவரையும் பேதமின்றி, ஒன்றாக இணைத்தே கண்டிருக்கின்றனர்.

கண்ணனுடன் பலராமன் இணைத்துப் பேசப்பட்டு வந்ததாலும்,வழிபட்டுவந்ததாலும் பலராமனுடைய செல்வாக்குக் காப்பிய காலம் வரை சிறப்பாக வளர்ந்து வந்திருக்கிறது. தமிழக வைணவத்தில் ஆகமமுறையில் குறிப்பிடப்படும் 'சங்கர்ஷணன்' என்ற பெயர் பலராமனைக் குறிக்கிறது என்று கூறப்படுகிறது பஞ்ச வீர வழிபாட்டில் பலதேவனும் போற்றப் பட்டு வந்திருக்கிறான். திருமாலின் அவதார வரிசையில் பலதேவன் குறிப்பிடப்படுகிறான். ஆனால், வடநாட்டில் பலதேவனுக்குப் பதில் புத்தர் இடம்பெற்றிருத்தல் அறியத் தக்கது. இன்றைய நிலையில், கண்ணன், விஷ்ணு - நாராயணனுடன் இணைந்து பெருந்தெய்வ நிலைக்கு உயர்ந்துள்ள அளவிற்குப் பலராமனின் செல்வாக்கு உயரவில்லை என்று எண்ண இடமிருக்கிறது. பண்டைக் காலத்தில் பெற்றிருந்த செல்வாக்கு பிற்காலத்தில் குறைந்து விட்டது என்பதனை அறிய வேண்டியுள்ளது.

**சங்கம் மருவிய நூல்களில் கண்ணன்:**

சங்க நூல்களை அடுத்துத் தோன்றியதாகக் கருதப்படும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் திரிகடுகம், நான்மணிக்கடிகை, ஐந்திணை ஐம்பது ஆகிய நூல்களிலும் கண்ணனைப் பற்றிய குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஒரே பாடலில் கண்ணன் பற்றிய செயல்கள் கட்டிக் காட்டப்பட்டுள்ளன. (நான்மணிக். 2)

"படியை மடியகத் திட்டான் அடியினால்
முக்காற் கடந்தான் முழுநில மக்காலத்(து)
ஆய்பவி தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்" (நான்மணிக். 2)

என்ற பாடலில், மூன்றடிகளால் உலகத்தை அளந்ததும், இந்திரனின் சூழ்ச்சியால் பெய்த பெருமழையினின்று மக்களைக் காப்பாற்ற கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்ததும், பாணாசுரனுடைய கோட்டையை அழித்ததுமான செயல்களை, ஆசிரியர் ஒரே பாடலில் குறிப்பிட்டிருக்கிறார்.

திரிகடுகத்தில், கண்ணன் பிள்ளைமைச் செயல்களைப் பாடியிருத்தல் நோக்கத்தக்கது.

"கண் அகல் ஞாலம் அளந்ததூஉம் காமரு சீர்த்
தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம் நண்ணிய
மாயச் சகடம் உதைத்தூஉம் இம்மூன்றும்
பூவைப் பூவண்ணன் அடி" (திரி. காப்புச் செய்யுள்

மேற்சொன்ன இருபாடல்களிலும், உலகினை அளந்த செய்தி யோடு, கண்ணன் செயல்களும் இணைத்துக் காட்டப்பட்டுள்ளன. இரு அவதாரங்களையும் ஒன்றாகக் கருதியிருத்தலே இதற்குக் காரணமாகலாம்.

ஐந்திணை ஐம்பதில், கண்ணனின் நிறம் உவமையாகக் கூறப்படுகிறது. வானத்தில் தோன்றிய கருமேகங்களைக் கண்டு, காதலியின் ஏக்கத்தைப் பாடவிழைந்த ஆசிரியர் கண்ணனின் நிறத்தோடு ஒப்பிட்டுக் காண்கிறார்.

"மல்லர்க் கடந்தான் நிறம் போன்றிருண்டெழுந்து"
(ஐந்திணை. 1

என்றடியில், மல்லர்களை வென்ற செய்தி சுட்டிக் காட்டப் படுகிறது. சங்கப் புலவர்களைப் போன்றே, சங்கம் மருவிய காலத்தில் இருந்த புலவர்களும் கண்ணன் மீது பற்றுக் கொண் டிருந்தனர் என்பதும், கண்ணன் செயல்களைப் பாடி நினைவுறுத் தினர் என்பதும் அறியப்படுகிறது.

பண்டைக் காப்பியங்களில் கண்ணன்:

அ சிலப்பதிகாரம்:

தமிழ்ச் சங்க நூல்களில் மட்டுமன்றி, சமண பௌத்த நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலையிலும் கண்ணன் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. ஆயர்பாடிச் செயல்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன. காப்பியங்கள் தோன்றிய காலகட்டத்தில் பல்வேறு கோயில்களைக் குறிப்பிடுகையில்,

கண்ணனுக்கும் பலராமனுக்கும் கோயில்கள் இருந்தன என்பது இந்நூல்கள் மூலமாக கிடைத்த புதிய செய்திகளாகும்.

காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள கோயில்களைப் பற்றிக் கூற வந்த ஆசிரியர், பிற கோயில்களோடு,

"வால் வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்"

(சிலப். இந்திர. 171–172)

இருந்ததாகக் குறிப்பிடுகிறார், இருவருக்கும் தனித்தனியே கோயில் இருந்ததும் கட்டிக் காட்டப்படுகின்றது. சங்க காலத்தில் இருவரையும் ஒரே கோயிலில் வைத்து வணங்கிய நிலை மாறி, சிலப்பதிகார காலத்தில் அந்நிலை வழக்கற்று விட்டது என்று கூற வாய்ப்புள்ளது. பிற்காலத்தில், கண்ணன் வைணவ சமயக் கடவுளாகக் கருதப்பட்டதும், கோயில்களும் வைணவக் கோயில்களாக மாறியிருக்கக் கூடும்.

சிலப்பதிகாரத்தில், விருப்பு வெறுப்பற்று பிற சமங்களும் சமயக் கடவுளரும், தொன்மக் கூறுகளும் சிறப்பாக எடுத் துரைக்கப்பட்டுள்ளன. பிற சமயத்தினும், வைணவ சமய ஆசிரியரைப் பெரிதும் கவர்ந்துள்ளது என்று எண்ணக் கூடியதாகக் கண்ணன் செயல்கள், திருமால் பற்றிய பெருமைகள் ஆகியவற்றைப் பாடியிருத்தல் நோக்கத்தக்கது. அச்சமயத்தின் எதிரொலியாகச் சிலப்பதிகாரத்தின் ஆய்ச்சியர் குரவையில் கண்ணனைப் பெரிதும் அனுபவித்துள்ளார் என்பதும் தெரிய வருகிறது.

ஆய்ச்சியர் குரவை:

இறைவனை எங்கும் எவற்றிலும் காணுதல் ஒரு உயர்ந்த பக்தி நிலையாகும். அங்ஙனமே, ஆய்ச்சேரியில் உள்ள பெண்கள், மாதரி வீட்டிலே அடைக்கலமாக வந்து தங்கிய கண்ணகி மற்றும் கோவலனைக் கண்ணன் நப்பின்னையாகக் கருதினர். இவ்விருவரைப் பார்த்து,

"ஆயர்பாடியில் அசோதை பெற்றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்ல துண்ணும் நம்பீ"

(சிலப். கொலைக்களம். 46-48)

என்று கோவலனையும்,

"... ...பண்டு நங் குலத்துத்
தொழுனை யாற்றிலுள் தூமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்" (மேற்படி, 49-51)

என்று கண்ணகியையும் கண்ணன் நப்பின்னையாகக் கருதி போற்றினர். முன்பே குறிப்பிட்டது போன்று, சங்ககால வழக்கத்திலிருந்த மாயோனை சராசரி மனிதனோடு ஒப்பிட்டுக் காட்டும் வழக்கு இங்கு, சிலப்பதிகார காலத்திலும் இருந்து வந்தது நினைக்கத்தக்கது.

ஆய்ச்சேரியில், கோவலன் கொலையுண்டதைத் தொடர்ந்து பல தீ நிமித்தங்கள் நேர்கின்றன. அவற்றிலிருந்து மனம் தெளிவு பெற, மாயவனும் பலராமனும் நப்பின்னையோடு தொழுநை யாற்றில் ஆடிய பிள்ளைச் சரித நாடகங்களில் சிலவற்றைப் பாடி ஆடத் தொடங்குகின்றனர். தம் குல வழக்குப்படி குரவைக் கூத்தாடுகின்றனர். அவ்வாட்டத்தில் கண்ணனின் செயல்களை நினைந்து பாடினால் கண்ணன் அருள்புரிவான் என்று அறிவுக் காட்சியில் காண்கின்றனர். ஆகவே, ஆய்ச்சியர் குரவை, திருமாலின் முழு அவதாரமான கண்ணனைப் பற்றிய பாடலும் பரவலும் ஆடலுமாகவே அமைந்திருந்தது.

1. கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
(சிலப். ஆய்ச். 9)

2. பாம்பு கயிறாக் கடல் கடைந்த மாயவன் (மேற்படி. 9)

3. கொல்லையுஞ் சாரற் குருந்தொசித்தமாயவன்
(மேற்படி. 9)

4. விளவின் கனியை உதிர்த்து வஞ்சத்தால்
வந்த கன்றினைக் குருந்தடியால் உதிர்த்தது.
(மேற்படி)

5. கண்ணன் இனிய குழலோசையைத் தருபவன்
(மேற்படி)

6. வடவரையை மத்தாகக் கொண்டு, வாசுகி
என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு
கடல் கடைந்து கலக்கியவனின் கைகள்
அசோதைப் பிராட்டியாருடைய கடைக் கயிற்றாலே
கட்டுண்ட கண்ணன் (சிலப். ஆய்ச். 13)

7. பசியொன்றும் இல்லாமலேயே உலகம்
முழுதும் உண்டு தன் வயிற்றிலே அடக்கியவன்;
அங்ஙனம் உண்ட வாயுடைய
கண்ணன், களவு செய்து வெண்ணெயுண்ட
வாயுடையவனாவான். (மேற்படி 13)

8. கண்ணன் என்ற தெய்வக் குழந்தையின்
விளையாட்டில் ஈடுபட்டு மூவுலகம் இருள்
தீர்ந்து வாழும்படி நடந்த திருவடிகளே
பின்னாட்களில் பஞ்சபாண்டவர்களுக்குத் தூது
நடந்த திருவடிகளாகும். (சிலப். ஆய்ச். 14)

இவ்வாறு. கண்ணன் புகழைப் பாடிப் பரவுவதால் தம் அழைப்புக்குக் கண்ணன் வருவான் என நம்புகின்றனர். கண்ணன் வரக் காலம் தாழ்த்துவதால், நப்பின்னையை பற்றிப் பாடிப் புகழ்வதே சிறந்தது எனக் கருதி நப்பின்னையைப் பற்றி பாடத் தொடங்குகின்றனர் (சிலப். ஆய்ச். 9). கண்ணன் யமுனைக் கரையில் ஆயமகளிரின் ஆடைகளைக் கவர்ந்தது, வளையல்களை கவர்ந்தது, நிறை கவர்ந்தது முதலிய வால சரிதைகளைச் சொல்லியும், நப்பின்னைக்குக் கண்ணன் காட்சி இன்பம் மீண்டும் கிடைக்கப் பெறாமையால் காதல் நோயால் வாடியதையும் ஆய்ச்சியர்கள் தம் குரவைக் கூத்தின் பொழுது பாடிப் புகழ் கின்றனர். இளங்கோவடிகள், தம் பாட்டில் 'நாராயணா' என்ற பெயரில் கண்ணனின் சௌலப்பிய (எளிமை) நிலைகளை அழகுற எடுத்துரைத்துள்ளார்.

கண்ணன் சீர் பரவுதலில் இளங்கோவடிகள் பங்கு கொண்டு, பத்தி உணர்வினைச் சிறப்பாகக் காட்டியுள்ளார். முப்பொறியின் வல்லமையை விளக்கிக் காட்டுகிறார். கண்ணனின் புகழைக் கேட்க வேண்டும்; கரியவனைக் காண வேண்டும்; கேட்டுக் கண்டு, நாராயணனை நாவார வாழ்த்த வேண்டும். என்று பொறிகளின் பணியினை (சிலப். ஆய்ச். 14) வலியுறுத்திக் காட்டுகிறார்.

கண்ணனின் பிள்ளைமைச் செயல்களில் இளங்கோவடிகள் ஆழ்ந்து அனுபவித்துள்ளார். குறிப்பாக கண்ணனின் செயல் களைப் பாடி, அவனருள் பெறுதல் வேண்டும் என்று மக்களுக்கு வழிகாட்டுவதாக அமைத்துள்ளார். வைணவ சமயத்தைச் சார்ந்தவர் பாடி அனுபவிப்பது போல இவரது பாடல்கள்

அமைந்துள்ளன. ஆகவே கண்ணனின் செயல்கள் ஒரு குறிப்பிட்ட சமயத்தினரை மட்டுமே சார்ந்து இன்புறுத்துவதாக அமையாது, பிற சமயங்களிலும் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனைச் சிலப்பதிகாரச் சான்று மூலம் விளக்க முடிகிறது. முல்லை நில ஆய்ச்சியர் கண்ணனைத் தம் குலத்துத் தெய்வமாகவே கருதிப் போற்றி வந்தனர். சிலப்பதிகார காலத்தில் (கி.பி.5-ஆம் நூற்றாண்டு என்பர்) கிருஷ்ணனும் நாராயணனும் ஒன்றிய நிலை காணப்படுகிறது. இளங்கோவடிகள், இருவரையும் தனித் தனியே பிரித்துக் காணாது, கண்ணனை நாராயணனாகவே கண்டிருக்கிறார். சங்க இலக்கியப் பாடல்களில் குறிப்பிடப்படாத நப்பின்னையை, கண்ணன் மனைவியாக காட்டிய சிறப்பு இளங்கோவடிகளைச் சார்ந்ததாகும். இந்த நம்பின்னை பற்றிய கதையானது தமிழ் நாட்டில் வழங்கிய கண்ணன் பற்றிய வழக்குகளில் ஒன்றாகக் குறிக்கப்படுகின்றது.

ஆ. மணிமேகலை;

சிலப்பதிகாரத்தோடு எழுந்த காப்பியம் மணிமேகலை யாகும். இது, பௌத்தச் சமயக் காப்பியம் எனப் பெயர் பெற்றது. பௌத்த சமயத்தினரிடமும் கண்ணனது செல்வாக்கு இருந்ததை அறியமுடிகிறது. மணிமேகலையில், கண்ணன், பலராமனோடும், நப்பின்னையோடும் ஆடிய குரவை கூத்துப் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது.

> "மாமணி வண்ணனுந் தம்முனும் பிஞ்சையும்
> ஆடிய குரவை இஃது ஆமென" (மணி. 19: 65-66)

என்று, துவராபதி எருமன்றத்தே குரவைக் கூத்து ஆடியதைச் சுட்டுகின்றது.

சமயக் கணக்கர் தந்திரம் கேட்ட காதையுள் வைணவ வாதம் கூறப்படுதலானும், வைணவ சமயத்தின் முதன்மை அறியப்படும்.

> "காதல் கொண்டு கடல் வண்ணன் புராணம்
> ஓதின னாரணன் காப்பென உரைத்தனன்"
> (மணி. 27; 94-95)

புத்த சமயத்தை மேம்படுத்தும் பொருட்டு பிற சமயத்தை இகழ்ந்துரைத்தலாகிய சமய வெறுப்பு இக்காப்பியத்தில்

அரும்பியுள்ளது. ஆதலால், மணிமேகலைக்கும் அவளுடைய சமகால வைணவ தத்துவவாதிகளுக்குமிடையே நிகழ்ந்த விவாதத்தை 'வைணவ வாதம்' என்ற சொல் குறிப்பிடுகின்றது. மேலும், வைணவ சமயமும் அதற்கே உரித்தான தத்துவக் கொள்கைகளும் அக்காலத்தில் இருந்தன என்பதற்கான சான்று களை இவ்வடிகள் சுட்டுகின்றன. பின்னாட்களில், இது மேன் மேலும் ஆழ்வார்களால் வளர்க்கப்பட்டு வந்திருக்கிறது.

இ. சீவகசிந்தாமணி:

சமண நூல்கள் வரிசையில் இடம்பெறும் காப்பியம் சீவக சிந்தாமணி ஆகும். சமணக் காப்பியமாக இருப்பினும் காப்பியத் தலைவனான சீவகனைப் பல இடங்களில் திருமாலோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார் திருத்தக்க தேவர்.

மகளிரின் ஆடை கவர்ந்த செய்தியும், குவலயாபீடம் என்ற யானையைக் கொன்ற செய்தியும் சிந்தாமணியில் இடம் பெற்றுள்ளன. சீவகனைக் கண்ணனோடு ஒப்பிட்டுக் காட்டும் வழக்கு இருந்துள்ளது அறியத்தக்கது.

கண்ணன் ஆயர்மகளிரின் உடைகளைக் கவர்ந்து கொண்டு குருந்த மரத்திலேற அச்சமயத்தில் நம்பி மூத்தபிரான்–பலராமன் அங்கு வருவதை அறிந்து, தான் செய்த செயலை அவர் கண்டால் தனக்குப் பழி வந்து சேருமே என எண்ணி, தொழுநை ஆற்றங் கரையிலுள்ள தான் ஏறிய குருந்த மரத்தைத் தாழ்த்தி அப்பெண்களின் மானத்தை மறைத்ததாகச் சிந்தாமணியில்[22] எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

அடுத்து, யானையைக் கொன்ற வீரச்செயல்[23] புகழ்ந்து போற்றப்பட்டுள்ளது. கண்ணனின் இச்செயலோடு சீவகனின் வீரம் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது. கண்ணன் இவ்யானையைக் கொல்லாமல் அதன் மருப்பினை மட்டும் ஒசித்ததனால் அவன் 'கரிவரதனாயினர்' எனச் சமணரின் ஸ்ரீபுராணம் கூறுகிறது. இவ்வாறு, கண்ணனின் செயல்கள் சமண சமயத்தினரிடையேயும் செல்வாக்குப் பெற்றிருந்தன என்பது அறிய வருகிறது.

தமிழ்நாட்டு வழக்குகள்:

மகாபாரதம், பாகவதம் முதலிய புராணங்களில் கண்ணன் அவதரித்து உலகினை உய்யக் கொண்ட வாலாற்றுச் செய்திகள்

சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவ்வரலாற்றுக் கூறுகள் சிலவற்றை பண்டைத் தமிழ் மக்கள் முற்காலமுதலே அறிந்திருக்கின்றனர்; அவற்றைப் போற்றியும் வந்திருக்கின்றனர் என்பதற்குப் பண்டைத் தமிழ் நூல்களே சான்று பகர்கின்றன. இருப்பினும், வட நூல்களினின்று சிறிது வேறுபாடுடையனவும், அந்நூல்களில் இல்லாதனவுமான சில கதைகள் தமிழ் நாட்டு வழக்குகளில் இருந்திருக்கின்றன. அதற்கான அடிப்படைச் சான்றுகள் கிடைத்தலரிது. இவை அனைத்தும் வாய்மொழியாக (கர்ண பரம்பரைக் கதைகள்) வந்திருக்கலாம் என ஊகிக்க இடமுண்டு. இவை நப்பின்னை திருமணம், குடக்கத்து, குருந்தொசித்தது, சீமாலிகன் கதை, ததிபாண்டவன் கதை என்பவைகளாகும். இவை, தமிழ் நாட்டு வழக்குகளில் இருந்த கண்ணன் சரிதங்களாகும். "கண்ணபிரான் வழியினராய்த் தென்னாட்டிற் குடியேறிய வேளிரும் அப்பிரான் வளர்ந்த கோகுலத்தவராய் இங்கு வந்தேறிய ஆயரும் போன்ற பழந் தமிழ்க் குடிமகளாற் அச் சரிதை வழக்குகள் இங்கு வழங்கி நடைபெறலாயின எனக் கொள்ளத்தகும்"[25] என்பர்.

அ. நப்பின்னை:

கண்ணனுடைய காதலியாகவும் மனைவியாகவும் போற்றப் படுபவளே 'நப்பின்னை' எனும் நங்கையாவாள். நப்பின்னை ஆயர் குலத்தில் தோன்றியவள் என்பது தமிழ்நாட்டினரின் கருத்தாகும். இந்த நப்பின்னை பற்றிய செய்திகளை முதன் முதலில் தமிழில் இளங்கோவடிகள் எடுத்துரைத்துள்ளார். கண்ணன் பலராமன் நம்பின்னையோடு சேர்ந்து குரவைக்கூத்து ஆடினர் என்ற செய்தியில் நப்பின்னையின் சிறப்பு காட்டப் படுகிறது.

"வைய மளந்தான்றன் மார்பிற்றிரு நோக்காப்
பெய்வளைக் கையாள்நம் பின்னை தானாம்"
(சிலப். ஆய். குர. 16)

என்றடிகளில் நப்பின்னை 'நம்பின்னை' என்ற பெயரில் சுட்டிக் காட்டப்படுகிறாள். கண்ணன் பலராமனுடன் நிகழ்த்திய வாலசரிதை நாடகங்களிலே நப்பின்னையோடு ஆடிய குரவைக் கூத்து போற்றத்தக்கதாக அமைந்துள்ளது. அக்கூத்தினை இளங்கோவடிகள் சிறப்பாக வருணித்திருப்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். (சிலப். ஆய். குர. 7–28) முல்லைத் திணை

மரபிற்கேற்ப, கண்ணன் ஏழு காளைகளை அடக்கி நப்பின்னையை மணந்து கொண்டான் எனக் குறிப்பிடப் படுகிறது. மணமாலை சூட்டிய பிறகு, குரவைக் கூத்து (சிலப். ஆய். குர. 16) நடைபெறும். அப்பெண்கள் கண்ணனின் பால்யப் பருவ நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்து போற்றி ஆடிப் பாடுவர். அந்த ஏழு பெண்களுள் நடுவிலே பின்னையும், அவளுக்கு இடப்புறத்தில் கண்ணனும், வலப்புறத்தில் பலராமனும் நிற்பதாய் கற்பனை செய்து கொண்டு ஆடிப் பாடியதாய் (சிலப். ஆய். குர. 26) எடுத்துரைக்கப்படுகின்றது.

பண்டைக் காலத்தில், ஆயர்குடி மக்கள் தங்கள் மகளிருக் குரிய மணவாளனைத் தேர்ந்தெடுக்க ஒரு புதுமையான முறையினை மேற்கொண்டனர். தாங்கள் வளர்க்கும் முரட்டுக் காளைகளை அடக்கும் வீரமுடைய இளைஞர்க்கே தம் மகளிரைப் பெண்ணின் பெற்றோர் திருமணம் செய்து கொடுத்தனர். இவ்வாறு செய்யும் முறைக்கு 'ஏறுதழுவுதல்' என்று கூறினர். இத்தகைய பழக்கம் முல்லை நிலத்து மக்களிடம் இருந்து வந்ததைக் 'கலித்தொகை' விரிவாக எடுத்துரைக் கின்றது.

இவ்வழக்கம், கண்ணன் நப்பின்னையை மணம் செய்து கொள்ளும் போதும் மேற்கொள்ளப்பட்டது எனக் கூறலாம். இச்செய்திகளைக், குரவைக் கூத்திற்குரிய கருத்தாக இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். கண்ணன் ஏழு எருதுகளை அடக்கினான் என்ற செய்தியை ஆழ்வார்களும் பிற்காலத்துப் புலவர் சிலரும்[26] எடுத்துரைத்துள்ளனர். ஆழ்வார்கள், கண்ணனை நப்பின்னையின் கணவனாகவே பாடியுள்ளனர்.[27]

நப்பின்னை – சொல்லும் பொருளும்:

நப்பின்னை எனும் சொல் நல்ல (ந) பின்னை எனவும், நம்பின்னை எனவும் பிரித்துப் பொருள் கூறத்தக்க வகையில் அமைந்திருக்கிறது.

'பின்னை' என்பது சிறிய பெண்; சிறியவள் என்று சில ஆய்வாளர்கள் பொருள் கொள்கின்றனர். 'ந' என்பது அழகு; ஆகவே, நப்பின்னை என்றால் 'அழகான சிறிய பெண்' என்று பொருள் படுவதாக[28] கூறப்படுகிறது.

'நம்முடைய ஆயர்குலத்தில் உதித்தவளாகிய நம்முடைய பின்னை எனும் பொருள் கொள்ளத்தக்க வகையில், நம் பின்னை எனும் வடிவ அமைப்பில் அடியார்க்கு நல்லார்[29] இச்சொல்லைக் கொண்டுள்ளார்.

'பின்னை' எனும் சொல்லிற்கும் 'பின்பிறந்தவள்' என்று பிங்கல நிகண்டு[30] பொருள் கூறுகிறது.

இக்கருத்துப்பட, கம்பராமாயணத்தில்[31] சூர்ப்பநகையை அறிமுகப்படுத்தும் முறை இங்கு ஒப்பிடத்தக்கது. இதனால் பின்னை என்னும் சொல்லிற்கு பின்-பிறந்தவள்-தங்கை எனும் பொருள் வழக்கத்தில் இருந்து வந்துள்ளது அறியத் தக்கது. இக்கருத்து, வைணவ மரபில் வலியுறுத்திக் காட்டுவது நோக்கத்தக்கது.

திருமாலின் இரு மனைவியர்களாக. திருமகளையும் பூதேவியையும், போற்றுவது வைணவ மரபாகும். கண்ணனாகத் திருமால் அவதரித்த பின்பு, ஆயர் குலக்கொழுந்தாகிய நப்பின்னையைக் காதலித்து மணம் செய்துகொண்டதாகக் கருதப்படுகிறது. இதனால், திருமாலிற்கு முத்தேவியரை மனைவியராகக் கூறுவது மரபாக இருந்து வருகிறது. இச்செய்தியை நம்மாழ்வார் குறிப்பிட்டிருத்தல்[32] இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது.

நம்பின்னையின் அழகு:

கண்ணனின் உள்ளத்தைக் கவர்ந்த நப்பின்னையைப் பேரழகியாகப் பண்டைத் தமிழர்கள் கண்டனர். அழகிய கூந்தலையுடையவளாகவும் (சிலப். ஆய்ச். 26:3), அவளுடைய கண்கள் வேலினைப் போன்று கூர்மையாகவும் ஒளி பொருந்திய அழகினையுடையவளாகவும, (சிலப். ஆய்ச். 5) கண்டிருக்கின்றனர். அழகிய நீண்ட நெடுங் கூந்தலையுடையவளாகவும் குறிப்பிடப்பட்டாள். இதனால் அவளை 'உபகேசி' எனச் சுட்டும் வழக்கும் இடைக்காலத்தில் எழுந்தது. (திருவள்ளுவ மாலை. 2) 'உபகேசம் என்பது மயிராற் பின்னிய பின்னல்; அதனால் பெயர் சிறந்தாள் பின்னைப் பிராட்டி, உபகேசம் உடையாளை உபகேசி என்பது தமிழ் நூன் முடிவாகும்'[33] இவ்வாறு, நப்பின்னையானவள், ஆயர்குலத்தில், தோன்றியவளாகவும் கண்ணனின் மனைவியாகப் போற்றப்படுபவளாகவும் பண்டைத் தமிழர்கள் கருதி வந்தனர்.

கண்ணன் கதைகள் இலக்கியங்கள் மற்றும் இதிகாச புராணங்களில் எழுத்து வடிவம் பெறுமுன் அக்காலக் கட்டத்தில் நாடகமாக நடிக்கப்பெற்று வந்திருக்கின்றன எனத் தெரிய வருகிறது. வடமொழியில் 'பாலசரிதா நாடகங்கள்' என்று அழைக்கப்பட்டவை, தமிழ்ல் 'வால சரிதை நாடகம்' என்ற பெயரில் உருவாகியது. இதனை, இளங்கோவடிகள் தமது காவியத்தில் கொண்டு வந்திருக்கிறார் (சிலப். ஆய்ச். 5). ஆதலால், வடமொழியினைக் கொண்டு தமிழில் இயற்றிருக்கக் கூடும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[34] இவ்வாறு, நாட்டுப்புற வழக்காக வாய்மொழி மரபாக பரவிய கண்ணன் கதைகள் புராணங்களில் இடம்பெறலாயின. புராணங்களில் 'நப்பின்னை' என்ற பெயர் இடம்பெறவில்லை. ஆயர்பகுதியில் கண்ணன் வளர்ந்தபொழுது, பெயர் குறிப்பிடப்படாத ஒரு ஆயர்ச் சிறுமியைக் கண்ணன் விரும்புவதாகக் குறிப்பு கிடைக்கின்றது. அக்கருத்தினைக் கொண்டு பார்க்கையில், அக் கதைகளினடியாகக் கொண்டு இளங்கோவடிகள் நப்பின்னையைக் காட்டியிருத்தல் கூடும் என ஊகிக்க இடமுண்டு.

ஆ. குரவைக் கூத்து:

முல்லை நிலப் பகுதியில் வாழ்ந்த மகளிர் தம்முள் கை கோத்து ஆடிய ஒருவகைக் கூத்தினைக் 'குரவைக் கத்து, என்பர்.

'காதலையோ, போர் வெற்றியையோ பொருளாகக் கொண்டு பாடப்படுபவன குரவைச் செய்யுட்களாகும். ஏழு மகளிரோ (அ) ஒன்பது மகளிரோ வட்டமாக நின்று ஒருவரோடு ஒருவர் கைகோத்து ஆடுவதே'[35] குரவைக் கத்தாகும். மகளிர் ஆடிய குரவைக் கத்தின் சிறப்பினை இளங்கோவடிகள் பாடியிருப்பது (ஆய்ச். குர. 28) மீண்டும் இங்கு நினை விற்கொள்ளத்தக்கது.

நப்பின்னையோடு கண்ணன் ஆடிய குரவைக் கூத்தினை. மணிமேகலையில் (19: 65-66) சாத்தனாரும் குறிப்பிடுகிறார் இவ்விரு தமிழறிஞர்களுக்குப் பிறகு, திவ்வியப் பிரபந்த உரைக் காரர்களே இக்கூத்தினைப் பற்றிப் பேசியுள்ளனர். ஆனால், வடமொழிப் புராணங்களில் கூறப்படும் செய்திகளை அடிப் படையாகக் கொண்டே விளக்கம் தந்துள்ளனர். பண்டைத் தமிழ் மரபினைக் காண இயலவில்லை. ஏனெனில், வடமொழியில்

'குரவைக் கூத்து' என்ற பெயர் குறிப்பிடப்படவில்லை. இக் கூத்து பற்றிய செய்தி பாகவதத்தில் இடம்பெற்றுள்ளது, ஆனால், இக்கூத்து, கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து, மழையினின்று ஆயர்மக்களைக் காப்பாற்றியச் செயலுக்கு மகிழ்ந்து ஆடியதாகக் குறிப்புள்ளது. இவர்கள் ஆடிய கூத்து குரவைக் கூத்தாகக் கூற வாய்ப்புள்ளது.

வடமொழியில் 'ராஸலீலை' ஆடும் முறை குரவைக் கூத்தினை ஒத்துள்ளது. 'ராஸம், என்றால் கூட்டமாய் நின்று விளையாடும் ஆயர்களின் உல்லாசப் பொழுதுபோக்காகும்,[36] என்று கூறப்படுகிறது. இந்த 'ராஸக்ரீடை' என்பது இன்றும் வட மாநிலங்களில் நடைபெற்று வருகிறது.வடநாட்டு வைணவத்தில் கண்ணனுடைய செயல்களுள் இந்த 'ராஸக்ரீடை' நிகழ்ச்சி பெரிதும் போற்றப்பட்டு வருகிறது. கண்ணனின் யோக சக்தியைக் காட்டுவதாகக் கருதுகின்றனர். ஒவ்வொரு ஆயர் மகள் பக்கத்திலும் கண்ணன் நின்று ஆடுவதாக இக் கூத்தினை விளக்குவர். இது,பரமாத்மா மற்றும் ஜீவாத்மாக்களுக்குமிடையே உள்ள உறவினைக் காட்டுவதாகக் கருதி வருகின்றனர். கண்ணன் வழிபாட்டின் வளர்ச்சியானது செல்வாக்குப் பெறத் தொடங்கியதும், பண்டைத் தமிழகத்தில் ஆயர் மரபில் இருந்து வந்த இதுபோன்ற கூத்து வகைகள் புராண மரபோடு கலந்து, தத்துவ விளக்கத்தோடு வளர்ச்சி பெறலாயிற்று.

இ. கண்ணன் ஆடிய கூத்துக்கள்:

கண்ணன் குரவைக் கூத்து ஆடியதோடன்றி, குடக்கூத்து, பேடு, மல்லாடல் ஆகிய கூத்துக்களையும் ஆடியவை தமிழ் நாட்டு வழக்குகளில் இடம்பெற்றுள்ளன.

'கண்ணன் பேரன் அநிருத்தனின் திருமணத்திற்காக, வாணனுடன் போர்புரிந்து,அநிருத்தனைச் சிறையிலிருந்து மீட்டு, அவன் விரும்பிய பெண்ணையே மணம் முடித்துக் கொடுத்த செய்தி புராணச் செய்தியாகும். பழைய நூல்களில் இச்சரித்திரம் தொடர்பாக மூன்று கூத்துக்கள் நிகழ்ந்தன. குடக்கூத்து, பேடு, மல்லாடல் என்பவனவாகும்.[37]

குடக்கூத்தென்பது, தன் பேரன் அநிருத்தனை மீட்க' வாணனது நகரமான சோணிபுரம் என்ற நகருக்குச் சென்று குடங்களைக் கொண்டு கூத்தாடியதைக் குறிக்கிறது. 'இக்குடக்

கூத்து வகுக்கப்பட்ட சிலாசிற்பம் என்று விளக்கப்படுகிறது. பலகுடங்களை மேலெழ வீசிப் பிடித்து அம்மானை போல ஆடும் கூத்து'[38] இதுவாகும்.

"வாணன் பேரூர் மறுகிடை கடந்து
நீணில மளந்தோ னாடிய குடமும்"
(சிலப். கடலாடு. 54-55)

என்ற அடிகளும், பரிபாடலின் மூன்றாம் பாடலில் இடம் பெறும் 'குடவல' என்ற சொல்லும் இக்கூத்தினை எடுத்துக் கூறுகின்றன.

பேடு என்பது, தன் பேரன் திருமணத்திற்காக, கண்ணன் பேடியுருவம் கொண்டு, சோணிபுரம் சென்று அநிருத்தனை மீட்டு ஆடிய ஆட்டமாகும்.

மல்லாடல் என்பது, வாணனாகிய அவுணனை. வேறற்கு மல்லனாய்ச் சேர்ந்தாரிற் சென்று, அவனுடைய உயிர் போக, நெரித்து, ஆடிய கூத்தாகும். 'அவுணன் கடந்த மல்லின் ஆடலும்' (சிலப். கடலாடு. 49) என்ற சிலப்பதிகார அடி இதனை விளக்குகிறது.

கண்ணன், கஞ்சனால் (கம்சன்) ஏவப்பட்ட யானையை ஒசித்து நின்றாடிய அல்லியக் கூத்தும் குறிப்பிடத்தக்கது. (சிலப். கடலாடு. 46).

இக்கூத்துக்கள், திருமாலைப்பரவும் தேவபாணியாகும், இக்கூத்துக்களை மாதவி ஆடியதாக இளங்கோவடிகள் காட்டி யிருப்பதால், கண்ணனுடைய இக்கூத்துக்கள் தமிழ் நாட்டு வழக்கில் இருந்திருக்கின்றன என்பதற்குச் சான்றுகளாகும்.

ஈ. குருந்தொசித்தது:

கண்ணன் நிகழ்த்திய விளையாடல்களுள் குருந்தமரம் ஒசித்த செயலும் இதில் அடங்கும். பண்டைத் தமிழர்களிடையே இச்செயல் செல்வாக்குப் பெற்றிருப்பதால் சங்கப்புலவர் இச்செயலை ஒரு உவமையாகச் சுட்டிக்காட்டியுள்ளார். குருந்த மரமேறிய செயலை அகநானூற்றில் காணமுடிகின்றது.

"வடாஅது வண்புனற் றொழுநை வார்மணலகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை புடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல" (அகம். 59)

யமுனை ஆற்றில் நீராடச் சென்ற ஆயர்மகளிரின் மானத்தை மறைக்கக் கண்ணன் குருத்த மரத்தைத் தாழ்த்தியதாக இதற்குப்பொருள் கூறப்படுகிறது. பெண்கள் குளிக்கும் பொழுது, பலராமன் அங்கு வர, அப்பெண்களின் மானத்தை மறைக்க இவ்வாறு செய்ததாகப் பழைய உரை இப்பாட்டிற்குப் பொருளாக அமைகிறது. இக்கதைக் குறிப்பு பின்னர் ஜைன ராலும் போற்றப்பட்டு வந்திருக்கிறது என்பதனைச் சிந்தாமணி யின் (சிந். நாமகள். சிலம். 209) மூலம் அறியத்தக்கது.

சிலப்பதிகாரம் (ஆய்ச். 17, 29, 20) திரிகடுகம் (1) ஆகிய வற்றில் இச்செய்திக் குறிப்பிட்டுள்ளது. குருந்த மரத்தினை ஒடித்ததாகக் குறிப்பிட்டுள்ளதே தவிர விளக்கம் கொடுக்கப்பட வில்லை.

புராணங்களில், ஆடைகளைக் கவர்ந்த கண்ணன் கடம்ப மரம் ஏறியதாகக் கூறப்படுகிறது. குருந்த மரத்தினை ஒடித்த செயல், கம்சனால் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் அம்மரத்தி னுருவில் ஒளிந்திருந்ததால் அம்மரத்தினை ஒடித்து அவ்வசுரனைக் கொன்றதாகவும் பேசுகிறது.

குருந்தமரம் ஒசித்த செயல் தமிழ் நூல்களில் வடமொழி யினின்று வேறுபட்டுக் காணப்படுகிறது. ஒரு செயல் பல இடங்களில் பரவிச் செல்வாக்குப் பெறும் பொழுது, அந்தந்த இடத்து சமுதாயத்திற்கு ஏற்ப அக்கதைப் பயன்படுத்தும் முறையில் சில வேறுபாடுகள் இருக்கக் காண்கிறோம். பண்டைத் தமிழகத்தில், கண்ணன் பெண்களின் மானத்தை மறைக்க செய்த இச்செயலில், அவனது பண்பினையும், சிலப்பதிகாரம் போன்றவற்றில் கூறும் பொழுது அவனது வீரத்தையும் காண முடிகிறது. பண்டைத் தமிழகத்தில் வழக்கிலிருந்த இச்செயல் புராணத்திலும் இடம்பெற்றிருக்கக் காணமுடிகிறது.

ததிபாண்டன் என்பவனுக்கும் அவனது தாழிக்கும் கண்ணன் வீடுபேறு அளித்த செயல், சீமாலிகன் வதம் ஆகியன சங்கப் பாடல்கள் மற்றும் பண்டைக் காப்பியங்களில் இடம்பெற வில்லை. ஆனால் இவ்விரண்டும் தமிழ் நாட்டு வழக்குகளில் இருந்த கண்ணன் சரிதங்களில் அடங்கும். ஆழ்வார்கள் பாடல் களில் இவ்விரு செயல்கள் குறித்த சான்றுகளைக் காணலாம். இவ்வரலாறு குறித்த அடிப்படைச் சான்று கிடைக்கப்பெற வில்லை.

தமிழ்நாட்டு வழக்குகளில் இருந்த கண்ணனைப் பற்றிய இந்த வரலாறுகள் கி.பி. 5-ஆம் நூற்றாண்டு கால கட்டத்தில் பண்டைத் தமிழ் மக்களிடையே செல்வாக்குப் பெற்று, போற்றப்பட்டு வந்திருக்கின்றன.

பண்டைத் தமிழகத்தில் இருந்த வைணவத்தின் நிலை:

பண்டைக் காலந்தொட்டே, வைணவ சமயமானது, தமிழகத்தே கால் கொண்டு விட்டது என்பதைப் பண்டைய இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. தொல்காப்பியம் முதலிய தொன்னூல்கள் முல்லை நிலத் தெய்வமாகக் கண்ணனைப் போற்றி வந்திருக்கின்றன. தொல்காப்பியத்தில் முல்லை நிலத் தெய்வமாக, மாயோனான கண்ணன் போற்றப்பட்டு வந்தான் என்பதனைத் தொடர்ந்து வந்த சங்கப் பாடல்கள் சான்று பகர்கின்றன.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே கண்ணனைப் பர தெய்வமாக ஏற்று, போற்றியும் வந்திருக்கின்றனர். அதனால் தான். முல்லை நிலத்துத் தெய்வமாகக் கண்ணனைச் சுட்டியிருக்கிறார். கண்ணனது செயல்களில் தமிழ் மக்கள் ஈடுபட்டு வந்தனர் என்பதற்கான சான்றும்,

"காமப்பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்"
"குழவி மருங்கினும் கிழவதாகும்"

(தொல். பொருள். 83-84)

என்ற நூற்பாக்கள் வழி அறியத்தக்கது. இது தெய்வக் குழந்தையாகிய கண்ணனிடம் ஆயமகளிர் கொண்ட காதலை, உட்கொண்டே எழுந்ததாகும் என்பர் தமிழறிஞர்கள் இந்த ஆய மகளிர் நோக்கம் போலவே, ஆழ்வார்கள் கண்ணனிடம் கொண்ட பக்தியினை, இந்நூற்பாவின் பொருளான காமப் பகுதியை விளக்குவதாகக் கூறலாம்.

கண்ணனைப் பற்றிக் கூறுவதற்கு 'மாயோன்' என்ற சொல்லையே சங்கப் புலவர்கள் பயன்படுத்தியிருக்கின்றனர்.

கண்ணன் வழிபாடு சிந்து சமய மக்களிடையேயும் நிலவி இருந்ததென்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். 'சிந்துவெளி முத்திரை ஒன்றில் ஓர் உருவம் உட்கார்ந்து இருப்பது போலவும்,

அதன் இருபுறங்களிலும் மக்கள் வரிசையாக நின்று வணங்குவது போலவும் பொறிக்கப்பட்டுள்ளது. கண்ணன் காலியன் (அல்லது) கலியன் எனும் நாக அரசனை வென்றபின், கலியனும் அவனைச் சேர்ந்தவரும் கண்ணனை வழிபடும் காட்சியையே இம்முத்திரை யினுடைய சித்திரம் குறிக்கிறது'[38] என்று கூறப்படுகிறது. கண்ணனைப் பற்றிய தொன்மக் கூறுகள் சில, பண்டைத் தமிழ் மக்களிடையே பரவியிருந்தது அவனது வழிபாட்டின் வளர்ச்சிக்குக் காரணமாகும். குறிப்பாக, தொல்காப்பியர் காலத்தில், வடமொழி இலக்கண இலக்கிய நூல்களான பாணினி மற்றும் பதஞ்சலி முதலிய நூல்களில் கண்ணனைக் குறித்த செய்திகள் பல செல்வாக்குப் பெற்ற நிலையில் இருந்ததற்கான சான்றுகள் கிடைக்கப்பெற்றன. அதன் வளர்ச்சி நிலையில், தொல்காப்பியர் முல்லை நிலத்திற்குரிய தெய்வமாகத் கண்ணனை மாயோனாக குறிப்பிட்டிருக்கக் கூடும்.

கிறித்து பிறந்த நூற்றாண்டைத் தொடர்ந்து தோன்றிய தாகக் கருதப்படும் சங்க நூல்கள் மாயோனின் செயல்களை நினைப்பூட்டின, பாரதக் கூறுகள், வேறு சில கதை நிகழ்ச்சிகள் அடங்கிய கண்ணன் குறித்த செய்திகள் இடம்பெறுவதோடு, பிற அவதாரக் குறிப்புகளும் இடம்பெற்றிருந்தன.

கண்ணனது வீரதீரச் செயல்கள் அதிகம் பேசப்பட்டு வந்தன. அவுணர்களை வென்ற செயல், சூரியனை மறைத்த செயல், கேசிவதம், யானையை அடக்கியது, மல்லர்களை வென்றசெயல் ஆகியன மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தன. சங்க கால கட்டத்தில் விஷ்ணு – கண்ணன் ஆகியவற்றின் இணைவே காணப்பட்டது இருப்பினும், திருமாலின் மற்ற அவதாரங்களுள்ளும் கிருஷ்ணாவதாரச் செய்தி களே சங்கப் புலவர்களுக்கு மிகுதியாகத் தெரிந்திருந்தன.

பரிபாடல் காலத்தில், வைணவ நெறிக்கான அடிச்சுவடு தெரியத் தொடங்கியது. பாகவத மரபிற்கான வியூகக் கொள்கை பரிபாடலில் இடம்பெற்றிருந்தது. விஷ்ணு கண்ணன் இருவரின் இணைவில் இருவரும் ஒருவரே என்ற முறையில் வளர்ந்தது. இவ்வளர்ச்சியின் முடிவு கி.பி 5–ஆம் நூற்றாண்டு காலகட்டத்தில் வெளிக் கொணரப்பட்டது. கண்ணனே நாராயணன் என்று உண்மையை வலியுறுத்திக் காட்டியதற்குச் சிலப்பதிகாரமே சான்றாகும்.

சங்க கால இலக்கியங்களில் கண்ணனோடு பலராமனும் இணைந்தே போற்றப்பட்டு வந்திருக்கிறான். இருவரும் இணைந்து நின்ற தோற்றமொடுகூடிய கோயில் கிறித்து வருடத்தின் தொடக்கக் காலத்திலேயே அமைந்திருந்தது. ஆனால் கி.பி.5-ஆம் நூற்றாண்டில், இருவருக்கும் தனித் தனிக் கோயில் ஏற்பட்டிருந்தது. ஆகவே, பரிபாடல் காலத்தில் இருந்த வழக்கு காப்பிய காலத்தில் வழக்கற்றுப் போய்விட்டது என்பது தெரியவருகிறது. வைணவ சமயத்தில் கண்ணன் உயர்நிலை அடைந்தது போல, பலதேவ வழிபாடு செல்வாக்குப் பெறவில்லை என்று கூறவேண்டியுள்ளது. சங்கம் மருவிய காலம் வரை பல தேவன் பற்றிய செய்தி இருந்து வந்தது. ஆனால், இடைக் காலத்தில் ஆழ்வார்கள் கண்ணனை அனுபவித்தது போல பலதேவனைப் பற்றி அதிகம் குறிப்பிடாதது அறியத்தக்கது.

காதலும் வீரமும் மிகுந்த சங்க காலத்தில், கண்ணனின் வீரச் செயல்களும், அதனைத் தொடர்ந்து எழுந்த காப்பியக் காலத்தில் ஆயர்பாடிச் செயல்களும் மக்கள் மனதைப் பெரிதும் கவர்ந்திருந்தன. கண்ணனின் காதலியாக – மனைவியாக பின்னை அல்லது நப்பின்னை என்ற ஆயர்மகளைப் பற்றிய செய்தியும் மக்களிடையே காணப்பட்டு வந்திருக்கிறது.

சங்ககாலத்தைத் தொடர்ந்து புராணக் கூறுகள் பல மக்களிடையே பரவத் தொடங்கின. கண்ணன் சரிதங்களில் சில செயல்கள் தமிழ் நாட்டு வழக்குகளில் இடம்பெற்றிருந்தன. வைணவத்தின் வளர்ச்சிப் படிகள் இக்காலகட்டத்தில் ஏற்பட்டது என்று கூறினாலும் வைணவம், விஷ்ணு என்ற பெயர்கள் சுட்டப்படவில்லை. வைணவ நெறி பற்றிய சிந்தனை மக்களிடையே காணப்பட்டிருந்தது.

கி.பி. 5-ஆம் நூற்றாண்டிற்கு மிகப்பிற்பட்ட காலத்தில் தமிழக வரலாற்றில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. பல்லவர் காலத்தில் தான் பக்தி இயக்கமே உருப்பெற்றது. என்று கூறுமளவிற்கு வைணவத்தின் செல்வாக்கு உச்ச நிலையை எய்தியது.ஏனெனில், பெரும்பாலான ஆழ்வார்கள் தோன்றியதே இப்பல்லவர்கள் காலத்தில் ஆகும். ‘ஆழ்வார்கள் பாசுரங்களின் மூலம், கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரையில், தென் தமிழ்நாட்டில் கண்ணன் வழிபாட்டின் மூலம் பக்தி நிலை மேலோங்கிக்

காணப்பட்டது. மேலும், ஆழ்வார்கள் காட்டிய சரணாகதித் தத்துவமே மக்களைப் பக்தி நெறியில் ஈடுபடச் செய்தது என்பர்'[40] இதன் மூலம், தமிழகத்தில் சங்க காலம் முதல், பக்திநெறிக் காலம் வரை கண்ணன் வழிபாடு வளர்ந்து வந்திருப் பினும் பக்தி நெறிக் காலக்கட்டத்தில்,கண்ணன் வைணவச்சமயக் கடவுளான நாராயணனாக-விஷ்ணுவாக, உயர்த்தப்பட்டான் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். மேலும், ஆழ்வார்கள் கண்ணன் வரலாற்றுக் கூறுகளைப் பாடி அனுபவித்தலில் தமிழக வழக்குகளில் இருந்து வந்த சில சரிதங்களையும் குறிப்பிட்டிருத்தல் அறியத்தக்கது. இதனால், பண்டைச் சமுதாய வழக்குகளையும் நினைவிற் கொண்டு வந்திருக் கின்றனர் என்று கூறலாம்.

தொகுப்புரை:

1. சங்க நூல்களில் கிடைத்துள்ள விஷ்ணு பற்றிய குறிப்புகளில் கிருஷ்ணன் பற்றிய செய்திகள் சிறப்புடன் பேசப்பட்டு வந்தன.

2. தமிழிலக்கியத்தின் முதல் நூலான தொல்காப்பியத்தில் முல்லை நிலத் தெய்வமாக 'மாயோன்' என்று 'கண்ணன்' குறிப்பிடப்பட்டான்.

3. பாரதம் காட்டும் கிருஷ்ணன் சங்க நூல்களிலும் பேசப்பட்டு வந்ததால், சங்க கால மக்களிடையே இதிகாசக் கிருஷ்ணன் அறிமுகமாயிருந்தான்.

4. கிருஷ்ணனின் நிறம், பெயர், உள்ளிட்ட பல செய்தி களையும் அவனைப் பற்றிய கதைகளையும் சங்கப் புலவர்கள் அறிந்திருந்தனர். புராணங்களோடு ஒத்து இயைவனவாக, அக் கூறுகள் அமைந்திருந்தன.

5. சங்கப் பாடல்களில் 'அவதாரம்' எனும் சொல் காணப் படவில்லை. விஷ்ணு, வைணவம் என்ற பெயர்களும் குறிப்பிடப் படவில்லை. ஆனால் திருமால் செயல்களாகக் கருதப்படும் பல்வேறு செயல்களில், கிருஷ்ணன் கதைகள் எனப் பிரித்துக் காட்டுபவைகளாக அமைகின்றன.

6. மாயோனாகிய இறைவன் உலகினைக் காப்பது போன்று மன்னனும் மக்களைக் காக்கிறான். இதிலிருந்து மன்னனை

மாயோனுடன் ஒப்பிட்டுப் பேசுதல் அன்றைய பண்பாடாக விளங்கியதை அறிய முடிகிறது.

7. சங்க காலத்தில் அரசனோடு மாயோனை ஒப்பிட்டு காட்டிய முறையானது பண்டைக் காப்பிய காலத்தில் சாதாரண மனிதனுடன் ஒப்பிட்டுக் காட்டும் வழக்கு இருந்திருக்கிறது. சாதாரண மனிதனின் செயலைக் கண்ணனின் செயலோடு ஒப்பிட்டுக் காட்டிய முறை காணப்பட்டது.

8. சங்கப் பாடல்களில் கண்ணோடு பலராமனும் இணைத்தே பேசப்பட்டு வந்திருக்கிறான். சங்க காலப் புலவர்கள் கண்ணன் – பலராமன் இருவரையும் இணைத்தே போற்றி வந்திருக்கின்றனர் 'வாலியோன்' என்ற பெயரில் வெண்ணிறம் உடையவகைக் குறிப்பிடப்பட்டான்.

9. கிருஷ்ண – பலதேவர் வணக்கம் சங்க காலத்தில் இருந்துள்ளது இவ்விருவரையும் இருபெருந்தெய்வமாகப் போற்றியதோடு அன்றி, சிவன் முருகன் வணக்கத்தோடு ஒத்துப் போற்றி வந்தனர். அவ்விருவரும் ஒன்றாக இணைந்துள்ள கோயில் இருந்ததற்கான சான்று பரிபாடல் மூலம் கிடைக் கின்றது.

10. பாஞ்சராத்திரக் கொள்கையும் அவதாரக் கொள்கையும் திருமால் பற்றிய தத்துவ வளர்ச்சியும் பரிபாடல் காலத்தில் உச்சநிலை எய்தி இருந்தன. இதனால், தமிழக வைணவம், பரிபாடல் தோன்றிய காலகட்டத்தில் துளிர்விடத் தொடங்கியது. கண்ணன் திருமாலோடு இணைத்துப் பேசப்பட்டு பெருந்தெய்வ நிலைக்கு உயர்ந்தான். ஆகவே, கிறித்துவின் தொடக்கக் காலத்திலேயே வைணவம் தமிழகத்தில் வழக்கிலிருந்தது என்று கூறலாம்.

11. தமிழ் இலக்கியங்களில் மட்டுமன்றி சமண பௌத்த இலக்கியங்களான பண்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம் மணிமேகலையிலும் கண்ணன் பற்றிய குறிப்புக்கள் காணப் படுகின்றன. சங்க கால மக்களிடையே கண்ணனின் வீரதீரச் செயல்கள் பேசப்பட்டு வந்தன; ஆனால் கி.பி. 5–ஆம் நூற்றாண்டான இக்காலக்கட்டத்தில் கண்ணனின் ஆயர்பாடிச் செயல்களே அதிகம் பேசப்பட்டு வந்திருக்கின்றன. இதன் வளர்ச்சியாக இந்தப் பிள்ளைமைச் செயல்களில் ஆழ்வார்கள் ஆழங்கால்பட்டுள்ளனர்,

12. கண்ணனையும் பலராமனையும் இணைத்துப் பேசப் பட்ட சங்க காலத்தை விட, காப்பிய காலகட்டத்தில், நப்பின்னையோடு சேர்த்துப் போற்றப்பட்டு வந்தனர். காவிரிப் பூம்பட்டினத்தில் கண்ணன் பலராமன் இவ்விருவருக்கும் தனித் தனியே கோயில் இருந்ததாகக் கூறப்படுகிறது. ஆதலால், பரிபாடல் காலத்தில், இருவரும் இணைந்து காணப்பட்ட கோயில் இருந்ததற்கான வழக்கு, சிலப்பதிகாரக் காலத்தில் வழக்கற்றுப் போய்விட்டது.

13. கண்ணன் நாராயணன் - விஷ்ணுவோடு ஒன்று படுத்தப்பட்டதன் விளைவு, கண்ணன் நாராயணனாக போற்றப்பட்டு வந்திருக்கிறான் என்பதற்குச் சிலப்பதிகாரமே சான்று பகர்கின்றது. புராணங்களின் செல்வாக்கு மக்களிடையே பரவத் தொடங்கிய காலமாதலால், வாய்மொழியாகக் கூறப்பட்டு வந்த செய்தியும் புராண மரபில் சிற்சில மாற்றங் களுடன் இடம்பெறலாயின.

14. தமிழ் நாட்டில் வழங்கிய கண்ணன் சரிதங்களில் குருந்தொசித்தது, நப்பின்னைத் திருமணம், குரவைக் கூத்து, தேபாண்டவன் கதை, சீமாலிகன் வதம், ஆகியன தமிழ் நாட்டு வழக்குகளாகக் கருதப்படுகின்றன.

15. சங்க காலத்தில் முகிழ்ந்த வைணவ சமயம் பல்லவர் காலத்தில் பக்தி இயக்கமாக வளரத் தொடங்கியது. இதனை மேன்மேலும் வளர்த்து வந்த பெருமை ஆழ்வார்களைச் சாரும். சங்க காலத்திற்கு முன்பே வைணவ வழிபாட்டு மரபு தமிழகத்தில் வழக்கிலிருந்திருக்கிறது. ஆனால், இம்மரபு பின்னர் மிகப் பெரிய அளவில் ஆழ்வார்களின் காலத்தில் செல்வாக்குப் பெற்று பரவியது என்று கூறலாம்.

16. சங்க காலத் தொடக்கத்தில் கண்ணன் வழிபாடு ஓரினத்தார்க்கு - ஒரு குறிப்பிட்ட நிலத்தார்க்கு உரியதாய் இருந்து பின்னர் அனைத்து நிலத்தாரிக்கும் உரியதாகிக் காலப்போக்கில் விஷ்ணு எனும் பெருந் தெய்வ வழிபாட்டில் கலந்து, வைணவ மரபில் பெருந்தெய்வ நிலைக்கு உயர்ந்து விட்டது.

## அடிக்குறிப்புக்கள்

1. பதினெண்கீழ்க்கணக்கு.ஐந்திணை ஐம்பது. செ.எ.1
2. கு வெ. பாலசுப்ரமணியன்., சங்க இலக்கியத்தில் புறப் பொருள்., பக். 164– 65.
3. T. Burrow., M.B. Emeneau., *A Dravidian Etymological Dictionairy.*, P. 319.
4. மு. அருணாசலம் பிள்ளை, தொல்காப்பியம் அகத்திணை இயல் உரைவளம். ப. 79.
5. இரா. அரங்கராஜன்., நேர்காணல், 27.2.96.,
6. உ.வே. சாமிநாத ஐயர்., சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்., ப. 54.
7. Teun Gaudrian., *Maya Divine and Human*, P. 18.
8. N. Jagadeesan.,*Collected papers on Tamil Vaisnavism* P 3.
9. எஸ் ஜெகத்ரட்சகன்.,செந்தமிழிலக்கியத்தில் திருமால்., ப. 8
10. புராணங்களில் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்பவர்கள் முறையே நான்முகன், விஷ்ணு, சிவன் என்று கூறப்பட்டுள்ளன. இவர்களுள் விஷ்ணு என்பது வடமொழிப் பெயர் என்பதால் தமிழ் மக்கள் விஷ்ணுவை திருமால் என்றனர்.
11. க.த. திருநாவுக்கரசு,, வாழ்வும் இலக்கியமும், ப. 49
12. 'கண்ணன்' என்ற சொல்லைத் தம் பெயரோடு கொண்ட சங்கப் புலவர்கள்:-

    ஆலூர்கிழார் மகனார் கண்ணனார், உம்பற்காட்டு இளங் கண்ணனார், கடியலூர் உருத்திரங் கண்ணனார், கருவூர்க் கண்ணம் பாணனார், காட்டுக்கிழர் மகனார் கண்ணனார், செல்லூர் கோசிகன் கண்ணனார், சேந்தன் கண்ணனார், பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார், பொதும்பில் கிழான் வெண்கண்ணனார், மதுரைச் செங்கண்ணனார், மதுரைப் புல்லங் கண்ணனார், தாயங்கண்ணனார், உறையூர் முதுகண்ணன்சாத்தனார் முதலியோர். இது போன்ற மேலும் பல பெயர்கள் அகநானூறு மற்றும் நெடுந்தொகை நானூறு ஆகிய இரண்டு நூல்களில் கொடுக்கப்பட்டுள்ளது.

13. பன்னிரண்டாவது ஆய்வுக்கோவை., தொ. 1., 'Mayon is the God of the Pastoral Region., S. Satyamoorthy., p. 246.

14. மேற்படி., ப. 244.

15. N. Jagadeesan., *Collected Papers on Tamil Vaisnavism.*, p.3.

16, *"பூவை புதுமலர்ச் சூடித் தாந்தம்*
*அடங்காப் பணைமுலை யிழைவளர் முற்றத்து*
*அணங்கின் செல்வி மறைப்பினும் மலர்ந்த*
*பூவைப் புதுமலர்ப் பரப்புவர் பூவயின்*
*ஆனிரை வருத்தம் விடமலை யெடுத்து*
*மாரி காத்த காளை*
*நீல மேனி நிகர்க்குமா வெனவே"*
*(தண்டி. பொது வணியல்–19–ஆம் பாடலின் சான்று)*

17. E.S. Varadaraja Ayyar., *A History of Tamil Literature.* p. 223.

18, வியாசர் அருளிய மகாபாரதம்., மூன்றாம் பகுதி,, துரோணப் பருவம்,, பக். 155–156.

19. பெரும். 415-417.
புறம். 241: 3–6
பாலைக்கலி. 24: 1–11,
முல்லைக்கலி. 4: 57–59; 1: 30–32; 1: 18-20

20. 1. *பரம் என்பது மிக உயர்ந்த நிலை. அவன் பரப்பிரம்மம் என்றும் நாராயணன் என்றும் கூறப்படுகிறான்.*

2. *வியூகம் என்பது அவனது வெளிப்பாடு ஆகும்.*

3. *விபவம் என்பது பரம்பொருள் தன்னை அவதாரமாக வெளிப்படுத்திக் கொள்வதாகும்.*

4. *அந்தர்யாமித்துவம் என்பது பஞ்ச பூதங்களிலும் அனைத்து உயிர்களின் உள்ளேயும் தங்கி வாழும் இறைவனின் நிலையாகும்.*

5. *அர்ச்சை என்பது புனிதமான இறைத்திருமேனிகள் ஆகும் (இந்திராபார்த்தசாரதி., தமிழிலக்கியங்களில் வைணவம் பக். 40-41)*

21. வ.இந்திரபவாநி., சங்க நூல்களில் கிருஷ்ணவழிபாடு.: ப. 28.

22. "நீனிற வண்ணனன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ணனோக்கிற் பழியுடைத்தென்று கண்டாய்
வேனிறத்தானை வேந்தே விரிபுனற் தொழுநையாற்றுங்
கோனிற் வளையினோர்க்குக் குருந்தவனொசித்த"
(சீவக சிந். நாமகளிலம்பகம் 180)

23. "மல்லனீர்மணி வண்ணனைப் பண்டோர்நாட்
கொல்ல வோடிய குஞ்சரம் போன்ற"
(மேற்படி. குணமாலையாரிலம்பகம் 134)

24. எம். ராதாகிருஷ்ணபிள்ளை., தமிழும் வைணவமும், ப. 44

25. மு. இராகவையங்கார்., ஆராய்ச்சித் தொகுதி., ப. 55

26. பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், ஸ்ரீமதுரகவி முதலியோர்

27. நப்பின்னை பற்றி ஆழ்வார்கள் காட்டும் செய்திகளை 'ஆழ்வார்கள் அனுபவித்த கண்ணன் திருவிளையாடல்கள்' என்ற இயலில் எடுத்துரைக்கப்படுகின்றன. இந்த இயலில், பண்டைத் தமிழர் அறிந்து கொண்ட நப்பின்னை பற்றிய செய்திகள் மட்டும் பண்டைத் தமிழிலக்கியங்களைக் கொண்டு விளக்கப்படுகின்றன.

28. John stratton Hawley., Donna Marie Wulff., *The Divine Consort*., P. 256

29. சிலப். ஆய்ச். 16., அடியார்க்கு நல்லார் உரை

30. பிங்கல நிகண்டு., எ. 914, ப. 143

31. "வெள்ளி மலை யெடுத்து உலக மூன்றும் காவலோன்
பின்னை காமவல்லியாங் கன்னி"
(கம்ப ஆரணிய. சூர்ப்பணகைப் 39)

32. நம். தி. வா. மொ. 1.9 4; 5.6 11; 6.5,10

33. மு. இராகவையங்கார்., ஆராய்ச்சித் தொகுதி., ப. 56

34. John Stratton Hawley., Donna Marie Wulff., *The Divine Consort*, P. 25

35 கலைக்களஞ்சியம்., தொ. 4, ப. 62

36. நஜன்., கோபியர் கொஞ்சும் ரமணா., ப. 51

37. மு இராகவையங்கார்., செந்தமிழ்., தொ. 8, ப. 177

38. மு. இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி., ப. 65

39 மா. இராசமாணிக்கனார்., மொஹஞ்சதாரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்., ப, 192

40. P. Banerjee., *The Life of Krishna in Indian Art*., P. 118

# இயல் இரண்டு

# வைணவ சமயத்தில் கண்ணன்

இயல் அறிமுகம்:

சமயப் பண்பாடுகளில் மிகப் பழமை வாய்ந்த நம் நாட்டில், தொன்று தொட்டு வரும் வைதிக சமயங்களில் வைணவ சமயம் தனிச் சிறப்புற்றது. அதற்கு, வேதங்களும் இதிகாச புராணங் களும் அடிப்படைச் சான்றுகளாகும். 'வைணவம்' என்று திருமால் வழிபாட்டைக் குறிக்கும் பெயர்க் குறியீடு மிகப் பழைய ஆதார நூல்களில் இடம்பெறவில்லை. அச்சமயத்தின் பரம்பொருளான விஷ்ணுவைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருந்தன. விஷ்ணுவைக் குறித்து இயற்றப்பட்ட வேள்விகள் 'வைஷ்ணவம்' என்று அழைக்கப்பட்டன. ஈண்டு, விஷ்ணு சம்பந்தமுடைய வேள்வி என்ற பொருளே கருதப்பட்டது. 'விஷ்ணு' என்பது 'எங்கும் பரவியிருப்பவன்' (வியாபித்திருத்தல்) என்ற பொருளில் இடம்பெற்றது. விஷ்ணு, நாராயணன், வாசுதேவ கிருஷ்ணன் என்ற பெயர்களின் வளர்ச்சி நிலைகளால் வைணவ சமயம் செல்வாக்குப் பெற்றது. இதனால் 'அம் மூன்று பெயர்களும் ஒரே பரம்பொருளைக் குறிப்பது உணரப்பட்டது'[1]

வேதங்களில் குறிப்பிடப்பட்ட விஷ்ணு இதிகாச புராணங் களில் பரம்பொருளாக – மும்மூர்த்திகளுள் ஒருவராகக் கருதப் பட்டார். குறிப்பாகப் படைப்புக் கடவுளாகவும் போற்றப் பட்டார். அவரே நாராயணனாகவும் கருதப்பட்டுவருகிறார். இது இதிகாச புராணங்களின் செல்வாக்கு என்று கூறலாம். இவர்களின் ஒட்டு மொத்த இணைவே வைணவமாகப் பரிணமித்தது. இவர்களோடு கிருஷ்ணனும் பூரண அவதாரமாக ஏற்கப்பட்டு வைணவ சமயக் கடவுளாகவும்–பரம்பொருளாகவும் குறிப்பிடப்பட்டான். ஆகவே, வைணவ மரபில் அவதாரத்திற் குரிய சிறப்புப் பற்றியும், கண்ணனுக்குரிய இடம் பற்றியும் கண்ணன் அவதாரத்தின் பெருமை பற்றியும் இவ்வியல் எடுத்தியம்புகிறது.

மும்மூர்த்திக் கொள்கை:

உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தொழில்களை இறைவன் எப்பொழுதும் செய்து வருகிறான் என்ற நம்பிக்கை சைவ வைணவ சமயத்தாரிடையே காணப் பட்டு வருகிறது. பிரம்மனுக்கும் சிவனுக்கும் உள்ளே உறைந்து முத்தொழில்களையும் விஷ்ணுவே செய்கிறார் என்ற கருத்து வைணவர்களிடையே உள்ளது. விஷ்ணுவைவிட சிவபெருமான் உயர்ந்தவன் என்பது சைவரிடையே நிலவி வரும் கருத்தாகும். இக்கொள்கையைக் கொண்ட வைணவமும் சைவமும் தமக்குள் போட்டி போட்டுக் கொண்டு வளர்ந்த நிலையில் இருந்தன. 'இவ்விரு சமயங்களை இணைக்கும் முகமாகக் குப்தர் காலத்தில் உருவாக்கப்பட்டது தான் திரிமூர்த்திக் கொள்கையாகும்' [2] அதனால், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை முறையே நான்முகன் (பிரம்மன்), விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் செய்து வருகின்றனர் என்ற கருத்து உருவாகிறது. மேலும், மூவரும் தலைமைக் கடவுளராகவும் எண்ணப்பட்டனர்.

விஷ்ணுவைத் தலைமைத் தெய்வமாக பரம் பொருளாகக் கொண்டு எழுந்த சமயம் வைணவ சமயமாகும். காத்தல் தொழிலைச் செய்பவராகக் குறிப்பிடப்பட்ட விஷ்ணு, மகாபாரதத்தில் நாராயணன், வாசுதேவன் ஆகிய இருவரோடு இணைந்ததாலும் தத்துவங்கடந்த இறைவனாக உயர்ந்துள்ளான். 'நாராயணன், விஷ்ணு, வாசுதேவன், என்ற மூவரும் ஒரே தெய்வத்தின் பல பெயர்கள்' [3] என்று தைத்திரிய ஆரண்யகம் குறிப்பிடுகிறது. விருஷ்ணி குல வீரனான வாசுதேவ கிருஷ்ணனும் நாராயணனோடு இணைகாட்டப்பட்டான். மகாபாரத நாராயணீயப் பகுதியாலும் (சாந்தி பருவம்) பகவத் கீதையாலும் கிருஷ்ணன் 'நாராயணன் எனப்பட்டான். மேலும், ஹரிவம்சம், பாகவத புராணம், பிரம்ம வைவார்த்தக புராணம் ஆகியவையும் கிருஷ்ணன் புகழை உயர்த்தின. நாராயணன் 'ஹரி' எனவும் அழைக்கப்பட்டான். வடநாட்டில் 'பரமாத்மா' என்று அழைக்கப்பட்டு வருகிறான். அந்த அளவிற்கு, வெகு விரைவில் கண்ணனுடைய சிறப்பு, செல்வாக்கு ஆகியன வைணவத்தில் வலுப்பெற்றுவிட்டது. படைப்புத் தொழிலையும் செய்பவன் கண்ணன் என்று வடநாட்டு வைணவத்தில் கருதப் படுகிறான்.

வைணவம்:

முழு முதற்கடவுளான நாராயண - விஷ்ணுவின் பல்வேறு அவதாரங்கள் மற்றும் அவ்வவதாரங்களின் வழிபாடுகளைச் சுற்றி வைணவம் வளர்ந்துள்ளது. இதிகாசங்களும் புராணங்களும் நாராயணனையும் விஷ்ணுவையும் தனித் தனியாக - வெவ் வேறாகப் பிரித்துப் பேசுவதில்லை. ஆனால், அவற்றில் நாராயணன் பற்றியே பேசப்படுகிறதே தவிர, 'விஷ்ணு' என்ற மற்றொரு பெயர் மிக அருகியே காணப்படுகிறது.

'விஷ்ணு - நாராயணனை வழிபடுவோர் பாகவதர்கள், பாஞ்சராத்திரர்கள், ஏகாந்திகள், சாத்வதர்கள், வைணவர்கள் எனப் பலவாறாக அழைக்கப்படுகின்றனர். இப்பெயர்கள் அனைத்தும் ஒரே கடவுளைக் குறிப்பிடுகின்றன. வைணவர்கள் என்ற பிரிவினர் மகாபாரதத்தின் இறுதிப் பகுதியில் பேசப் படுகின்றனர்'.[4] இப்பெயர்களுள் 'பாகவதர்கள், என்பது கிருஷ்ணனை வழிபடுவோரைக் குறிப்பிடுகின்றது என்று கூறுவர். அச்சமயத்திற்குப் 'பாகவத சமயம்' என்ற பெயருமுண்டு. கிருஷ்ணனது வாழ்க்கையையும் அவனது அருட்செயல்களையும் விவரிக்கும் 'பாகவத புராணத்தை' சிறந்த நூலாக கருது கின்றனர். பக்தி உணர்வை விவரிக்கும் மிகச் சிறந்த நூலாகக் கொண்டுள்ளனர். ஏனெனில், கிருஷ்ணனே முழுமையாகத் தோன்றி வந்த பரம்பொருள் வடிவம் என பாகவதம் எடுத் துரைப்பதால் அதனைச் சிறப்பான நூலாகக் கருதுகின்றனர். கிருஷ்ணன் வைணவ சமயக் கடவுளாக ஏற்றுக் கொள்ளப் பட்டவுடன் 'பாகவத சமயம்' வைணவ சமயமாகப் பரிணமிக்கத் தொடங்கியது. ஆகவே, வைணவத்திற்குப் பழைய பெயர் 'பாகவத தர்மம்' என்பர் பெரியோர். கிருஷ்ணன் நாராயணனின் அவதாரம் என்று கூறப்படுவதால் பாகவதர்கள் வைணவர் களாயினர். பாகவத தர்மம் வைணவ சமயமாயிற்று என்ற அளவில் மட்டும் வைணவம் வளர்ந்த நிலையினைச் சுருக்கமாகக் கூறமுடியும்.

வைணவம், விஷ்ணு என்ற சொற்கள் தமிழிலக்கியத்தைப் பொறுத்தமட்டில் தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கியங் களில் கூறப்படவில்லை. ஆனால், அச்சமயத்துத் தெய்வங்கள் மால், மாயோன், மாயவன், நெடியோன், கடல்வண்ணன், நேமியோன் என்ற தமிழ்ப் பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர்

அப்பெயர்களோடு தொடர்புடைய கதைக் கூறுகளும் உரைக்கப் பட்டுள்ளன. தமிழ் மண்ணில் விஷ்ணு என்பது 'திருமால்' எனவும், 'கிருஷ்ணன்', 'மாயோன்' எனவும் அழைக்கப்படுகிறான். 'கண்ணன்' என்பது பாகவத மொழிச் சிதைவு' எனத் தொல்காப்பிய உரை[5] எடுத்துரைக்கிறது. வைணவ சமயத்தின் வித்து, சங்கப் பாடல்களிலேயே காணமுடிகின்றது. பாஞ்ச ராத்திரக் கொள்கையும், அவதாரக் கொள்கையுமான வைணவக் கொள்கையும் அதன் தத்துவ வளர்ச்சியும் பரிபாடல் காலத்தில் உச்ச நிலை எய்தி இருந்தன.

'வைஷ்ணவம்' என்ற சொல் தமிழிலக்கியப் பாடல்களில் அதிகமாக இடம் பெறவில்லை என்பது நோக்கத்தக்கது. ஆனால், திருமந்திரம் மற்றும் ஆழ்வார் பாடல்களில் 'வைட்டணவர்' என்ற சொல்,

"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொது என்பர்
ஆகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ்வே தாந்தி வயிணவர்க்
காகின்ற நாலறை யைந்துமாயா வாதிக்கே"

(திருமந்திரம். 2139)

"வண்மை யாவதுன் கோயிலில் வாழும்
வைட்டணவ னென்னும் வன்மை கண்டாயே"

(பெரிய. திரு. மொ. 5.1.3)

"அறியக் கற்றுவல்லார் வைட்டணவர்
ஆழ்கடல் ஞாலத்துள்ளே"

(நம். தி. வா. மொ. 5.5.11)

என்ற பாடலடிகளின் வழி அறியத்தக்கது.

**ஆழ்வார்களும் வைணவமும்:**

ஆழ்வார்களின் அவதாரத்திற்கு முன்னர் தமிழக வரலாறு புதிர் நிறைந்ததாக அமைந்திருந்தது. களப்பிரர் ஆட்சிக் காலத்தில் அரசியல் நிலைமை தெளிவாக அமைந்திருக்கவில்லை. இச்சூழலில் சமண பௌத்த சமயங்கள் பரவிச் செல்வாக்குப் பெற்றிருந்தன. இதனால், பண்டைக் காலத்தில் ஏற்றம் பெற்றிருந்த வைதிக சமயமான வைணவம் களப்பிரர் ஆட்சிக் காலத்தில் தன் நிலையில் தாழ்ந்து இப்புதிய சமயங்களுடன் போராட வேண்டியிருந்தது. இதனால், இச்சமயங்களை

எதிர்த்துப் பின்னர், பல்லவர் காலத்தில் வைணவ சமயம் மறுமலர்ச்சி அடைந்தது. இக்கால கட்டத்தில்தான் தென்னிந்திய பக்தி இயக்கமே உருவானது.

பல்லவர் காலச் சமய மறுமலர்ச்சியானது பக்தி இயக்கமாகப் பரிணமித்தது. பக்தி உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும் புராண ஈடுபாடு அதிகமாக இருந்தது. பல கதைக் கூறுகளையும், வீரதீரச் செயல்களையும் விளக்கிக் கூறிவந்தாலும், இறை நம்பிக்கை – இறைபக்தி என்பதை மையமிட்டே அவை அனைத்தும் பேசின. உண்மையான பக்தி – அன்பு இவற்றின் மூலமே இறைவனை அடைய முடியும் என்பதனையும் வலியுறுத்தின. இவற்றை அடியொற்றியே பக்தி இலக்கியங்கள் உருப்பெற்றன.

முல்லை நிலத்துத் தெய்வமாக வணங்கப்பட்டு வந்த கண்ணன், பின்னர் ஏற்பட்ட கால மாற்றத்தினாலும், புராணங்களின் வளர்ச்சியாலும் பெருந்தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்டான். கண்ணனது செயல்கள் – முல்லை நிலத்து மாயோன் வழிபாடு மீண்டும் மீண்டும் பேசப்பட்டு வந்தன. இந்நிலை, வைணவ சமய மறுமலர்ச்சியில் பெருந் தெய்வ நிலையில் வைத்துப் போற்றப்பட்டும் வந்தது. அதற்கு விஷ்ணு புராணம், மற்றும் பாகவத புராணங்களின் செல்வாக்கே ஆகும். அவை, கண்ணனைப் பற்றிப் பேசுவதையே தம் தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தன. இதனால், நாடு முழுவதும் சமயம், வழிபாடு பற்றிய நல்ல சூழலை இப்புராணங்கள் தோற்றுவித்தன.

இந்தப் பல்லவர்கள் கால அரசியல் பின்னணியில் பெரும் பாலான ஆழ்வார்களின் தோற்றம் உருவாயின. அவர்களின் அருட்பாசுரங்களினால் வைணவ சமயம் புத்துயிர் பெற்றது. வைணவ சமய எழுச்சிக்குக் காரணமாக இருந்தவர்கள் பன்னிரு ஆழ்வார்களாவர். அவர்கள் தலங்கள் தோறும் சென்று அங்குள்ள தெய்வங்களைப் புகழ்ந்துபாடினார். அதன் மூலம், அந்தந்தத் தலங்களைப் புனித இடங்களாகத் திவ்ய தேசங்களாகக் கருதி மங்களாசாசனம் செய்தனர். இதன்மூலம், வைணவபக்தி மக்களிடையே பரவும் வழி ஏற்பட்டது. மேலும், இறைவன் முன் உயர்வு தாழ்வு கிடையாது, அன்பு காட்டுவதன் மூலம்

இறை அருளைப் பெற முடியும் என்பதனை ஆழ்வார்கள் உணர்த்தி வந்ததால், அனைத்து மக்களும் பின்பற்றக் கூடிய சமயமாக வைணவம் வளர்ந்து வருகிறது. இதனால் ஆழ்வார்கள் பாசுரங்களான 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' பொதுமக்கள் இலக்கியமாக விளங்கியது,

அ ஆழ்வார்கள் – சொற்பொருள் விளக்கம்:

இறைவனின் அருளையே முக்கியமாகக் கொண்டவர்கள் ஆழ்வார்கள். அவனருளன்றி வேறொன்றையும் பெற விரும்பாத அவர்கள், அன்பையே தலைமையாகக் கொண்டு, இறைவனைப் போற்றி வந்த பெரியோர்களாவார்கள். வைணவ சமயத்திற்குச் சிறப்பளித்த ஆழ்வார்கள் அவதார புருஷர்களாயும், ஞானத்தின் உருவமாகவும் வைணவ சமயத்தின் முதல்வராகவும் விளங்கிய வர்கள். அத்தகைய சிறப்புப் பெற்ற இவர்களின் பெயர்களோடு 'ஆழ்வார்' என்ற சிறப்புப் பெயர் சேர்ந்துள்ளதே தவிர, அப்பெயருக்குரிய பொருளைப் பற்றிய எந்தவிதக் குறிப்பும் திவ்வியப் பிரபந்தத்தில் காணப்பெறவில்லை. ஆழ்வார்கள் என்பதற்கு, 'பகவத் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர் என்று பொதுவாகப் பொருள் கூறப்படுவதுண்டு. இச்சொல், பண்டைச் சாசனங்களிலும் நூல்களிலும் பெரிதும் பயின்று வந்துள்ளது'[6]. என்று கூறப்படுகிறது.

'பிறருக்குத் தெரியாமல் ஆழ்ந்து மறைந்து கிடக்கும் எல்லாப் பொருளையும் ஆழ்ந்து அறிவதாலும் இறைவனின் மங்கல குணங்களில் ஆழங்கால் படுவதால் இப்பெரியோர்கள் ஆழ்வார்கள்'[7] எனப்பட்டனர், என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் கூறுகிறது,

'மனதை இறைவனிடம் செலுத்தி அம்மனதினை ஆள்பவர் என்ற பொருளை அச் சொல் பெற்றிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. ஆகவே, 'ஆழ்வார்' என்பது 'ஆள்வார்' என்ற சொல்லிலிருந்து மாற்றம் பெற்றிருக்க வேண்டும். மேலும். 'ஆழ்தல்' என்ற பொருளையும் குறிக்கும். ஆகவே, இறையனுபவத்தில் திளைப்பவர்,அல்லது பக்தியில் மூழ்குபவர்'[8] என்ற பொருட்சிறப்பினைக் குறிப்பதாகக் கூறுவர். பக்தி அனுபவத்தோடு தொடர்புடையதாகவே இச்சொல் விளங்குகிறது.

ஆ. ஆழ்வார்களின் காலம்:

திவ்வியப் பிரபந்தத்தை அருளிய ஆழ்வார்கள் பன்னிருவர் என்பதனை அவர்கள் அருளிய பாசுரங்களைக் கொண்டே அறிய முடிகிறது. ஆனால் அவர்கள் தோன்றிய (அவதரித்த) காலம் பற்றி, அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு காணப் படுகிறது. ஆழ்வார்கள், துவாபரயுக இறுதியிலும் கலியுகத் தொடக்கத்திலும் தோன்றினர். என்று குருபரம்பரைகள் கூறுகின்றன. வரலாற்று அடிப்படையில் நோக்குகையில் ஆழ்வார்கள் அனைவரும் சங்க காலத்திற்குப் பின்பே தோன்றியிருத்தல் வேண்டும். ஆகவே, கி.பி. 7–ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 9-ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலமே ஆழ்வார்களின் காலமாகக் கொள்ளப்படுகிறது. பன்னிரு ஆழ்வார்களால் அருளப்பட்ட தமிழ் வேதமாகிய திவ்வியப் பிரபந்தங்கள் எக்காலத்திலும் அழியாமல் நிற்பதாய் அமைந் துள்ளன. ஆகவே, பல்லவர் கால அரசியலில் வைணவம் சிறப்புற ஆழ்வார்களின் சமயத் தொண்டு காரணம் ஆகும்.

இ. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் – சிறப்பு:

இறைவன் புகழ் பேசும் சமய இலக்கியங்கள், பொதுவாக, எல்லோரும் புரிந்து கொள்ளும் நிலையில் அமைந்திருக்கவில்லை என்று கூறலாம். காரணம், வேதங்கள், தத்துவ விளக்கமாக அமைந்திருக்கும். இக்கூறுகள் அமைந்த இலக்கியங்களை, அச்சமயத்தைப் பற்றிய தெளிந்த அறிவுடையோரால் மட்டுமே புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமானது, அந்நிலையினின்று மாறுபட்டு, எழுதப்படிக்கத் தெரிந்த அனைத்து தரமக்களும் படித்து அனுபவிக்கும்படியாக அமைந்துள்ளது. புராணக் கூறுகள் அதிகம் இடம்பெற்றுள்ளன. ஆழ்வார்கள் பெற்ற இறையனுபவங்கள் மக்களும் பெற்று மகிழும்படியாக அமையப்பெற்றுள்ளன.

'திவ்வியம்' என்ற சொல்லிற்குத் தெய்வத் தன்மை எனும் பொருள் உண்டு. 'சிறந்த தெய்வத் தன்மை வாய்ந்த நூல்கள், தெய்வ அருளை விளக்கும் நூல்கள் எனும் பொருளில் ஆழ்வார்கள் அருளிய நூலின் தொகுப்பினைத் திவ்வியப் பிரபந்தம்'[9] என்று அழைக்கின்றனர். தமிழிலுள்ள பிற பிரபந்த நூல்கள் பெரும்பாலும் உலகியற் பொருள்களையே கூறுவனவாக

உள்ளன. ஆனால், இந்நூலோ உயர்குணம் உடைய தெய்வத்தினைப் பற்றிக் கூறுவதாக உள்ளது. இதனை உணர்த்தும் வகையிலே ஆழ்வார்களின் பிரபந்தங்கள் 'திவ்வியப் பிரபந்தங்கள்' எனச் சிறப்பித்துக் கூறப்படுகின்றன. இறைவனுடன் இரண்டறக் கலந்த அனுபவம், இறைவனுடைய அருளிச் செயல்களில் தம் மனதை ஈடுபடுத்திய அனுபவம் ஆகியவற்றின் வெளிப்பாடாக ஆழ்வார்களின் மொழிகள் அமைந்துள்ளன.

'பக்தி இலக்கியத்தின் மானுடநிலை வெளிப்பாட்டினைப் பொறுத்த வரையில் அவதாரக் கோட்பாட்டைத் தனது அடிப்படைகளில் ஒன்றாகக் கொண்ட வைணவம், சைவத்தை விட, மானுட நிலையினை, உணர்வு பூர்வமாக வெளிப்படுத்தும் இலக்கியங்களைத் தோற்றுவித்துள்ளது'.[10] இத்தகைய உணர்வுப் பூர்வமான பக்தி நிலையினை வெளிப்படுத்தும் திறம் திவ்வியப் பிரபந்தம் மூலமாக அறியத்தக்கது.

காலத்தின் தேவையையும், சூழலையும், மக்களின் நிலையற்ற மன இயல்பினையும் நன்குணர்ந்த ஆழ்வார்கள், இறைவனிடம் நாம் காட்டும் அன்பின் மூலமாகவும் அவன் புகழினைப் பேசுவதன் மூலமாகவும் அவன் திருவடியை அடைய முடியும் என்பதனை வலியுறுத்திக் காட்டியிருப்பதே பாசுரங்களின் சிறப்பம்சமாகும்.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொண்டு போற்றி வந்தாலும், புராணங்களின் செல்வாக்கு சிறப்பாக இருந்து வந்தது. அந்தக் காலகட்டத்தில் முதலாழ்வார்கள் மூவர் அவதரித்து, வைணவத்தை மிளிரச் செய்தனர். ஆதலால், தமது பாசுரங்களில் கண்ணனைப் பற்றிப் பேசுவதையே சிறப்பாகக் கொண்டிருந்தனர். பாகவத புராணத்தின் தாக்கத்தால் கண்ணனையே நாராயணனாகக் கண்டு அனுபவித்துள்ளனர் எனலாம்.[11]

மூன்று ஆழ்வார்களுக்குப் பிற்பட்ட காலத்தில் நம்மாழ்வார் முதலியோர் தோன்றியதன் விளைவு வைணவ சமயம் தனிப்பட்ட நெறியாக சிறப்புற்றதற்கு அவர்களின் பாசுரங்களே அடிப்படைக் காரணமாகும் இவ்வாறு, ஆழ்வார்களால் வைணவ பக்தி இயக்கம் தொடங்கப் பெற்று வளர்ந்தாலும், அவர்களின்

பாசுரங்களுக்கு உரை விளக்கம் அருளிய ஆசாரியர்களின் உரைகளால் மக்களிடையே இறை அனுபவங்கள் மேன்மேலும் வளரத் தொடங்கிற்று. ஆழ்வார்களால் பாடல்பெற்றதாகக் கருதப்படும் திவ்விய தேசங்கள் நூற்றெட்டும் வைணவ மக்களால் போற்றப்பட்டு வருகின்றன. வைணவ சமயம், கோயில் வழிபாட்டிலும் சிறப்புற்று விளங்குகின்றது. ஆகவே, ஆழ்வார்களின் சமயத் தொண்டினாலும் தமிழகத்தில் பக்தி இயக்கமானது வலுப்பெறத் தொடங்கியது.

**வைணவத்தில் அவதாரக் கோட்பாடு:**

அவதாரக் கோட்பாடானது வைணவ சமயத்திற்கேயுரிய சிறப்பாகும். மனித சமூகத்தின் நன்மைக்காக, இறைவன் பல்வேறு வடிவங்களில் பிறப்பெடுத்து, அறத்தை நிலைநிறுத்துவான் என்பது வெறும் நம்பிக்கை மட்டுமன்று; இக்கருத்தினை, முதன் முதலில் பகவத் கீதை (4. 8) தெளிவாகவே விளக்குகிறது. இவ்வாறு, அவதாரக் கருத்தானது வைணவம் வளருவதற்குத் துணை புரிந்தது. இறைவனின் ஐவகை நிலைகளுள் 'விபவமானது' அவதாரத்தைக் குறிக்கின்றது. அவதாரம் என்பதற்குரிய மூலத்தை வேதத்தில் இருப்பதாகக் குறிப்பிடுகின்றனர். மூன்றடி அளந்த செய்தியைத் திரிவிக்கிரம அவதாரத்தோடு இணைத்துக் கூறும் பொழுது, அவதாரத்தின் அடிக்கருத்து வேதத்தில் காணப்பட்டது என அறிய முடிகிறது.

பரம்பொருளின் மேலான நிலையானது காலமும் தேசமும் பொருட்பாகுபாடும் கடந்தது. ஆனால் பரம்பொருளின் இறங்கிய நிலையானது, காலமும் தேசமும் பொருட்பாகுபாடும் உட்பட்டு இறங்கி வந்தது என்று கூறலாம். அதாவது, இன்ன தேசத்தில், இந்தக் காலத்தில், இந்த வடிவத்தில் பிறந்தான் என்பது 'அவதாரம்' என்பதன் பொருளாகும். ஆகவே அவதாரத்தை 'இறங்குகை' எனப்படுகிறது. இறைவனுக்குப் பெருமைத் தேடித்தருவனவாக அவதாரங்கள் அமைந்துள்ளன. "ஒத்தாரும் மிக்காரும் இல்லாத இறைவன் தன்னுடைய ரஜஸ், தமப் பண்பு கலவாத திருமேனியைத் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் சமமாக எடுத்துப் பிறப்பதே அவதாரமாகும்"[14] என்று கூறப்படுகிறது.

சைவ சமயத்தில் சிவனுக்குப் பிறப்பில்லை, 'பிறவாயாக்கை பெரியோன்' என்று கூறுகின்றனர். ஆனால், வைணவத்தில்

இறைவனுக்குப் பிறப்பு உண்டு என்பர். ,பிறக்காதவன் பிறக்கிறான்' என்பதில், பிறப்பு இல்லாத இறைவன் பலபிறப்பு எடுக்கிறான் என்று புருஷ சுக்தம் கூறுகிறது. வேதங்களில் 'அவதாரம்' என்ற சொல் குறிப்பிடப்படவில்லை என்பது நோக்கத்தக்கது. சங்க இலக்கிய நூலான பரிபாடலில், ''பிறவாப் பிறப்பிலை, பிறப்பித்தோர் இலையே''[13] என்று கூறுவதும் நினைக்கத்தக்கது.

'தெய்வங்களுக்கு மனித நிலையும் மனித உறவும் கற்பித்து, மனிதனுடன் மனிதன் உறவு கொண்டாடுவதைப் போன்று தெய்வத்துடன் உறவு ஏற்படுத்திக் கொள்ளும் ஓர் உணர்வு நிலை வாழ்க்கை அனுபவத்தில் இருப்பது மட்டுமன்றி, பக்தி இலக்கியங்களிலும் காண முடிகிறது'[14] என்ற கருத்தானது அவதாரக் கோட்பாட்டின் வளர்ச்சியினைக் கூறுகிறது. இவ்வடிப் படையில் கண்ணன் அவதாரத்தைக் கூறலாம். விஷ்ணு, தானே மானுட வடிவில் யாதவ குலத்தில் கிருஷ்ணனாகப் பிறந்து வளர்ந்தான் என்பதனை நோக்குங்கால், தெய்வத்திற்கு மானுட வடிவைக் கற்பித்தலைக் குறிக்கிறது. எனவே, மனிதன் கடவுள் நிலைக்கு உயர்வதும், கடவுள் மனித நிலைக்கு இறங்கி வருவது மான கருத்து அடிப்படையில், வைணவ சமயம் செல்வாக்குப் பெற்றது.

அவதார வகைகள்:

இறைவனின் பிறப்பிற்கு எண்ணிக்கை இல்லை எனினும், அவைகளுள் சிறப்பானதாகப் பத்துப் பிறப்பு நிலைகளைக் கூறுவர். 'பல பிறப்புக்கள் பிறந்துள்ளோம்' எனக் கீதையில் (4. 5) கண்ணன் கூறுவது நினைவிற்கொள்ளத்தக்கது.

பொதுவாக, பூரணம், ஆவேசம், அம்சம் என்று மூன்று வகைகளில் அவதாரங்களைப் பிரித்து அடக்குவது என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தாகும். (பூரணம் – இராமன், கிருஷ்ணன்; ஆவேசம் – பரசுராமன்; அம்சம் – வியாசர் மற்றும் ஆழ்வார்கள்).

விஷ்ணு – நாராயணனின் தொடக்க நிலை அவதாரங்கள் விலங்கு வடிவினதாயும், பின் நிலைகளில் மனித வடிவிலேயும் அமைந்திருந்தன. வைணவ மரபில் பத்து அவதாரங்களை மட்டும் எடுத்துக் கொள்கின்றனர்.

''மீனோடாமை கேழலரி குறளாய் முன்னும்இராமனாய்த் தானாய், பின்னும் இராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியும் ஆனான் தன்னை'' (பெரிய. தி.மொ. 8.8.10)

என்று திருமங்கை ஆழ்வார் பாசுரம் விளக்குகிறது. பத்து அவதாரங்களின் பெயர்களும் சுட்டிக்காட்டப்படுகின்றன.

பெரியாழ்வாரும்,

''தேவுடைய மீனமாயாமையாய்
ஏனமா யரியாய்க் குறளாய்
மூவுருவி லிராமனாய்க் கண்ணனாய்க்
கற்கியாய்'' (பெரியா. திரு. மொ. 4.9.9)

என்ற பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளது ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

அ. மச்ச அவதாரம்:

ஊழிப் பெருவெள்ளத்தினின்று, மிகப்பெரிய மீன் ஒன்றினால் மனு என்பவர் காப்பாற்றப்பட்டார் என்னும் கதையானது, மச்ச அவதாரக் கதையைத் தோற்றுவித்தது என்பர். 'மண்ணுலகத்துடன் மனுவுக்குள்ள தொடர்போடும், பூமியில் வாழும் உயிர்களுடன் அவருக்குள்ள உறவுடனும் தொடர்பட்டுத் திருமாலின் மேலாதிக்கப் பரம்பொருள் தத்துவம் உள்ள பாங்கை இந்த அவதாரக் கதையில் அடிநிலைக் கோட்பாடாக'[15] காணமுடிகிறது.

விஷ்ணுவின் பத்து அவதாரக் கதைகளைப் பரிணாம வளர்ச்சியோடு இயைத்துக் கூறப்பட்டாலும், சமயத்தோடு தொடர்படுத்தி கூறுங்கால், அவ்வதாரத்தின் சிறப்பானது, தத்துவத்தைத் தன்னுள் அடக்கிக் கூறுவதாகக் காணப்படுகிறது. இறைவன் மீனாகப் பிறந்த இந்த மச்சவதாரக் கதையானது இறைவன் தன் வடிவை முற்றிலும் மாற்றிக் கொண்டு விலங்குகளுக்கு நிகராகப் பிறந்துள்ளமையால், அவனது எளிவந்த தன்மை (சௌலப்பிய நிலை) வெளிப்படுகிறது.

''வானோரளவும் முதுமுந்நீர் வளர்ந்த காலம் வலியுருவின்
மீனாய் வந்து வியந்துய்யக் கொண்ட தண்டாமரைக் கண்ணன்
ஆனாவுருவினானாயவன்'' (பெரிய. தி.மொ. 8.8.1)

என்றடிகளில் மச்சாவதார நிலை கூறப்படுகிறது. குறிப்பாக, மச்சாவதாரம் எடுத்தவன் 'கண்ணன்' என உயர்த்திப் பேசப்படுகிதது. ஆகவே திருமங்கை ஆழ்வார் கண்ணனை அவதாரம் எடுக்கும் நாராயணனாகவே கருதிப் பாடுகிறார். இவ்வாறு ஆழ்வார்களது கருத்தினை அடியொற்றி, கண்ணனே நாராயணனாகிய பரம்பொருள் என்பதை வைணவ ஆசாரியர்கள் விளக்குவர்.

ஆ. கூர்ம அவதாரம்:

மீனாகப் பிறந்ததைப் போன்றே, இறைவன் தன் எளிமையைப் புலப்படுத்த ஆமையாகப் பிறந்தான் என்பது கூர்ம அவதாரத்தைக் குறிப்பிடுகிறது. மேரு மலையை மத்தாகக் கொண்டு, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு தேவர்கள் ஒரு புறமும் அசுரர்கள் மறுபுறமும் நின்று பாற்கடலைக் கடைந்தனர். கடைய கடைய மேருமலை அமிழ்ந்து கொண்டே சென்றது. மேலும், அம்மலை அழுந்தாமல் இருக்க, விஷ்ணு ஆமை வடிவமேற்று, அம்மலையைத் தாங்கி நின்றார் என்கின்றன புராணங்கள்.

"அசைவில் சீர்க் கண்ணன் நெடுமால் கடல் கடைந்த"
(பொய். மு திரு. 7)

"வெள்ளைவேலை வெற்புநாட்டி வெள்ளெயிற்ற ராவளாய்
அள்ளலாக்க டைந்த வன்று அருவரைக்கொராமையாய்"
(தி.ச.வி. 88)

என்று ஆழ்வார்களும் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது.

இ. வராக அவதாரம்:

இரண்யாட்சன் என்ற அரக்கனால் பாதாளத்தில் மறைக்கப் பட்ட பூமியை பன்றி (வராகம்) வடிவமேற்று, பூமியை மீட்டு வந்து, நிலைநிறுத்திய அவதாரமாக வராக அவதாரத்தைக் கூறுகின்றனர். இச்செய்தி, மகாபாரத நாராயணீயப் பகுதியில் (சாந்தி பருவம்) இடம்பெற்றுள்ளது. அதில், கிருஷ்ணன், பாதாளத்திலிருந்து பூமியை மீட்டுக் கொடுத்ததால் 'கோவிந்தன்' என்ற பெயர் உண்டாயிற்று என்று அவன் கூற்றாக கூறுவது இங்கு நினைக்கத்தக்கது. 'கோ' என்பதற்கு 'பூமி' என்பது ஒரு பொருளாகும்"[16]

"கோல வராக மொன்றாய் நிலங்கோட்டிடைக்
கொண்ட எந்தாய்" (நம்.தி.வா. மொ.10.10.7)

"பன்றியாய் அன்று பார்மகள் பயலை தீர்த்தவன்
பஞ்சவர் பாகன்" (பெரிய, திரு.மொ.9.1.4)

என்று திருமங்கை ஆழ்வார் குறிப்பிடுவதில் பன்றியாய் உருவெடுத்தவன், பாண்டவர்க்கு நண்பனான கண்ணன் என்பது அறியத்தக்கது. மேலும், ஆபத்தில் சிக்கிக் கொண்ட தன் மனைவியாகிய பார்மகளைக் காப்பறறவும் அவளது துயர் துடைக்கவும் பன்றியாய் வடிவெடுத்தான் என்ற கருத்தினையும் சுட்டிக்காட்டுகிறார். இச்செய்தியை,

"நிலமடந்தைதனை யிடந்து புல்கிக்
கோட்டிடை வைத்தருளிய வெங்கோமான்"
(பெரிய. திரு மொ.4.4.8)

என்ற பாசுரத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

ஈ. நரசிம்ம அவதாரம்:

தன்னிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவனின் (பிரகலாதன்) வாக்கைக் காப்பாற்றும் பொருட்டு இறைவன் எங்கிருப்பினும், எப்பொழுதும், எவ்வுருவத்திலும் தோன்றுவான் என்பதனை விளக்குவதே நரசிங்க அவதாரமாகும். பிரகலாதனின் ஆழ்ந்த பக்தியைப் புராணங்கள் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன. வைணவ மரபில், பிரகலாதனின் பக்தியைச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கூறுவர். ஆழ்வார்கள் பாசுரங்களில் நரசிம்ம அவதாரம் பற்றி மிகச் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளன. நிர்விகார மான பரம்பொருள் தன் அடியார்களைக் காப்பாற்றுவதற்காக, அடையும் விகார உருவங்களுக்கு எல்லையே இல்லை என்பதனை நிரூபிக்கும் அவதாரம் நரசிம்ம அவதாரமாகும்.

'எங்கும் உளன் கண்ணன்' என்ற மகனைக் காய்ந்து
இங்கில்லை யால் என்றிரணியன் தூண்புடைப்ப
அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றிய, என்
சிங்கப் பிரான் பெருமை யாராயும் சீர்மைத்தே"
(நம் தி.வா.மொ.2.8.9)

என்று குறிப்பிட்டுள்ளதில், கண்ணனை நரசிம்ம அவதாரமாகக் கண்டு ஆழ்ந்துள்ளார் நம்மாழ்வார். இரணியனைக் கொன்ற காட்சியைப் பெரியாழ்வார்,

"உரம்பற்றி யிரணியனை யுகிர்நுதியால்
ஒள்ளியமார் புறைக்க வூன்றி
சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க
வாயலறத் தெழித்தான்" (பெரியா. திருமொ.4.9.8)

என்று நம் மனக் கண்முன் கொண்டு வருகிறார்.

உ. வாமன அவதாரம்:

மகாபலியிடம் இறைவன் பெற்ற வெற்றியே திரிவிக்ரம அவதாரமாகும். மகாபலியின் ஆணவத்தை அழித்ததை விளக்கும் அவதாரமாகும். இறைவன் உலகளந்த செய்தியைக் குறிக்கிறது. அந்தணனாக வந்து, மகாபலியிடம் மூன்றடி நிலம் கேட்க, அவனிடமிருந்து நீர் பெற்றான். பின்பு, பேருருவாகி நிலம், வான் இவற்றை ஈரடியால் அளந்து, மூன்றாவது அடிக்கு இட மில்லாமையால் அவனுடைய தலையில் தன் பாதத்தை வைத்து, அவனைப் பாதாளத்திற்குத் தள்ளி அவனது செருக்கை அடக்கினான் என்று புராணங்கள் கூறுகின்றன. அந்தணனாக வந்தது வாமன அவதாரத்தையும் மூன்று அடியைக் கொண்டு பேருருவாகி காட்டியது திரிவிக்கிரம அவதாரத்தையும் குறிப்பிடு கின்றது. குறிப்பாக. இவ்விரண்டு பெயர்கள் ஒரே அவதாரத்தைச் சுட்டுக்கின்றன. இது, திரேதா யுகத்தில் நிகழ்ந்ததாகக் கருதப்படுகிறது.

"மாவலிவேள்வியில் மாணுருவாய்ச் சென்று
மூவடிதா வென்று இரந்தவிம் மண்ணினை
ஓரடியிட்டு இரண்டாம்டி தன்னிலே
தாவடியிட்டானாலின்று முற்றம் தரணியளந்தான்"
(பெரியா. திரு. மொ.2.10.7)

என்று பெரியாள்வார் வாமன அவதாரத்தைத் தெளிவாக அருளியுள்ளார். ஆண்டாளின்,

"..குறளுரு வாய்ச் சென்று
பண்டு மாவலி தன் பெருவேள்வியில்
அண்டமும் நிலனும் அடியொன்றினால்
கொண்டது" (நாச். திரு. 4.9)

என்றபாசுரமும் ஒப்பு நோக்கத்தக்கது. திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருப்பாணாழ் வார் பூதத்தாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகிய

அனைத்து ஆழ்வார்களது பாசுரங்களிலும் வாமன அவதாரம் பற்றிய குறிப்புக்களைப் பரக்கக் காண முடிகின்றன.

ஆழ்வார் பாடல்களில் 'வாமனன்' என்பதனைக் குறிக்கக் 'குறளன்' என்ற சொல் இடம்பெற்றுள்ளது, "மாணிக்கக் குறளனே" (பெரியா. திரு.மொ. 1.4.1), "குறளுருவாய் முன்னிலம் கைக்கொண்டான்" (பேய். மு. திரு. 52), "அறியாமைக் குறளாய்" (நம்.தி.வா.மொ. 2.3.3) "ஒரு குறளாய் இரு நிலமூவடி" (பெரிய.திரு.மொ.3 4.1) இது போன்று பல இடங்களில் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'வாமனன்' என்ற சொல்லையும் குறிப்பிட்டு அருளியிருக்கின்றனர் என்பதும் அறியத்தக்கது.

மகாபலியினின்று பூமியை மீட்பதற்காக இறைவன் குறளாய் வந்ததை நம்மாழ்வார் அனுபவித்த திறம் சிறப்பிற்குரியது "கள்ளக் குறளாய் மாவலியை வஞ்சித்து, சிறுகாலைக் காட்டி 'மூவடி' என்று வேண்டிப் பெரிய காலாலே இரண்டடியில் அளந்து கொண்ட இறைவன் வஞ்சகனாகக் காட்சியளித்ததை"[17] நம்மாழ்வார் (3 8.3) அனுபவித்துள்ளார். மூன்றடி அளந்த செய்தி வேதக் குறிப்புக்களிலே சிறப்பாக எடுத்துரைக்கப் பட்டுள்ளதால், இவ்வவதாரத்தின் செல்வாக்கு சிறப்பாகவே அமைந்துள்ளது.

ஊ. பரசுராம அவதாரம்:

பரசுராம அவதாரமும் திரேதாயுகத்தில் நடந்ததாகக் கருதப்படுகிறது. ஜமதக்கினி என்ற முனிவனின் மகன் பரசுராமன். கார்த்தவீரியார்ச்சுனன் என்ற மன்னனுடன் ஏற்பட்ட பகையில், அம்மன்னனை அழித்து, அத்துடன் நில்லாது, இருபத்தொரு தலைமுறை அரசர்களையும் அழித்து மன்னர் பரம்பரையினர் மீது தனக்கிருந்த பகையைத் தணித்துக் கொண்டவன். பரசுராமனை 'ஆவேச அவதாரம்' என்று குறிப்பிடுவர்.

பரசுராமன் தன் கையில் இருந்த விஷ்ணு தனுஸ்ஸை (பரசு) இராமனிடம் ஒப்படைத்துவிட்டுத் தனது அவதாரத்தை முடித்ததாக வால்மீகி ராமாயணம் மற்றும் கம்பராமாயணம் எடுத்துரைக்கின்றன. க்ஷத்திரியர்கள் மீதிருந்த கோபம் பரசுராமன் அவதாரத்தில் தீர்ந்தது என்று கூறப்படுகிறது.

"மன்னடங்க மழுவலங்கைக் கொண்ட இராம நம்பீ"
(பெரியா. திரு மொ.5.4.6)

"வடிவாய் மழுவே படையாக வந்து தோன்றி
மூவெழுக்கால்
படியார் அரசு களைகட்டபாழி யானை அம்மானை"
(பெரியா. திரு மொ.8.8.6)

என்று ஆழ்வார்கள் குறிப்பிட்டிருப்பது பரசுராம அவதாரத்தைக் காட்டுகிறது. நம்மாழ்வாரும், இச்செய்தியைக் குறிப்பிட்டு அருளியிருப்பது (நம்.தி.வா.மொ 6.2.10) ஒப்பு நோக்கத்தக்கது.

எ. இராம அவதாரம்:

இலங்கையை ஆண்ட இராவணன் அரக்கக் குணம் உடையவன் என்றும், அவனை அழிக்க விஷ்ணு எடுத்த அவதாரம் இராம அவதாரம் என்றும் கூறப்படுகிறது.

"கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ"
(நம் தி.வா.மொ.7.5.1)

என்கிறார் நம்மாழ்வார். அத்தகைய சிறப்பு வாய்ந்தது இராமவதாரமாகும். 'இறைவன் வாமன அவதாரத்தில் தன் வடிவை மாற்றிப் பகையை நீக்கினான் என்றும், இராமவதாரத்தில் தன் வடிவம் மாறாமல் நின்று பகைமை போக்கினான்' என்றும்[18] இவ்விரண்டு அவதாரங்களுக்கிடையே உள்ள வேற்றுமை வெளிக்காட்டப்படுகிறது,

'வையமெல்லாம் உடன் வணங்க வணங்கா
மன்னனாய்த் தோன்றி,
வெய்ய சீற்றக் கடியிலங்கை குடிகொண்டோட
வெஞ்சமத்து,
செய்த வெம்போர் நம்பரனை".
(பெரிய.திரு மொ.8.8.7)

என்று இராமவதாரம் பற்றி அருளியுள்ளார் திருமங்கை ஆழ்வார். இராவணனை வென்ற செய்தி இப்பாசுரத்தில் எடுத்துரைக்கப் பட்டுள்ளது பெரியாழ்வாரின் பாசுரம்,

"கலக்கிய மனத்தனளாய்க் கைகேசி வரம் வேண்ட
மலக்கிய மாமனத்தனாய் மன்னவனும் மருதொழிய

குலக்குமரா காடுறையப் போவென்றுவிடை கொடுப்ப
இலக்குமனன்றன்னொடும் அங்கேகிய தோரடையாளம்''
(பெரியா.திரு.மொ.3.10.3)

என்று, இராமன் கானகம் ஏறிய சூழலைக் காட்டுகிறது.

இராமனது வரலாற்றில், அனுமன் இராவணனிடத்தில் தூது சென்ற செய்தி குறிப்பிடத்தக்கது. இராமவதாரத்தில் அனுமன் தூது நடந்த செயலை மனதிற் கொண்டு, கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணன் தூது நடந்ததைக் (துரியோதனிடத்து) காட்டுகிறார் திருமங்கை ஆழ்வார்.

''அவனே பின்னோக தூதாகி மன்னர்க்காகிப்
பெரு நிலத்தார் இன்னார் தூதனென நின்றான்''
(பெரிய.திரு.மொ.2.2.3)

என்பதில் முற்பிறவியின் விருப்பத்தைப் பிற்பிறவியில் கிருஷ்ணவதாரம் எடுத்துப் பெற்றதைக் காட்டுகிறது. இராமனும் கண்ணனும் ஒருவரே என்பதும் இக்கருத்தில் அறியத்தக்கது.

ஏ. பலராம அவதாரம்:

பலராம அவதாரமும் கிருஷ்ண அவதாரமும் ஒரே காலத்தில் ஒரே குடும்பத்தில் நிகழ்ந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. யாதவ குல வசுதேவருக்கும் தேவகிக்கும் ஏழாவது மகனாக பலராமனும், எட்டாவது மகனாக கிருஷ்ணனும் பிறந்தனர். இருவரும் சகோதரர்கள் என்றாலும், தனித் தனி அவதாரமாகக் கருதப்பட்டும் வருகின்றனர். இவர்கள் இருவரும் சேர்ந்து செய்த விரச் செயல்கள் (லீலைகள்) பல உண்டு.

பலராமன் கையில் உள்ள சிறப்பு ஆயுதம் உழவுக் கருவியான கலப்பையாகும். பலராமனை ஆதிசேஷனின் அம்சம் என்று கூறுகின்றனர். சிலர், பலராமனுக்குப் பதிலாக புத்தரை மகாவிஷ்ணுவின் அவதாரம் என்று கூறுவர். (வடநாட்டு வைணவத்தில் இம்முறையைக் கொண்டுள்ளனர்). பண்டைய தமிழகத்தில், கண்ணனையும் பலராமனையும் இருபெருந் தெய்வமாகப் போற்றி வந்ததைச் சங்கப் பாடல்கள் சான்று பகர்கின்றன.

'ஒற்றைக் குழையும் நாஞ்சிலும் ஒருபால் தோன்றத்தான் தோன்றி
வெற்றித் தொழிலார் வேல்வேந்தர் விண்பாற்செல்ல வெஞ்சமத்து
செற்ற கொற்றத் தொழிலானைச்"
(பெரிய.திரு.மொ.8.8.8)

என்று திருமங்கை ஆழ்வார், பலராமனின் தோற்றத்தையும் அவனது வீரச்சிறப்பையும் எடுத்துரைக்கிறார். பலராமன் அவதாரமும், கிருஷ்ணவதாரமும் ஒரே காலத்தில் நிகழ்ந்தன என்றாலும், பலராம அவதாரம் கிருஷ்ணாவதாரம் போல் அதிக செல்வாக்குப் பெறவில்லை என்று கூறலாம். ஆழ்வார்களும் பலராமனைப் பற்றி அதிகமாகக் குறிப்பிடவில்லை.

ஐ. கிருஷ்ணாவதாரம்:

பத்து அவதாரங்களில் கிருஷ்ணாவதாரம் முழுமை பெற்ற அவதாரம் என்று கருதப்படுகிறது. மகாவிஷ்ணு எவ்வடிவத்தில் உள்ளாரோ, அவ்வடிவுடனே குழந்தை உருவத்தில் பிறந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. விஷ்ணு, தான் எடுத்த அவதாரங்களில் பரத்துவம் காட்டிய பொழுதிலும், மானிடப் பிறப்பில் பரத்துவம் காட்டிய அவதாரம் கிருஷ்ண அவதாரம் என்று கூறமுடியும், ஆழ்வார்கள் அனைவரும் கிருஷ்ணாவ தாரத்தில் ஆழங்கால் பட்டு அனுபவித்திருகின்றனர். ஆழ்வார் களுடைய காலத்திற்கு அண்மையில் கிருஷ்ணாவதாரம் நிகழ்ந்ததால், அவர்களுக்கு இவ்வவதாரத்தின் மீது அதிக ஈடுபாடு ஏற்பட்டது..

நம்மாழ்வார் கலியுகத்தின் தொடக்கத்தில் அதாவது கலி பிறந்து 40–ஆவது நாளில் பிறந்தார் என்று குரு பரம்பரை கூறுகிறது. அதனால் கண்ணன் வாழ்ந்த காலத்தே பிறக்காது, காலம் தாழ்த்துப் பிறந்தது பற்றி அவருக்கு வருத்தம் ஏற்பட்டு "பாவியேன்! ஒரு செவ்வாய்க் கிழமை முற்பட்டிலேன், பல்லிலே பட்டுத் தெறிப்பதே!" என்று வருந்தினாராம். இராமவதாரம் ஒருயுகம் முற்பட்டதால், அடுத்து நிகழ்ந்த கிருஷ்ணாவதாரத்திலேயே ஆழ்வார்கள் ஆழங்காற்பட்டனர் என்பது வியாக்யானங்களின் கருத்தாகும்.

கிருஷ்ணாவதாரம் என்றால் ஆழ்வார்கள் எல்லோரும் ஒரு சேரப் பரிவு காட்டுபவர்களாக இருக்கின்றனர். இதற்குக் காரணம், "இராமவதாரத்தில் பிள்ளைகள் மிடுக்கர்கள் (ஆண் புலிகள்); குணம் நிறைந்தவர்கள்; தந்தை சம்பரனைக் கொன்றவன்; அமைச்சர்கள் வசிட்டர் தொடக்கமானவர்கள்; ஊர் அயோத்தி; காலம் நல்ல காலம்; ஆதலால் அதில் ஓர் அச்சமுமில்லை. ஆனால், கிருஷ்ணாவதாரத்திலோ வந்து பிறந்த இடம் பகைவன் இல்லம்; கம்சன் இடம் பார்த்து நலியும் தீயவர்களை வரவிடுக்கும் கொடியவன்; தகப்பன் இடையன்; ஊர் இடைச்சேரி; பிள்ளைகள் தீம்பர்கள்; காலம் கலிகாலத்திற்குத் தோள் தீண்டியாய் அமைந்த காலம்; ஆகையாலே என் வருகிறதோ! என்று பரிவு காட்டுவதற்கு ஆழ்வார்களல்லது இல்லை காணும்!"[19] என்று விளக்கம் கூறப்படுகிறது.

ஓ. கல்கி அவதாரம்:

இனி நிகழப் போகும் அவதாரம் கல்கியாகும். இந்தக் கலியுகத்தில், பாவங்கள் பெருகித் தீயவர்கள் அதிகமாகும் பொழுது, இவ்வவதாரம் நிகழப் போவதாகக் கூறப்படுகிறது.

"கடும் பரிமேல் கற்கியை நான் கண்டு கொண்டேன்"
(பெரிய. திரு.மொ. 2.5.3)

"கற்கியுமானான் தன்னை" (பெரிய. திரு மொ. 8.9.10)
கல்கி அவதாரம், விஷ்ணுவின் பத்தாவது அவதாரம் என்று கூறுகின்றனர். இவ்வவதாரத்தின் பொழுது, விஷ்ணு குதிரையின் மேலேறிப் பூவுலகிற்கு வருவார் என்று கருதப்படுகிறது.

விஷ்ணுவின் இவ்வவதாரங்களை, இறைவனின் வெளிப்பாடகக் கருதியே இந்துமக்கள் வழிபட்டு வருகின்றனர். மக்களின் நன்மை கருதி, இவ்வவதாரங்கள் ஒவ்வொரு கால கட்டத்தில் நிகழ்ந்ததாகக் கருதப்படுகின்றன. இப்பத்து அவதாரங்களைப் பரிணாம வளர்ச்சியில் கொண்டு வருவதுண்டு. "மீன் புராதன உயிர். ஊழிக் கடலிலிருந்தும், (Palaezoic seas), ஆமை நடு ஊழிக் கடலிலிருந்தும் (Mesozoic seas) தோன்றின. மனிதன் குகை, மரப்பொந்துகளில் வாழ்ந்த காலத்தில் நரசிங்கம், வாமனம் தோன்றின. அவன் வேட்டுவனாகித் திரிந்த காலத்தில் பரசுராம அவதாரம் தோன்றிற்று. நாகரிகம் மிக்க நகர

வாழ்க்கையில் இராமன், கிருஷ்ணன் ஆகிய அவதாரங்கள் தோன்றின"[20] என்று தசாவதாரக் கொள்கை பரிணாமக் கொள்கையோடு இணைத்துக் காட்டப்படுகின்றது, இப்பழமையான வளர்ச்சி மறைந்துவிடாமம் இருக்க, அவதாரம் என்ற கொள்கை ஏற்பட்டுப் புராணங்களின் துணையோடு வைணவ மரபில் கலந்துள்ளது என்று ஊகிக்கலாம்.

**கண்ணன் பூரண அவதாாம்:**

பத்து அவதாரங்களுள் கண்ணனைப் பூரண அவதாரம் (முழு அவதாரம்) என்று கூறுவர். கிருஷ்ணன் சிறந்த குழந்தை யாக, இளைஞனாக, கணவனாக, அரசியல் ஞானியாக, தத்துவ அறிஞனாக, பாதுகாவலனாக, அரசனாகப், செயல்பட்டு வந்த திறமைகள் வேறு எந்த அவதாத்திலும் காணப்படவில்லை. இக்கூறுகள் அனைத்தும், கிருஷ்ணாவாதாரத்தில் முழுமை பெற்றுள்ளன.

இராமனையும் பூரண அவதாரம் என்று குறிப்பிட்டாலும், இருவருக்குமிடையே சில வேற்றுமைகள் கூறப்படுகின்றன. இராமன் அவதாரம் 'மனுஷ்யாவதாரம்' என்பர். அதாவது, இராமன் மனிதனைப் போலவே துக்கங்களை அனுபவித்தவன், தனது விபூதியை வெளியிடாமல். தான் ஒரு மனிதன் என்ற நிலையிலேயே உலகிற்கு ஓர் உதாரண புருஷனாக விளங்குகிறான் ஆனால் கிருஷ்ணாவதாரம் அவ்வாறன்று. கண்ணன், தான் ஒரு பரம்பொருள் என்பதனை அவ்வப்பொழுது உணர்த்தி வந்தான். கண்ணன் தான் வாழ்ந்த காலத்தில், மக்களால் வழிபடப்பட்டு வந்தான். கண்ணன் அதிமானுஷ்யமான பல செயல்களால் போற்றப்பட்டு வந்தான். தாய் தந்தையருக்குத் தன் சுய வடிவுடன் (சங்கு, சக்கரம், பீதாம்பரம் உடை, ஆபரணங்கள் இவற்றுடன் விஷ்ணு போன்று காட்சி அளித்தல்) காட்சியளித்து, தன்னைக் குழந்தை வடிவாக்கிக் கொள்ளுதல், பூதனைக் கொல்லுதல், சகடாசுரனைக் கொல்லுதல், கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தல், காளிங்கனை அடக்குதல், ராஸலீலை செய்தல், போன்ற செயல்கள், அவனது பரம்பொருள் தன்மையைக் காட்டுகின்றன. கண்ணன் விந்தை காட்டியது. வெண்ணெய் திருடியது, குழல் ஊதியது முதலிய செயல்கள் விளையாட்டாக செய்து காட்டினாலும், பரம் பொருள் தன்மையை உணர்த்தின. 'உயிர்கள் யாவும்

பெண்களே, கண்ணன் ஒருவனே புருஷன்' என்பதையே கிருஷ்ண லீலைகள் காட்டுகின்றன "ஏனைய அவதாரங்கள் சுவேதத்வீபத்திலுள்ள ஸ்ரீவைகுண்ட நாதனுடைய அவதாரங்கள் ஆகும். கிருஷ்ணாவதாரமோ, வைகுண்டத்திற்கும், பிரம்மாண்டத்திற்கும், மேலுள்ளதும் எந்தப் பிரளயத்திலும் அழியாததுமான கோலோகத்திலுள்ள ஸ்ரீ சாட்சாத் கிருஷ்ணனுடைய அவதாரம் என்று கர்க்க சம்ஹிதையில் குறிப்பிடப்படும் செய்தி" நோக்கத்தக்கது.[21] இக்கருத்தினை மேலும் வலுவூட்டுவதற்கு ஸ்ரீபிரம்ம வைவார்த்தப் புராணத்தைச் சான்று கூறலாம்.

**வைணவ மரபு:**

**இறைவனின் ஐவகை நிலைகள்:**

பரம்பொருளான இறைவனை விஷ்ணுவாகக் கொண்டு வழிபடும் பொழுது, குறிப்பிட்ட வடிவம், பெயர் கொண்டு வழிபடுகின்றனர். இறைவன் ஐவகை நிலைகளில் நின்று உலகை உய்விக்கிறான் என்பது வைணவர்களின் கருத்தாகும். அவைகளாவன:

1. விண்ணாட்டு நிலை (பரத்வம்)
2. அணிவகுப்பு நிலை (வியூகம்)
3. பிறப்பு நிலை (விபவம்)
4. உள்ளுறை நிலை (அந்தர்யாமித்வம்)
5. வழிபடு நிலை (அர்ச்சை)

என்பனவாகும். இந்த ஐந்து நிலைகளின் சிறப்பினை[22] ஸ்ரீவசன பூஷணம் எடுத்துரைக்கிறது.

> "பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம்; ஆவரண
> ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே
> வ்யூஉறம்; பெருக்காறு போலே விபவங்கள்;
> அதிலே தேங்கின மடுக்கள் போலே
> அர்ச்சாவதாரம்" (ஸ்ரீ வசன. 39)

**அ) பரம் (அ) பரத்வம்:**

இதனை மேலான உயரிய வடிவம் என்பர். பரமபதத்தில் (வைகுந்தம்) திவ்விய மங்கள விக்கிரகத்தோடு இறைவன் மலர்மகள், நிலமகள், ஆய்மகள், ஆகிய மூவரோடும் கொலுவீற்றிருக்கும் இடமாகும். பரமபதத்தில் எப்போதுமுள்ள

நித்திய சூரிகளாலும் வீடுபேருற்ற முக்தர்களாலும் மட்டுமே கண்டு அனுபவிக்க முடியும், பிறவிப் பெருங்கடலில் உழல்பவர்க்கு அத்தகைய வாய்ப்பில்லை. இவ்வாறு, வைகுந்தத்தில் விஷ்ணு திருமகளோடு இருக்கும் நிலையைப் பரசொரூபம் என்று கூறுவர். விண்ணாட்டு நிலையில் இறைவன் வீற்றிருக்கும் இயல்பினை, நம்மாழ்வார் பாடியுள்ளமை நோக்கத்தக்கது.

"ஒருவனென் றேத்த நின்ற
நளின்மதிச் சடையன் என்கோ! நான்முகக் கடவுள் என்கோ,
அளி மகிழ்ந் துலக மெல்லாம் படைத்தவை ஏத்த நின்ற
களிமலர்த் துளவ னெம்மான் கண்ணனை மாயனையே?"
(நம். தி. வா. மொ. 3. 4. 8)

என்பதில், கண்ணன் மும்மூர்த்தி உருவமாய் உள்ளான் என்று அருளப்பட்டுள்ளது. பரத்துவ நிலையை வேதங்கள் விரித்துரைத் துள்ளன. நாராயணனின் உருவம் ஒளியுருவமாய் உள்ளது என்று பொய்கையாழ்வார் குறிப்பிடுவது அறியத்தக்கது.

"ஒருருவன் அல்லை ஒளியுருவம் நின்னுருவம்,
ஈருருவன் என்பர் இருநிலத்தோர் – ஒருருவம்
ஆதியாம் வண்ணம் அறிந்தார் அவர்கண்டீர்
நீதியால் மண்காப்பார் நின்று" (பூத. இ. திரு. 60)

ஆ) வியூகம்:

பரமபதத்தில் இருக்கும் இறைவனை அனைவராலும் அடைய முடியாது என்பதினால், திருப்பாற்கடலில் வியூக வடிவமாகப் பள்ளிக் கொண்டுள்ளார் என்பர். 'வியூகம்' என்பது 'பிரிந்து நிற்றல்' என்று பொருள்படும். தேவர்களின் வழிபாட்டிற் கெனப் பரம்பொருள் வெளிப்படும் வடிவம் 'வியூகம்' ஆகும். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்வதற்காக சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்னும் மூவகை நிலைகளில் இறைவன் உள்ளான் என்பர். இவர்களின் மூலவடிவத்தை 'வாசுதேவன்' (அ) 'வியூக வாசுதேவன்' என்பர். இவ்விறைவன் பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள வடிவ முடையவன் சிலர், வாசுதேவனையும் சேர்த்து நான்கு வடிவங் களில் இறைவன் உள்ளான் என்றும் கூறுவதுண்டு.

"கடலிடங் கொண்ட கடல்வண்ணா! கண்ணனே!"
(நம். தி. வா. மொ. 7.2.7)

"வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை"

(திருப். 6)

"எறிகடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து
சிவனிய விந்திரன் இவர்முத லனைத்தோர்
தெய்வக்குழாங்கள் கைதொழக் கிடந்த
தாமரை யுந்தித் தனிப்பெரு நாயக"

(நம். திருவாசி. 1, 11-14)

என்ற பாசுரங்களில் வியூக நிலை குறிப்பிடப்பட்டுள்ளது. வியூக நிலையை பாஞ்சராத்திர ஆகமம் விரித்துக் கூறுகிறது. வாசுதேவனே முழுமுதற் கடவுள். அவனே, மற்ற மூன்று வடிவில் பிரிந்து நின்று முத்தொழில்களைச் செய்து உலகத்தை இயக்கி வருகிறான் என்பது கருத்தாகும்.

> "பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் வடிவம் வாசுதேவன். உருத்திரனுக்கு அந்தர்யாமியாக இருந்து கொண்டு அழிக்குந் தொழிலைச் செய்பவன் சங்கர்ஷணன்; பிரம்மாவிற்கு அந்தர்யாமியாக இருந்து படைக்குந் தொழிலைச் செய்பவன் பிரத்யூம்நன்; காக்கும் தொழிலைச் செய்யும் அநிருத்தன் விஷ்ணுவின் அந்தர்யாமியாக இருந்து வருகிறான். நாராயணன் எல்லா உள்ளங்களிலும் நிறைந்து அவரவர் தொழிலைச் செய்கிறார் என்பது ஸ்ரீவைஷ்ணவர்களின் கொள்கை"[23]

ஆகும். இவ்வியூகக் கொள்கையின் இதே கருத்தினை இராமாநுச தாதாசாரியார்[24] வலியுறுத்திக் கூறியிருப்பதும் இங்கு நோக்கத் தக்கது இவர்களது தொழில்கள் புராணங்களில் குறிப்பிடப் படும் சிவன் விஷ்ணு, பிரம்மா ஆகிய மூன்று தெய்வங்களின் தொழில்களைப் போன்றவையாகும். காரணம், சிவன் முதலிய மூவரும் புராணங்களில் சிறப்பு இடம் பெற்றுள்ளதே (தலைமையிடம்) ஆகும்.

வியூக நிலையில் இடம் பெறும் சங்கர்ஷணன் பிரத்யும்நன், அநிருத்தன், வாசுதேவன் ஆகிய நால்வகைப் பெயர்களையும் கிருஷ்ண அவதாரத்தோடு தொடர்புபடுத்திக் கூறுவர். எனவே, இப்பெயர்கள் கிருஷ்ணனது உறவினர்களுக்குச் சூட்டப்பட்டுள்ளது என்று ஊகிக்க முடிகிறது. வாசுதேவனே கிருஷ்ணன், சங்கர்ஷணன் கிருஷ்ணன் உடன்பிறப்பு, (அண்ணன் – பலராமன்)

பிரத்யும்நன் கிருஷ்ணனின் பிள்ளை, அநிருத்தன் கிருஷ்ணனின் பேரன் என்று உறவு படுத்தியும் தொடர்புபடுத்தியும் கூறப் பட்டுள்ளது இந்த வியூக நிலைகளைப் பற்றி மகாபாரதம் நாராணீயப் பகுதியில் (சாந்திபருவம்) தெளிவாக எடுத் துரைத்துள்ளது இங்கு நினைவிற்கொள்ளத்தக்கது.

இ. விபவ நிலை:

பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் வாசுதேவ வடிவம், மண்ணுலகில் மானுட வடிவந்தாங்கி தோன்றுவததை விபவ (பிறப்பு நிலை) நிலை என்பர். 'தோன்றி வந்த வடிவம்' என்றும் கூறுவர். உலகத்தில் தர்மம் நிலை குலையும்பொழுது அதர்மத்தை அழித்து, தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு நிகழும் மாற்றங்கள் இதனுள் அடங்கும். அதாவது, அக்கால கட்டத்தில் பரம்பொருள் பிறப்பெடுத்து வந்து தர்மத்தை நிலைநிறுத்துவார் என்று கருதப்படுகிறது. இந்த 'விபவ நிலையை 'அவதாரம்' என்று கூறப்படுகிறது.

" சாது சனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு
ஆதியஞ்சோதி யுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த"
(நம் தி.வா.மொ.3.5.3)

என்ற அடிகளில், ஒன்றுமறியா மக்களுக்குக் கொடுமைகள் பல செய்து வந்த கஞ்சனை (கம்சன்) அழிப்பதற்காக, பரம்பொருள் கிருஷ்ணனாகப் பிறப்பெடுத்தான் என்று நம்மாழ்வார் கூறுவது மேற்சொன்ன கருத்திற்கு அரணாக அமைகிறது. கிருஷ்ணா வதாரம், தர்மத்தை நிலை நிறுத்தும் பொருட்டு நிகழ்ந்ததாகக் கருதப்பட்டு வருகிறது. துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனன் என்பது வடநூற்கருத்து. ஆகும்.

ஈ. அந்தர்யாமி நிலை:

அனைத்து உயிர்களின் உள்ளத்தினுள் தங்கியிருக்கும் இறைவனின் நிலை 'உள்ளுறை நிலை' எனப்படுகிறது; ஒருவகைத் தியான நிலையில் அடங்கும்.

"திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்,
உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துள்ளன்,
சுடர்மிகு கருதியு ளிவையுண்ட சுரனே"
(நம்.தி.வா.மொ.1.1.7)

என்றடிகளில், இறைவன் எங்கும் நிறைந்துள்ளான் என்று நம்மாழ்வார் குறிப்பிடுகிறார். பரம்பொருள் பஞ்சபூதங்களிலும் ஊடுருவி நீராக, நெருப்பாக மண்ணாக, விண்ணாக, காற்றாக வடிவெடுத்து இயங்கும் நிலையும் 'அந்தர்யாமி' ஆகும். அனைத்து உயிர்களின் உள்நின்று இயக்குபவனாக இறைவன் விளங்குவதும் இந்நிலையின் பாற்படும்.

உ. அர்ச்சை நிலை (வழிபடு நிலை)

உருவ வழிபாட்டில் வழிபடும் நிலை 'அர்ச்சை நிலை' யாகும். பத்தியை வளர்ப்பதற்குப் பெருந்துணையாவது உருவ வழிபாடாகும். இறைவழிபாட்டில் எல்லோருக்கும் ஈடுபாடு ஏற்பட வேண்டும் என்ற உயரிய நோக்கில் முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்டது அர்ச்சாவதாரமாகும், என்ற கருத்துள்ளது. ஆனால், ஆண்டாளின் திருப்பாவையில் (6) கண்ணன் அவதரித்த துவாபர யுகத்தில், வடமதுரையில் 'புள்ளரையன் கோயில்' என்ற குறிப்புள்ளது. ஆகவே, 'அர்ச்சை' என்பது கலியுகத்தில் மட்டுமல்லை. ஏனைய யுகங்களிலும் இருந்திருக்கிறது என்று ஊகிக்க இடமுண்டு.

இறைவன்விண்ணாட்டு நிலை பிறப்பு நிலைமுதலானவற்றை விட வழிபடு நிலையை மேலானதாகச் கருதி, தான் உகந்தருளும் இடங்களில், அர்ச்சை வடிவில் வீற்றிருக்கிறான் என்பது மக்களின் நம்பிக்கை. ஆதலால், இறையுருவத்தைப் பொன்னாலோ மண்ணாலோ, கல்லாலோ செய்து, அடியவர் களாக இருந்து, தெய்வத்தைத் தொழுகின்றனர். மற்ற நிலைகள்விட அர்ச்சாவதார நிலை அனைத்து மக்களாலும் மேற்கொள்ள முடிந்த வழிபாடு நிலையாகும் அதன் சிறப்பு கருதியே ஆழ்வார்கள் அர்ச்சாவதாரக் கோலத்தைப் பாடி அனுபவித்துள்ளனர். இந்த அர்ச்சாவதார வழிபாடு கோயில் களிலும் வீடுகளிலும் மேற்கொள்ளப்படுகின்றன. கோயில்களில் 'மூர்த்தி' (விக்கிரகம்) என்ற பெயரில் அர்ச்சாவதாரம் அமைந்துள்ளது. வைணவர் வீடுகளில், 'சாளக்ராம'[25] வடிவில் இறைவன் (நாராயணன்) உறைந்துள்ளான் என்ற நம்பிக்கையில் சாளக்ராம வழிபாடு நிகழ்ந்து வருகிறது.

திருவுருவ அமைப்பைப் பொதுவாக நின்ற, இருந்த, கிடந்த கோலம் என மூன்று வகையாகக் கூறுவர். கிடந்த கோலம் மகாவிஷ்ணுவிற்கே உரிய சிறப்புக் கோலம் என்பர். மற்ற

கடவுள்கட்குக், கிடந்த கோல அமைப்பு இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே திருவரங்கத்தில் கிடந்த கோலத்தில் காட்சி தரும் இறைவனிடத்துத் தம் மனதைப் பறிகொடுத்து நின்றவர்கள் ஆழ்வார்கள்.

**வைணவ ஆகமங்கள்:**

வைணவச் சார்புடைய ஆகமங்களாகப் 'பாஞ்சராத்திரம்' ஆகமத்தையும், 'வைகானச' ஆகமத்தையும் வைணவ அறிஞர்கள் சுட்டுவர். இன்று தமிழ்நாட்டிலுள்ள வைணவக் கோயில்களின் வழிபாட்டு முறைகளுக்குப் பயன்படுத்தப் பட்டு வரும் அடிப்படை நூல்களாகவும் இவை அமைந்துள்ளன.

**அ. வைகானச ஆகமம்:**

விகனசர் என்னும் முனிவராலும் அவருடைய சிஷ்யர் களாலும் இயற்றப் பெற்றது "வைகனச சூத்திரம்" என்பர்.

மகாவிஷ்ணுவே ஆதிபுருஷன், விஷ்ணுவின் பரம், வியூக, விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளிலும் திருமகள் உடன் உறைகிறார். இறைவனின் சக்தியாகத் திருமகள் விளங்குகிறாள். திருமகளையும் விஷ்ணுவையும் பிரிக்க முடியாத பரம் பொருளாகக் கருதுகின்றனர். இக்காரணத்தினால், இறைவனுக்கு ஸ்ரீமந் நாராயணன், சீதாராமன், லட்சுமி நாராயணன், ராதா கிருஷ்ணன் ஸ்ரீநிவாசன் ஆகிய பெயர்கள் ஏற்பட்டன.

வைகானசப் பிரிவினர் இறைவனின் ஐந்து வகை நிலைகளுள் அர்ச்சை நிலைக்கு முதன்மை கொடுக்கின்றனர். இறைவன் தன் அர்ச்சை நிலையாகிய திருவுருவச் சிலைக்கு இறங்கி வந்து அருள் செய்கிறான்[26] என்று கூறுகின்றனர்.

**ஆ. பாஞ்சராத்திர ஆகமம்:**

நாராயணனை வழிபடும் பக்தர்களைக் குறிக்கும் பெயர் பாஞ்சராத்திரம் என்று மகாபாரதம் நாராணீயப் பகுதியில் குறிக்கப்படுகிறது. "ஆளவந்தாரும் இராமனுசரும் பாஞ்சராத்திர ஆகமத்தின் அடிப்படையிலேயே தம் தத்துவங்களை விளக்கினர். பாஞ்சராத்திர ஆகமம் பாகவத சமயமாகிய வைணவத்தின் அடிப்படைக் கருத்துக்களை எடுத்துரைக்கின்றது. நாராயணன் நரநாராயணனாக அவதரித்து 'ஸ்ரீ' ஆகிய திருமகளுக்கு இவ்வாகமத்தை உபதேசம் செய்தார் என்றும், திருமகளிட

மிருந்து விஸ்வக்சேனர் பாஞ்சராத்திர ஆகமத்தைப் பெற்றர்"[27] என்றும் கருத்துப் புலப்படுகிறது.

பாஞ்சராத்திரம் பெயர் விளக்கம்:

பாஞ்சராத்திரம் ஐந்து இரவுகளில் செய்யக்கூடிய சடங்குகளை உரைப்பது, ஐந்து இரவில் இறைவனால் கூறப்பட்டது என்றும் கூறுவர். இவ்விளக்கம் பொதுவான விளக்கமாக அமைந்திருப்பினும் குறிப்பிட்ட சில விளக்கக் கூறுகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

1. பிரம்மம், முக்தி, போகம், யோகம், பிரபஞ்சம், என்ற ஐந்து தத்துவங்களைப் பற்றி அறிகிற பொருள் அறிவு ஆகும்[28] 'ராத்ரம்' என்ற சொல்லுக்குப் 'பொது அறிவு' என்று பொருள்படுகிறது.
2. நாராயணன் (அ) புருஷன் என்பவரால் ஐந்து இரவுகளில் செய்யப்படும் வேள்வியைக் குறிக்கிறது. வேதங்களைவிடச் சிறந்ததாக மூல வேதமாக இம்மரபு விளங்குகிறது. இப்பாஞ்சிராத்திர ஆகமம் நாராயணனால் நரனுக்கு உபதேசிக்கப்பட்டது. தொடர்ந்து சாண்டில்யர், பிரகலாதர் சுக்ரீவர் முதலானோர் வழியாக இது பரப்பப்பட்டது.[29]
3. இறைவனின் ஐந்து வகை நிலைகளான பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை ஆகியன பற்றிப் பேசும் இலக்கியமாக இவ்வாகமம் விளங்குகிறது.[30] இறைவனின் ஐவகை நிலைகளைக் குறிக்கும் சொல் என்பதாகும்.

பாஞ்சராத்திர மரபு, வியூக நிலையையே தனது மூலக் கோட்பாடாகக் கொண்டுள்ளது பக்தியின் மூலம் அடையக் கூடிய முடிந்த முடிபான பரம்பொருள் வாசுதேவன் ஒருவனே என்ற கருத்தினையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது.

இவ்வழிபாட்டு மரபில், வாசுதேவனே மூலப்பரம்பொருள். இவர், தன்னிடமிருந்து நான்கு வியூக மூர்த்திகளையும் தோற்றுவித்தார் என்பர். இப்பெயர்கள் கிருஷ்ணனோடு தொடர்புடையன ஆகும்.

முற்காலத்தில் பஞ்சவீர வழிபாடு இருந்து வந்தது. "வாசுதேவன் உள்ளிட்ட நால்வரையும் மற்றும் கிருஷ்ணன்

மகன் சாம்பனையும் இணைத்து ஐந்து அவதாரங்களாக– விருஷ்ணி அவதாரங்களாகக்"[31] கூறப்படுகின்றன. துவாபர யுக வரலாற்றினைப் பின்னணியாகக் கொண்டு நோக்கும் பொழுது, கம்சனின் கொடுமையை அழித்து, மக்களைக் காத்த கிருஷ்ணன் நாராயணனாக உயர்த்திப் பேசப்பட்டான் என்பது தெளிவாகிறது.

'சாத்வத இனத்திற்குப் பாஞ்சராத்திரம், பாகவதம் என்ற வேறு பெயர்களும் இருந்தன. சாத்வத இனத்தில், வாசுதேவன், சங்கருடணன், அநிருத்தன், மற்றும் பிரத்யும்நன் ஆகிய நால்வரையும் தம் இனத்துக் தெய்வங்களாக வழிப்பட்டிருக்கின்றனர். பிறகு, அவர்களுக்கு இறைமைத் தன்மையைக் கொடுத்து, வியூக வடிவங்களோடு இணைத்து, ஒரு நிலையான வடிவங்கள் கொடுத்து உயர்த்தப்பட்டுள்ளன.'[32]

பாகவத மதம், சாத்வத இனம் ஆகியன, கிருஷ்ணன் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்பட்ட பிறகு, வைணவமதமாக மாற்றம் பெற்றிருக்கலாம். ஆகவே, வைணவத்திற்குப் பாஞ்சராத்திரம், ஏகாந்திகம், சாத்வதம், பாகவதம் என்று பல பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன.

**வைணவ சமயத்தில் கண்ணனுக்குரிய இடம்**

வைணவ சமயத்தில் பல தெய்வங்களின் இணைப்பு இருப்பதைக் காண முடிகின்றது. 'வைணவம்' என்ற பெயர் 'விஷ்ணுவை' மையமிட்டு, அவனே முழு முதற் கடவுள் என்று தெரிவிக்கிறது. ஆனால் 'நாராயணன்' என்ற பெயரில் ஒரு முழுமைத் தன்மையைக் காணமுடிகிறது. நாராயணனை, பிரபஞ்சகர்த்தாவாக (Cosmic God) – எல்லாவற்றிற்கும் மேம்பட்ட தெய்வமாக ஏற்றுக் கொண்டுள்ள கருத்தானது வைணவ ரகசிய நூல்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது. நாராயணனைப் பற்றிய சிறப்பினை முமுட்சுபடி[33] கொண்டு தெளிவாக விளங்கிக் கொள்ள முடியும். நாராயணன், விஷ்ணு இவர்களுடன் வாசுதேவ கிருஷ்ணனின் இணைவு ஏற்பட்டு, மூவரும் ஒரே தெய்வத்தைக் குறிக்கும் பல பெயர்கள் என்பது உறுதியாயிற்று. குறிப்பாக, பாரதம், பாகவதம் போன்ற புராணங்கள், ஆசாரியர்களின் ரகசிய நூல்கள் ஆகியனவற்றில் நாராயணனைப் பற்றிச் சிறப்பாக பேசப்பட்டுள்ளன. ஆதலால்

தான், கிருஷ்ணனை நாராயணனாக உயர்த்திப் பேசுகின்றன. கிருஷ்ணனை நாராயணனின் மறு வடிவம் என்கின்றனர். இந்த வளர்ச்சியினைக் கண்டு ஆழ்வார்கள் தமது பிரபந்தப் பாசுரங்களில் கிருஷ்ணனை நாராயணனாகவே கருதிப் பாடி அனுபவித்துள்ளனர். அவனே பல வடிவங்களை (அவதாரங்கள்) எடுத்த ஸ்ரீமந்நாராயணன் என உயர்த்திப் பாடியதற்குத் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களே சான்றுகளாகும்

'ஸ்ரீ வேதாந்த தேசிகர் தமது ரகசிய திரய சாரத்தில் நாராயணன் என்ற பெயரின் சிறப்பை எடுத்துக் கூறியிருக்கிறார். இறைவனுக்கு இருக்கும் பல பெயர்களில் விஷ்ணு, நாராயணன், வாசுதேவ கிருஷ்ணன் என்ற மூன்று பெயர்கள் இறைமைத் தத்துவத்தின் முழுமையை வெளிப்படுத்துபவையாகும். இவை களுள், நாராயணன் என்ற சொல்லைத்தான் பெரியோர்கள் எடுத்துக் கொண்டுள்ளனர்,[34] என்று குறிப்பிடப்படுகின்றது.

இப்பெயர்களோடு வைணவத்தில் பன்னிரண்டு பெயர்கள் பேசப்படுகின்றன. பாஞ்சராத்திர ஆகமத்தில் இருக்கும் நான்கு வியூகப் பெயர்களோடு கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், ரிஷிகேசன், பத்மநாபன், தாமோதரன் என்ற மற்ற பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன. இப்பெயர்கள் கொண்ட பாசுரங்களை, நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் திருநாமப் பதிகத்தில் (2-7) பாடியிருப்பது நோக்கத்தக்கது.

வைணவ சமயம் இன்றைய காலகட்டத்தில் நாராயணன் ஒருவனே தெய்வம் என்ற அடிப்படையில் அமைந்துள்ளது, நாராயணன் ஒருவனே பரம்பொருள் என்ற கருத்தில் வைணவ சமயம் 'ஏகாந்திகம்' என்ற பெயரைக் குறிக்கிறது. இக்கருத்து. பிற்காலத்தில் வளர்ந்த வளர்ச்சியாகும். இவ்வளர்ச்சியின் தொடக்கக் கால மூல ஆதாரங்களை, ஆய்வாளர்களின் கருத்துக் களைக் கொண்டு நோக்கும் பொழுது,

1) விஷ்ணு என்பவன் மூன்றடிகளை அளந்தவன் வேதத்தில் இடம் பெற்றுள்ள கடவுள்.
2) நாராயணன் என்பவன் பிரபஞ்சகர்த்தர்; தத்துவங்கடந்த கடவுள்.

3) வாசுதேவன் என்பவன் வரலாற்றுத் தெய்வம்.

4) கிருஷ்ணன் என்பவன் முல்லை நிலத்தெய்வம்.

என்று நான்கு விதக் கோணங்களைக் காணமுடிகின்றன. இவற்றைக் கொண்டு, வைணவத்தின் தொடக்கக் கால வளர்ச்சியினைக் காட்டியுள்ளனர். இவைகளைப் பற்றிய ஆய்வு இவ்வாய்வேட்டில் மேற்கொள்ளப்படவில்லை.

ஆனால் இன்றைய வைணவத்தில் இந்நான்கும் ஒன்றாக இணைந்த பிறகு பேதத்திற்கு இடமே இல்லை. கிருஷ்ணனே நாராயணன்! நாரயணனே கிருஷ்ணன்! என்ற முடிவில் வைணவம் அமைந்துள்ளது.

இயல் தொகுப்புரை:

இதிகாச புராணங்களின் செல்வாக்கினால் விஷ்ணு பரம்பொருளாக – மும்மூர்த்திகளுள் ஒருவராகக் கருதப்பட்டார். குறிப்பாக முத்தொழில்களையும் செய்யும் முழுமுதற்கடவுளாக வைணவர்களால் போற்றப்பட்டு வருகிறார். விஷ்ணு, நாராயணன், கிருஷ்ணன், என்ற பெயர்களின் வளர்ச்சி நிலையாலும், இவர்களின் இணைவாலும் வைணவ சமயம் செல்வாக்குப் பெற்றது. இம்மூன்று பெயர்களும் ஒரே பரம்பொருளைக் குறிக்கிறது என்பது உணரப்பட்டது.

மகாபாரத செல்வாக்கினாலும், பகவத்கீதை சிறப்பாலும் கிருஷ்ணன் 'நாராயணன்' எனப்பட்டான். மேலும், ஹரிவம்சம், பாகவதபுராணம், பிரம்மவைவார்த்தக புராணம் ஆகியனவும் கிருஷ்ணன் புகழை உயர்த்தின. வடநாட்டில் 'பரமாத்மா' என்றழைக்கப்பட்டு வரும் அளவிற்கு, கண்ணனின் சிறப்பு, பெருமை ஆகியன வைணவத்தில் வலுப்பெற்று விட்டன.

நாராயண – விஷ்ணுவின் பல்வேறு அவதாரங்களின் மற்றும் அவ்வவதாரங்களின் வழிபாடுகள் இவற்றைச் சுற்றியே வைணவம் வளர்ந்துள்ளது. வைணவர்கள் என்ற பிரிவினர் மகாபாரதத்தின் இறுதிப்பகுதியில் பேசப்படுகின்றனர். விஷ்ணு நாராயணன் கிருஷ்ணன் என்ற மூன்று பெயர்களும் ஒன்றாக இணைந்த பிறகு, வைணவத்திற்குப் பாகவதம், பாஞ்சராத்திரிகம், ஏகாந்திகம், சாத்வதம், வைணவம் என்று பல பெயர்கள் ஏற்பட்டன. இவற்றுள், பாகவதர்கள் என்பது கிருஷ்ணனை வழிபடுவோரைக் குறிப்பிடுகின்றது என்று கூறுவர். அச்சமயத்திற்குப் 'பாகவத

சமயம்' என்ற பெயருமுண்டு. அவர்கள் பாகவத புராணத்தைப் பக்தி உணர்வை விவரிக்கும் மிகச் சிறந்த நூலாகவும், கிருஷ்ணனது வாழ்க்கையையும் அவனது அருட்செயல்களை விவரிக்கும் ஒப்பற்ற நூலாகவும், ஏற்றுக் கொண்டனர். கிருஷ்ணன் வைணவ சமயக் கடவுளாகக் கருதப்பட்ட பிறகு, பாகவத சமயம் வைணவ சமயமாகப் பரிணமிக்கத் தொடங்கியது. இதனால், வைணவத்திற்குப் பழைய பெயர் 'பாகவத சமயம்' என்று கூறுவர் பெரியோர்.

வைணவம், விஷ்ணு என்ற சொற்கள் தமிழிலக்கியத்தைப் பொறுத்தமட்டில் தொல்காப்பியம் மற்றும் சங்க நூல்களில் கூறப்படவில்லை என்பது அறியத்தக்கது. ஆனால், அச்சமயத்துத் தெய்மான விஷ்ணுவானவன் மால், மாயோன் மாயவன் கடல் வண்ணன் போன்ற தமிழ்ப் பெயர்களில் குறிப்பிடப்பட்டான். ஆகவே, தமிழ் மண்ணில் விஷ்ணு என்பவன் திருமால், மாயோன், கிருஷ்ணன், மால் என்றும் அழைக்கப்பட்டுவந்தான். வைணவ சமயத்தின் வித்து சங்கப் பாடல்களில் காணமுடிகிறது வைணவ சமயக் கொள்கையும் அதன் தத்துவ வளர்ச்சியும் பரிபாடல் காலத்தில் உச்ச நிலை எய்தியிருந்தன என்பது நோக்கத்தக்கது.

பல்லவர் காலத்தில், சமய மறுமலர்ச்சியானது பக்தி இயக்க மாகப் பரிணமித்தது. பக்தி உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டிருந்ததால், புராண ஈடுபாடு அதிகமாக இருந்தது. தமிழ் மண்ணில், முல்லை நிலத் தெய்வமாக வணங்கப் பட்டு வந்த மாயோன் - கண்ணன், பின்னர் ஏற்பட்ட கால மாற்றத் தினாலும் புராணங்களின் வளர்ச்சியாலும் பெருந்தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்டான். இதனால் முல்லை நிலத்து மாயோன் வழிபாடு மீண்டும் மீண்டும் பேசப்பட்டது பல்லவர் கால அரசியல் பின்னணியில் ஆழ்வார்களின் தோற்றம் உருவாயின. அவர்களின் பாசுரங்களினால் வைணவ சமயம் புத்துயிர் பெற்றது. பக்தி இலக்கியத்தின் மானுடநிலை வெளிப்பாட்டினைப் பொறுத்தமட்டில், அவதாரக் கோட் பாட்டைத் தனது அடிப்படைகளில் ஒன்றாகக் கொண்ட வைணவ சமயம், மானுட நிலையினை உணர்வுப்பூர்வமாக வெளிப்படுத்தும் இலக்கியங்களைத் தோற்றுவித்துள்ளது என்ற கருத்திற்கு அரணாகத் திவ்வியப் பிரபந்தம் அமைந்துள்ளது.

அதனால், திவ்வியப் பிரபந்தம் பொதுமக்கள் இலக்கியமாகக் கருதப்பட்டு வருகிறது.

ஆழ்வார்கள் அனைவரும் கிருஷ்ணவதாரத்தில் ஆழங்கால் பட்டு அனுபவித்திருப்பது அறியத்தக்கது. ஆழ்வார்களுடைய காலத்திற்கு அண்மையில் கிருஷ்ணாவதாரம் நிகழ்ந்ததால், அவர்களுக்குக் கண்ணன் மீது மிகுந்த ஈடுபாடு ஏற்பட்டிருந்தது.

விஷ்ணுவைவிட 'நாராயணன்' என்ற பெயரில் ஒரு முழுமைத் தன்மையைக் காணமுடிகிறது. இதிகாச புராணங்களில் நாராயணன் என்ற பெயரே அதிகமாகப் பேசப்பட்டு, வந்துள்ளது. விஷ்ணு என்ற பெயர் அருகியே காணப்படுகிறது. நாராயணனைப் பிரபஞ்சகர்த்தாவாக — எல்லாவற்றிற்கும் மேம்பட்ட தெய்வமாக ஏற்றுக் கொண்டுள்ள கருத்தானது. வைணவ ரகசிய நூல்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது ஆகவே, கிருஷ்ணன் நாராயணனாகப் போற்றப்பட்டு வந்திருக்கிறான் ஆழ்வார்களும் கிருஷ்ணனை நாராயணனாகவே கருதி, அவனை அனுபவித்திருப்பது நோக்கத் தக்கது.

## அடிக்குறிப்புக்கள்

1. "நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி தந்நோ விஷ்ணு; ப்ரசோதயாத்" என்ற விஷ்ணு காயத்திரி சுலோகமானது இதன் முடிவு நிலைக்குச் சான்றாகும்.
2. குலசேகரன், வைணவத்தின் ஆழ்வார்கள் காலநிலை. ப. 311
3. P.B Vidyarthi., *Early Indian Religious Thought.*, P. 100
4. சுவீரா. ஜெயஸ்வால், வைணவத்தின் தோற்றமும், வளர்ச்சியும்., ப. 50

   அ. பாகவதர்கள் என்போர் இறைவனைப் பகவான் எனக் கொள்ளும் வழிபாட்டு மரபினர். இவர்கள் பாகவத புராணத்தையும், பகவத் கீதையையும்மகாபாரதத்தின் நாராயணீயப் பிரிவினையும் தங்கள் நம்பிக்கைகளுக்கு அடிப்படையாக ஏற்கின்றனர்.

   ஆ. பாஞ்சராத்திரர்கள், பாஞ்சராத்திர ஆகமங்களைத் தங்கள் அடிப்படையாகக் கொள்கின்றனர்.

இ. சாத்வத மரபு, ஸ்ரீ கிருஷ்ணன் சார்ந்த இனமாகிய சாத்வதத்திலிருந்து அப்பெயரைப் பெறுகின்றனர்.

ஈ. ஏகாந்திக மரபு, ஒரேயொரு முடிவைக் கொண்ட தாகும். நாராயணனையே மனிதர் அடைய வேண்டிய மேலான முடிபாகக் கொள்கின்றனர்.

5. தொல். 402., நச்சினார்க்கினியர் உரை. "சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்".

6. மு. இராகவையங்கார்., ஆழ்வார்கள் காலநிலை., ப. 22

7. வாழ்வியல் களஞ்சியம்., தொ. 10., ப 625

8. N. Subbu Reddiar., *Religion and philosophy of Nalayiram whith Special Reference to Nammalvar* , P. 197.

9. திருக்கோயில் (மாத இதழ்) ... 'திவ்வியப் பிரபந்தங்களின், சிறப்பு'... ப. 309.

10. கா. சிவத்தம்பி., தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும். ப. 137.

11. 'நன்ற முலைத்தலை நஞ்சுண்டு, உரிவெண்ணெய்
தோன்றவுன் டான்வென்றி சூழ்களிற்றை – ஊன்றி
பொருதுடைவு கண்டானும் புள்ளின்வாய் கிண்டானும்,
மருதிடைபோய் மண்ணளந்த மால்' (பொய் மு திரு. 18)

'வலிமிக்க வாளெயிற்று வாளவுணர் மாள
வலிமிக்க வாள்வரைமத்தாக – வலிமிக்க
வாணாகம் சுற்றி மறுகக் கடல்கடைந்தான்,
கோணாகம் கொம்பொசித்த கோ' (பூக.இ.திரு. 68)

'பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்ணூல தாமரைமேல், – பாற்பட்
டிருந்தார் மனமும் இடமாகக், கொண்டான்,
குருந்தொசித்த கோபாலகன்' (பேய்.மு.திரு.32)

12. தே.பத்மாசினி., பெரியவாச்சான் பிள்ளையின் திருவாய் மொழி வியாக்யானம் – ஓர் ஆய்வு., (முனைவர்ப்பட்ட ஆய்வேடு) தொ.1., ப.305.

13. பரி., திருமால்., பா.எ. 3.

14. கா. சிவத்தம்பி., தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும்., ப. 137

15. இந்திரா. பார்த்தசாரதி.. தமிழிலக்கியங்களில் வைணவம், ப. 32

16. இந்திரனால் விடுக்கப்பட்ட பெரு மழையினின்று ஆயர் மக்களைக் காப்பாற்றும் பொருட்டு. கோவர்த்தன மலையைக் குடையாகக் தூக்கிய செயலுக்காக, கண்ணனுக்குக் கோவிந்தன் என்ற பெயர் ஏற்பட்டதாகப் புராணங்கள் கூறுவதும் நினைத்தற்பாலது.

17. ''வான்குறளாகிய வஞ்சன்'' (நம்,திருவா.மொ3.8.3)திருவாய் மொழி., ஈட்டின் தமிழாக்கம்., மூன்றாம்பத்து., ப. 287

18. தே பத்மாசினி.. பெரியவாச்சான் பிள்ளையின் திருவாய் மொழி வியாக்யானம் - ஓர் ஆய்வு., (முனைவர்ப்பட்ட ஆய்வேடு) தொ. 1., ப 314.

19. தெ. ஞானசுந்தரம், வைணவ உரைவளம்., ப. 81

20. சு. வள்ளியம்மாள்., வில்லிபாரதத்தில் கண்ணன்., ப. 142 (மீன் - நீர், ஆமை – நீர். நிலம், பன்றி – நிலம், நரசிங்கம் – விலங்கு மனிதன், வாமனன் – குட்டை மனிதன் பரசுராமன் – வேட்டை சமுதாய மனிதன் – பண்பாடற்ற மனிதன் என்று பரிணாம வளர்ச்சியில் கூறலாம்).

21. சு. வள்ளியம்மாள்., வில்லிபாரதத்தில் கண்ணன், ப 143

22. அ. பூகத ஜலம் என்பது பூமிக்குள் ஆழ்ந்துள்ள நீர்ப்பரப்பு, தாகத்தால் தவிப்பவன், இத்தண்ணீரை விரும்பிப் பெறுவதற்கில்லை பெருமுயற்சி வேண்டும். இந்த ஜலம் போன்றது அந்தர்யாமி நிலை.இதயத்துள் உறைந்துள்ள இறைவனை அஷ்டாங்க யோகத்தாலே காணமுடியும் விரும்பும்போது அனுபவிப்பதற்கில்லை.

ஆ. ஆவரண ஜலம் என்பது அண்ட கோளத்தைச் சுற்றி அடர்ந்துள்ள நீர்ப்பரப்பு, நாம் வாழும் லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டது. சரீர முடிவிற்குப் பின்பு இறைவனது அருளாலேயே இது வாய்க்கும். இங்கிருந்தபடியே அனுபவிப்பதற்கில்லை.

இ. வியூக நிலை திருப்பாற்கடல் போன்றது. திருப்பாற் கடலைப் பற்றிக் கேட்பதொழிய நாம் இந்த நிலையில் அடைவதற்கில்லை.

ஈ. அவதாரங்கள் பெருக்காறு போல, ஆறு பெருகி வரும் பொழுது, அது ஓடும் இடங்களிலுள்ள மாந்தர்க்குத்தான் பயன்படும், அதுபோல, அவதார நிலையில் இறைவன் அவதரித்த இடங்களிலுள்ள மாந்தர் இவனைக் கண்டு வணங்குவர்.

உ. பெருக்காறு வற்றியதும் இதில் தேங்கிய மடுக்கள் பலவற்றுள்ளும் விடாய் தீருமாறு தண்ணீர் பருகக் கூடும் அத்தகைய வாய்ப்புடையது அர்ச்சாவதாரம். இறைவன் உறையும் தலங்கள், திருக்கோயில்கள் பல உள்ளன. (ஸ்ரீவசன. 39, பக். 41-42)

23. தே. வரதராஜன், ஸ்ரீ வைஷ்ணவ சமயசாரம்., ப. 28.

24. இராமநுச தாதாசாரியார்., வரலாற்றில் பிறந்த வைணவம். ப. 279

25. சாளக்ராமம் – அருவுருவமான கூழாங்கல் வடிவில் காணப் படும் ஒரு வகை கல் ஆகும். கறுப்பு, வெள்ளை, நீலம், சிகப்பு முதலிய வண்ணங்களில் காணப்படுகிறது. சாளக் ராமம் என்ற இந்தக் கற்கள் கிடைப்பதற்கு அரிதாகும். நேபாள தேசத்திலுள்ள கண்டகி எனும் நதிப்பகுதியில் கிடைக்கின்றன. அந்தக் கற்களில், புழுக்கள், பூச்சிகள் ஆகியன பல விதமாகக் குடைந்திருப்பதால் சக்கரம் போன்றவாறு உருவங்கள் காணப்படுகின்றன. விஷ்ணுவின் ஆயுதம் போன்ற காணப்படுவதால் சிறப்பானதாகக் கருதி வருகின்றனர். சாளக்ராமம் அருவுருவமாக இருப்பினும், அந்த உருவத்தினைக் கொண்டு விஷ்ணுவின் பல பெயர் களால் அழைப்பர். சாளக்ராமம் பற்றிய செய்திகளை, பிரம்மவைவார்த்தக புராணம், தேவிபாகவதம்) ஆகிய வற்றினை அடிப்படையாகக் கொண்டு அறியத்தக்கது. விஷ்ணு வண்டாக மாறி, அக்கல்லைக் குடைந்து துவாரம் தோன்றும்படி செய்தார் என்பது புராணங்களின் கருத் தாகும். இருப்பின், ஆய்வாளர்களின் கருத்துப்படி, இக்கல் தனிப்பட்ட சக்தி வாய்ந்ததும் இயற்கை இகந்ததுமாகிய சக்தியும் இருப்பதால் சிறப்பிடம் கொடுக்கப்படுகிறது என்பது அறிய வருகின்றது.

26. ம. ராதாகிருஷ்ணன்., பிற்கால வைணவம்., ப. 131

27. தே. பத்தாசினி., பெரியவாச்சான் பிள்ளையின் திருவாய் மொழி வியாக்யானம். ஓர் - ஆய்வு., பக் 274-75.

28. ம. ராதாகிருஷ்ணன்., பிற்கால வைணவம்., ப. 21

29. Swami Tathwananda., *The Vaisnava Sects, The Saiva Sects, Mother Worship.*, P. 8

30. பி.ஆர். நரசிம்மன்., வைணவ மரபும் மெய்ப்பொருளியலும்., ப. 23

31. இந்திரா. பார்த்தசாரதி., தமிழிலக்கியங்களில் வைணவம்., ப. 37

32. K.A. Nilkanta Sastri., *Development of Religion in South India.*, P. 37

33. முமுஷுப்படி., சூத். எண். 5.1 - 5.4., பக். 42-48

34. இராமாநுச தாதாசாரியார்., வரலாற்றில் பிறந்த வைணவம் ப. 316

## இயல் மூன்று

# ஆழ்வார்கள் அனுபவித்த கண்ணன் திருவிளையாடல்கள்

**முன்னுரை**

வைணவ சமயம் கண்ணனுடைய திருவிளையாடல்களினால் மக்கள் நெஞ்சில் பெரிதும் இடம் பெற்றுச் செல்வாக்குப் பெறலாயிற்று. கண்ணனுடைய திருவிளையாடல்கள் (லீலைகள்) கீதையைக் காட்டிலும் ஆழ்வார்களின் பக்தி நெறியில் பெரிதும் இடம்பெற்றுள்ளன. ஆகவே, ஆழ்வார்கள் அனைவரும் கண்ணன் அவதாரத்தில் பெரிதும் ஈடுபாடு உடையவர்களாகத் திகழ்ந்தார்கள்.

> "பரத்துவத்தை மண்பற்றென்று கழிப்பர்; கம்சவதத்திற்கு மேல் நுனிக்கரும்பு என்று கழிப்பர் என்ற உரையால் அறிய முடிகிறது கண்ணன் நந்தகோபனிடம் குழந்தையாய் வளர்ந்த பருவத்தையே ஆழ்வார்கள் சுவைப்பர். எட்டு வயது வரை நந்தன் வீட்டில் வளர்ந்த நிலை ஆழ்வார் களுக்குக் கரும்பு போன்றதாகும். கம்சவதத்திற்குப் பிறகு, கரும்பின் நுனிபோலச் சுவையற்றதாய் கண்டனர்"[1]

என்று விளக்கம் கூறப்படுகிறது. அனைத்து ஆழ்வார்களும் கண்ணனது எல்லாத் திருவிளையாடல்களையும் அனுபவித்தனர் என்று கூற முடியாது. பெரியாழ்வார். திருமங்கை ஆழ்வார் நம்மாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களின் பாசுரங்களில் கண்ணனது திருவிளையாடல்கள் பரக்கக் காணமுடிகின்றன. ஆழ்வார்கள் கண்ட மகாபாரதக் கண்ணன், ஆழ்வார்கள் அனுபவித்தப் புராணக் கண்ணன் என்ற இரண்டு பிரிவுகளில் கண்ணனது லீலைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதிகாசக் கண்ணனை விட புராணக் கண்ணனின் லீலைகளில் ஆழ்வார்கள் பெரிதும் மோகித்துக் கிடந்தனர் என்று கூறுமளவிற்கு அவர்கள்

அனுபவித்திருப்பது நோக்கத்தக்கது. கண்ணனது திருவிளையாடல்களை,

அ) கண்ணன் செய்த குறும்புகள்
ஆ) கண்ணனின் வீரதீரச் செயல்கள்
இ) கண்ணனின் இறைமைத் தன்மை
ஈ) பாசுரங்களில் தமிழ் நாட்டு வழக்குகள்

என்ற நான்கு கோணங்களில் எடுத்துரைக்கும் முகமாக இவ்வியல் அமைந்துள்ளது. கண்ணன் லீலைகளை அனுபவிக்கும் முறைகளில், ஆழ்வார்களுக்குள்ள வேறுபாடு மற்றும் புராணங்களில் கூறப்பட்ட முறை ஆகியவற்றின் அடிப்படையிலும் இவ்வியல் நோக்கப்படுகிறது.

**இதிகாச புராணங்களில் கண்ணன்:**

வேத காலத்தைத் தொடர்ந்து ஏற்பட்டவை இதிகாசங்களும் புராணங்களும் ஆகும். இவைகள் சமயத்தை விளக்குவனவாக அக்காலத்தில் வடமொழியில் காணப்பட்டன. பொதுமக்களுக்கென சமய நூல்களாக விளங்கியவை இதிகாசங்கள் மற்றும் புராணங்கள் ஆகும். 'இதிகாச புராணங்களின் நோக்கம் வரலாறு கூறுவதல்ல; இலட்சியங்களுக்கு உதாரணங்கள் காட்டுவதாகும்[2] இதிகாசங்கள் மனிதர்களைப் பற்றியன. இறுதியில் அவர்கள் தெய்வங்களாகப் போற்றப் பட்டுள்ளனர் என்பது பொதுவான கருத்தாகும்.

புராணங்களில், 'விஷ்ணு' காத்தல் தொழிலை உடையவனாகக் குறிப்பிடப்படுகிறான். மும்மூர்த்திகளுள் விஷ்ணுவே முழுமுதற் தெய்வம் என்பது வைணவர்களுடைய கருத்தாகும். மேலும், விஷ்ணு நாராயணனாகவும் போற்றப்படுகிறான். அவதாரக் கருத்துக்களின் வளர்ச்சியானது புராணங்களின் மூலம் செல்வாக்குப் பெறத் தொடங்கியது. அவ்வகையில், நாராயணனின் பத்து அவதாரங்களுள் 'கிருஷ்ணாவதாரம்' சிறப்பிற்குரிய அவதாரமாகப் போற்றப்பட்டாலும், கண்ணன் நாராயணனாகவே · கருதப்பட்டும் வருகிறான். இது பிற்காலத்தில் ஏற்பட்ட ஸ்ரீ பிரம்மவைவார்த்தக புராணம், ஸ்ரீமத் பாகவதம் முதலிய புராணங்களின் வழி தெளிவாகிறது.

கண்ணனுடைய வரலாற்றைக் கூறும் நூல்களுள் முதன்மை பெற்றது மகாபாரதமாகும். மகாபாரதம் பாண்டவர்கள்

மற்றும் கௌரவர்களைப் பற்றிக் கூறுவது. கிருஷ்ணன் பாண்டவர்களின் நண்பன் - தூதுவன் என்ற முறையில் இடம் பெறுகிறான். மகாபாரதத்தில் இடம் பெறும் கண்ணன் தக்க வயதை எட்டிய இளைஞன். பாரதப் போரில் அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக நின்று, அர்ஜுனனைக் கொண்டு உலகிற்குப் பகவத் கீதை உரைத்தவன். அத்தகைய பண்பு நிறைந்த கண்ணன், மகாபாரதமென்ற இதிகாசத்தில் எந்த முறையில் சில மன்னர்களை அழித்து அறத்தை நிலை நிறுத்தினான் என்பதோடு பாண்டவர்களுக்கு எந்தெந்த முறைகளில் நின்று உதவி புரிந்தான் என்பதனை விளக்குவதாக இவ்விதிகாசம் அமைகிறது. மகாபாரதத்தின் பின்னிணைப்பு ஹரிவம்சமாகும். இதில், கண்ணனுடைய பிறப்பு முதல் அவனுடைய வரலாறு விவரிக்கப்பட்டுள்ளது மகாபாரதம், ஹரிவம்சம், இவ்விரண்டும் சேர்ந்த முழு வடிவத்தின் சுருக்கமே பாகவத புராணம் என்பர்.

இதிகாசத்தோடு தொடர்புடையதாகப் புராணங்கள் விளங்குகின்றன. கௌடில்யர் இதிகாசத்தின் இயல்பு கூறு மிடத்துப் புராணங்களையும் அடக்கினார்[3] என்று கூறப்படுகிறது ஆகவே மகாபாரதத்தில் இடம் பெற்றுள்ள கண்ணனைப் பற்றிய சில செய்திகள் பாகவத புராணத்திலும் இடம்பெற்றிருப்பது மேற்சொன்ன கருத்திற்குச் சான்றாக அமைகிறது வைணவர் களுக்கு விஷ்ணு புராணம் ஆதார புராணமாக மேற்கொள்ளப் படுவதுண்டு. ஆனால், கண்ணனைப் பற்றிய ஆய்வு என்பதால், பாகவத புராணம் அடிப்படை ஆதாரமாகக் கொள்ளப் பட்டுள்ளது. கிருஷ்ணனது பிறப்புத் தொடங்கி, அனைத்துச் செயல்களையும் வரிசைப்படுத்தி விளக்கியிருப்பது மட்டுமன்றி கிருஷ்ணனது வரலாற்றைக் கூறுவதை நோக்கமாக கொண்டுள்ளது ஆகவே, ஆழ்வார்கள் கண்ணனை எவ்வகை களில், எந்தெந்தக் கோணங்களில் அனுபவித்துள்ளனர் என்பதனை அவர்கள் அருளியுள்ள பாசுரங்களை அடிப்படையாகக்கொண்டு, அவைகளை ஹரிவம்சம், பாகவதம் மற்றும் விஷ்ணுபுராணம் ஆகியவற்றோடு ஒப்பிட்டு ஆழ்வார்கள் கண்ட கண்ணன் எவ்வகையில் வேறுபடுகிறான், ஒன்றுபடுகிறான் என்பதனைக் காண இவ்வாய்வு முனைகிறது.

**ஆழ்வார்கள் காட்டும் மகாபாரதக் கண்ணன்:**

பாரதக் காப்பியத்தில் நடுநாயகமாக விளங்குபவன் கண்ணன் "தருமத்தின் வாழ்வதனைச் சூதுகவ்வும்; தருமம் மறுபடி வெல்லும்" என்ற பேருண்மையினை நிலை நிறுத்தியவன் கண்ணன். "மகாபாரதம் என்ற போராட்டத்தில் பெரிய கர்மவீரனாக இருந்தவன் கண்ணன்; மற்ற மனிதர்களெல்லாரும் கூடிச்செய்த செயல்கள் அவருடைய செயலுக்குக் காற்பங்கு ஆகாது. அத்தனை செயல்களுக்கிடையில் ஒரு செயலுக்கும் பந்தப்படுத்தாது இருந்தது அவனது நரலோக லீலையைக் காட்டுகிறது"[4] என்று குறிப்பிடுவது கண்ணனே பாரதத்தின் தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த தலைமைப் பாத்திரம் என்பதைக் காட்டுகிறது. மகாபாரதத்தில், கண்ணன் காண்டவ வனம் எரித்தல், திரௌபதிக்கு உதவுதல், ஆழிகொண்டு சூரியனை மறைத்தல், துரியோதனிடத்துத் தூதுசெல்லுதல், பாரதப்போரில் பாண்டவர்களுக்கு உதவுதல், அர்ஜுனனுக்குத் தேரோட்டியாகச் செயல்படுதல் முதலியவற்றில் கண்ணனது பங்கு குறிப்பிடத்தக்கது. இவைகளை ஆழ்வார்களும் நமது பாசுரங்களில் வெளிப்படுத்தியுள்ளனர்.

**அ. காண்டவ வனம் எரித்தல்:**

காண்டவ வனம் என்பது இந்திரனுக்குரியதாய்ப் பூவுலகில் இருந்த ஒரு காடாகும். ஒரு சமயம் அக்னிதேவன், அந்தண வேடம் பூண்டு, அர்ஜுனனும் கண்ணனும் கூடியிருக்குமிடத்தில் வந்து, தனது பசியைப் பற்றிக்கூற, அவர்களிருவரும் அந்த அந்தணனுக்கு 'வேண்டிய உணவை அளிப்போம்' என உறுதியளித்தனர். பின்பு, அந்தணன், தான் இன்னான் என்ற உண்மையைத் தெரிவித்துக் காண்டவ வனத்தைத் தனக்கு உணவாக அளிக்குமாறு வேண்டினான். இதற்கு, அவர்களும், "பல கொடிய அசுரர்களும் அரக்கர்களும், கொடிய மிருகங்களும் நிரம்பியிருக்கும் இந்தக் காடு அழிவதே நன்று" என்று நினைத்து, அக்னிதேவனிடத்து. இவ்வனத்தை இரையாக்கிக் கொள்வாயாக என்று அனுமதி அளித்தனர். இதனால் அக்காடு முழுவதையும் ஆக்கிரமித்துக்கொண்டு, மிகுந்த மகிழ்ச்சியுடன் உண்டான் என்று மகாபாரதத்தில் ஆதிபருவத்தில் விரித்துரைக்கப் பட்டுள்ளது. இந்தக் காண்டவ வனம் எரித்த செய்தியைத் திருமங்கை ஆழ்வார் மட்டுமே அருளியிருப்பது குறிப்பிடத்

தக்கது. மற்ற ஆழ்வார்கள் பாசுரங்களில், இச்செய்தி பற்றிய குறிப்பில்லை.

"கட்டேறு நீள்சோலைக் காண்டவத்தைத்
தீமூட்டி விட்டானை"
(பெரிய. திரு. மொ. 6.8.7)

என்று கண்ணனைக் குறிப்பிடுகிறார். "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனான கண்ணன், தனது அன்பனான இந்திரன் வருந்தும்படி அவனது காட்டை அழிக்க அனுமதித்து அவதாரப் பயன் நிறைவேறச் செய்தான். மேலும், அக்காட்டிலுள்ள அளவற்ற கொடிய உயிர்க்கூட்டங்களைத தொலைத்தொழிக்கும் முகத்தால் பூமியின் பாரத்தைக் குறைத் தருளினான் என்றும் உணரப்படுகிறது" என்று 'திவ்யார்த்த தீபிகை'யில்[5] விளக்கப்பட்டுள்ளது. மற்றொரு பாசுரத்தில், காண்டவவனம் இந்திரனுடைய காடு என்பதனையும் சுட்டிக் காட்டியுள்ளது ஒப்புநோக்கத்தக்கது.

"காண்டாவனம் என்பதோர்க் காடு அமரர்க்கு
அரையன் அது கண்டு அவன் நிற்கமுனே
மூண்டா ரழல் உண் ணமுனிந் ததுவும்"
(பெரிய. திரு. மொ. 2.4.3)

என்ற பாசுரத்தின் விளக்கவுரையில், எவராலும் அழிக்க முடியாத, அக்காட்டைத் தான் அழித்தாகவேண்டும் என்று எண்ணியிருந்தபொழுது, அக்னி தேவனைக் கொண்டே தன் எண்ணத்தை நிறைவேற்றினான் கண்ணன் என்றும் கருத்துள்ளது. அருச்சுனனும் கிருஷ்ணனும் பூப்பந்து மேலே போட்டு விளையாடிக்கொண்டிருந்த சமயத்தில் இச்செயல் நிகழ்ந்ததாக இப்பாசுரத்தின் விளக்கவுரையில்[6] குறிப்பிடப் படுகிறது. ஆனால், மகாபாரதத்தில், இந்திர பிரத்தம் நகரில் பாண்டவர் இனிது வாழ்ந்து நாட்டை நன்முறையில் ஆட்சி செய்துவந்த சிலகாலத்தில், வெப்பத்தின் காரணமாக, அர்ச்சுனனும் கண்ணனும் புனல் விளையாட, யமுனைக் கரைக்குச் சென்றனர். அந்நதிக்கு அருகில் இருந்தது 'காண்டவம் என்ற காடாகும். அதனை அழிக்க இருவரும் திட்டமிட்டனர்' என்று வரலாறு விவரிக்கப்பட்டிருப்பது இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

ஆ. திரௌபதியும் கண்ணனும்:

பாரதப் பெருமாந்தர்களுள் முதலிடம் பெறுபவள் திரௌபதி ஆவாள். இவள் கண்ணனிடத்து மிகுந்த அன்பும் பக்தியும் கொண்டவள். பாண்டவர்களும் திரௌபதியும் கண்ணிடத்துச் சரண் புகுந்து இருந்ததால், பாண்டவர்களைக் கண்ணன் காப்பாற்றியருளினான். பாஞ்சாலியின் மனக்குழப் பத்தையெல்லாம் கண்ணன் துடைத்தருளி இருந்தான் என்பது பெரியாழ்வாரின் கருத்தாகும்.

"பாண்டவர் தம்முடைய பாஞ்சாலிமறுக்கெல்லாம்
ஆண்டு அங்கு நூற்றுவர் தம் பெண்டிர்மேல் வைத்த
அப்பன்"
(பெரியா. திரு. மொ. 4 3.6)

என்பதில், பாஞ்சாலியின் துன்பத்தையெல்லாம் நூற்றுவருடைய மனைவியர்களின் மேல் சுமத்தினவன் கண்ணன் என்பதனைக் குறிப்பிட்டு அருளியுள்ளார் ஆழ்வார்.

பாஞ்சாலியைத் துரியோதனன் முதலியோர், அரசவையில் அவளது கூந்தலைப் பிடித்து இழுத்துவந்து மானபங்கப் படுத்திய பொழுது, அவள் கண்ணனையே சரண் புகுந்தாள். அவனது அருளால், சேலை வளர்ந்து கொண்டே வந்தது என்பதனை வரலாற்றால் அறியமுடிகிறது. சூதாட்டத்தில் பாண்டவர்கள் தோற்றதால் இக்கொடிய நிலைமைக்கு அவர்கள் ஆளாகினர். அப்பொழுது, பாஞ்சாலி, 'இவர்களை உயிர் மாள்வித்தாலன்றி இவ்விரித்த கூந்தலை, முடிப்பதில்லை' என்று சபதம் செய்து பதினான்கு ஆண்டு காட்டில் வாழ்ந்தபொழுதும், பின்பு நாட்டில் சேர்ந்த காலத்திலும் அப்படியே இருந்தாள். இதனைக் கண்ட கண்ணன், இவளது சபதத்தை நிறைவேற்றவேண்டும் என்று முடிவெடுத்திருந்தான். அச்சபதத்தை நிறைவேற்றிப் பாண்டவர் களுக்கு அரசாட்சியையும் கொடுத்தான் கண்ணன் என்பதனைப் பெரியாழ்வார் மட்டும் சுட்டிக்காட்டுகிறார்.

"மைத்துனன்மார் காதலியை மயிர்
முடிப்பித்தவர்களையே மன்னராக்கி"
(பெரியாதிரு. மொ. 4.9.6.)

என்பதில் பாஞ்சாலி விரித்தகூந்தலை முடியும்படிசெய்தருளினான் கண்ணன் என்று மனமகிழ்கிறார் ஆழ்வார். "கண்ணன் தாது

சென்றதும், தேர் முன் நின்றதும், பிரபத்தியுபதேசஞ் பண்ணினதும் எல்லாம் பாஞ்சாலியின் கூந்தலை முடிப்பதற்காகவே என்பது அறியத்தக்கது" என்பதனை,

"அர்ஜுனனுக்கு தூத்ய ஸாரத்யங்கள் பண்ணிற்றும்
ப்ரபத்யுபதேசம் பண்ணிற்றும் இவனுக்காக"
(ஸ்ரீவசன. 22)

என்ற சூத்திரத்தின் மூலம் விளக்கப்படுகிறது. பாஞ்சாலியின் துன்பத்தினைத் துடைக்கப் பாரதப்போரில் அர்ஜுனனுக்குக் கண்ணன் துணைநின்றான் என்பதனைத் திருமங்கை ஆழ்வார் அருளியுள்ளார்.

"அந்தகன் சிறுவன் அரசர்தம் அரசற்
கிளையவன் அணியிழையைச் சென்று
எந்தமக் குரிமை செய்யெனத் தரியா
தெம்பெரு மான் அருள் என்னச்
சந்தமல் குழலாள் அலக்கணூற் றுவர்தம்
பெண்டிரும் எய்திநூல் இழப்ப
இந்திரன் சிறுவன் தேர்முன்நின் றானை"
(பெரிய. திரு. மொ. 2.3.6)

என்பது மேற்சொன்ன கருத்திற்கு அரணாக அமைந்துள்ளது. இவ்வாறு, கண்ணன் பாஞ்சாலியின் மானத்தினைக் காப்பாற்றியது பாண்டவர்களுக்கு உதவியது ஆகியன சரணாகதி செய்ததன் விளைவே ஆகும்.

இ. கிருஷ்ணன் தூது:

பாண்டவர்களின் பக்கம் இருந்த கண்ணன் துரியோதனிடத்துத் தூது சென்ற செயல், பரம்பொருளின் சௌலப்ய நிலையைக் காட்டுகிறது. காப்பிய உறுப்புக்களில் தூதும் ஒன்றாகும். பரம்பொருள் இராமனும் அவதரித்தபொழுது, அனுமனைத் தூது அனுப்பினார்; கண்ணனாய் அவதரித்த பொழுது, அவனே தூதனாய்ச் சென்றது மகாபாரதத்திற்கே உரிய சிறப்பாகும். இப்பகுதியை ஆழ்வார்களும் சிறப்புற அருளியுள்ளனர்.

"மஹாபாரதத்தால் தூதுபோனவன் ஏற்றம்
சொல்லுகிறது" (ஸ்ரீவசன. 5

என்கிறது ஸ்ரீவசன பூஷணம். "சர்வேசுவரனான கண்ணன் தூது போனான் என்று கூறாமல், தூது போனவன் என்பதனாலே,

இறைவன் தனது அடியார்க்கு அவர்களின் விருப்பத்திற்கேற்பத் தன்னை மாற்றிக்கொள்ளும் தன்மையில் வாத்சல்யம் விளங்குகிறது'' என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது. ஆகவே, இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டதால் மகாபாரதம் சிறப்புப் பெறுகிறன்து.

பாண்டவர்களுக்காகக் கண்ணன் தூது நடந்தான் என்பதலை ஆழ்வார்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றனர்.

"தூது சென்றாய் குரு பாண்டவர்க்காய்''

(பெரிய திரு.மொ.5.3.4)

"தூது வேந்தர்க்காய'' (பெரிய திரு.மொ.5.2.1)

பாண்டவர்களுக்காகத் தூது நடந்த செய்தி, பண்டைய தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனைச் சிலப்பதிகார அடிகள் எடுத்துரைக்கின்றன.

"......நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்ற,
படர்ந்தா ரணம் முழங்கப், பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை'' (ஆய்ச். 14, 37-39)

என்று இளங்கோ அடிகள் குறிப்பிடுகிறார். துரியோதனனிடத்துப் "பாண்டவர்களுக்கு அரசாட்சியில் பங்கு கொடுக்கவேண்டும்; இல்லாவிடில், தலைக்கு இரண்டிரண்டு என்று பத்து ஊர்களை யாவது கொடுக்கவேண்டும்; அதுவுமில்லையென்றால், ஓருரை யாவது கொடுத்தல் நல்லது'' என்று கண்ணன் கூறியதைத் துரியோதனன் செவிமடுக்காது, திறமிருந்தால் பாண்டவர்கள் போரி செய்து அரசாட்சியைப் பெற்றுக்கொள்ளட்டும் என்றான். துரியோதனன் போர்செய்வதை விரும்பினான். இவனது முடிவைக் கேட்ட கண்ணன், தான் பாண்டவர்கள் பக்கம் இருந்து எதிரி களைத் தோற்கடிக்க முடிவுசெய்து, போருக்குத் துணைநின்றான் இதனைப் பெரியாழ்வார் மிகத் தெளிவாக அருளியிருப்பது நோக்கத்தக்கது.

"பொய்ச்சூதில் தோற்ற பொறையுடைமன்னர்க்காய்ப்
பத்தூர் பெறாதன்று பாரத ங்கை செய்த''

(பெரிய.திரு.மொ.2.1.1)

"...துரியோதனன் பக்கல்
சென்றங்குப் பாரதங் கையெறிந்தான்''

(மேற்படி, 2.6.4)

அதனால். அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாக இருந்து வெற்றி பெறச் செய்தான் கண்ணன். கண்ணன் தூது சென்றதைச் "சீரொன்று தூதாய்த் துரியோதனன் பக்கல்" என்று கூறிக் கண்ணன் ஒரு சிறந்த தூதுவன் என்பதனையும் சுட்டிக்காட்டு கிறார் ஆழ்வார். கண்ணன் பாண்டவர்த்தூதனாய்த் தன்னிடத்து எழுந்தருள்வதை அறிந்த துரியோதனன், கண்ணனது வருகையை அவமதித்து, மரியாதை செய்யலாகாது என்று உறுதியாய் இருந்தான். கண்ணன் அரசவையில் நுழைந்ததும் அனைவரும் எழுந்து மரியாதை செலுத்தினர். இதனைக் கண்ட துரியோதனன் தன்னையறியாமலேயே உடனே எழுந்து கொண்டு, பின்பு, தான் எழுந்ததைக் காட்டிக்கொள்ளாதபடி மீண்டும் அமர்ந்து கொண்டான். இதனையறிந்த கண்ணன், துரியோதனன் காட்டிய ஆசனத்தில் அமர்ந்தவுடன், தனது பேருருவைக் காட்டி அவனை உற்று நோக்கியதாக இதிகாசம் கூறுகிறது இதனைப் பெரியாழ்வார் அப்படியே நம் மனக்கண் முன் கொண்டு வருகிறார்.

"கழல்மன்னர் சூழக் கதிர்போல விளங்கி
எழலுற்று மீண்டே யிருந்துன்னை நோக்கும்
கழலைப் பெரிதுடைத் துச்சோதனனை
அழல விழித்தானே" (பெரியா. திரு. மொ. 1.8.5)

கண்ணன் துரியோதனனை அழலாகப் பார்த்தான் என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

துரியோதனன் சபைக்குக் கண்ணன் தூதுவனாய்ச் சென்றதையும், அங்கு நடந்த செயலையும், குறித்துத் திருமங்கை மன்னன் ஆழங்கால் பட்டுப் பாசுரங்களை அருளியுள்ளார். கண்ணனைக் கொல்லத் துரியோதனன் சூழ்ச்சி செய்கிறான். கண்ணன் தூதுவனாய் வரப்போகிறான் என்று அறிந்தவுடன், துரியோதனன், தனது சபை மண்டபத்தில் மிகப்பெரிய நிலவறை ஒன்றைத் தோண்டுவித்து, அதில் பல மல்லர்களை ஆயுதங்களுடன் இருக்கச்செய்து, அப்படுகுழியைப் பிறர் அறியாவண்ணம் மூங்கிற் பிளப்புக்களால் மேலே மூடி, அதன் மேற் சிறந்த இரத்ன ஆசனம் (இருக்கை) ஒன்றை அமைத்து, அதன்மீது கண்ணனை அமரச் செய்தான். அதன்படி, கண்ணனும் அதன் மேல் ஏறி அமரும்பொழுது, மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆசனம் உள்ளிறங்க, உள்ளே இருக்கும்

மல்லர்கள் எதிர்த்து வந்தனர். அவர்களையெல்லாம் கண்ணன், தனது பேருருவத்தை (விஸ்வரூபம்) காட்டிக் கொன்றான் என்று மகாபாரதம் காட்டுகிறது. இதனைத் திருமங்கை மன்னன்,

"அரவு நீள்கொடியோனவையுளாசனத்தை
அஞ்சிடாதேயிட அதற்குப்
பெரியமாமேனியண்ட மூடுருவப் பெருந்திசை
யடங்கிட நிமிர்ந்தோன்" (பெரிய திரு. மொ. 9 1.8)

"தூதிற்சென்று அப்பொய்யறை வாய்ப்
புகப்பெய்த மல்லர் மங்கக் காய்ந்தானை"
(மேற்படி, 2.5.5)

என்ற அடிகள்மூலம் அருளியுள்ளார்.

இதைப் போலத் தூதுசென்ற செய்தியைப் பல பாசுரங் களிலும் அருளியுள்ளார். (பெரிய. திரு. மொ 2.10 8; 3 7 4; 4.6 7; 5.2.1: 5.5 6; 6.2.9; 9.1 8; 9.7.2; 11.1.10; 11.5 7)

முன்பிறவியில் இராமனாக அவதரித்து அனுமனைத் தூது அனுப்பியவன், மறுபிறப்பில் கண்ணனாக அவதரித்துத்தானே பாண்டவர்களுக்காகத் தூது சென்ற பெருமை உடையவன் என்பதனையும் சுட்டியுள்ளார் திருமங்கையாழ்வார்.

"அவனே பின்னோர் தூதுஆகி மன்னர்க்காகிப்
பெருநிலத்தார் இன்னார் தூதனென நின்றான்"
(பெரிய திரு. 2.2.3)

இதில், 'இன்னார் தூதன்' என்பதனைக் காட்டினான் கண்ணன். இவ்வாறு, கிருஷ்ணன் தூதுசென்ற செய்தி மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்ததைப் பண்டைய இலக்கியங்கள் வாயிலாகவும் அறியமுடிகிறது. தூதுவனாகச் சென்ற இந்த எளிமைத் தன்மை சிறப்பாகப் பேசப்பட்டு வருகிறது (சௌலப்பிய நிலை).

ஈ. பாரதப்போரில் கண்ணன் பங்கு:

பாரதப்போரில், கண்ணன் பாண்டவர் பக்கம் நின்றான். துரியோதனன் விருப்பப்படி, தனது படைபலம் முழுவதையும் அவனுக்குக் கொடுத்துவிடுகிறான். பாண்டவர் பக்கம் குறிப்பாக, அர்ஜுனனின் தேரோட்டியாக நின்றுதவினான். இச்செயலால்,

கண்ணனுக்குப் 'பார்த்தசாரதி' என்ற சிறப்புப்பெயரும் ஏற்பட்டது பாரதப்போரில் பங்குகொண்ட செயலை, ஆழ்வார்கள் அனுபவித்து அருளியிருப்பது நோக்கத்தக்கது.

பாஞ்சாலியின் சபதம் நிறைவேறவே, பாரதப்போர் உண்டாயிற்று; அரசர்கள் எல்லோரும் அஞ்சுமாறு, பாஞ்ச சன்னியம் என்ற சங்க நாதத்தை எழுப்பிப் பாரதப் போரைத் தொடங்கியவன் கண்ணன் என்று திருமங்கை ஆழ்வார் குறிப்பிடுகிறார்.[7]

இதுவரை தோற்காத அரசர்கள் அனைவரையும் இப்போரில் தோற்கடிக்கச் செய்து,பஞ்சபாண்டவர்களுக்குத் துணைநின்றான் என்ற செய்தி பாசுரங்களில்[8] பரக்கக் காணப்படுகிறது. ஐவர்க் காகத் தேரை ஓட்டி வெற்றிக்குத் துணைநின்றான் என்பதும் வலியுறுத்திக் காட்டப்படுகிறது.போரைத் தொடங்குவதற்காகச் சங்கை வாய்வைத்து ஊதிய டங்கும் கண்ணனைச் சார்ந்தது என்பதனையும் குறிப்பிட்டு அருளியுள்ளனர்.

பூமியின் பாரம்நீங்கும்படி ஒப்பற்ற மிகப்பெரிய பாரதமாகிய போரைச் செய்து, ஆச்சரியமான காரியங்களைச் செய்து, சேனைகள் பாழ்படும்படியாக, மாயமான செயல்களைச் செய்தவன் என்று நம்மாழ்வார் பெருமையோடு அவனது செயலைக் குறிப்பிடுகிறார் (நம்.தி வா.மொ. 4 6.10) போரில் ஆயுதம் எடுக்கமாட்டேன் என்று கூறியபோதும்,தான் ஒருவனாய் இருந்து வெற்றிக்குத் துணைநின்றான் கண்ணன் என்பதில் அவனது திறம் வெளிப்படும்படியாக உள்ளது. 'ஆயுதம் எடேன்' என்பதில் ஆயுதம் எடுப்பது,பகலை இரவாக்குதல், எதிரிகளுடைய மர்மத்தைக் காட்டிக்கொடுப்பதுமான மாயமான செயல்களால் பாண்டவர்களுக்கு வெற்றிவாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தான் என்பதில் ஆழ்வார் ஆழங்கால்படுகிறார். மேலும், உலகம் அறியும்படி சாரதியாய்நின்றவன் கண்ணன் என்பதும் குறிப்பிடத் தக்கது இது, கண்ணனது சௌலப்பிய நிலையை காட்டுகிறது.

"மன்மிசைப் பெரும் பாரம் நீங்க ஓர் பாரதமா
பெரும் போர் பண்ணி
மாயங்கள் செய்து சேனையை பாழ்பட நூற்றிட்டு"
(நம். தி. வா. மொ. 6.4.10)

என்பது மேற்சொன்ன கருத்திற்கு அரணாக அமையும் பாசுரமாகும்.

கொல்லுவதற்குரிய கருவி இல்லாது, குதிரையை ஓட்டுவதற்குரிய சம்மட்டியைக் கொண்டு கொண்டு, போரில் இருதிறத்திலுள்ள படைகளையெல்லாம் அழித்தான் கண்ணன் என்று, அவனது ஆயுதமில்லாத வெற்றியைச் சுட்டிக்காட்டுகிறார் நம்மாழ்வார். (3.2.3)

பாரதப் போரில், சாரதியாய் நின்ற கண்ணனது உருவத்தைக் காட்டுகிறார் பெரியாழ்வார்.

"வெள்ளை விளிசங்கு வெஞ்சுடர்திருச் சக்கரம்
ஏந்துகையன்
உள்ளவிடம் வினவில் உமக்கிறைவம்மின்
சுவடுரைக்கேன்
வெள்ளைப்புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசை
முன்பு நின்று'
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கை செய்யக்
கண்டாருண்'

(பெரியா திரு. மொ. 4.1.7)

என்று பாடி அகமகிழ்கிறார். கண்ணனது சாரதி உருவத்தை.

"கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்
கயிறும், ஸேநா–தூளி–தூஸரிதமான
திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின
திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை"

(முமுட்சு. 218)

என்று முமுட்சுப்படி விளக்கிக் கூறுவது இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். பரமபத நாதனான கண்ணன் இவ்வாறு, போரில் தேர்த்தட்டில் வீற்றிருக்கும் நிலையினைக் காட்டிப் பெருமித உணர்வுடன் மகிழ்ச்சி கொள்ளும்படி செய்கிறார் ஆழ்வார். ஒரு சாரதிக்கு வேண்டிய அனைத்து இலக்கணமும் பொருந்தியவனாக பார்த்தனுக்குச் சாரதியாய் பார்த்தசாரதியாய் நின்ற திறம், மகாபாரதத்திற்கே உரிய சிறப்பம்சமாகும். திரௌபதியின் சபதத்தை நிறைவேற்றும் பொருட்டு இந்த எளிய வடிவில் கண்ணன் செயல்பட்டான் என்பது நினைவிற்கொள்ளத்தக்கது.

திவ்வியப் பிரபந்தத்தில் பரக்கக் காணப்படும் இந்தக் கருத்துடைய பல பாசுரங்கள்[9] இங்கு ஒப்பு நோக்கத்தக்கன வாகும். பார்த்தசாரதியாக நின்ற காரணத்தை ஆழ்வார்கள் வலியுறுத்தி அருளியுள்ளனர்.

உ. ஆழி கொண்டு இரவி மறைத்தது:

பாரதப் போரின் பதின்மூன்றாம் நாள் போரில் அர்ஜுனன் மகன் அபிமன்யுவைக் கொன்ற ஜயத்ரதனை நாளை சூரியன் மறைவதற்கு முன்பே கொல்லாவிடின், தான் தீயில் விழுந்து உயிர் துறப்பேன் என்று அர்ச்சுனன் சபதமிடுகிறான். ஜயத்ரதனைக் கொல்வது கடினமான செயல் என்பது கண்ணன் அறிந்திருந்தான். அதனால், சூரியனைத் தனது சக்கரத்தினால், மறையும் நேரம் வருவதற்கு முன்பாகவே மறைக்கச் செய்தான். அர்ச்சுனனிடமிருந்துத் தப்பிக்க, மறைந்திருந்த ஜயத்ரதன், இருளைக் கண்டு வெளியே வந்தான். இத்தருணத்தில், தனதுத் திருவாழியால் சூரியனை மறைத்திருந்ததை மீண்டும் எடுத்துவிட, இரவு பகலாக ஒளிர்ந்தது. உடனே அர்ச்சுனன் அவனை அம்பு எய்திக் கொன்றான். ஜயத்ரதன் தலை துண்டிக்கப்பட்டது என்ற வரலாறு மகாபாரதத்தில் துரோணப்பருவத்தில்[10] விளக்கப்பட்டுள்ளது. இச்செய்தியினைத் திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், பொய்கையாழ்வார், திருமழிசை யாழ்வார் ஆகியோர் அருளியுள்ளனர். ஆகாயத்தில் இயங்கும் கதிரவனைத் தனது ஆழியால் மறைத்த செயல் வலியுறுத்திப் பாடப்பட்டுள்ளதே தவிர மற்ற விளக்கங்கள் பாசுரங்களில் கூறப்படவில்லை என்பது நோக்கத்தக்கது.

பல மன்னர்கள், போரில் மடிந்து போகும்படி சூரியனை மறைத்து பூமி முழுவதும் இருள் உண்டாக்குமாறு தனது சக்ராயுதத்தால் மறைத்தவன் கண்ணன் என்று குறிப்பிடுகிறார் பொய்கையாழ்வார் (பொய். 8) இதில், போரில், கண்ணனே எதிரியாக நின்று கொண்டு இச்செயலைச் செய்தான் என்பது கருத்தாகும். இதே கருத்தை, திருமழிசைப் பிரான் காட்டுவதும் ஒப்பு நோக்கத்தக்கது. (நான். தி. 16)

மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள கருத்து பெரியாழ்வார் பாசுரத்தில் தெளிவாக இடம் பெறக் காணலாம்.

"நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற அரசர்கள்
தம்முகப்பே
நாழிகை போகப் படை பொருதவன் தேவகி
தன் சிறுவன்
ஆழிகொண்டன்றிரவி மறைப்பச் சயத்திரதன்
தலையைப்
பாழிலுருப்படை பொருதவன் பக்கமே கண்டாருளர்"
(பெரியா. திரு. மொ. 4.1.8)

என்று, அரசர்கள், பகல் முப்பது நாழிகையைக் கணக்கிட்டுக் காத்திருந்தனர் என்பதனையும் துல்லியமாகக் காட்டுகிறார் ஆழ்வார். தேவகி மைந்தனான கண்ணனே இச் செயலைச் செய்தான் என்பதனையும் வலியுறுத்தி அருளியிருக்கிறார். இதே கருத்துடைய பாசுரம் ஒன்று திருமங்கை மன்னன் (6.5.8) அருளியிருப்பது இதனோடு ஒப்பு நோக்குதற்குரியது. அப்பாசுரத்தில், இச்செயல் அர்ஜுனனுக்காகச் செய்ததாகக் குறிப்பிடப்படுகிறது. மேலும், ஜயத்ரதனை 'சிந்துக்கோன்'[11] சிந்துநாட்டு அரசன்) என்று சுட்டிக் காட்டிப் பாசுரம் அருளியிருப்பது நினைவிற்கொள்ளத்தக்கது. மற்ற பாசுரங்களில் (நம். தி. வா. மொ. 6.2.5; பெரியா. திரு. மொ. 2.4.3; 5.7.8; 6.9.5; 8.9.3) தனது ஆழியால் சூரியனை மறைத்த கண்ணன் என்ற கருத்து மட்டுமே இடம் பெறக் காணலாம்.

கண்ணன் சக்கரப்படையினால் சூரியனை மறைத்து இருள் உண்டாக்கின செய்தியானது சங்கப் பாடலிலே இடம் பெற்றிருந்தது இங்கு நினைத்தற்பாலது. அந்த அளவிற்கு, சங்க கால மக்களிடத்து, பாரதக் கண்ணன் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது போல, ஆழ்வார்களிடத்து இல்லை என்று தான் கூற வேண்டும். ஆழ்வார்கள், கண்ணன் லீலைகளில் ஆழங்கால் பட்டுத் தம்மை மறந்தவராயினர் என்பதற்கு அவர்களது பாசுரங்களே சான்றுகளாகும். இதனால், பாரத காலத்தில் நடைபெற்ற செயல்களை அவர்கள் பாடாமலில்லை. கண்ணனது திருவிளையாடல்களை விட, பாரத நிகழ்ச்சிகள் பற்றிய பாசுரங்கள் குறைந்ததாகக் கிடைக்கின்றன.

**ஆழ்வார்கள் அனுபவித்த புராணக் கண்ணன்:**

கண்ணனை அனுபவித்தல் என்றமுறை பல வகைப் பட்டுள்ளது. ஆழ்வார்கள், அவனுடைய திருநாமங்களைச்

சொல்லி அனுபவித்தல், அவன் எழுந்தருளியுள்ள திவ்விய தேசங்களைப் பாடி அனுபவித்தல், அவனுடைய வடிவழகைக் கண்டு அனுபவித்தல் என்று பல வகைகளில் அனுபவித்துள்ளனர். இவற்றை விடக் கண்ணனுடைய திருவிளையாடல்களைப் பாடி அனுபவித்த முறைகளே சிறப்பிற்குரியனவாக விளங்குகின்றன. ஆழ்வார்கள் கண்ணன் பக்தியில் ஆழ்ந்தவராக இருந்தனர் என்பது இதன் வழித் தெரிய வருகிறது. கண்ணன் லீலைகளில் திளைத்தவர்கள் ஆழ்வார்கள் என்று கூறுமளவிற்கு, கண்ணனது விளையாட்டுக்களில் தம்மை மறந்த நிலையினராயினர். 'திவ்விய சேஷ்டிதங்கள் என்று அவனது திருவிளையாடல்களைக் குறிப்பிடுவர். கண்ணனுடைய திருவிளையாடல்களில் அவனது குறும்புத்தனமான செயல்கள், பிள்ளைமைச் செயல்கள், வீர தீரச் செயல்கள், இறைமைத் தன்மை, மனிதசக்திக்கு மீறிய செயல்கள் ஆகிய அனைத்தும் அடங்கும். இவை அனைததும் ஆழ்வார்கள் ஆழங்கால் பட்டு அனுபவித்துள்ளனர் என்பதற்கு அவர்களது பாசுரங்களே சான்றுகளாகும். "கண்ணனுடைய தீரச் செயல்களை 'அதிமாநுஷ சேஷ்டிதங்கள்' என்று வைணவப் பெருமக்கள் குறிப்பிடுவர். தமிழர்கள் இதைத் 'சிறு சேவகங்கள்' என்று குறிப்பிடுவர்".[12]

கண்ணனுடைய லீலைகளைக் குறித்து ஆழ்வார்கள் அருளியுள்ள பாசுரங்கள் குறிப்பிடத்தக்கனவாகும். அவனுடைய லீலைகள் உலகமே அறியும் என்று கூறுகிறார் பொய்கை யாழ்வார்.

"அறியுமுலகெல்லாம் யானேயு மல்லேன்
பொறிகொள் சிறையுவண மூர்த்தியாய் – வெறிகமழும்
காம்பேய் மென் தோளி கடைவெண்ணெ யுண்டாயை
தாம்பே கொண்டார்த்த தழும்பு" (பொய். மு. தி. 22)

மேலும், பூதனையினுடைய நஞ்சுடைய பாலைக்குடித்தது, வெண்ணெய் களவாடியது, யானையைக் கொன்றது, புள்ளின் வாயைக் கீண்டியது, மருதிடை போய் மருத மரத்தை முறித்தது ஆகிய திருவிளையாடல்களை ஒரே பாசுரத்தில் அருளி மகிழ்ந்துள்ளது நினைக்கத்தக்கது. (பொய். மு. தி. 18)

கண்ணன் செய்த லீலைகள் அனைத்தும் மாயமானது என்று வலியுறுத்துகிறார் திருமழிசை ஆழ்வார். கண்ணனுடைய

உண்மையான உருவம் எவராலும் அறிய முடியாத நிலையில் உள்ளது; சாதாரண இடைப்பிள்ளையாய் வளர்ந்து மாயங்கள் பல செய்தவனாகவும் இருக்கிறான் என்று வியந்து பாடுகிறார் ஆழ்வார்.

"... நின்னை யாவர் வல்ல ரம்பரத் தொடிம்பராய்
மாய! மாய மாயை கொல்அ தன்றி நீவகுத்தலும்
மாய மாய மாக்கினாயுன் மாயமுற்று மாயமே"

(திருச் விரு 41)

இத்தனை மாயங்கள் செய்த கண்ணனுடைய லீலைகளைப் பேசி மகிழ்வதை விட வேறு இன்பமே இல்லை, அவனுடைய லீலைகளைப் பேசுவதற்குக் கிடைத்த வாய்ப்பைக் கண்டு மிகவும் மகிழ்வுடன் பாசுரங்கள் அருளியுள்ளார் நம்மாழ்வார். தம்வாழ்நாளில் கண்ணனுடைய லீலைகளைப் பேசி மகிழ்வதை விட வேறு ஒன்றுமில்லை என்று கூறி அகமகிழ்கிறார். அவனுடைய லீலைகளை நினைப்பதால் துன்பமே இல்லை (6.4 3), கண்ணனின் மாயங்களை நினைக்கும் தனக்கு நிகர் வேறு எவரும் இல்லை (6.4.7), லீலைகளைப் பேசுவதால் தனக்குத் துன்பமோ, கவலையோ இல்லை (6 4 8; 6 4 9) என்று ஒரு பதிகம் முழுதும் (6.4.) கண்ணனது லீலைகளைப் பாடுவதன் பயனைக் குறிப்பிட்டு அருளியிருப்பது சிறப்பிற்குரியனவாகும்.

அப்படிப்பட்ட அவனுடைய லீலைகளைப் பாகவதர்கள் பாடியும் ஆடியும் வருவதுண்டு. இவ்வாறு, கண்ணனுடைய லீலைகளைப் பாடுவதாலும் ஆடுவதாலும் (பஜனை செய்தல்), நரகத்தின் வாசற் கதவுகள் உடைந்து, நரகமே ஒழிந்து விடும் என்று அவனுடைய லீலைகளின் பெருமைகளை எடுத்துரைக்கிறார் திருமழிசையாழ்வார்.

"பரந்துலகம் பாடின ஆடின கேட்டு
படுநரகம் வீடின வாசற்கதவு' (நான். திரு. 80)

என்ற பாசுரத்தில், கண்ணனது லீலைகளைக் கேளுங்கள் என்று மக்களை அறிவுறுத்தும் திறன் வலியுறுத்திக் காட்டப்படுகிறது. இத்தகைய பெருமைகள் கொண்டதாகக் கண்ணனது லீலைகள் மக்களிடையே செல்வாக்குப் பெற்றுவிட்டன. அந்த லீலைகளைப் புராணக் கண் கொண்டு, ஆழ்வார்கள் எவ்வகையில் அனுபவித்துள்ளனர் என்று விவரிக்கும் முகமாக ஆழ்வார்களின் புராணக் கண்ணன் பற்றிய செய்திகள் இருப்பகுதியில்

கொடுக்கப்படுகின்றன கண்ணனுடைய லீலைகள் (திருவிளையாடல்கள்) பல்வகைக் கோணங்களில் பிரித்துவிளக்கப் பட்டுள்ளன.

கண்ணனின் திருவவதாரம்:

கண்ணன் வாசுதேவன் – தேவகிக்கு எட்டாவது மகனாகப் பிறந்தான். அவனது பெற்றோர் கம்சனால் சிறையிடப்பட்டனர் பிறக்கப் போகும் எட்டாவது குழந்தையினால் தனக்கு அழிவு நேரிடப் போகிறது என்பதனை அசரீரி வாக்கினால் அறிந்து, அவர்களைக் காவலில் வைத்தான். கண்ணன் நள்ளிரவுப் பொழுதில் பிறந்தான், பிறந்த பொழுது சில அற்புத நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருந்ததை ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர். கண்ணன் பிறந்தது, ஆயர் குலத்தினில் பிறந்தது, முதலிய செய்திகளை ஆழ்வார்ள்க சுட்டிக்காட்டியுள்ளனர்.

தேவகிக்கு பிறந்த ஆறு குழந்தைகளையும் கல்லில் மோதிக் கொன்றான் என்ற செய்தியைப் பெரியாழ்வார்,

> ''மக்கள றுவரைக் கல்லிடைமோத இழந்தவள் தன் வயிற்றில்
> சிக்கன வந்து பிறந்து நின்றாய்''
>
> (பெரியா. திரு. மொ. 5.3.1)

என்றடிகளில் குறிப்பிட்டுள்ளனர். இவ்வாறு, ஆறு குழந்தைதள் இறந்தவுடன் கண்ணன் தானே வந்து தேவகி வயிற்றில் அவதரித்தருளினான் என்பதனையும் சுட்டிக்காட்டியுள்ளார். அவன் அவதரித்த நேரம் நள்ளிருட்டு; அந்நேரத்தில் தேவகி புத்திரனாகத் தோன்றினான் என்பதனைக் குறிப்பிட்டுக்(பெரியா திரு. மொ. 2.1.4.) க்காட்டியிருப்பது நோக்கத்தக்கது.

நள்ளிருட்டில் அவதரித்தபொழுது,தந்தை வசுதேவன் காலில் பூட்டப்பட்டிருந்த கால்விலங்கு கழன்று விழும்படி அருளினான் கண்ணன் என்று திருமங்கை ஆழ்வார் கூறியுள்ளது புராணத்தை நினைப்பூட்டுவதாக அமைகிறது.

> ''தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ
> நள்ளிருட்கண் வந்த எந்தை''
>
> (பெரிய. திரு. மொ. 7.5.1.)

என்று கண்ணனது அருளைக் குறிப்பிடுகிறார். இதே கருத்துடைய மற்ற பாசுரங்களும் (8.5.1, 11.5.2, 10.5.4) பெரிய திருமொழியில் இடம்பெற்றிருக்கக் காணலாம்.

பிறந்த குழந்தையை (கண்ணனை) வசுதேவன், மதுரைச் சிறையிலிருந்து மீட்டு (கம்சனிடமிருந்து காப்பாற்றுவதற்காக), யமுனை ஆற்றிற்கு அடுத்த கரையிலிருக்கும் கோகுலம் என்ற இடத்தில் வசித்துவரும் ஆயர் குடியின் தலைவனான நந்த கோபன்– யசோதை தம்பதியரிடம் விட்டுவிட்டு வந்து விடுகிறான். இந்த நிகழ்ச்சியை மனத்தில் கொண்டு ஆண்டாள்

"ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர" (திருப். 25)

என்று கண்ணனின் திருவவதார இரகசியத்தைப் பாடியருளியுள்ளார். கண்ணன் கோகுலத்தில் யசோதையிடத்து வளர்ந்துவந்த செயலில் ஆழ்வார்கள் ஆழங்கால் படுகின்றனர். இதனால் யசோதை மகனான கண்ணன் ஆயர் மகனாகவே கண்டு இன்புற்றிருப்பது அறியத்தக்கது.

"ஆய்க் குலமாய் வந்து தோன்றிற்று நம்மிறையே"
(திருவிருத். 61)

"ஆயர்குலத்தினில் வந்து தோன்றிய அஞ்சன வண்ணன்"
(பெரியா திரு. மொ. 1.7.11)

என்பன போன்ற கருத்துடைய பாசுரங்களைப் பரக்கக் காண முடிகின்றன. புராணங்களில் முல்லை நிலத்து ஆயர்களிடையே வளர்ந்ததைக் காட்டவும் தமிழ்நாட்டு ஆயர் மக்கள் கண்ணனைத் தம் குலத்தின் தெய்வமாகக் கருதிவந்ததையும் அடிப்படையாகக் கொண்டே அவ்வாறு பாடப்பட்டிருக்கக்கூடும்.

**கண்ணனின் பிள்ளைமை விளையாட்டுக்கள் (குறும்புகள்):**

கண்ணன் கோகுலத்தில் வளர்ந்து வந்தபொழுது, அவன் செய்த குறும்புகள் எண்ணிலடங்கா. நாள்தோறும், ஆயர்ப் பெண்கள் அசோதையிடம் வந்து முறையிடும் அளவிற்குப் பல குறும்புகள் செய்து வந்தான். அசோதை எவ்வளவு கண்டித்தும் கூட, அந்நேரத்தில் திருந்தியவனாக நடித்து, மீண்டும் அதே விளையாட்டுக்களில் இறங்கி விடுவான். அவன் செய்த பல குறும்புகளை ஆழ்வார்கள் ஆழங்கால் பட்டு அனுபவித்துப் பாடியுள்ளமையைப் பாசுரங்கள் எடுத்துரைக்கின்றன.

**அ. கண்ணனும் குறும்புகளும்.**

கண்ணனது குறும்புகளால் நந்நகோபனும் அசோதையும் பல பழிச்சொற்களைப் பெற்றுக்கொண்டனர். இருப்பினும்,

கண்ணன் மீதிருந்த அன்பு குறையவே இல்லை. கோபித்துக் கொள்வதுபோல நடித்து, கோபம் கொள்வாள் அசோதை, அத்தகையப் பிள்ளைப்பாசம் நிறைந்து வீட்டில் கண்ணன் வளரலானான். இதனை, ஆண்டாள்,

"கொந்தளமாக்கிப் பரக்க ழித்துக்
குறும்புசெய் வானோர் மகனைப்பெற்ற
நந்தகோபாலன்" (நாச். திரு. 12.3)

என்று குறிப்பிடுகிறாள். ஆயர் பெண்கள் சிலர் அசோதையிடம் வந்து முறையிடுவதைப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஆழ்வார். வீட்டில் பால் கறந்து எடுத்து அடுப்பிலே வைத்துவிட்டு வெளியே சென்றிருக்கையில் அந்நேரத்தில் கண்ணன் வந்து, அனைத்தையும் குடித்துவிட்டு, ஒன்றுமறியாதவன் போலிருக்கிறான். (பெரியா. திரு, மொ. 2.9.5) என்று ஒருத்தி முறையிடுகிறாள். இவனைத் தொடர்ந்து மற்றொருத்தி திருவோண நன்னாளுக்குச் செய்து வைத்துள்ள உணவுகள் எல்லாவற்றையும் வாரி விங்கிழுவிட்டு, ஒன்றுமேகிடைக்காது தேடுவான்போல நின்று எங்களை ஏமாற்றியவன் இந்தக் கண்ணன் (2.9.7) என்று முறையிட்டுப் பிள்ளையின் வளர்ப்பில் குறைகூறிவிட்டுச் செல்லும் பெண்கள் நாள்தோறும் வந்த வண்ணம் இருப்பர். அந்த அளவிற்கு அவனது குறும்புகள் அதிகமாயின.

"இல்லம் புகுந்து என்மகளைக் கூவிக்கையில்
வளையைக் கழற்றிக்கொண்டு,
கொல்லையினின்றுங் கொணர்ந்துவிற்ற அங்கொருத்திங்
கவ்வளை கொடுத்து
நல்லன நாவற்பழங்கள் கொண்டு நானல்லேன்
என்று சிரிக்கின்றானே"
(பெரியா. திரு. மொ. 2.9.9)

"ஆற்றிலிருந்து விடுயாடு வோங்களை
சேற்றாலெறிந்து வளைதுகிற்கைக்கொண்டு
காற்றிற் கடியனாய் ஓடியகம்புக்கு
மாற்றமுந் தாரா லின்று வளைத்திறம்
பேசானாலின்று முற்றும்
(பெரியா. திரு. மொ. 2.101)

இத்தகைய தீம்புகள் செய்தாலும், கண்ணன், தான் செய்ததாக ஒன்றையும் வாய்விட்டுக் கூறாது இருப்பான். இதுவே, அப்பெண்

களுக்கு வருத்தத்தைக் கொடுக்கும் செயலாகும். இவ்வாறு, கண்ணனிடத்து அகப்பட்டுக்கொண்ட பெண்கள் யசோதையிடத்து வந்து முறையிடுவதைப்பல பாசுரங்களில் பெரியாழ்வார்[13] அனுபவித்திருப்பது அறியத்தக்கது. ஆகவே, பெரியாழ்வார் மட்டுமே கண்ணனின் குறும்புக் செயல்களில் ஆழங்கால் பட்டுத் தம்மனதைப் பறிகொடுத்து பாசுரங்கள் அருளியிருப்பது இதன்வழிப் புலப்படுகின்றது. காரணம், அவர் அசோதையாகவே மாறி அத்தாய்மை உணர்வின் மேலீட்டால் தான் இவ்வகையில் அனுபவிக்க முடிந்தது என்று கூறலாம்.

ஆயர் பெண்கள் யமுனை ஆற்றங்கரையில் நீராடச்செல்லும் பொழுது, அவர்களது உடைகளை எடுத்துக்கொண்டுபோய் மறைத்துவிடுவான் கண்ணன். ஒருசமயம், இவ்வாறு பெண்கள் நீராடுகையில் அவர்களுக்குத் தெரியாமல் அவர்களது உடைகளையும் நகைகளையும் கொண்டுபோய்க் குருந்த மரத்தின் மேல் ஏறிக்கொண்டான். பிறகு ஆய்ச்சிகள் கரையேறி அவற்றைக் காணாது, இவற்றையெல்லாம் ஆகாயம் கொண்டதோ (அ) கண்ணன் கொண்டானோ? என்று கூறிக்கொண்டே குருந்த மரத்தின் மீதிருந்த கண்ணனைக் கண்டனர். தங்களது உடைகளைத் தாராய் என்று கேட்க, அவன் 'நானிருக்கும் இடத்திற்கு வந்து வாங்கிக்கொள்ளுங்கள் என்று கூறினான். இதனைத் திருமங்கை ஆழ்வார் சிறப்பாக எடுத்துரைத்துள்ளது நினைவிற் கொள்ளத்தக்கது (பெரிய.திரு.மொ. 0 7.11) ஆயர்கள் உடைகளுக்காகக் கெஞ்சி நின்றதும், அதற்குக் கண்ணன் நெடுநேரம் அவர்களைச் சிரமப்படுத்தியதையும் ஆண்டாளின் நாச்சியார் திருமொழியில், "கோழியழைப்பதன் முன்னம்" (3) என்ற திருமொழியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

பாகவத புராணத்தில் ( 0 22) இச்செய்தி விளக்கப்படுகிறது. அதில், பெண்களின் ஆடைகளைக் கொண்டு. கதம்ப மரத்தில் ஏறி ஒளிந்து கொண்டான் என்று குறிப்பிடப்படுகிறது யமுனையில் நீராடவரும் பெண்கள், காத்யாயினி விரதத்தை பின்பற்றி வருபவர்கள். (நல்ல கணவனைப் பெற) "அவ்வாறு விரதத்தை மேற்கொள்ளும் பெண்கள் ஆடையின்றி நீராடுவது தேவதைகளை அவமதிப்பது போன்றதாகும். ஆகவே, ஆடையின்றி நீராடுவது தவறு" என்று அவர்களின் தவறைச் சுட்டிக் காட்டியதாகப் புராணம் விளக்குகிறது. இக்கருத்தை

உணர்த்தவே கண்ணன் அவ்வாறு செய்ததாகக் கூறப்படுகிறது. இச்செயலுக்குக் "கோபீவஸ்திராபஹரணம்" என்று பெயர். புராணத்தில் கதம்ப மரம் என்று குறிப்பிட்டிருப்பது, தமிழிலக்கியங்களில் 'குருந்தமரம்' என்று சுட்டப்பட்டுள்ளது. இதே கருத்துடைய பண்டைய தமிழிலக்கியப் பாடல் ஒன்று அகநானூற்றில் (59) இடம்பெற்றிருப்பது இங்கு நினைக்கத் தக்கது.

கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனைக் கடவுளாகவே அனுபவித்தவர்கள் கோபியர்கள் என்று கூறலாம். கண்ணன் பல குறும்புகள் செய்தாலும், அவனிடத்தே மிகுந்த அன்பு-பக்தி கொண்டு அவனையே சரணடைந்து இருந்தனர் என்பதில் கோபியருக்கும் கண்ணனுக்குமிடையே இருந்த நெருக்கம் தெரிய வருகின்றது.

கண்ணன் கோகுலத்தில் வளர்ந்ததால், நாள்தோறும் ஆயர்கள் தொழிலான பசு மேய்க்கும் செயலைச் செய்து வந்தான். ஒருசமயம், கண்ணன் தன் தோழர்களுடன் பசு மேய்த்துக் கொண்டிருக்கையில், தோழர்களுக்குப் பசி ஏற்பட்டு உண்பதற்குச் சோறு வேண்டுமெனக் கண்ணனிடம் கேட்டனர். அதற்கு, அவன் அருகிலுள்ள முனிவர்களின் (ரிஷிகள்) ஆசிரமத்திற்கு அனுப்பினான். அங்குச் சென்று உணவுகேட்க, அவர்கள் யாகம் செய்து கொண்டிருந்ததால், கொடுக்க மறுத்தனர். பின்பு, கண்ணன் அம்முனிவர்களின் மனைவியர்களிடம் சென்று கேட்கும் படி செய்தான். கண்ணன் பெயரைக் கேட்டதும், அவர்களே கண்ணன் இருக்கும் இடத்திற்கு வந்து உணவு அளித்தனர். இதனை ஆண்டாள் தமது பாசுரமொன்றில் (நாச்.திரு.மொ.12. 6) அருளியுள்ளார். கண்ணன் உணவு வருகிறதா என எதிர் பார்த்து காத்துக்கொண்டிருந்த இடம் "பத்தவிலோசநம்" என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது (பத்தம்-சோறு; கட்டுச்சோறு; விலோசநம்-பார்வை) சோறு வருகிறதா என எதிர்பார்க்குமிடமாகும் என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது. இச்செய்தி, பாகவத புராணத்தில் (10.23) விளக்கப்பட்டுள்ளது. "யக்ஞபத்னீ உபாக்கியானம்" என்ற பெயரில் இச்செய்தி எடுத்துரைக்கப் பட்டுள்ளது. ஆண்டாளைத்[14] தவிர வேறு எந்த ஆழ்வார்களும் இந்தச் செயலைக் குறிப்பிடவில்லை என்பது நோக்கத்தக்கது. தாயுள்ளமென்பது பசித்தவர்களுக்கு இரங்கும் என்ற உண்மை

யானது முனிவர்களின் மனைவியர்கள் செய்த செயல்மூலம் உணர்த்தப்படுகிறது. குறிப்பாக, முனிவர்கள் யாகத்திற்கு உணவு இடவேண்டும் என்பதால், ஆடுமாடு மேய்க்கும் சிறுவர்களுக்கு உணவு கொடுத்தால் தாம் செய்யும் யாகத்திற்கே தீங்கு விளையும் என்று எண்ணிய கர்வத்தைக் கண்ணன் அடக்கினான் என்பது இச்செயல் மூலம் விளக்கப்படுகிறது.

ஆ. வெண்ணெய்க் களவு:

கண்ணன் செய்த குறும்புகளும் மிகவும் குறிப்பிடத்தக்கதும் ஆழ்வார்களால் மிகவும் கவரப்பட்டு அனுபவிக்கப்பட்டதுமான செயல் வெண்ணெய்க் களவு நிகழ்ச்சியாகும். எளிமைக்கு (சௌலப்பியம்) எல்லை நிலமான கிருஷ்ணாவதாரத்தில் கண்ணன் தன் எளிமையைக் காட்டஎத்தனையோ செயல் களைச் செய்திருந்தாலும் அவற்றையும் விட எளிமையான செயல் வெண்ணெய்க் களவுண்ட சரித்திரமாகும். பரம்பொருளான இறைவன் இடையர் குலத்தில் வந்து பிறந்து, வளர்ந்து. வெண்ணெயிலே ஆசைகொண்டு, அதனை நேரடியாகப் பெறாமல், திருடி உண்டு. அகப்பட்டு. அதனால் உரலிலே கட்டுண்டு, அழுது, ஏங்கியதுமான கூத்துக்கள் ஆழ்வார்களைப் பெரிதும் கவர்ந்துள்ளன.

கண்ணன் குறிப்பாக ஆயர் குலத்தினில் வந்து பிறந்ததாகவே கருதி வருகின்றனர். அசோதை—நந்தகோபன், கண்ணனை வளர்த்த பெற்றோர் என்றாலும் கண்ணனைப் பெற்றெடுத்த பெருமையை அடைந்துள்ளனர். அதற்கு அவன் ஆயர்பாடியில் வளர்ந்துவந்ததே காரணம் ஆகும். ஆகவே, ஆயர் குலத்தி னிடையே நந்தகோபன் மகனாகப் பிறப்பதற்குரிய காரணத்தை நம்மாழ்வார் அருளிச் செய்துள்ளார்.

"ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து"
(திருவிருத். 21)

ஆயர்பாடியில் வந்து பிறந்துவிட்டான் என்கிறார். "ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யசூரிகள் பெருமானுக்குத் திருமஞ்சனம் செய்து தூய்மையான தூபத்தைக் கண்டருளியபொழுது, அப்புகையினால் உண்டான மண்டலம் பெருமானை மறைக்க, அப்பொழுது ஆயர்பாடியில் கண்ணனாக அவதரித்து விட்டானாம்"[15] என்று இப்பாசுரத்திற்கு விளக்கம் கொடுக்கப் படுகிறது. இது மாயையின் சக்தியினால் நிகழ்ந்ததைத்

"திருவாய்ப்பாடியில் வசிக்கும் ஆயர்களிடத்தில் நிறைய வெண்ணெய் இருக்கிறது என்று நாரதர் முதலிய தேவர்கள் கூறிக்கொண்டிருக்கிறபொழுது, தூபத்தின் புகையாலே தன்னை மறைத்துக்கொண்டார்"[16] என்று மேலும் விளக்கம் கூறப் படுவதில், வெண்ணெய் உண்பதற்காகவே கண்ணனாக அவதரித்தான் என்று தெரியவருகிறது. பரமபதத்தில் தாம் அவனோடிருந்தது போன்ற உணர்வில், அங்கு நிகழ்ந்ததைக் கண்ணால் கண்டு கூறி அனுபவித்துள்ளார் ஆழ்வார். குறிப்பாக, இடையர் குலத்தில் பிறந்ததாலன்றோ வெண்ணெயைத் திருடி உண்ணமுடிந்தது என்பது வலியுறுத்திக் காட்டப்படுகிறது.

"அறியாதார்க்கு ஆயனாகிப் போய், ஆய்ப்பாடி
உறியார் நறு வெண்ணெயுண்டுகந்தான்"

(பெரிய. திரு. மொ. 11.5.4)

என்று திருமங்கை ஆழ்வார் பாசுரத்திற்கு ஆசாரியர் விளக்கம் தந்துள்ளனர். "சர்வ வல்லமையுடைய பெருமான் அறிவில்லாதவொரு சன்மத்திலே பிறக்க வேணுமென்று நினைத்தால், இடக்கையும் வலக்கையும்கூட அறியமாட்டாதபடி அறிவுக்கேட்டுக்கு எல்லை நிலமான இடையர் குலத்திலேதான் பிறக்கவேண்டுமா?" என்று திவ்யார்த்த தீபிகையில் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. நோக்குதற்குரியது. ஆகவே, அறிவில்லாதவர்க்குள்ளே கடைகெட்ட இடையனாக (அறியாதார்க்கு ஆயனாகி) வெண்ணெயுண்டு பிறவிப்பயன் பெற்றுவிட்டான் கண்ணன் என்று கூறப்படுகிறது. இத்தகைய கீழ்நிலையில் பிறந்து, வெண்ணெய்க் களவு செய்து உண்பதோடன்றி அச்செயலுக்காகக் கண்ணன் பட்ட பாடுகள் எத்தனையுள்ளன. மக்களுக்காகக் கண்ணன் இங்கே அவதரித்துச் செய்த மற்ற செயல்களைவிட இவ்வெண்ணெய்க் களவிற்காக அவன் மேற்கொண்ட இழிவான பாடுகளைப் பற்றி நம்மாழ்வார் பாடித்[17] துன்புற்றிருப்பதும் அறியத்தக்கது.

வெண்ணெய்க் களவிற்காகவே கண்ணன் அவதரித்துப் பலவகைக் கூத்துக்களை நிகழ்த்தியுள்ளான் என்று திருமங்கை ஆழ்வார் சிறிய திருமடலில்[18] இச்செயலைச் சிறப்பித்துக் காட்டியுள்ளார். உலகத்தையெல்லாம் உண்டு மகிழ்ந்தவனான கண்ணனுக்கு அவற்றையெல்லாம் உண்டபோதும் மனநிறைவு அடையாமல் வெண்ணெய் உண்பதற்காக திருவாய்ப்பாடியில்

வந்து அவதரித்தான் என்று திருமங்கை ஆழ்வாரின் பாசுர அடிகள்[19] கூறுகின்றன.

வெண்ணெய்க் களவிற்காகக் கண்ணன், இடைச்சிப்பெண்கள் மற்றும் தாய் யசோதையிடம் அகப்பட்டுக்கொண்ட நிகழ்ச்சிகளை ஆழ்வார்கள் அனுபவித்துப் பாடியிருப்பது தெரியவருகிறது.

கண்ணன் வெண்ணெயை விழுங்கும்பொழுது, அதற்குரிய சொந்தக்காரர் வருவதற்குமுன் உண்ணவேண்டுமென்று அவசரஅவசரமாக உண்பான், அவ்வாறு, வேகமாக உண்பதற்குரிய ஏற்ற பொருள் வெண்ணையே என்பதால் அதன் மீதே ஆசை அதிகமாக இருந்திருக்கிறது. ஆதலால், வலக்கையாலும் இடக்கையாலும் வாங்கி உண்டான் என்று நம்மாழ்வார் சுட்டிக் காட்டியுள்ளார்.

"வைகலும் வெண்ணெய் கைகலந்து உண்டான்"

(நம். தி. வா.மொ.1. 8. 5)

இந்த வெண்ணெய்க் களவு அசோதை வீட்டிலேயே நிகழ்ந்து வரும். அசோதை, கண்ணனுக்குத் தெரியாது, தயிர் கடைந்து, அதிலிருந்து எடுககப்பட்ட வெண்ணெயை வேறொரு கலத்திலிட்டு மறைத்துவைப்பாள். வழக்கமான இடத்தில் வைத்தால் கண்ணனுக்குத் தெரிந்துவிடும் என்பதால் வேறொரு கலத்திலிட்டு மிகவும் பாதுகாப்பாக, எவரும் திருடமுடியாதபடி உறியிலே ஏற்றிவைப்பாள். விரலைக்கூட நுழைக்காதபடி உறியிலே ஏற்றிவைப்பாள் என்று கூறப்படுகிறது. தாய் அசோதை இவ்வாறு செய்துவிட்டு வெளியே செல்லும் வரை கண்ணன் பொய்யுறக்கம் கொள்வான். இதுபோன்று, பலமுறை செய்திருக்கிறான் கண்ணன் என்பதனை.

"நாரான் உறியேற்றி நன்கமைய வைத்ததனை
போரார் வேற்கண் மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம்
ஓராதவன் போல் ஹங்கி அறிவுற்று" (சி தி.ம. 31-32)

என்றடிகளில் கூறப்படுகிறது. இவ்வாறு, "அசோதை வெளியே சென்றதும், உண்மையான தூக்கத்திலிருந்து எழுந்ததுபோல, உடல் நெளித்துக்கொண்டு எழுந்து, வெண்ணெய்த் தாழியருகே செல்வான்; வெண்ணெயை அடிவரை கைவிட்டு உண்டு, அருகேயிருந்த மோர்க்குடத்தைத உருட்டிவிடுவான். பின்பு, யாராவது வந்துவிடுவார்களோ என்ற அச்சத்தில், முன்பு படுத்த

இடத்திலே வந்து படுத்துவிடுவான். 'களவுகண்டான்' என்று சொல்லினும் 'படுக்கையேடேயோ எழுந்திருந்து களவு கண்டது' என்னும்படி கால்போட்ட விடத்தே கால்போட்டு கைபோட்ட விடத்தே கைபோட்டுக் கிடந்தான். அவன் உருட்டின மோர்க் குடத்திலிருந்து மோரீ படுக்கையை நினைத்துக்கொண்டு இருக்கும்பொழுதே, ஒன்றும் அறியாதவனாய்க் கிடந்தான். ஆகவே. வெண்ணெய்ப் பற்றிய எண்ணமே கண்ணனுக்கு இல்லையே! என்று காண்பவர் கூறும்படியாக படுத்திருந்தான்'' என்று திருமங்கை ஆழ்வார் பாசுரங்களைப் பெரியவாச்சான் பிள்ளை[20] ஒவியமாகத் தீட்டியிருப்பது சிறப்பிற்குரியது.

பின்பு, அசோதை வந்து, தான் உறியில் சேமித்துவைத்த வெண்ணெய் காணாதவளாய் இங்கு, இக்களவு செய்யக் கண்ணனைத் தவிர வேறு எவரும் புக்காரில்லை என்று கோபப்படுவாள். அளவுக்கு அதிகமான வெண்ணெய் உண்டால் உடம்பிற்கு ஆகாது என்பதாலும், அன்பின் ஆழத்தாலும் அவள் கோபப்படுவாள். அசோதை வீட்டோடு மட்டுமன்றி மற்ற பெண்கள் வீட்டிலும் இவ்வாறு செய்துவருவான். இவனது, இக்களவுச் செயலின் தொல்லையைத் தாங்கமுடியாத பெண்கள் அசோதையிடம் வந்து முறையிடுவர். இவ்வாறு முறையிட்டதன் காரணமாக ஒருசமயம், கண்ணனை உரலோடு சேர்த்து கயிற்றால் கட்டினாள். அப்பெண்களின் வீட்டிற்குச் செல்லாதபடிக்கும், ஊர்ப்பெண்கள் காணும்படியும் இவ்வாறு செய்தாள். கண்ணன், கயிற்றால் கட்டுண்டதில் ஆழ்வார்கள் ஆழங்கால் பட்டிருப்பது அறியவருகிறது.

பேயாழ்வாரின்,

''வெண்ணெய்விழுங்க வெகுண்டு, ஆய்ச்சிக் கண்ணிக்
கயிற்றினால் கட்டத்தான் கட்டுண் டிருந்தான்
வயிற்றினோ டாற்றாமகன்'' (பேய். மு. தி. 91)

என்ற பாசுரத்திற்குத் திவ்யார்த்த தீபிகையில் கொடுக்கப் பட்டுள்ள விளக்கம் ஈண்டு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ''வயிற்றினோடாற்றாமகன், என்றருளிச் செய்த அழகு விவரித்துக் கூறப்படுகிறது. எத்தனைப் பொருளையிட்டு நிரப்பி னாலும் நிரம்பாதே, இன்னமும் ஏதேனும் கிடைக்குமா என்று எதிர்பார்க்கும் வயிறைப் படைத்தவன் கண்ணன். உலகங்களை யெல்லாம் உண்டும் பேய்ச்சியின் முலை சுவைத்தும் ஆய்ச்சி

உறிகளிலே சேமித்து வைத்த வெண்ணெய் உண்டும் மனநிறைவு கொள்ளாதவன். வெண்ணெய்க் களவு செய்த குற்றத்திற்காகக் கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ட ஒன்றினால் திருப்தி பெற்றான்'' என்று விளக்கம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. மேலும் ''இப்படிப்பட்ட தாம்பினால் கட்டும்பொழுது, அத்தாம்பினால் தன்னைக் கட்டமுடியாதபடி எளிதில் தன்னைத் தப்பிவித்துக் கொள்ள வல்லவனாயினும் தனது சௌசீல்யம், சௌலப்பியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்துவ நிலையைத் தவிர்த்து மனுஷ்ய சாதியில் அவதரித்து, உரலோடு கட்டுண்டிருக்கை முதலிய செயல்களினால்தான், அக்குணங்களை விளக்கிச் செய்ய முடியும் என்பதனால், ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு கயிறு இரண்டு மூன்று சுற்றுக்குப் போகும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக் கொள்கிறான் கண்ணன்[21] என்றும் இத்திருவிளையாடலின் தத்துவம் விளக்கப் பட்டுள்ளது.

> ''கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய
> பெருமாயன்'' (க. நு. சி. 1)

என்று மதுரகவியாழ்வார் அருளிச்செய்ததும், ''கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்'' (பெரிய. திரு. மொழி) என்று திருமங்கை ஆழ்வார் கூறுவதும் இங்கு ஒப்பநோக்கத்தனவாகும். வண்டு, குறுங்கயிறு என்பது நெடுங்கயிற்றைக் குறிப்பதாகும்.

இவ்வாறு, மற்றப் பெண்கள் வீட்டில் வெண்ணெய்க் களவு செய்யும் கண்ணனை [illegible]ச்செயல் செய்து தாயிடமிருந்து தப்பித்துக் கொள்வதும் உண்டு. ஒரு ஆயர்மகள் வீட்டில் சென்று, வெண்ணெய்க் களவு செய்து கொண்டிருக்கையில், அப்பெண்ணிடம் அகப்பட்டு விடுகிறான். இதனால், அவள் அக்கண்ணனை, தன் வீட்டிலேயே வைத்து பூட்டிவிட்டு, அசோதையிடம், அவனது மகனின் களவுச் செயலை நிரூபிக்கும் பொருட்டு வருவாள். அப்பொழுது. அவனது மாயைக் கண்டு ஒன்றும் புரியாது தவிக்கும் அனுபவத்தைப் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும் அனுபவித்திருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

> ''உன்னைக் களவிரலுலோடு கட்டிவைத் துன்டைய
> வன்னனைக் கொருத்தியறிவித்தபோ தலையாழி மங்கை
> தன்னைப்புணர்ந்தருடாரரங்கா வவடன் மருங்கிற்
> பின்னைக் கொரு சென்றபிள்ளை மற்றா ரென்று
> பேசுகவே'' (திருவரங். 50)

என்பதில் ஆய்ச்சி தன்னுடன் அழைத்து வந்த குழந்தை, கண்ணனாகவும் வீட்டில் கட்டிப்போட்ட கண்ணன் ஆய்ச்சியின் மகனாகவும் மாறியதைக் கண்டு, அவள் வியப்படைந்தாள். இத்தகைய மாயங்களெல்லாம் செய்து வந்து ஒவ்வொரு நாள் தப்பித்துக் கொண்டு, சில நாட்கள் தாயிடம் அகப்பட்டு கொண்டதும் உண்டு.

இவ்வாறு, வெண்ணெய்க் களவு செய்து அசோதையிடம் மாட்டிக் கொண்டு விழிக்கும் செயல் ஒரு நாள்மட்டும் நிகழ்வ தில்லை. நாள்தோறும் நடைபெற்று வரும். மற்ற ஆயர்ப் பெண்கள் வீட்டிலும் இவ்வாறு செய்து வந்ததால், அப்பெண்கள் அசோதையிடம் கண்ணனைப் பற்றிப் புகார் செய்த வண்ணம் இருப்பார்கள். ஊரிலுள்ள பெண்கள் தன் மகனை ஏசுகிறார்கள் என்று அசோதை மனம் வருத்தமடையும். ஆனால் கண்ணனோ இவையொன்றையும் பொருட்படுத்தாமல் தன் காரியத்தில் குறியாக இருப்பான் எனத் திருமங்கையாழ்வார்[22] அருளிச் செய்ததும், இதன் பாற்படும். இதனால் தாயின் பொறுமை மீறியதால்தான் கண்ணன் கட்டுண்டு நின்றான் என்பதும் அறியத்தக்கது. அவ்வாறு கட்டுண்டு நின்ற பொழுது, கண்ணன் சும்மா நிற்கவில்லை. திருடனைக் காண வரும் அப்பெண்களைக் குறும்பாக பார்ப்பான்[23] என்கிறார் நம்மாழ்வார். அதனால், அப்பெண்கள் அவனை அடிப்பார்கள். அவர்கள் அடிக்கும் அடியை மகிழ்வுடன் வாங்கிக் கொள்வான் என்பதனை,

''ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும்
மாயப்பிரானை என் மாணிக்க சோதியை''

(நம். தி. வா. பொ. 1.7 3.)

என்று குறிப்பிடப்படுகிறது. ஆயர்ப்பெண்கள் அவனை அடிப்பது தெரிந்திருந்தும் அக்கட்டுண்டதலிருந்து அவிழ்த்துப் போக சக்தியுடையவனாக இருந்திருந்தும் சக்தியில்லாதவன் போல் நின்று கொண்டு அழுத வேளையும்[24] உண்டு. இந்நிலையில், அவனது சௌலப்பிய நிலை வெளிப்படுத்தப்படுகிறது.

இவ்வாறு, அசோதை வெண்ணெய்க் களவிற்காகக் கண்ணனைத் தாம்பினால் இறுக்கக் கட்டியதன் விளைவு, தழும்பை வயிற்றில் உடையவனானான். ஆதலால், கண்ணனுக்கு 'தாமோதரன்' என்ற திருப்பெயர் உண்டாயிற்று (தாமம் –கயிறு; உதரம் – வயிறு)

"தாமோதவழ்வ ரென்றாய்ச்சியர் தாம்பினால்
தாமோதரக்கை யா லார்க்கத் தழும்பிருந்த
தாமோதரா!" (பெரிய. திரு. மொ. 10. 5. 3)

என்று திருமங்கையாழ்வார் கூறுவதும் இச்செயலின் சிறப்பு கருதியே ஆகும்.

சில வேளைகளில், அசோதை கோல் கொண்டு கண்ணனை அடிக்கும் முயற்சியில் இறங்கி விடுவாள். ஆனால் கண்ணனோ, அவள் அடிக்கப் போகிறாள் என்றெண்ணி அஞ்சி விடுகிறான். தாய் உண்மையில் அடித்து விடுகிறாள் போலும் என்றெண்ணி, அழும் பொழுது, "இப்படி நீ தீம்புகள் செய்வதை உன்னுடைய தந்தை அறிந்தால் மிகவும் கோபித்துக் கொள்வார், ஆனால், நானோ கோலைத் கையால் ஓங்கினாலும் அடிக்க மனமில்லாத வளாய் இருக்கின்றேன்"[25] என்று அசோதை கூறி வருத்தமடைவாள். இதே கருத்தினை,

"நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல் கொள்ள
நீயுன் தாமரைக் கண்கள் நீர்மல்க
பையவே நிலையும் வந்து என் நெஞ்சை யுருக்குங்களே"
(நம். தி. வா மொ. 5. 10, 3)

என்று நம்மாழ்வார் கூறுவதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இவ்வாறு அசோதை பார்த்துக் கொண்டு நிற்கையிலே அங்கிருந்து ஓடிவிடலாமா என்று ஒரு கனம் நினைப்பான். ஓடுவதற்குத் தயாராக ஒரு காலையும் தூக்கிவிடுவான் ஆனால் ஓடுவதற்கும் தைரியம் பிறப்பதில்லை. இப்படி, தரையில் காலை ஊன்ற மாட்டாமலும் ஓடமாட்டாமலும் நிற்கின்ற நிலை பையவே நிலை–நடனமாடுவது போல் இருந்தது"[26] என்று கூறப்படுகிறது. கண்ணன் ஆடிய கூத்துக்கள் பல இருப்பினும், இந்த வெண்ணெய்க் களவிற்காக ஆடிய கூத்தினால், 'வெண்ணெய்க் காடும் பிள்ளை' என்று பெயர் ஏற்பட்டது. 'பெரிய திருமலை நம்பியின் திருவாராதனம் செய்த பெருமானின் பெயர் வெண்ணெய்க்காடும் பிள்ளை'[27] என்றே கூறப்படுவதும் இதன் பாற்படும்.

கண்ணன் வெண்ணெயை மட்டும் களவாடி உண்பதோடன்றி, பால், தயிர், நெய் இவற்றின் மீதும் ஆசை கொண்டிருந்தான்

"தோய்த்த தயிரும் நறுநெய்யும் பாலும் ஒரோ
குடந்தூற்றிடு மென்று"
(பெரிய. திரு, மொ. 10, 7. 8)

என்று இடைச்சியர்கள் முறையிடுகின்ற அளவிற்குத் தீம்புகள் செய்து வந்தான்.

இராமவதாரத்தில் ஊன்றியிருப்பவர் என்று புகழ்ப் பெற்றவரான குலசேகராழ்வார் கண்ணனுடைய இந்த சரித்திரத்தை ஒரு பாசுரத்தில்[28] ஆழ்ந்து அனுபவித்திருப்பது வியப்பானதாகும். வெண்ணெய்க் குடத்தின் அடிவரை கைவிட்டு வெண்ணெயை எடுப்பவன் கண்ணன். மேலும் தயிர்க் களவு செய்கிற பொழுது, அசோதை அங்கு வந்துவிட கையிலே தயிரிருந்தால் அகப்பட்டுக் கொள்வோம் என்றெண்ணி அதை முகமெல்லாம் பூசிக் கொண்டு விடுவான் ('வெண்தயி ர்தோய்ந்த செவ்வாயும்' – பெரு.திரு.8.7) இச்செய்கையைப் போல, "தயிருண்ட வாய் துடைத்த மைந்தன்", (பெரிய.திரு.மொ, 8. 3. 5) "வெண்ணெயுண்டான் திருமூக்கு" (நம்.தி.வா. மொ.7.7.2) என்று திருமங்கை ஆழ்வாரும், நம்மாழ்வாரும் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கன இவ்வாறு, ஒரு அறிவிலித்தனமான செயல் கண்ணனிடத்து இருந்தது. களவை மறைக்க, நினைத்து, அது நன்கு வெளிப்படும்படியான காரியத்தைச் செய்பவனாகிறான். பின்பு, தாயிடம் தன் தவற்றை ஒப்புக் கொண்டு தொழுது விடுகிறான். உலகத்தையெல்லாம் வாழ வைக்கும் தெய்வம், தான் செய்த குற்றத்தை அசோதை பொறுப்பதற்காகத் தொழுகின்றது. குழந்தைகள் அழுது ஜெயிக்கும், இது அவர்களுடைய இயல்பான குணமாகும். அதாவது, வாயினால் கேட்டுப் பெற முடியாதவற்றை அழுது அடம்பிடித்தே பெற்றுவிடும். கண்ணனும் முதலில் குழந்தைகள் செய்வது போலச் செய்து, அது கிடைக்காமல் போகவே, தொழுது பொறுப்பித்துக் கொள்ளச் செய்தான். 'இவற்றையெல்லாம் கண்ட யசோதை தொல்லை இன்பம் எனப்படும் பரமபத அனுபவத்திற்கும் எல்லை கண்டாள். அதாவது, அளவில்லாத இன்பத்தைக் தருவது பரமபதம் பெறும் இன்பம் ஒன்றே, அதுவும் கூட அளவுக்குட்பட்ட இன்பமே என்று சொல்லும்படி அளவில்லாத ஆனந்தத்தைப் பெற்றால் அசோதை' என்று தேவகி நிலையில் நின்ற குலசேகர ஆழ்வாரி புலம்பும் அனுபவம் ஆழமானது இதனைத்தான்.

> "இவை கண்ட அசோதை தொல்லையின்பத்து
> இறுதி கண்டாளே" (பெரு.திரு.7.8)

என்று கூறப்படுகிறது.

கண்ணனுடைய இந்த வெண்ணெய், தயிர் களவுச் செயலைக் குறித்து, சிசுபாலன் ஜராஸந்தன் முதலியோர் அவனை ஏசிப் பேசியதையும் ஆழ்வார் குறிப்பிட்டுக் காட்டியிருப்பது நோக்கத்தக்கது.

> "ஆழ்கடல் வையகத்தார் ஏசப்போய் ஆய்ப்பாடித்
> தாழ்குழலார் வைத்த தயிருண்டான் காணேடீ
> தாழ்குழலார் வைத்த தயிருண்ட பொன்வயிறு"
> (பெரிய.திரு.மொ.11.5.3)

கண்ணன் ஒரு இடையனாக இருப்பதால் தன்னுடன் போர் புரிய தகுதியில்லை என ஜராஸந்தன், கண்ணனுடன் போர்புரிய மறுத்து விடுவது மகாபாரதத்தில் இடம் பெற்றிருப்பது ஈண்டு நினைத்தற்பாலது.

எத்தகைய தீம்புகள் செய்து வந்து அகப்பட்டுக் கொண்டாலும், உண்மையை உரைக்காமல் பொய்யே வடிவெடுத்தவனாகிறான் கண்ணன். அசோதையிடம் அப்பெண்கள் முறையிடும் பொழுது, ஒன்றுமே செய்யாதவன் போலப் பொய்யுரைகளை உரைப்பான் என்றும் ஆழ்வார்கள்[29] குறிப்பிடுவதும் இதன் பாற்படுகிறது. ஆயர்பாடியில், பலராமனும் கண்ணனோடு வளர்ந்து வந்தான். ஆனால் அவன் இத்தகைய தீம்புகள் செய்ததாக இல்லை எனச் சுட்டிக் காட்டப்படுகிறது. கண்ணன் தான், இத்தகைய வஞ்சக எண்ணத்தைக் கொண்டு, பொய்யுரைப்பவனாகவே இருந்து வந்தான் என்பதும் இதன் வழிப் புலப்படுத்தப் படுகிறது.

கண்ணன் இத்தகைய தீம்புகள் செய்து வந்ததை மனம் தாங்க முடியாத அசோதையானவள், அவனை, அவனது விருப்பம் போல் விளையாட அனுமதியாமல், நிரை மேய்க்க அனுப்பி விடுவதாகக் கூறி வருந்துமிடம் பெரியாழ்வார் பாசுரத்தில் அமைந்துள்ளது. காணத்தக்கது.

> "மிடறு மெழுமெழுத் தோட வெண்ணெய் விழுங்கிப்போய்
> படிறு பல செய்திப் பாடி யெங்கும் திரியாமே

கடிறு பலதிரி கான திரிடைக் கன்றின் பின்
இடறவென் பிள்ளையைப் போக்கினேன்...''
(பெரியா. திரு.மொ.3.2.6)

என்று அவனது குறும்புச் செயல்களுக்கு ஒரு முடிவினைக் கூறி வருந்துவதாக அமையப்பெற்றுள்ளது.

வெண்ணெய்க் களவு செய்து வந்த வயதில், கண்ணன் 'ததிபாண்டவன்' என்பவனுக்கும் அவனது தயிர்த்தாழிக்கும் வீடுபேறு அளித்த செயல்[30] அவனது இரக்கக் குணத்தை வெளிக்காட்டுவதாக அமைகிறது. புராணங்களில் கூறப்படாத இச்செயல், தமிழ்நாட்டு வழக்குகளில் குறிப்பிடப்படும் கண்ணன் சரிதைகளுள் ஒன்றாக அமைந்துள்ளது. இச்செயலை வைணவ ஆசாரியர்கள் ஆதரித்து உள்ளனர் என்பது அறிய வருகிறது. இந்தத் ததிபாண்டவன் வரலாற்றை, ஆசாரியஹிருதயம் வியாக்யானத்தில் விளக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

''வெண்ணெய் கனவு காணப் புக்கவிடத்தே
தொடுப்புண்டு வந்து தம்மகத்தே புகப்
படலைத் திருகி வைத்து மோஷம்
தாராவிடில் காட்டிக் கொடுப்பேன் என்று
மோக்ஷம் பெற்ற ததிபாண்டர், பெயர்
உருவம் (தயிர்த்தாழி) உள்ளவற்றிற் கெல்லாம்
உயிர் இருப்பு உண்டாகையாலே இதற்கு
மோக்ஷம் கொடுக்க வேண்டும் என்ற
ததிபாண்டவன் நிர்பந்தத்திற்காக மோக்ஷம்
கொடுக்கப் பெற்ற தயிர்த்தாழி'' (ஆசா. ஹிரு. 128)

என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ளார். கண்ணன், தாய் யசோதையிடமிருந்து, களவு செய்த குற்றத்திற்காகத் தப்பித்துக் கொள்ள வீட்டிலிருந்து ஓடி ஒரு குடிலிலே புகுந்தான். அங்கு, தயிர் விற்பனை செய்பவனான ததிபாண்டன் என்பவன், கண்ணனை அவனது தாயிடமிருந்து காப்பாற்றினால் தனக்கும், தனது தயிர் தாழிக்கும் வீடுபேறு அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, கண்ணனை ஒரு தாழிக்குள் வைத்து மறைத்து, அசோதையிடமிருந்து காப்பாற்றினான் என்பது வரலாறாகும். இதனை ஆசாரியர்கள், சிறப்பித்துக் காட்டியிருந்தனர். இந்த வரலாற்றைப் பிள்ளைப் பெருமாள்

ஐயங்காரும் குறிப்பிட்டுக் காட்டியிருத்தல் ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

"சிந்திக்க நெஞ்சில்லை நாவில்லை நாமங்கள்
செப்ப நின்னை
வந்திக்க மெய்யில்லை வந்திரு போது மொய்ம்
மா மலர்ப்பூம்
பந்தித் தடம் புடை சூழ்ரங்கா ததிபாண்டனன்னைச்
சந்தித்த நாண் முத்தி பெற்ற தென்னோ
தயிர்த் தாழியுமே"
(திருவரங். 53)

என்று, முத்தி பெறுவதற்குரிய காரணம் தாழியினிடத்தில் இல்லாதிருந்தும், அது காரியத்தைப் பெற்றதாகக் கூறப்படு கிறது. உலகத்தில் பெயர் சொல்லுதற்குரிய எல்லா பொருள் களுக்கும் உயிருண்டென்பது வேதாந்திகளின் கொள்கை என்று இவ்வடிகளுக்கு விளக்கம் கொடுக்கப்படுகிறது. மேலும், கண்ணனைச் சிந்திப்பதும் நினைப்பதும், நாமசங்கீர்த்தனம் செய்வதுமான செயல்களைச் செய்பவர்களுக்கு மோட்சம் கிட்டுவது என்பது இயல்பு. ஆனால், இத்தகைய கருவிகள் ஒன்றுமில்லாத தயிர்த்தாழி முத்திபெற்றது என்பது அதிசய செயலாகும் என்பதும் குறிப்பிட்டுக்காட்டப்படுகிறது. இச்செயலில்தான் கண்ணனது இரக்க குணம் வெளிக்காட்டப் படுகிறது.

இ. புராணங்களில் வெண்ணெய்க் களவு:

அடியவர்கள் கைப்பட்ட பொருளான வெண்ணெயில் ஆசைகொண்டு, கண்ணனாக அவதரித்து, வெண்ணெயைத் திருடித் தின்று, கையும் களவுமாக அகப்பட்டு, உரலோடு கட்டுண்டு, அடியுண்டு, அழுது, ஏங்கி நின்ற நிலைகளில் ஆழ்வார்கள் மோகித்துக் கிடந்தனர் என்பது தெரியவருகிறது. ஆனால், இத்தகைய செயல்களைக் கண்ணன் செய்ததாக விஷ்ணுபுராணத்தில் இடம்பெறவில்லை என்பது வியத்தகு செய்தியாகும் அதாவது, கண்ணன் வெண்ணெயில் ஆசை கொண்டதாகவோ, களவு செய்ததாகவோ செய்தி இல்லை. "கண்ணன் தவழும் பருவத்தை அடைந்ததும் மிகவும் குறும்புடன், மாட்டுத் தொழுவத்திலுள்ள மாடுகளின் வால்

களைப் பிடிப்பதும், கோமயம் பூசிக்கொள்வதுமான தீம்புகளால், அசோதை பொறுக்கமாட்டாதவளாய் கண்ணனை உரலோடு கட்டினாள் என்ற செய்தியே விஷ்ணுபுராணத்தில் (ஐந்தாவது அம்சம், ஆறாவது அத்யாயம், ப. 306) கிடைக்கப் பெற்றுள்ளது. வெண்ணெய் தின்றதற்காக உரலோடு கட்டினாள் என்ற குறிப்பே காணப்படவில்லை. கண்ணனுடைய சரித்திரத்தையே முக்கியமாகக் கொண்ட பாகவத புராணத்திலும், ஆழ்வார்கள் அனுபவித்தது போல வெண்ணெய்க் களவுச்செயல் கூறப்படவில்லை.

அசோதை, கண்ணனுக்குப் பாலூட்டிக்கொண்டிருந்தாள். அச்செயல், பாதியில் தடைப்பட்டுவிடவே, அக்கோபத்தால், தயிர்த்தாழி உடைத்து வெண்ணெயுண்டான். அதனால் கோபம் கொண்ட அசோதை அவனை உரலோடு கட்டினாள் என்று மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. (பத்தாவது ஸ்கந்தம் 10. 9; 1-18).[30]

ஆயர் பெண்கள், தங்கள் வீடுகளில் வந்து வெண்ணெயைக் களவு செய்ததை அறிந்து, அசோதையிடத்து, கண்ணனைப் பற்றிப் புகார் செய்ததாகப் பாகவதத்தில்குறிப்பிடப்பட்டுள்ளது. (10.9;23-30).

விஷ்ணுபுராணத்திலும், பாகவத புராணத்திலும் கூறப்பட்ட செய்திகளை ஆழ்வார்களும் பாடாமலில்லை.

''கன்றுக ளோடச் செவியில்
கட்டெறும்பு பிடித்திட்டால்
தென்றிக் கெடுமாகில் வெண்ணெய்
திரட்டி விழுங்குமா காண்பன்''

(பெரியா, திரு. 2. 4. 2)

''பொத்தவுரலைக் கவிழ்த்ததன் மேலேறி
தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயிறார விழுங்கிய''

(மேற்படி, 1.10.7)

மேலும், பெரியதிருமொழி (2.10.6) (5.5.3) (5.9.7) (10.5.1) முதலிய பாசுரங்களும் இதனோடு ஒப்பு நோக்கத்தக்கன. இருப்பினும், இந்த வெண்ணெய்க் களவுச் செயல் புராணங்களில்

குறிப்பிட்டிருந்தாலும் ஆழ்வார்கள் அனுபவிப்பதுபோல இல்லை என்றுதான் கூறவேண்டும். இவ்வாறு, ஆழ்வார் அனுபவித்த இந்த வெண்ணெய்க்களவுச்செயல் பற்றிப் பேசுவதற்கு முடிவே இல்லை என்ற அளவிற்கு அந்த சரித்திரத்தில் மூழ்கிவிட்டனர். இந்நிகழ்ச்சியைப் பற்றிய நம்மாழ்வார் பாசுரம், மிகவும் தாழ்ந்தவர்களான இந்நிலவுலகத்தார் இவ்வுலகத்துச் சுகங்களை அனுபவிக்கச் சக்தியற்றவர்கள்; ஆனால். நித்திய சூரிகள் எப்பொழுதும் பெருமானைக்ய கூடியே இருப்பதால் அவனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக்கூட கண்ணனுக்கு வெண்ணெய் உணவாயிற்று என்ற இழிசொல் நெஞ்சினால் நினைப்பதற்கும் அரிதாக இருக்கிறது"[31] என்கிறது அத்தகைய இச்சரித்திரத்தை நெஞ்சால் நினைக்கவும் முடியாது என்கிறார்.

விபவ அவதாரமான கிருஷ்ணாவதாரத்தில் அவன் வெண்ணெய்க்காடும் பிள்ளையாகச் செய்த கூத்துக்களை எவ்வாம் எப்படி அனுபவித்துக் காண்பது என்பதற்கு ஆசாரியர்கள் விளக்கம் தருகின்றனர். "வெண்ணெய்க்காடும் பிள்ளையைக் காணத் திருவரங்கத்தரணையில் பள்ளி கொண்டிருக்கும் பெரிய பெருமாளே கண்ணனாக அவதரித்து இத்தகைய திருவிளையாடல்கள் செய்தவன் என்கிறார்கள் ஆசாரியர்கள் பெரிய பெருமாள் திருப்பவளத்தில் இப்பொழுதும் கூட வெண்ணெய் மணம் வீசுகிறது என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ளார். மேலும், பெருமானது திருவயிற்றில், இப்பொழுதும். வெண்ணெய்க் களவிற்காகக் கட்டுண்டதால் ஏற்பட்ட தழும்பினைக் காணமுடிகிறது என்று ப்ட்டர் அருளிச் செய்கிறார். கண்ணன், உரலோடு நசுரும்பொழுது. உடை சற்றே நழுவ. தழும்பு வெளியே தெரிந்ததால் இடைச்சிகள் சிரித்தார்கள் அதனால் கண்ணன் வெட்கமடைந்தான். அதை நினைக்கும் பொருட்டு. இன்றும், பெருமான் திருமேனியிலுள்ள தழும்பு வெளியே தெரியாமல் இருக்கும் பொருட்டு உத்தரீயத்தைச் சாத்துகிறது என்று நஞ்சீயர் அருளிச்செய்துள்ளார்"[32] ஆகவே, பெரிய பெருமாளான திருவாங்கத்துப் பெருமாள் திருமேனியிலே வெண்ணெய் உண்ட மொசுமொசுப்பு; திருப்பவளத்திலே வெண்ணெய் மணம்; திருவுதரத்திலே கண்டுண்டிருந்த தழும்பு, திருவடிகளிலே நவநீத நாட்டியம், இத்தகைய உருவத்தில்,

வெண்ணெய்க்காடும் பிள்ளையை நேரிலே வழிபட்டு அனுபவிக்கலாம்[33] என்று கூறப்படுகிறது.

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய்க்
வெண்ணெயுண்ட வாயன் என்னுள்ளங் கவர்ந்தான்"
(திருப், அமல. 10)

என்று திருப்பாணாழ்வார் கூறுவது நினைத்தற்பாலது.

கண்ணனின் இந்த வெண்ணெய்க் களவு பற்றி, 'செல்வத்திற்கு அறிகுறியாய் அக்காலத்தில் வெண்ணெய் இருந்தது. செல்வத்தைச் சம்பாதித்தாலும், தனக்கென்று வைத்துக்கொள்ளுதல் தீதாகும். தனக்கென்று ஒருவன் தேடிவைத்தப் பொருளை இயற்கைத்தாய் ஏதேனும் ஒரு வகையில் அபகரித்துக்கொண்டு போய்விடுகிறாள். தேடிய பொருளைப் பறிகொடுப்பதைவிட, மனமுவந்து இதை அவர்களுக்கு அளிப்பது உத்தமம் என்ற தத்துவத்தை கண்ணன் வெண்ணெய் திருடியமை காட்டுகிறது"[34] என்று இச்செயலின் உட்பொருள் குறிப்பிடப்படுகிறது.

ஈ. கண்ணனின் வேணுகானச் சிறப்பு:

கண்ணனுடைய இளமைப் பருவத்தோடு ஒன்றிவிட்டது புல்லாங்குழல் என்று கூறலாம். காட்டிற்குக் கால்நடைகளை மேய்க்கச் செல்லும்பொழுது, புல்லாங்குழல் ஊதுவது ஆயர்களின் வாழ்க்கையில் வழக்கமாக இருந்தது. அவர்கள் தங்கள் கையில் குழல் வைத்துக்கொண்டு அதனை அவ்வப்பொழுது ஊதித் தங்களுடைய இருப்பை அவைகளுக்குத் தெரிவிப்பர். கண்ணன் ஒருசமயம் பிருந்தாவனத்தில் நின்று புல்லாங்குழல் ஊதுகிறான். அந்த ஓசை பூலகமெங்கும் நிறைகிறது. இதனால், தன்னை மறந்த நிலையில் ஆயர் பெண்கள் நின்றுவிடுகின்றனர். ஆழ்வார், இவ்வோசை அனுபவத்தைச் சிறப்புடன் எடுத்தருளியுள்ளார். புல்லாங்குழல் ஓசையினால். பல அற்புதங்கள் நிகழ்கின்றன என்று பெரியாழ்வார் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது. கண்ணன் புல்லாங்குழல் ஊதிய சிறப்பை 'நாவலம், (3. 6) எனத் தொடங்கும் திருமொழியில் அருளியுள்ளார். அவனுடைய குழலிசையில் மங்கையர், கோவவர் மயங்கினர்; (3. 6. 1); தேவலோகத்து அரம்பையர் மயங்கினர் (3. 6. 4); குழலோசையைக் கேட்டுத் தேவலோகத்திலுள்ள தும்புரு மற்றும் நாரதர் தம் வாத்தியங்களை இசைக்க மறந்தனராயினர்

(3. 6. 5); மேலும், பறவைக்கூட்டங்கள் கூடுகளை விட்டொழிந்து கண்ணனருகில் வந்து சூழ்ந்துகொண்டன; பசுக்கள் தங்கள் கால்களைப் பரப்பித் தலையைத் தொங்கவிட்டபடி அசையாது நின்றன; (3. 6. 8) என்று பல அதிசயங்கள் நிகழ்ந்ததைச் சிறப்பித்தருளியுள்ளார்.

கண்ணன் குழலூதும் அழகினைப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஆழ்வார்.

"சிறுவிரல் தடவிப் பரிமாறச் செங்கண்கோடச்
செய்யவாய் சொப்பளிப்ப
குறு வெயர்ப்புருவங் கூடலிப்ப கோவிந்தன்
குழல் கொடுதினபோது"

(பெரியா. திரு. மொ. 3. 6. 8)

என்று குழலூதும் இயல்பினைக் குறிப்பிட்டுள்ளார். குழலூதும் பொழுது, மோவாய்க்கட்டையின் இடப்பக்கம் இடத்தோள் பக்கமாகத் திரும்புதலும், இரண்டு கையும் குழலோடு கூடுதலும், புருவம் நெரித்தலும், வயிற்றிலே காற்றை நிறைத்து நிறுத்தி, அதலனத் திருப்பவளத்தில் விட்டு ஊதவேண்டுமாகையாலே வயிறு குடம்போல எடுப்பாகத் தோற்றுதலும் குழலின் துளைகளில் வாய் குவித்துக் குமிழ்த்துப் போதலும் இயல்பாகும் என்று மற்றொரு பாசுரத்தில் (3. 6. 2) விளக்கியுள்ளது அறியத் தக்கது.

இவ்வாறு குழலூதும் இயல்பினான கண்ணனது குழலிசையில், மான் கூட்டங்கள் வலையிலே அகப்பட்டும், இவ்வனுபவத்தால் மெய்மறந்து அறிவிழந்து போகின்றன; மென்று தின்பதற்காக வாயில் கவ்வியிருந்த புற்களும் வெளியே நழுவிவிடுகின்றன; அதுவுமின்றி, நின்றவிடத்தில் நின்றும் ஒரு நிமிடம்கூட அசையாது நின்றனவாம் (3. 6. 9) என்ற காட்சியை ஆழ்வார் படம்பிடித்துக் காட்டுகிறார். இக்காட்சி மூலம், உயிர்க்குலம் எதுவானாலும், அந்தக் குழலோசையின் இனிமையானது பகுத்தறிவில்லாதப் பிராணிகளையும் கவர்ந்துவிடுகின்றது என்பது உணர்த்தப்படுகிறது.

இவ்வாறு, கண்ணன் இடைப்பெண்களுடன் தோழனாக இருப்பது; ஆயர் மக்களுடன் நெருங்கி உறவாடுவது; ஆகிய முறைகளில் பிருந்தாவனத்தில் வாழ்ந்துவந்தாலும், தமது குழலோசை

யின் மூலமாக வேற்றுமையில் ஒற்றுமையை உணர்த்தி வந்தான் என்பது இசையினால் நிகழ்ந்த பல அற்புதங்களின் வழி எடுத்துரைக்கலாம். கண்ணனுக்கு 'வேணுகோபாலன்' என்ற பெயர் குழலூதியதன் சிறப்பால் ஏற்பட்டது என்பது நினைக்கத் தக்கது.

**கண்ணனின் வீரதீரச் செயல்கள்:**

**அ. பூதனை வதம்:**

பூதனை என்ற அரக்கி கம்சனது அரண்மனையில் இருந்தாள். சிசுவதையில் அவள் கை தேர்ந்தவளாக விளங்கியவள். இதனால் கம்சன் அவளைக் கோகுலத்திற்கு அனுப்பி, அசோதை வீட்டில் பிறந்த கண்ணனைக் கொன்றுவிட்டு வரும்படி கட்டளை யிட்டான். அவள் அழகிய பெண்வடிவமேற்று, அங்குச் சென்றாள். பிறந்த குழந்தையைப் பார்க்கப் பலர் வந்து போவதால் இவளும் அவ்வாறே சென்றாள். குழந்தையை எடுத்துக் கொஞ்சுவதற்கு முற்பட்டாள். பெரிய இடத்து அழகிய பெண்ணாக இருப்பதால், அதற்கு மறுப்பு தெரிவிக்க வில்லை. தூங்கிக்கொண்டிருந்த குழந்தைக்கு, விஷம் தடவிய தனது முலைப்பாலை ஊட்டினாள். அவளது நோக்கமே அம்முலைப்பால் கொடுப்பதில் இருந்தது. கண்ணன் அவளது முலைப்பாலைக் குடிப்பதுபோன்று செய்து, அவளது உயிரையே உறிஞ்சியதால், அவள் கதறிக் கீழே விழுந்து உருமாறினாள். பேய்க்கோலம் போன்று அவளது பிணம் தென்பட்டது. இவ்வாறு, பூதனை வதத்தைப் புராணங்கள் எடுத்துரைக்கின்றன. இச்செய்திகளை,

> "பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி பெருமுலையூடு
> உயிரைவற்ற வாங்கியுண்ட வாயான்"
>
> (பெரிய. திரு. மொ. 1.3 1)

என்கிறார் திருமங்கையாழ்வார். பூதனையைப் 'பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி' என்று அருளியுள்ளார். தாய் அசோதையைப் போலவே பரிவுடன் குழந்தையைத் தூக்கினாள்.

> "முலை வழியாகப் பாலை உண்ணக்கூடும்; உயிரை
> எங்ஙனம் உண்ணுதல் முடியும்?" எனின்
> பால் நேரானவாறே உயிரும் நேர் ஆயிற்று
> அஃதாவது, பூதனை தந்த நச்சுப்பால்

இவன் குடிப்பதற்குத் தக்கதானாற்போலே அவளது
உயிரும் குடிப்பதற்குத் தக்கது ஆயிற்று
இவ்வாறு, தாய் வடிவுகொண்டு வந்த பூதனையின்
பெரிய முலைவழியே உயிரும் பாலோடு ஒருசேர
வற்றுமாறு உண்டான்''[35]

என்று விளக்கம் கூறப்படுகிறது. பூதனையின் உயிருண்ட வரலாற்றையும் திருமங்கையாழ்வார் தெளிவாக அருளிச் செய்துள்ளார். அவளது உருவத்தைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளது நோக்கத்தக்கது.

''பண்ணேர் மொழியாய்ச் சியரஞ்ச வஞ்சப்
பகுவாய்க்கழுதுக் கிரங்காது, அவன்தன்
உண்ணா முலைமற் றவளாவி யோடும்
உடனே சுவைத்தான்'' (பெரிய. திரு. மொ. 3.8 6)

என்று, அவனது வடிவைக் கண்டு ஆய்ச்சியர் அஞ்சினர். குறிப்பாக, அசோதை கூறுவதாகக் காட்டுகிறார் ஆழ்வார். வஞ்சனையையும், பெரிய வாயையும் உடையவளான பேய்[36] என்று பொருள் கூறப்படுகிறது (வஞ்சப்பகுவாய் கழுது) இவ்வடிவம் பற்றி,

'பெண்மை மிகுவடிபு கொடு வந்தவளை
பெரிய பேயினது வடிவுகொடு மான உயிருண்டு'
(பெரிய. திரு. மொ. 3.9.6)

என்று மற்றொரு இடத்திலும் சுட்டிக்காட்டப்படுகிறது. இவ்வாறு, கண்ணன் பூதனையின் முலைப்பாலைச் சுவைத்து அவளுயிரைக் குடித்ததால், அவள் இறந்த நிகழ்ச்சியைக் கண்டு பயம்கொண்ட வியப்புடன் அசோதை, தன் குழந்தை அருந்தெய்வம் என்று உணர்ந்துகொள்கிறாள்.[37] இவ்வாறு, பூதனையின் உயிரைக் குடித்ததால், அவனைக் கடிந்து கொள்ளவும் அஞ்சவேண்டியுள்ளது[38] என்று பயத்துடன் அசோதை கூறுகிறாள்.

பால் கொடுக்கவந்த ஒருத்தி, பால் கொடுத்து இறந்ததைக் கண்டு 'இதென்ன உத்பாதம்' என்று கூறி வெகுண்டு ஓடவில்லை' அதற்குப் பதில் தான் முன்பு பால் கொடுத்த அசோதையின் தியாகத்தைப் பூதத்தாழ்வார் எடுத்துரைக்கிறார். ஏனெனில், முன்பு செய்த செயல்களைவிட, இப்பூதனையைக் கொன்ற

செயலே மிகவும் போற்றற்குரிய பெரிய செயல் எனக் கூறிப் பூரிப்புக் கொள்வதாகக் காட்டப்படுகிறது.

"அன்றது கண்டஞ்சாத வாய்ச்சி யுனக்கிரங்கி
நின்று முலைதந்த விந்நீர்மைக்கு – அன்று
வரண் முறையால் நீயளந்த மாகடல்சூழ் ஞாலம்
பெருமுறையா லெய்துமோ பேர்த்து" (பூத. இ. தி. 9)

பேய்ச்சிப் பாலுண்ட கண்ணனுக்கு அசோதை பால்கொடுக்க அஞ்சவில்லை என்பதனைக் குறிப்பிடுகிறார். இதற்குரிய காரணம் ஆழ்வார் பாசுரத்திற்கு விளக்கமாய்க் கூறப்படுகிறது. 'அசோதைப் பிராட்டியின் அஞ்சாமைக்குக் காரணம் பிரானுடைய வடிவழகிலே ஈடுபட்டதனால் உடனே அணுகி வாரி எடுத்தணைக்க விருப்ப முண்டாயிற்றே அன்றி அஞ்சி அப்பால்செல்ல மனமுண்டாகவில்லை" என்று திவ்யார்த்த தீபிகையில் விளக்கம்[39] கூறப்படுகிறது. ஆகவே, முன்பு உலகளந்த காரியத்தைவிட, இச்செயலே மிகப்பெரியது என்று கூறும்படி உள்ளது என்கிறார். ஆகவே, அசோதைக்குக் கண்ண னிடத்துள்ள அன்பு இச்செயலால் மேலும் அதிகமாகியது என்றும் கூறப்படுகிறது. பெரியாழ்வாரும் இந்நிலையினை எடுத்துரைத்தல் இதனோடு ஒப்புநோக்கத் தக்கது.[40]

கண்ணன், பூதனையின் விஷம் தடவிய முலையில் பால் குடித்தவுடன், அவள் பேயலறலுடன் பெருங்கூச்சலுடன் கூவிக் கொண்டு கீழே விழுந்தாள் என்பதும் சுட்டிக்காட்டப்படுகின்றது. "பேயலறப்பின்னும் முலையுண்டபிள்ளை" (பெ. தி. ம. 123) அத்தகைய கொடிய அரக்கியைக் கொன்றவன், ஒன்றுமே அறியாதவன்போல் உறங்குகிறான் என்று இச்செயலைப் பற்றிப் பெருமையாகக் கூறிய, அசோதை நிலையில் நின்ற பெரியாழ்வார் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

"பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத்து
உறங்குவான் போலேகிடந்தபிள்ளை"
(பெரியா. திரு. மொ. 1.2.5)

என்று கூறுவதோடன்றி, "உன் செய்கையானது அதிமானிட சக்தியாக உள்ளது; சிறுவன்போல இருக்கும் உன் உண்மையான உருவத்தைப் பற்றி (ஸ்வரூபம்) ஒன்றுமறியாமல் இருக்கிறேன்"[41] என்று பேசுவதும் இச்செயலின் சிறப்புப்பற்றியே ஆகும்.

பூதனையிடம் பால் குடித்த செயலைக் குலசேகர ஆழ்வார் தேவகி நிலையில் நின்று புலம்புமிடம் மிகவும் சிறப்பிற்குரியதாக அமைகிறது. தேவகியானவள், கண்ணனுக்கு நல்ல தாய் கிடைத்துள்ளாள் என்று அசோதையின் பெருந்தன்மையை நினைந்து மகிழ்கிறாள். அத்தகைய அவளிடம் பால் அருந்தாமல் பூதனையிடம் முலைப்பால் அருந்தினானே! இது தகுதியோ? என்று வருந்திப் பாடுவதாகப் பாசுரம் அமையப்பெற்றுள்ளது.

"வஞ்சமேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி வரண்டு நார்நரம்
பெழக் கரிந்துக்க
நஞ்ச மார்தரு சுழிமுலை, அந்தோ! சுவைத்து நீயருள்
செய்து வளர்ந்தாய்
... ... ...
கடைப்பட் டேன் வறிதேமுலை சுமந்து
தஞ்ச மேலொன்றி லேன்; உய்ந்திருந்தேன் தக்க
தேநல்ல தாயைப்பெற் றாயே" (பெ. திரு. 7.10)

என்று கூறிப் புலம்புகிறார் ஆழ்வார். இதில், பூதனையின் உடம்பு வறண்டுபோகவும், நார் போன்ற நரம்புகள் கருகி உதிரும்படியாகவும், அவள் கீழே விழுந்தாள் என்று சுட்டிக் காட்டுகிறார்.

பூதனையைப் பற்றிப் பல அடைமொழிகள் கொடுத்து ஆழ்வார்கள் இவ்வதத்தை அருளியுள்ளதைக் காணமுடிகிறது; குறிப்பாகப் 'பேய்மகள்' என்றே சுட்டிக் காட்டுகின்றனர். 'தன் வஞ்சகமான கொடுமையினை வெளிக்காட்டாது மனத்தில் கொண்டு அன்புமிக்க தாய் வடிவத்தோடு வந்தவள்' என்று திருமங்கை மன்னன் குறிப்பிடுகிறார்.[42] இதே கருத்துடைய அடைமொழிகள், பெரிய திரு.மொ. (2.3.3); (1.3.1), 'பேய்த் தாய்' (பொய்.மு தி 34); 'கள்ளதாய பேய்மகள்' (தி.ச.வி.36). 'வஞ்சனத்து வந்த பேய்ச்சி' (தி.ச.வி.43); 'தாயாய் வந்த பேய்' (நம்.தி வா.மொ. 1.5.6); என்று பல பாசுரங்களில் கிடைக்கப் பெறுகின்றன. மேலும், 'வஞ்சப்பேய்' (பெரியா.திரு மொ.1.5.4); 'வஞ்சகப்பேய்' (பெரியா. திரு. மொ. 2.4.4); 'மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள்' (பெரியா. திரு.மொ. 3.1.1); 'பெருமா வஞ்சப்பேய்' (நம் தி.வா.மொ. 1.5.9); 'வன்பேய்' (பெரியா. திரு.மொ. 3.5.9); 'மாயப்பேய்' (நம்.தி வா.மொ.); 'மாய வலவைப் பெண்' (பெரிய திரு.மொ. 10.5.8) என்றும் பல பாசுரங்களில் கூறப்பட்டுள்ளன.

பூதனை, கம்சனால் ஏவப்பட்ட அரக்கி என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளது. இக்கருத்துடைய பாசுரங்கள், ஆழ்வார்கள் பாசுரங்களில் இடம்பெற்றிருக்கக் காணமுடிகிறது.

''கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல்
கருநிறச் செம்மாப் பயிர்ப் பேய்''
(பெரியா. திரு. மொ. 2.8.6)

''கஞ்சனது வஞ்சனையில் திரியும் பூதனை
தனருயிரும் செகுத்தான்'' (பெரிய.திரு மொ. 3.10.7)

என்று பெரியாழ்வார் மற்றும் திருமங்கை ஆழ்வார் குறிப்பிட்டிருப்பது அறியவருகின்றன. அவள் மாயமாய் வந்தவள் என்ற இக்கருத்தை நம்மாழ்வார் குறிப்பிட்டிருப்பதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

"எற்றையோ? மாயமா மாயவளை மாயமுலை
வாய்வைத்த நீயம்மா...'' (பெரிய. திருவந்.5)

பூதனை வதத்தை ஒரே பாசுரத்தில் தெளிவாகத் திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

''யாயும் பிறரு மறியாத யாமத்து
மாய வலவைப் பெண் வந்துமுலைதர
பேயென்றவளைப் பிடித்துயிருண்ட
வாயவனே! (பெரிய.திரு.மொ.10.5.8)

பூதனையாமத்தில், தாய் வடிவுகொண்டு வந்தவள் என்பதனைச் சிறப்பாகச் சுட்டிக் காட்டியுள்ளார். 'இவள் தாய்தான்' என்று மயங்காமல், 'இவள் 'பேய்தான்' என்பதனை நிச்சயித்து அவளுயிரைக் கவர்ந்தான் கண்ணன் என்பதனைச் சிறப்பித்துக் காட்டியுள்ளார் ஆழ்வார். இக்கருத்துக்கள் அனைத்தும் புராணங்களிலும் இடம்பெற்றிருக்கின்றன.

திருமங்கை மன்னன். மற்றொரு பாசுரத்தில், 'பூதனை' என்பவள், பகாசுரனைப்போலப் பறவையின உருவம் கொண்டு வந்தாள் என்று காட்டுகிறார். ''புள்ளுருவாகி நள்ளிருள் வந்த பூதனை மாள'' (பெரிய திரு மொ. 10.9.1) என்பதில், மேலே பறக்கக் கூடியதும், குழந்தைகளைத் தீண்டக்கூடியதுமான பறவைகள் சில உண்டு. அப்படிப்பட்டவளாய்ப் பறவை உருவம் கொண்டு வந்தாள் என்று குறிப்பிடுதல் நோக்கத்தக்கது இக்கருத்து பாகவத புராணம் மற்றும் விஷ்ணுபுராணத்தில் குறிப்பிடப்

படவில்லை. ஹரிவம்சத்தில் எடுத்துரைக்கப்படுகிறது. அதில், "கம்சனுடைய வளர்ப்புத் தாயாகப் பூதனை குறிப்பிடப் படுகிறாள். பக்ஷி (பறவை) உருக்கொண்டு, கோர உருவத்துடன், பிராணிகளுக்குப் பயத்தைச் செய்பவயாய்க் கோபத்தால் இறக்கைகளை வேகமாக அடித்துக்கொண்டு, நள்ளிரவில் கோகுலம் வந்ததாகக்"[43] கூறப்படுகிறது. இதனைத் திருமங்கை ஆழ்வார் "காய் சினத்த கழுதும்" (பெரிய.திரு.மொ. 8.6.8) என்று சுட்டிக்காட்டுகிறார். இவ்வாறு, பூதனை தாய் வடிவம் கொண்டு. கண்ணனைக் கொல்ல வருவதற்குரிய காரணத்தை ,ஸ்ரீ பிரம்ம வைவார்த்தகபுராணம்'[44] எடுத்துரைக்கின்றது. பூதனையின் முற்பிறப்புக் கதையுடன் தொடர்புபடுத்தி விளக்குகிறது.

இந்தப் பூதனை வதம் பற்றிக் கூறும் புராணக் கதைக்கு வேறொரு பொருள் கூறுவாருமுண்டு. "பூதனை என்பது ஒரு நோய். குழந்தைக்கு வரும் நோயின் பெயர் பூதனை என்பதாகும் இந்நோய் கண்ட குழந்தை, தாய்ப்பாலைப் பலமாக உறிஞ்சிக் குடித்தால் இந்நோய் நீங்கும். கண்ணனுக்கு இந்நோய் வந்து, அவன். அதனின்று நிங்கினான்"[45] என்று தரும் விளக்கம் பிற்காலத்தில் ஏற்பட்ட சிந்தனையாகும்.

இவ்வாறு பூதனை வதத்தைப் புராணங்கள் கூறுவதுபோல ஆழ்வார்களும் பாடி அனுபவித்துள்ளனர். பூதனை உருவத்தையும் அவளது வஞ்சகத் தன்மையினையும் நினைந்து நினைந்து பாடியமையை அவர்களது பாசுரங்களில் பரக்கக் காணமுடிகிறது.

ஆ. சகடாசுர வதம்:

கண்ணன் பிறந்த சில திங்களில், கவிழ்ந்துகொண்டதைக் கண்டு விழா நிகழ்த்தினர். ஊரிலுள்ள கோபியர்களை அழைத்துப் பெருமகிழ்ச்சியுடன் அசோதை கொண்டாடினாள். குழந்தையைத் தொட்டிலுக்கருகில் கிடத்திவிட்டு, அப்பெண் களுடன் பேசியபடி இருந்தாள். குழந்தை பாலுக்கு அழுவது போன்று செய்து, கால்களால், அவ்வண்டியை உதைத்தது. அதன் குடை சாய்ந்து, அதன் குப்பிகளும் பொருட்களும் சிதறி நொறுங்கின. திடீரென்று நிகழ்ந்த இந்நிகழ்ச்சியால், எல்லோரும் பயந்து, குழந்தைக்குக் கிரக பீடையாக இருக்குமோ என, நினைத்துச் சாந்தி செய்தனர்.

இவ்வாறு, கம்சனால் ஏவப்பட்ட சகடாசுரன் என்பவன், வண்டியில் தன்னை மறைத்துக்கொண்டு கண்ணனைக் கொல்ல முற்பட்டு இறந்தான் என்பது வரலாறு. இதனைப் பெரியாழ்வார்,

"நாள்களோர் நாலைந்து திங்களளவிலே
தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்"
(பெரியா. திரு.மொ.1.3.11,)

என்று குறிப்பிடுகிறார். 'நாலைந்து திங்களளவிலே' என்பதற்கு, நாலு (அ) ஐந்து மாதங்களுக்குள்ளே என்றும், நாலும் ஐந்தும் சேர்ந்து ஒன்பது மாதங்களுக்குள்ளே என்றும், இருபது மாதங்களுக்குள்ளே (நாலும் ஐந்தும் பெருக்கி) என்றும் பொருள் கூறப்படுகிறது. சிறிய வயதிலே இத்தகைய அரிய பெரிய செயல் செய்தான் என்றால் கண்ணெச்சில்படும் என்பதற்காக, அந்தத் திருஷ்டி தோஷம் வராமைக்காக, மாதத்தைச் சரியாகக் கூறாது நாலைந்து திங்களிலேயே என்று மயங்கி ஆழ்வார் கூறியதாகத் திவ்யார்த்த தீபிகை[46] உரைவிளக்கம் தருகிறது.

கம்சனால் ஏவப்பட்ட சகடன் என்பதையும், அவன் கள்ளத்தனமாக வண்டியில் பிரவேசித்தான் என்பதனையும் குறிப்பிட்டுக் காட்டுகிறார் ஆழ்வார்.

"கஞ்சன் தன்னாற் புணர்க்கப்பட்ட கள்ளச்சகடு
கலக்கழிய"
(பெரியா. திரு மொ.2.2.4)

"கள்ளச்சகடு கலக்கழியவுதை செய்தபிள்ளை"
(பெரியா. திரு.மொ.2.8.7)

"மாயச்சகடமுதைத்து" (பெரியா. திரு மொ.3.9.9)

என்று விளக்கமாக அருளிச் செய்துள்ளார். இதே கருத்தை ஆண்டாள் தனது பாசுரத்தில், "கள்ளச்சகடங் கலக்கழியக் காலோச்சி" (திருப். 6) என்று சுட்டியுள்ளது நோக்கத்தக்கது.

திருமங்கை ஆழ்வார், இவ்வரலாற்றைக் கூறுகையில், குழந்தை பிறந்த ஏழுதிங்களில் இச்சகடாசுர வதம் நிகழ்ந்த தாகக் குறிப்பிடுகிறார். குறிப்பாக, அசோதை, குழந்தையை வண்டிக்கருகில் கிடத்திவிட்டு, யமுனை ஆற்றிற்கு நீராடச் சென்றாள் என்று கூறுகிறார். இக்குறிப்பு, மற்ற ஆழ்வார்களால் குறிப்பிடப்படவில்லை.

"ஈடும் வலியுமுடைய இந்த நம்பி பிறந்தவெழு திங்களில்
ஏடலர்கண்ணியினானை வளர்த்தி யமுனை நீராடப்
போனேன்
சேடன் திருமறுமார்பன் கிடந்து திருவடியால்
மலைபோல் ஓடுஞ்சகடத்தைச் சாடிய"
(பெரிய.திரு.மொ.10.7.9)

என்று அசோதை கூறுவதாகக் குறிப்பிட்டுள்ளார். திருமழிசை ஆழ்வார் பாசுரத்தின் உரைவிளக்கத்திலும் (நான்.திரு. 33) குழந்தை பிறந்த ஏழு திங்களில் இச்செயல் நிகழ்ந்ததாகக் குறிப் பிட்டுள்ளது ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. இக்கருத்து, ஹரிவம் சத்தில் (அத் 6) இடம்பெற்றிருக்கக் காணலாம். ஆழ்வார் பாசுரங்களுக்கு உரைவிளக்கம் தரும் ஆசாரியர்கள் குழந்தை பிறந்த ஏழுதிங்களில் இந்தச் சகடாசுரவதம் நிகழ்ந்தாதகக் குறிப்பிட்டுள்ளனர்.

இத்திருவிளையாடலைப் பொய்கையாழ்வார் ("தழும்பிருந்த தாள்சகடம் சாடி" – பொய்.மு.தி 23) பூதத்தாழ்வார் (பூ.இ.தி. 10,19), நம்மாழவார் (தி வா.மொ.6.4.4; 6.9.4; 7.3.5) ஆகிய ஆழ்வார்களும் அருளியுள்ளனர். சகடனை உதைத்ததால் அவனது கால்களில் தழும்பேறியுள்ளது என்று ஆசாரியர்கள் விளக்கம் தருகின்றனர். வெண்ணெய்க் களவு கண்டதற்காக வயிற்றில் தாம்புக்கயிற்றால் கட்டிய தழும்பு கொண்டதுபோல, காலால் சகடனை உதைத்ததற்காகக் காலிலும் தழும் பேறியுள்ளது என்பதனைச் சுட்டிக்காட்டிள்ளானர்.

ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ள சகடாசுர வதம் பற்றிய குறிப் புக்கள் உறரிவம்சத்துடன் ஒப்பு நோக்கத்தக்கனவாக அமை கின்றன. கண்ணனைப் பற்றிய செயல்களை எடுத்துக்கூறும் நூல்களுள் மகாபாரதத்தை முதன்மை நூலாகக் கொள்வாரு முண்டு. அம்முறையில், அதன் பின்னிணைப்பாகக் கருதப்பட்டு வரும் உறரிவம்சக் கருத்துக்களைத் தமது பாசுரங்களில் திருமங் கையாழ்வார் குறிப்பிட்டிருப்பது அறியத்தக்கது.

இ மருதமரம் முறிந்த செயல்:

கோகுலத்தில் இடைப்பெண்கள் வீடுகளில் சென்று, கண்ணன் செய்த தீமபுகளான வெண்ணெய், நெய் திருடி உண்பது, தயிர்ப்பானைகளை உடைப்பது முதலான செயல்

களால் அப்பெண்கள் அனைவரும் அசோதையிடத்து கண்ணனைப் பற்றிக் குறை கூறிவந்தனர். இதனால் சினம் கொண்ட அவள் ஒருநாள் கண்ணனை உரலோடு சேர்த்துக்கட்டி நிறுத்தினாள். இருப்பினும், உரலோடு இழுத்துக்கொண்டுபோய், அவன் வீட்டு முன்பு இருக்கும் மருதமரத்தின் நடுவே எழுந்தருள, அவ்வுரல் குறுக்காக நின்று இழுக்கப்பெற்றதனால், அம்மரங்கள் இரண்டும் முறிந்து விழுந்து பெரும் சப்தத்தை எழுப்பின. முன் ஒரு பிறப்பில் நாரத முனிவரின் சாபத்தால் அம்மரங்களாய் இருந்த நளகூபரன், மணிக்ரீவன் எனும் குபேர புத்திரர்கள் இருவரும் கண்ணனின் இச்செயலால் சாபம் நீங்கித் தமது பழைய உருவத்தைப் பெற்றனர் என்பது புராண வரலாறாகும். இச்செயல் ஆழ்வார்களைப் பெரிதும் கவர்ந்துள்ளது. பொய்கையாழ்வார், பேயாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார் என அனைவரும் இச்செயலை அருளியுள்ளனர்.

நின்றிருந்த இரு மரங்களைக் கண்ணன் சாய்த்தான் என்ற செய்தியினை ஆழ்வார்கள்[47] வலியுறுத்திக் கூறியுள்ளனர். மருத மரங்கள் கீழே விழும்பொழுது, அதன் அடியில் இருந்த குழந்தைக் கண்ணன், ஒரு தீங்குமின்றித் தப்பியதோடு, அம்மரங்கள் உருவத்திலிருந்த அசுரர்களைக் கொன்றொழித்தான் என்பது கருத்தாகும். அம்மரங்களின் நடுவே சென்றான் என்பதனையும் தெளிவாக, 'மாமருதினூடு போய்'; 'மாமருதினிடையபோய்' என்ற சொற்றொடர்களால் ஆழ்வார்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

அம்மரங்கள் இரண்டும் முனிவரின் சாபத்தால் அவ்வாறு மாறின. என்பது புராணங்களிலுள்ளது. கம்சனால் ஏவப்பட்ட அசுரர்கள் அம்மரங்களில் இருந்தனர் என்பது பெரியாழ்வார் பாசுரங்களிலிருந்து அறியத்தக்கது. ''பொய்ம்மாய மருதான வசுரரைப் போன்று வித்தின்று நீ வந்தாய்'' (பெரியா திரு'மொ. 3.1.3) என்ற பாசுரத்தானும், ''ஒருங்கொத்த வினை மருத முன்னிய வந்தவரை'' (பெரியா.திரு மொ.1.5.5) என்ற பாசுரத்தானும் விளக்கப்படுகிறது. இதில் 'ஒத்த மனம் உடையவர்களாய் இரட்டை மரதமரமாய் உருவம் கொண்ட அசுரர்கள்' என்று விளக்கம் கூறப்படுகிறது. மருதமரங்களாய் நின்ற அசுரர்கள் என்பதனை ஆண்டாளும் சுட்டிக்காட்டுகிறாள். 'நின்ற நீள் மருதம்' (நாச்.திரு.4.7); 'நின்ற புணர் மருதம் சாய்த்தீர்த்தான்' (நாச்.திரு.7.6.).

மருத மரங்களிடையே சென்று நடைகற்றான் கண்ணன் என்று கருத்து விளங்கத் திருமங்கை மன்னன் இச்செயலைக் குறிப்பிடுகிறார். "மருதிறநடந்து" (பெரிய.திரு.மொ.4.5.3) (தி கு தா.16) என்று இரு இடங்களில் குறிப்பிட்டிருப்பது நோக்கத் தக்கது. 'மாமருதூடு நடந்தாய் வித்தகனே' (10.4.5) என்பதும் இதனோடு ஒப்புநோக்கத்தக்கது. மருதமரம் முறிந்துவிழும் இவ் வரலாற்றை மேலும் ஒரு பாசுரத்தில் திருமங்கை ஆழ்வார் அருளியிருப்பது சிறப்பிற்குரியது,

"மாதருரலோடு கட்ட அதனோடு மோடி அடல்சேர்
இணைமருதிற்று வீழ நடைகற்ற தெற்றல்
வினைபற்றறுக்கும் விதியே"
(பெரியா.திரு.மொ.11.4.9)

என்பதால் விளங்கும்.

விஷ்ணுபுராணத்தில் (5.6) கண்ணன் மருதமரங்களிடையே சென்றதால், அம்மரங்கள் பெருத்த சப்தத்துடன் கீழே முறிந்து விழுந்தன. இதனால், ஆயர்கள் அனைவரும் பயந்தனர். ஆனால், சிறுபிள்ளையான கண்ணன் சிரித்த முகத்துடன் தென்பட்டதைக் கண்டு ஆயர்கள் வியப்படைந்தனர். இதே செய்தி ஹரிவம்சத் திலும் (அத்தி.7) இடம்பெற்றிருக்கிறது. பாகவதத்தில் (10.9) கண்ணன், அம்மரங்களைக் கண்டதும் அம்மரங்களின் வரலாற்றை உணர்ந்துகொண்டு, அவர்களுக்குச் சாப விமோச்சனம் அளித்த தாக விளக்கப்படுகிறது.

இவ்வாறு கோகுலத்தில் பூதனை, சகடாசுரன், மருதமரம் முறிதல் ஆகிய இத்தீய செயல்களால் பீதி அடைந்த அசோதை மற்றும் ஆயர் மக்கள் அவ்விடத்தை விட்டு நீங்கி வேறு இடத் திற்குச் செல்லத்திட்டமிட்டனர். இந்தச் செயல்கள் கம்சனால் உண்டாகியிருக்கலாம் என்பதனையும் உணர்ந்திருந்தனர். ஆகவே, மருதமரங்கள் இரண்டு குபேரரின் மகன்கள் என்பதும், கிருஷ்ணா வதாரத்தில் அவர்களது சாபம் நீங்கியது என்பதும் பாகவதத்தில் மட்டும் குறிப்பிட்டுள்ளதே தவிர ஹரிவம்சம், விஷ்ணுபுராணத்தில் காணப்படவில்லை என்பது ஈண்டு நினைத்தற்குரியது.

ஈ. அசுரர்கள் வதம்:

கண்ணன் அவதாரத்தில், மக்களுக்குக் கொடுமைகள் செய்து வந்த பல அசுரர்களைக் கொல்லும் செயலே மிகுதியாகக்

காணப்படுகிறது. அனைவரும் கம்சனுக்கு நெருங்கிய நட்புக் கொண்டவர்களாக விளங்கினர். அவர்கள் அனைவரையும் கொன்று யாதவ குலத்தை நிலைநிறுத்திய பெருமை கண்ணனையே சேர்ந்தது. இந்த அசுரர் கூட்டங்களை அழிப்ப தற்காக வடமதுரையில் வந்து அவதரித்தான் கண்ணன் என்று நம்மாழ்வார் அருளியிருக்கிறார்.

"அதிர் கொள் செய்கை அசுரர் மங்க
வடமதுரைப் பிறந்தாற்கு" (நம்.தி.வா.மொ.9.1.5)

"மருள் கொள் செய்கை அசுரர் மங்க
வடமதுரைப் பிறந்தாற்கு" (மேற்படி.9.1.3)

என்று இரு பாசுரங்களில் கிருஷ்ணாவதாரத்திற்குரிய காரணத்தை எடுத்துரைக்கிறார். 'பொருள் கை உண்டாய்ச் செல்லக் காணாத அன்றும் அடியார்களுடைய ஆபத்தைப் போக்குகைக்காகக் கருமங்கட்குக் கட்டுப்படாதவனான தான் வந்து அவதரித்து உதவுவான் ஒருவன் உளன், என்றும் மக்கள் மனத்திலே இருள்குடி புகரும்படியான செயல்களையுடைய அசுரக் கூட்டம் முடியும்படி, ஒருவர் விரும்பாதிருக்கவும், தானே வந்து அவதரித்துக் காப்பாற்றுபவன்"[48] என்று கண்ணன் அவதாரம் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. இவ்வாறு, அவதரித்து கண்ணனைக் கொல்வ தற்காகக் கம்சன் தன்னுடன் இருக்கும் அசுரர்கள் பலரையும் பல உருவங்களில் ஏவிவிட்டான். தன்னைக் கொல்ல வந்த அனைவரையும் கண்ணன் கொன்றான் என்ற வரலாறு கூறுகிறது. சகடாசுரன், பாணாசுரன், பகாசுரன், காலநேமி, சிமாலிகன், தந்தவக்ரன், முரன், நரகாசுரன், கேசி, முதலிய அசுரர்களைக் கொன்று யாதவ குலத்தைக் காப்பாற்றினான் என்பது திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களில் அருளியிருப்பது பரக்கக் காணமுடிகிறது.

உ. பகாசுரன் வதம்: (பகன் வதம்)

கண்ணனைக் கொல்லுவதற்குக் கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவன் கொக்கு வடிவம் கொண்டு, யமுனைக் கரையில் காத்திருந்தான். கண்ணன் வந்ததும் அவனை விழுங்கி உண்டான். இவ்வரலாற்றைப் பெரியாழ்வார் அருளி ஆழங்கால் படுகிறார்.

"பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு
கள்ள அசுரன் வருவானைத்தான் கண்டு
புள்இது என்று பொதுக்கோ வாய் கீண்டிட்ட
பிள்ளை" (பெரியா. திரு, மொ. 2.5.4)

பகாசுரன், கண்ணனை விழுங்கிவிட, அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப் போல எரிக்கவே, அவன் பொறுக்கமாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து விட்டு மூக்கால் குத்த நினைக்கையில், கண்ணன் அவனது வாயலகுகளைத் தனது இருகைகளாலும் விரைவாகக் கிழித்தான். இதனைப் பொய்கை யாழ்வார் 'புள்வாய் கீண்டான்' (பொய். மு. தி. 18) என்றும் திருமழிசைப்பிரான் 'புள்ளின்வாய் பிளந்தும்' (தி. ச. வி. 19) என்றும் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கனவாகும். அவன் கண்ணனை விழுங்கி வெளியில் உமிழும் அளவும் கண்ணன் அவ்வசுரனை ஒன்றும் செய்யாமல் பொறுமையாக இருந்து, பின்பே அவனது வாயைப் பிளந்தான் என்பதனையும் பெரியாழ்வார் சுட்டிக் காட்டுகிறார் (பெரியா. திரு மொ. 2.6.3). இவ்வரலாற்றை ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகியோரும்[49] அருளியிருப்பது நினைக்கத்தக்கது. இவர்களது பாசுரங்களில், கண்ணன் புள்ளின் வடிவில் வந்த அசுரனின் வாயினைப் பிளந்தான் என்ற செய்தியைத்தான் வலியுறுத்தப் பாடியிருக் கின்றனரே தவிர, வடிவத்தைப் பற்றிக் குறிப்பில்லை. கண்ணனின் வீரச் செயலைப் பாடவேண்டும் என்ற நோக்கத்தை இதன்வழி ஆழங்கால் பட்டனர். புராணங்களிலும் இச்செய்தி எவ்வித மாற்றமின்றி இடம்பெற்றிருக்கக் காணமுடிகிறது.

ஊ. தேனுகாசுரன் வதம்: (தேனுகன் வதம்)

கழுதை உருக்கொண்டு வந்த அசுரன் தேனுகன் என்பவனும் கம்சனால் ஏவப்பட்டவன். பலராமன் அவனைப் பனைமரங்களின் மீது வீசிக் கொன்றான். அவனைத் தொடர்ந்து வந்தவனைக் கண்ணன் கொன்றான். பனம்பழங்கள் நிறைந்த வனத்தில் இருவரும் நுழைந்தனர். பனம் பழங்களை உண்பதற்காக, அம்மரத்தை பலராமன் அசைக்க அந்நேரத்தில் தேனுகாசுரன் கழுதை உருவில் வந்தான். அவனது கால்களை இழுத்து, அவனைக் கொன்றான். இத்தனை காலம் கொடியதாகக் காணப்பட்ட அக்காடு மேலும், சுகமாக -- அழகாகக் காணப் பட்டது என்பது வரலாறாகும். இதனை ஆழ்வார்கள் அருளிச்

செய்துள்ளனர். திருமழிசைப்பிரானும், திருமங்கை மன்னனும் இவ்வரலாற்றைத் தெளிவாக அருளியிருப்பது நோக்குதற்குரியது.

"வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்
நாசமாகி நாகுலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு
வீசிமேல் நிமிர்ந்த தோளின் இல்லையாக்கினாய் கழற்கு"
(தி. ச. வி. 80)

"தேனுகனாவி போயுக வங்கோர் செழுந்திரள் பனங்கனியுதிர
தானுகந்தெறிந்த தடங்கடல் வண்ணர்"
(பெரிய. திரு. மொ. 9.8.7

என்ற பாசுரங்களில், பனைமரத்தின் மேல் வீசித் தேனுகாசுரனைக் கொன்ற செய்தி குறிப்பிடப்படுகிறது. இவர்களது இப்பாசுரங்களில் அசுரன் பெயரும், கழுதை உருவமும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரது பாசுரங்களிலும்[50] இந்நிகழ்ச்சி இடம்பெற்றுள்ளது மற்ற அசுரர்களான பிரலம்பன், காளியன் ஆகியோருடன் சேர்த்து இவ்வசுரனைக் கொன்ற செய்தியை அருளியுள்ளனரே தவிர தனியாக சிறப்புகருதிக் குறிப்பிடப்படவில்லை.

எ. கபித்தாஸுரன் – வத்ஸாஸுரன் வதம்:

கண்ணனைக் கொன்றுவிடும் பொருட்டு கன்று உருவில் வந்த வத்சாசுரன் (வத்தாசுரன்) என்ற அசுரனைக் கொண்டே. விளாமர வடிவில் நின்ற கபித்தாசுரன் என்ற அசுரனைக் கண்ணன் வீழ்த்தினான் என்ற இச் செய்தியைப் பிரபந்தப் பாசுரங்களில் பரக்கக் காணமுடிகின்றது வத்சாசுரனை விளாமரத்தின்மீது வீசியதால் விளாமரத்தில் மறைந்திருந்த கபித்தாசுரன் வத்சாசுரனுடன் கீழே விழுந்து மடிந்தான்; என்பது கருத்தாகும். இதனைப் பெரியாழ்வார்,

"விரும்பாக் கன்றொன்று கொண்டு
விளங்கனி விழ எறிந்த பிரானே"
(பெரியா. திரு. மொ. 3.1.6)

"கன்றினை வாலோலை கட்டிக் கனிகளுதிர வெறிந்து"
(பெரியா. திரு. மொ. 2.4.8)

என்று இரு நிகழ்ச்சியைப் பாடிய ஆழ்வார், அவன் செய்த செயலால் அசோதைக்கு ஒருபக்கம் மனமகிழ்ச்சி ஏற்பட்டாலும்,

மற்றொரு பக்கலில் வயிற்றெரிச்சல் கொண்டாள். அதாவது, 'என்னுடைய பிள்ளைக்குத் தீமை செய்யக் கருதுமவர்கள் எப்பொழுதும் அப்படியே மானக்கடவர்கள்'' என்று சாபமிடுவ தாகக் காட்டுகிறார் ஆழ்வார்.

''பன்றியுமாமை... உன்மேல்
கன்றினுருவாகிமேய் புலத்தே வந்த கள்ளவசுரர் தம்மை
சென்றுபிடித்தல் சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாய்
போலும்
என்று மென்பிள்ளைக்குத் தீமை செய்வார்கள்
அங்ஙனமாவர்களே''
(பெரியா. திரு. மொ. 3.3.7)

என்பதில், அசோதையின் தவிப்பைக் காட்டியுள்ளார்; கோகுலத்தை விட்டுப் பிருந்தாவனத்தில் குடியேறிய பின்பும், கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களால் தன் மகன் கண்ணனுக்குக் கொடுமைகள் ஏற்பட்டுக்கொண்டே இருப்பதை அறிந்ததால்தான் இந்தத் தவிப்பு உண்டாயிற்று. திருமங்கை ஆழ்வார் இச்செய்தியினை,

''கன்று அதனால் விளவு எறிந்து
கனிஉதிர்த்த காளை'' (பெரிய. திரு. மொ. 3.10.8)

என்ற பாசுரத்தில் அருளியுள்ளார். இவ்வாழ்வாரது மற்ற பாசுரங்களும் (1.6.7; 3.8.5; 3 9.7; 7.4.2; 7.10.8; 8.6.9; 9.8.6; 9.10.7) இதனோடு ஒப்பு நோக்கத்தக்கனவாகும். புராணங் களிலும் இந்தச் செய்தி வருணிக்கப்பட்டுள்ளது. இச்செய்தி, பண்டைய தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பது, ''கன்று குணிலாக் கனி உதிர்த்த மாயன்''[51] என்ற சிலப்பதிகார அடிகளால் வெளிப்படுகிறது.

ஏ. அரிஷ்டாசுரன் பங்கம் (அரிஷ்டன் வதம்)

எருது வடிவில் வந்த அசுரன் அரிஷ்டாசுரன் என்பவனாவான். கம்சனால் ஏவப்பட்ட இவ்வசுரனானவன்,

''அம்பரமேழு மிதருமிடி குரல் அங்கனற் செங்கணுடை
வம்பவிழ் கானத்து மால்விடையோடு பிணங்கி
நீவந்தாய்'' (பெரிய. திரு. மொ. 10.7.13)

என்று கண்ணன் போர் செய்து கொன்றான் என்பது கருத்தாம். எருதை அடர்த்த வரலாறு நப்பின்னைத் திருமணத்திற்கும்

ஏற்றதாகக் கொள்கின்றனர். அரிஷ்டாசுரன் என்ற பெயர் 'அரிஷ்டநேமி' என்றும் வழங்கும். ஆகவே, எருது வடிவில் வந்த அரிஷ்டாசுரனைக் கொன்றதோடு அன்றி, நப்பின்னையை மணக்க ஏழு எருதுகளை அடக்கிய செயலும் இங்கு நினைக்கத் தக்கது.

ஐ. கேசி வதம்:

கம்சனால் ஏவப்பட்ட அசுரன் கேசி என்பவனாவான். குதிரை உருவம் கொண்டு ஆயர்களை அச்சுறுத்துபவனாய்ச் சென்றான். மனிதனுடைய மாமிசம், பசுவினுடைய மாமிசம் உண்ணும் கொடிய அசுரன். பிருந்தாவனத்தில் நுழைந்ததும், பசுக்களை அழித்துப் பூமியைக் குளம்புகளால் வெட்டும் கொடிய செயல்களைச் செய்து திரிபவனாவான். அனைவரும் கேசியினுடைய செயலுக்கு அஞ்சிக் கண்ணனிடம் சரண் புகுந்தனர். கண்ணனுக்கும் கேசி என்ற அந்த அசுரனுக்கும் நெடும்போர் நிகழ்ந்தது. அளவற்ற வீரியம் கொண்ட கண்ணன் கோபங்கொண்டு, கர்வத்துடன் வந்த கேசியினுடைய வாயில் கையை முழுவதுமாக நுழைத்தான். இதனால், மூச்சுத் திணறிய அவ்வசுரன், கீழே விழுந்து மடிந்தான். வாய் இரண்டாகப் பிளக்கப்பட்டு வீழ்ந்த இச்செயலைக் கண்டு கோபியர்களும், மகிழ்வுடன் கண்ணனைக் கொண்டாடினர். நாரதமுனிவன் கேசி அழிந்ததைக் கண்டு மகிழ்ந்தான். கண்ணனுக்குக் 'கேசவன்' என்ற பெயரைக் கொடுத்து மகிழ்ந்தார் என ஹரிவம்சம் (அத். 24) எடுத்துரைக்கிறது. மகாபாரதம் நாரணீயப் பகுதியிலும் கேசி வதம் பற்றிய செய்தி (மகா. சாந்தி. 138) குறிப்பிட்டிருப்பது இங்கு நினைக்கத் தக்கது.

ஆழ்வார்கள் கேசி வதம் பற்றிய செய்திகளைக் குறிப் பிட்டுள்ளனர். மற்ற ஆழ்வார்களைவிடத் திருமங்கை ஆழ்வார் அதிகமான பாசுரங்களில் இந்தச் செய்தியை அருளியிருக்கிறார். கேசி வதத்தைக் குறிப்பிடும் ஆழ்வார்கள், 'கண்ணன் அவனது வாயினைப் பிளந்தான்' என்ற கருத்தை வலியுறுத்திப் பாடி யிருப்பது தெளிவாகிறது.

'கூந்தல் வாய் கீண்டானை' (பூ.இ.தி. 93) என்று பூதத்தாழ்வார் கேசியைக் குறிப்பிடுகிறார். 'தலைமயிர்க்கு

வாசகமான கூந்தலென்னுஞ் சொல் லக்ஷிதலக்ஷணை' என்னும் வழியால் கேசி என்பவனைக் குறிக்கிறது. கூந்தல் என்பதற்கு வடமொழிப்பெயர் கேசம் என்பதாகும். அப்பெயர் கேசியை நினைப்பூட்டுகிறது என்று திவ்யார்த்த தீபிகை[52] சொல்விளக்கம் தருகிறது.

திருமங்கை மன்னன் கேசி என்பவனது பெயர் குறிப்பிடாது, அவனது உருவமான குதிரை வடிவத்தைப் பல பாசுரங்களில்[53] குறிப்பிட்டுக் காட்டுகிறார். மேலும், அதன் உருவஅமைப்பும், கண்ணன் கேசியைக் கொன்ற முறையையும் தெளிவாகச் சுட்டியிருப்பது இங்கு நோக்கத்தக்கது.

"சுரிந்திட்ட செங்கேழுளைப் பொங்கரிமாத்
தொலையப் பிரியாது சென்றெய்தி எய்தா
திரிந்திட்டிடங் கொண்டடங்காத தன்வாய்
இருகூறு செய்த பெருமான்" (பெரிய. திரு. மொ. 10.6.9)

என்று இப்பாசுரத்தில் ஆழ்ங்கால் பட்டு கண்ணனது வீரச் செயலில் தம் மனதைப் பறிகொடுத்துள்ளார்.

ஒ. பிரலம்பன் வதம்:

பிரலம்பன் என்ற அசுரனை, பலராமன் கொன்றான். இவன் கண்ணனைக் கொல்லத் தன்னுருவை மறைத்துக்கொண்டு பிருந்தா வனத்திற்கு வந்த அசுரனாவான். இதனை அறிந்து கொண்ட கண்ணன், விளையாட்டு முறையில் எல்லோரையும் விளையாட அழைத்துத் தோற்றவர்கள் வென்றவர்களை முதுகில் ஏற்றிச் செல்லுதல் வேண்டும் என்ற விதிமுறையை ஏற்படுத் தினான் அம்முறையில், பிரலம்பன் பலராமனைச் சுமந்துசெல்லப் பலராமன் கோபத்தால், திடமான தன் முஷ்டியால் தலையில் குத்தி, அவனைத் கொன்றான். பலராமனால் பிரலம்பன் அழிய வேண்டும் என்பதனை அறிந்த கண்ணன் இவ்விளையாட்டு முறையின் வழி, இச்செயலை நிறைவேற்றினான் என்பது புராண வரலாறு. இதனை, ஆழ்வார்கள் சிறப்பாகப் பாடியுள்ளனர் என்று கூறமுடியாது. இச்செயல் பற்றிப் பல பாசுரங்கள், திவ்வியப் பிரபந்தத்தில் இடம்பெறவில்லை. பெரியாழ்வார், ஆண்டாள் இருவருமே[54] இச்செயலை, எடுத்துரைத்துள்ளனர். 'பிலம்பன்' என்ற பெயருடன் அவனைப் பலராமன் அழித்தான் என்ற செய்தி மட்டுமே இடம்பெறுமாறு அருளியிருப்பது

நோக்கத்தக்கது. இவ்வரலாற்றிற்கு, உறரிவம்சம், பாகவதம், விஷ்ணுபுராணம், ஆகியவற்றிலும் சான்றுள்ளது.

காளியனை அடக்குதல்:

யமுனை ஆற்றின் ஒரு மடுவில் 'காளியன்' என்ற கொடிய நாகம் வாழ்ந்துவந்தது. இதன் கொடுமையான விஷம் பரவிய அம்மடுவின் நீரை எவரும் பருகமுடியாத நிலையில் மக்கள் வருந்தினர். அதன் கொடுமையை, வலிமையை அடக்க எண்ணி, ஒருசமயம், அம்மடுவிலுள்ள கதம்ப மரத்திலேறி அதன் தலையின்மீது குதித்து அதன் வலிமையை அடக்கினான் என்பது வரலாறாகும். இதனைக் 'காளியநர்த்தனம்' என்பர். காளியன் தலைமீது குதித்து, அதன் தலையை மிதித்தது, நடனம் செய்வது போன்ற தோற்றமாகும். இத்தோற்றமுடைய கண்ணனை காளியநர்த்தன கிருஷ்ணன்' என்றும் கூறுவர்.

இக்காளியனை அடக்கிய செய்தி ஆழ்வார் பாசுரங்களில் சிறப்பாக எடுத்துரைக்கப்படுகின்றது. 'கண்ணன் பாம்பின்மேல் நடம் பயின்றான்' என்ற செய்தியே வலியுறுத்திக் கூறப்படுகிறது. கண்ணன் காளியனை அடக்கிய திறத்தைப் பெரியாழ்வார் படம்பிடித்துக் காட்டுகிறார்.

"காயநீர்புக்குக் கடம்பேறி காளியன்
தீயபணத்திற் சிலம்பார்க்கப்பாய்ந்தாடி
வேயின் குழலூதி வித்தகனாய் நின்ற
ஆயன்" (பெரிய.திரு மொ. 2.1.3)

யமுனைக் கரையில் இருந்த கடம்ப மரமானது, காளியனது விஷக்காற்றால் கருகியிருந்தது. கண்ணனுடைய திருவடிகள் பட்டவுடன் தளிர்த்துப் பூத்தது[55] என்று ஆண்டாள் கூறுவது நோக்கத்தக்கது.

"பூத்தநீள் கடம்பேறிப் புகப்பாய்ந்து
வாய்த்த காளியன் மேல்நடமாடிய
கூத்தன்" (நாச். திரு. 4.4)

இதே செய்தியைத் திருமங்கை ஆழ்வார் அருளியிருப்பதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

"பல்லவந்திகழ் பூங்கடம்பேறி அக்காளியன் பணவரங்கில்
ஒல்லை வந்துறப் பாய்ந்தரு
நடஞ்செய்த உம்பர் கோன்" (பெரிய. திரு.மொ.4.2.2)

என்பதில், இலை, பூ, காய் ஒன்றுமின்றி காய்ந்து போனது போல் இருந்த மரம், கண்ணன் ஏறியதால் 'பல்லவந்திகழ் பூங்கடம்பமாக' மிளிர்ந்தது என்பதனைச் சுட்டிக்காட்டுகிறார்.

ஆழ்வார் பாசுரத்தின் இக்கருத்தினை அடியொற்றி, பிள்ளைப்பெருமாளையங்கார் பாடியிருப்பதும் இங்கு நினைக்கத்தக்கது.

"நெட்டரவின் பெருமூச்செழவிசு நெருப்பில் வெந்து
பட்டகடம்புந்தழைத்தது மீளப் பசுந்துளவின்
மட்டவிழ் தொங்கலரங்கர் பொற்றின்பட"
(திருவரங்கத்து. 71)

என்று அருளியிருப்பது மேற்சொன்ன கருத்துக்களோடு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

அவ்வாறு காளியன் தலைமீது ஏறிக் குதித்து நடம்பயின்ற பொழுது அதன் படங்களானவை, மற்றும் அவற்றின் மீதிருந்த ரத்தினங்கள் ஆகிய அனைத்தும் சிதறிவிழும்படி நடனம் ஆடினான் என்றும் திருமங்கை ஆழ்வார் (பெரிய.திரு மொ .4.10 3) நடம்பயின்ற முறையைக் குறிப்பிடுகிறார்.

காளியனை வருணிக்கையில், ஆயிரம் படங்களையுடைய யமனைப்போலக் கொடிய குணத்தையுடைய நாகம் என்று குறிப்பிடுகிறார் திருமங்கை ஆழ்வார்.

"நீரார் நெடுங்கயத்தைச் சென்றலைக்க நின்றிரப்பி
ஓரா யிரம்பண வெங்கோவிய னாகத்தை
வாரா யெனக்கென்று மற்றதன் மத்தகத்து
சீரார் திருவடியால் பாய்ந்தான்" (சி. தி. ம. 37-39)

என்றடிகளில், ஆயிரம் பாடங்களையுடைய நாகம் என்று சுட்டிக் காட்டுகிறார். ஆனால், பெரியாழ்வார், "காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண்முடியைந்திலும் நின்று நடஞ் செய்து" (பெரியா. திரு. மொ. 3 9.7) என்பதில் ஐந்து படங்களை யுடைய நாகம் என்று குறிப்பிடுதல் நோக்கத்தக்கது. திருமங்கை மன்னன் ஆயிரம் படங்களென்று கூறியது "பயங்கரத்துவத்தின் மிகுதியை விளக்குவதற்கு, அதிசயோக்தியாகச் சொன்னது எனலாம்; கல்ப பேதத்தாலே பொருத்தவுமாகும்" என்று அப் பாசுரத்திற்கு (சி, தி. ம.) திவ்யார்த்த தீபிகை[56] விளக்கம் தருகிறது.

ஆழ்வார்கள் அனைவரும் காளியன் மீது கண்ணன் நடம் பயின்றான் என்று கூறுவதை நோக்கிலும், குலசேகர ஆழ்வார் மட்டும், காளியன் தலையைக் கண்ணன் காலால் மிதித்தான் என்ற பொருளில் காட்டியிருப்பது (''காலால் காளியன் தலை மிதித்ததும்'' – பெரு. திரு. 7.9) அவர்களைவிட வேறுபட்ட பார்வையில் அருளியிருப்பது தெரியவருகிறது. அதன் வலிமையை அடக்கிய செயலை வலியுறுத்திக் காட்டவே 'மிதித்ததாக' என்று அருளியிருக்கலாம்.

விஷ்ணுபுராணம் மற்றும் பாகவதபுராணத்தில், இச்செய்தியினைப் பற்றிய வரலாற்றில் எந்தவித மாற்றமும் இல்லை. காளியனை அடக்கியதும், அவன் உயிர் போகும்படியாக உதிரம் வெளிவரும்பொழுது, நாககன்னியர்கள் கண்ணனை வேண்டிக் கொண்டதன் பேரில், அவனை அம்மடுவினை விட்டு வெளியேறிக் கடலில் சென்று வாழும்படிக் கண்ணன் கூறியதாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்நிலையில், அவன் மனமிரங்கி அவனைக் கொல்லாது விடுவித்தருளினான் என்பது கருத்தாகும். மேலும், கண்ணன் அந்தப் பொய்கையில் குதித்ததும் அக்காளியன் தனது வாலால் கண்ணனைச் சுருட்டியதும், கண்ணன் மூர்ச்சையாகி மூழ்கினான். இதனால் கோபர்கள் அனைவரும் பயந்தனர். அந்நேரத்தில் பலராமன் கண்ணனிடத்து, ''நீ பிறப்பு எடுத்த காரணத்தை நினை; உன்னை மனிதனாகவே நினைத்து எல்லோரும் புலம்புகின்றனர்; இக்காளியனைத் தண்டிக்க எழுவாய்!'' என்று அவனது அவதாரத்தை நினைப்பூட்டுவதாக ஹரிவம்சத்திலும் (அத் 12) மற்றும் விஷ்ணுபுராணத்திலும் (5:311) இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். ஆனால் ஆழ்வார்கள், கண்ணன் காளியன்மீது நடனமாடிய செயலைத்தான் அனுபவித்து அருளியுள்ளனரே தவிர, மற்ற செய்திகளை விளக்கிப் பாடியதாகக் குறிப்பில்லை.

கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தது:

திருவாய்ப்பாடியிலுள்ள ஆயர்களெல்லாரும் கூடி, மழையின் பொருட்டாக இந்திரனைப் பூசிக்கத் தொடங்கினர், வழக்கப்படி சமைத்த உணவுகள் எல்லாவற்றையும் தயார்செய்தனர். இந்திரனுக்கு விழா எடுப்பதைக் கண்ணன் தடுத்தான். ஆயர்களின், வாழ்க்கைக்குப் பயன்தரும் மலைக்கும் கால்நடைகளுக்கும் பூசை செய்ய அறிவுறுத்தினான். கண்ணனது கருத்திற்கிணங்கிய

ஆயர்கள் மலைக்குச் செய்யத் தயாராயினர். தனக்குப் பூசை செய்வதைத் தடுத்ததற்காக இந்திரன் விடாத மழை பெய்வித்தான். இதனால் ஆயர்கள், கால்நடைகள் அனைத்தும் குளிரால் மழையால் நனைந்தன. இதனைக் கண்ட கண்ணன் அருகிலுள்ள ஒரு மலையைக் குடையாகத் தூக்கி அதனடியில் அவர்களை நிற்கச் செய்தான். இவ்வாறு மலையை உயரத் தூக்கி, மழையிலிருந்து மக்களைக் காப்பாற்றினான் என்பது வரலாறாகும். இச்செயலை ஆழ்வார்கள் பெரிதும் அனுபவித்து அருளியிருப்பதை, அவர்களது பாசுரங்களில் பரக்கக் காணமுடிகிறது.

கண்ணனின் இச்செயல் சிறப்பினைக் கருதிப் பெரியாழ்வார் அட்டுக்குவி' எனத்தொடங்கும் (3.5) பதிகத்தில் கோவர்த்தன வர்ணனையையே குறிப்பிட்டுப் பாடியிருத்தல் நோக்கத்தக்கது. கண்ணன் தூக்கிய மலையின் பெயர் 'கோவர்த்தனம்' என்பதனையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

"அட்டுக்குவி சோற்றுப்பருபதமும் தயிர்வாவியும்
நெய்யளறு மடங்கப்
பொட்டத்துற்றி... பொருமா கடல்வண்ணன்
பொறுத்தமலை"
(பெரியா. திரு. மொ. 3.5.1)

என்பதில், சமைத்துக் குவிக்கப்பட்ட சோற்றுக்குவியலையும், தயிர், நெய் முதலானவற்றை விரைவாகத் தனதாக்கிக் கொண்டான் கண்ணன். 'நெடுநாளாக இந்திரனுக்குச் செய்து வந்த இந்தப் பூசையைக் கண்ணன் தனதாக்கிக் கொண்டதை அறிந்து, இந்திரன் கோபம் கொள்வான் என்று ஆயர்கள் கூறியும், செவிமடுக்காது ஒரு இமைப்பொழுதில் அவற்றையெல்லாம் அமுது செய்திட்டான் என்பது கருத்தாகும். இதனால், "இத்திரனால் மழை பெய்விக்கப்பட்டு மக்கள் வருந்தியதால் அம்மழையைத் தடுத்து ஆநிரைகளைக் காத்தான் (பெரிய.திரு.மொ.2.10.4) என்பதனையும் குறிப்பிட்டுள்ளார்.

'கோவர்த்தநன்' என்னும் தன்னுடைய பெயரையே, அம்மலைக்கு இட்டு, அதனையே குடையாக எடுத்துத் தாங்கினான் என்பதனை மற்றொரு பாசுரத்தில் (பெரியா.திரு. மொ.3.5.9)[57] அருளியிருப்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

மழை பெய்த பொழுது, ஆநிரை மற்றும் ஆயர்மக்களைக் காப்பாற்றுவதற்குக் கைக்கு எட்டிய மலையைத் தூக்கிக்

குடையாகப் பிடித்தான் என்ற செய்தியைச் சிலஇடங்களில் காணமுடிகின்றது.இவைகளில், கோவர்த்தனம் என்ற பெயரைக் குறிப்பிடவில்லை. திருமங்கை ஆழ்வாரின் ஒரு பாசுரத்தின் விளக்கத்தில் (பெரிய.திரு.மொ.10.10.3), "பசுக்களும் கன்றுகளும் இடையர்களும் பெருமழையிலே தொலைப்புக, கைக்கெட்டின தொரு மலையை எடுத்துக் குடையாய்ப் பிடித்து, அவற்றை ரக்ஷித்து 'இவை நோவுபடா தொழியப் பெற்றோமே! என்று திருவுள்ளமுவந்தான் கண்ணன்"[58] என்று கூறப்படுகிறது, இதே கருத்து,நம்மாழ்வாரின் பாசுரத்திலும் (நம். தி.வா. மொ.2.10.4) இடம் பெறுவது ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

இந்திரன் பசிக்கோபத்தினால் கடுங்காற்றோடு கூடின கல்மழையைப் பெய்விக்க, எங்கும், இருள்மூடிப் போனதால், மக்கள் பயந்து, இவ்வாபத்திலிருந்துத் தப்பிப் பிழைக்க நீயே காத்தருள வேண்டும் என்று கண்ணனிடம் சரணடைய, அவர்களுடைய பயத்திற்குச்சிறிதும் தயங்காது, உடனே மலையைக் குடையாகத் தரித்துக் காத்தருளினான் என்று திருமங்கை ஆழ்வார்(பெரிய. திரு. 6.10.8)கண்ணனது குணத்தை-வீரத்தை விளக்கமுற எடுத்துரைப்பது சிறப்பிற்குரியது. இங்குச் சரணாகதியின் பலனைக் குறிப்பிடுகிறார்.

இத்தகைய அடாத மழையைத் தருவித்த இந்திரனைக் கண்ணன் தன் திருவாழி கொண்டு அவனது தலையை அறுத் தொழிக்கலாம். ஆயினும், அது செய்யாமல், அவனுடைய உணவை (அவனுக்காக இடப்பட்ட உணவு) உட்கொண்டதால் உயிரையும் கவருதல் முறையாகாது;ப்சிக்கோபத்தால் நலிகிறான்; சலித்தபிறகு தானே ஓய்கிறான் என்று பொறுத்திருந்து இந்திரனை மன்னித்தான் என்று இந்திரனை மன்னித்தற்கான காரணத்தைத் திவ்யார்த்த தீபிகை விளக்கம்(பெரிய. திரு. 6.7.7.) தருகிறது.

இவ்வாறு, இந்திரன் பெய்வித்த கடும் மழையிலிருந்து காப்பாற்ற மலையைத் தூக்கிக் குடையாகப் பிடித்து, ஆயர்மக் களையும், கால்நடைகளையும் காப்பாற்றினான் என்ற கருத்தே ஆழ்வார்கள் பாசுரங்களின் கருத்தாகும். ஆனால், அம்மலையை எவ்வாறு தூக்கினான் என்பது பற்றியும், மழை பெய்த நாட்கள் பற்றியுமான சிலசெய்திகள்புராணங்களில்குறிப்பிடப்படுகின்றன. கண்ணனது திருவிளையாடல்களைச் சிறப்புற எடுத்துரைப்பதே

புராணங்களின் நோக்கமாதலால் இத்தகைய செய்திகள் ஆழ்வார்கள் பாசுரங்களை விடப் புராணங்களில் குறிப்பிடப் படுவது சிறப்பிற்குரியனவாகும். கோவர்த்தன மலையைத் தூக்கிய செயலின் மூலமாக இந்திர வழிபாடு தாழ்ந்து கண்ணன் வழிபாடு வளர்ந்திருக்கிறது. என்று கூற வாய்ப்புண்டு.

இந்திரனுக்கு இடும் அன்னபலிகளை, கண்ணனே அமுது செய்தான். 'நான்தான் இந்த பர்வதத் தேவதை' என்று கூறிக் கொண்டு அவர்கள் இட்ட உணவுகளை எல்லாம் உண்டான்' என்று விஷ்ணுபுராணமும் (5:10); மற்றும் பாகவதபுராணமும் (10.24:35) கூறுவது நோக்கத்தக்கது. மேலும், இன்றுமுதல் நான் பூஜிக்கத்தக்கவன்; மலைத்தேவனாக இருந்து உங்களைக் காப்பாற்றுவேன் எனக் கூறி அவர்கள் செய்த பூசையை ஏற்றுக் கொண்டான் என்று ஹரிவம்சமும் (17–ஆம் அத்தியாயம்) கூறுவது நினைவிற்கொள்ளத்தக்கது. மேலும், இந்திரனால் பெய்வித்த மழை தொடர்ந்து ஏழு நாட்கள் வரை பெய்ததாக இந்த இரு புராணங்களும் குறிப்பிடுகின்றன. இந்த அதிமானிடச் செயல்களால், ஆயர்மக்கள், அவனைப் பரம் பொருளாகவே கருதி வழிபடத் தொடங்கியிருக்கின்றனர். இந்திரனுக்கு இட்ட அன்னப் பலிகளையனைத்தையும் கண்ணன் உண்டான் எனப் புராணத்திலிருக்கும். கருத்தினைப் பெரியாழ்வார் மட்டும் குறிப்பிட்டிருப்பது (பெரிய. திரு. 3.5.1) இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

இந்திரன், கண்ணனதுசெயலால் மகிழ்ச்சியடைந்து, அவனிடத்துச் சரணடைந்து, 'கோவிந்தன்'[59] என்ற திருப் பெயரைக் கண்ணனுக்கு அளித்துப் பட்டாபிஷேகம் செய்தான் என்று புராணங்கள் கூறுகின்றன. மலையைத் தூக்கியதால், இப்பெயர் ஏற்பட்டது என்பது பிற்காலத்திய சிந்தனை என்று கூறலாம். மக்களுக்கு நன்மைகள் தரும் மலைகள், கால்நடைகள் ஆகியவற்றை வணங்கிப் பூசை செய்வது என்பது சிறந்தது என்பதனை உணர்த்திய கண்ணன், இந்திர வழிபாட்டை எதிர்த்து இயற்கை வழிபாட்டை உணர்த்தினார் என்பது இதன்வழி அறியலாகின்றது.

**கூனி கூன் நிமிர்த்தியது:**

கம்சனுக்கு வாசனைத் திரவியங்களைக் கொடுப்பவர் 'திரிவக்ரை' என்ற பெயருடைய கூனி (கூன் உருவத்துடன்

இருப்பவள்) ஆவாள். மதுராபுரியில் வசிக்கக்கூடிய ஒரு இளம் பெண்ணாவாள். கம்சனின் அழைப்பிற்கேற்ப, அக்ரூரருடன் கண்ணனும் பலராமனும் மது ராபுரியில் நுழைகையில், கூனியினுடைய கூன் தன்மையைக் கண்ணன் நிமித்தினான். கம்சனுக்குக் கொண்டுசெல்லும் வாசனைத் திரவியங்கள் மற்றும் உடைகளைத் தாங்கள் அணிவதற்கு கேட்டனர். அவர்கள் அழகில் மயங்கிய அப்பெண் கம்சன் கட்டளைக்கு மீறி நடந்து கொள்கிறோமே என்று அஞ்சாது அவைகளை மிகுந்த ஆசையுடன் கொடுக்கிறாள். அதற்குப் பலனாக, அவளது கூன் தன்மையைச் சரிசெய்தான் கண்ணன் என்பது புராணவரலாறு. இச்செய்தியினைப் பெரியாழ்வார் மிகவும் தெளிவாகத் தமது பாசுரத்தில் அருளியிருப்பது நோக்கத்தக்கது.

''நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத்
தேறி யவளுந் திருவுடம்பிற் பூச
ஊறிய கூனினை யுள்ளே யொடுங்கஅன்
றேறவுருவினாய்'' (பெரியா. திரு. மொ. 1.8.4)

என்று கூறி அகமகிழ்கிறார். கிருஷ்ணாவதாரத்தில் கூனியின் கூனினை நிமிர்த்தியது சிறப்பாகப் பேசப்படுகிறது. ஆனால், இராமாவதாரத்தில் மந்தரையின் (கூனி) முதுகினை நோக்கி உண்டைவில் தெறித்து அவளிடம் பழிச்சொல் வாங்கியதை நினைத்த நம்மாழ்வார், ''கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா'' (நம். தி. வா. மொ. 1.5.5) என்று இராமனை நினைவுபடுத்தினாலும், இச்செயலைக் கண்ணன்மீது ஏற்றிக் கூறப்படுகிறது. இதற்கு ஈட்டின் தமிழாக்க விளக்கவுரையில், ''கோவிந்தா'' என்பது 'பூமியைக் காப்பவன்' என்பது பொருள். அவளுடைய மற்றை உறுப்புகட்கு ஒரு வாட்டம் வராதபடி நிமிர்த்தானாதலின் கூனே சிதைய' என்கிறார். அன்றித் தீம்பு சேர்வது கிருஷ்ணனுக்கே ஆகையாலே, கிருஷ்ணன் தலையிலே ஏறிட்டுச் சொல்கிறார்.'' என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது. கூன் சிதைய உண்டை வில் தெறித்தவன் இராமனாலும், அச்செயலை அவன் மேல் ஏற்றுதற்கு மனமின்றிக் ''கோவிந்தா'' என்று கிருஷ்ணன் மேல் ஏற்றுகிறார் என்பது நோக்கத்தக்கது. கண்ணனது இச்செயலைத் திருமங்கை மன்னன் தமது பாசுரத்திலும் அருளியிருப்பது இதனோடு ஒப்பு நோக்கத் தக்கது.

"ஒருகால் நின்றுண்டை கொண்டோட்டி
வன் கூன் நிமிர நினைந்த பெருமான்"
(பெரிய. திரு. மொ. 10.6.2)

என்று அருளியிருக்கிறார். கண்ணன் திரிவக்ரையின் கூனினை நிமிர்த்தி நன்மை செய்த செயலோடு, இராமவதார நிகழ்ச்சியையும், இதனோடு நினைவுகொண்டு, அக்குறும்பினையும் கண்ணனே செய்ததாகக் காட்டுவது, அவனது திருவிளையாடலின் சிறப்புக் கருதியே ஆகும். குறிப்பாக இராமனையும், கண்ணனையும் ஒரே பரம்பொருளாகக் கருதிப் பாடுவதும் அறியத்தக்கது.

குவலையாபீடம் என்ற யானையை அடக்கியது:

கோகுலம் மற்றும் பிருந்தாவனத்தில் ஒளிந்து வளர்ந்த கண்ணனை எப்படியும் கொன்றுவிடவேண்டும் என்ற எண்ணத்தில், கம்சன், மதுராவிற்கு வரும் கண்ணன் மற்றும் பலராமனுக்கு வரவேற்பு கொடுக்கிறான். அங்கு 'வில்விழா' ஒன்றினை ஏற்பாடு செய்தது கண்ணனைச் சூழ்ச்சியோடு கொன்றுவிடவேண்டும் என்ற நோக்கத்தினாலாகும். கம்சனது அரண்மனை யானையின் பெயர் 'குவலையாபீடம்' என்பதாகும். விழாவின்பொழுது அவ்யானையை அரண்மனை வாயினிலே நிற்கச்செய்து, அவர்களிருவரும் வந்தவுடன் அவர்கள்மேல் ஏவி விடவேண்டும் என்று ஆணை பிறப்பித்திருந்தான் என்பது புராண வரலாறாகும்.

கம்சனது பட்டத்து யானை மிகவும் சினம் கொண்டது; காட்டில் திரியக்கூடிய யானையாகும். அந்த யானை எத்தகையது என்பதனைப் பொய்கையாழ்வார் வருணித்துள்ளார்.

"வென்றிசூழ் களிற்றை ஊன்றிப்
பொருதுடைவு கண்டான்" (பொய்.மு.தி.18)

என்கிறார். எப்பொழுதும் வெற்றியையுடைய திறனும், எதிர்ப்பவர்களைத் தப்பாமல் தன் கையில் அகப்படுத்திக் கொள்ளும் திறனும் உடைய யானை என்று விளக்கம் கூறப்படுகிறது. அவர்களிருவரும் அரண்மனை வாயிலை அடைந்ததும், அத்தகைய திறம் வாய்ந்த யானை, பாகனுடன் வேகமாகக் கண்ணன்-பலராமன் இருவர் மீதும் பாய்ந்தது. அவ்வாறு வந்த யானையின் கொம்பைப் பிடித்து ஒசித்தான்

கண்ணன். இதனைத் திருமழிசையாழ்வார் கூறுவது நோக்கத் தக்கது.

"பொற்றையுற்ற முற்றல்யானை போரெதிர்ந்து
வந்ததைப்
பற்றியுற்று மற்றதன் மருப்பொசித்த பாகனூர்"
(தி.ச.வி.52)

யானையையும், யானைப்பாகனையும் கொன்ற இச்செயலைப் பெரியாழ்வார் அனுபவித்தது குறிப்பிடத்தக்கது. கண்ணனது இடையினழகையும் ஆபரணங்களின் அழகையும் குறிப்பிடுமிடத்து இச்செயலை எடுத்தருளியுள்ளார், "கண்ணன், தன்னை எதிர்த்துவரும் யானையை, சேற்றிலிருந்து கொடியைப் பிடுங்கிப் பறித்தெடுப்பதுபோல, எளிதில் பிடுங்கியெடுத்து, அவற்றையே ஆயுதமாகக் கொண்டு, அவற்றால் யானையினையும் அதன் பாகனையும் கொன்றான்' என்று திவ்யார்த்த தீபிகை பெரியாழ்வாரின் பாசுரத்திற்கு (பெரியா.திரு.மொ.1.2.7 உவமையோடு விளக்கம் கொடுத்துள்ளது.

இவ்வாறு செய்தது, கண்ணன் சிறுபிள்ளையாய் இருக்கும் பொழுது, இதுபோன்ற விளையாட்டையே விளையாடி வந்ததாலாகும் என்று எடுத்துரைக்கப்படுகிறது. "ஊரில் இடைப்பிள்ளைகள் தெருவிலே விளையாடும்பொழுது, ஒருவனை யானையாக வைத்து, அவனை ஒருவன் இழுத்துக்கொண்டு திரிய, அவனைக் கண்ணன் மோதியடித்துத் தானிழுத்துக் கொண்டு ஓடுகின்ற விளையாட்டுத் (லீலை விசேஷத்தை) திறத்தை, மற்றொரு பாசுரத்திலும் எடுத்துக்காட்டியுள்ளார் ஆழ்வார் என்று திவ்யார்த்த தீபிகை காட்டுகிறது.

'வந்தமதலைக் குழாத்தைவலிசெய்து
தந்தக் களிறுபோல் தானே விளையாடும்
நந்தன்மதலைக்கு' (பெரியா. திரு. மொ. 1.2.8)

என்று யானையைக் கொன்ற நிகழ்ச்சி இதனோடு நினைத்துப் பார்க்கக்கூடியது தேவையாகிறது.

குவலையாபீடம் என்ற யானையைக் கொன்றான் என்பதோடு 'ஒசித்தான்' என்ற சொல்லையே ஆழ்வார்கள் பயன் படுத்தியிருப்பது நோக்கத்தக்கது. யானையையும, யானைப் பாகனையும் கொன்றான் என்ற கருத்தைப் பெரியாழ்வார்

(4 7,7), நம்மாழ்வார் (நம். தி. வா. மொ. 8.4.1), திருமங்கை ஆழ்வார் (பெரிய. திரு. மொ. 4 6.7) ஆகியோர் தமது பாசுரங்களில் குறிப்பிட்டிருப்பது ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

கண்ணன் யானையைக் கொன்றது சாதாரணமாக விளையாட்டாகச் செய்தான் என்றே கூறி அனுபவிக்கின்றனர் ஆழ்வார்கள். இதனைத் திருமங்கை ஆழ்வார், "கும்பமிகு மதயானை பாகனொடும் குலைந்துவீழக் கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தன்" (பெரிய. திரு. மொ. 4.1·9) என்று குறிப்பிடுகிறார். கொம்பை விளையாட்டாகப் பறித்தவன் என்பதனைக் காட்டக்' கூத்தன்' என்ற சொல்லால் விளங்கவைக்கிறார்.

அரண்மனையின் அரங்கத்தில் அனைவரும் கூடியிருக்கக் கண்ணனைக் கொல்ல ஏவிவிடப்பட்ட யானையால் தமது மகனுக்கு ஏதேனும் நேரிடுமோ என்று தாயான அசோதை, வயிறடித்து வருந்துகிறாள் என்று ஆழ்வார், தாயின் ஏக்கத்தினை வெளிக்காட்டியுள்ளார்.

"அன்ன நடைமடவாய்ச்சி வயிறடித்தஞ்ச
அருவரை போல்
மன்னுகருங் களிற்றாருயிர் வவ்வியமைந்தன்':
(பெரிய. திரு. மொ. 10.7.14)

என்று திருமங்கை மன்னன் அசோதையின் நிலையை விவரிக்கிறார்.'எருதோடு பொருத்திலுங் காட்டில் யானையோடு பொருத்து மிகவும் பயங்கரமான வீரச்செயல் என்பதால் அசோதை அதனையுஞ் சொல்லி வயிறெரிந்தாள் என்று திவ்யார்த்த தீபிகைஇப்பாசுரத்திற்கு உரைவிளக்கம் தந்துள்ளது. 'தன்னைப் பேணாதே இப்படியும் ஒரு வீரச்செயல் செய்யலாமோ, என்று அசோதை வயிற்றிலே மோதிக்கொண்டு வருந்தும்படியாக மலைபோன்ற மதயானையைப் பொருது, உயிர்த் தொலைத்திட்ட கண்ணனை நினைந்து வருந்துகிறாள்' என்றும் விளக்கவுரை கொடுக்கப்பட்டுள்ளது. கண்ணனது உயிருக்குச் சவால் விடுவது போன்று, வீரச்செயல்களுள் இச்செயலும் ஒன்றாகக் குறிப்பிடப்படுகிறது. கம்சனால் சூழ்ச்சிச் செய்யப்பட்ட முயற்சிகளில் இது குறிப்பிடத்தக்கதாகக் கருதப்படுகிறது. கண்ணனைக் கொல்வதற்காக, இவ்வீர விளையாட்டுப் போட்டி நடைபெறுகிறது என்பது அங்கு

கூடியுள்ள மதுராபுரி மக்களுக்குத் தெரியாது. இருப்பினும் இந்த யானையை அடக்கிக் கொன்றபின்புதான், மக்கள் கண்ணன் புகழைக் கூறத் தொடங்கியிருக்கின்றனர்.

**சாந்தீபினிபுத்திரனை மீட்டுக்கொடுத்தது:**

கண்ணன் மதுராவில் கம்சனைக் கொன்று அவனது தந்தை உக்கிரசேனனுக்கு அரசாட்சி கொடுத்தபிறகு, கண்ணன் பலராமனுடன் குருகுலத்தில் கல்வி கற்க, அவந்தி நாட்டில் வசிக்கும் சாந்தீபினி என்ற அந்தணனிடத்துச் சென்று அனைத்துக் கலைகளையும் கற்க முனைந்தான். குருகுலத்தில் கல்வி கற்று முடிந்தபிறகு, குருதட்சணை கொடுப்பது வழக்கமாக இருந்தது. அந்த முறையில், கண்ணன் குருதட்சணையைப் பற்றித் தமது குருவிடம் கேட்டபொழுது, அவர் பன்னிரண்டு வருடத்திற்கு முன்பு காணாமல்போன தமது மகனை மீட்டுக் கொடுக்கும்படியான தட்சணையைக் கேட்டார். கண்ணனும், அவரது மகனை மீட்டுக்கொடுத்தான் என்பது புராண வரலாறாகும் இந்நிகழ்ச்சியைப் பெரியாழ்வார் மற்றும் திருமங்கை ஆழ்வார் ஆகிய இரு ஆழ்வார்கள் அருளியிருப்பது நோக்கத்தக்கது.

முனிவனது பிள்ளை, பிரபாஸசமுத்திரம் என்ற பெயருடைய கடலில் மூழ்கி இறந்துபோனதாக வரலாறு எடுத்துரைக்கிறது. கடலில் சென்ற மகன் முதலை வாயில் அகப்பட்டு இறந்து போனதாகப் பெரியாழ்வார் குறிப்பிட்டுக்காட்டுகிறார்.

"மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய்
மாண்டானை
ஓதுவித்தக்கலையா உருவுருவே கொடுத்தான்"
(பெரியா. திரு. மொ. 4.8.1)

இறந்துபோனபொழுது, மகன் எந்த உருவத்தைப் பெற்றிருந் தானோ, அவ்வுருவமானது சற்றும் மாறாதபடி அப்படியே மீட்டுக்கொடுத்தான் கண்ணன் என்பதனையும் குறிப்பிட்டு அருளியுள்ளார் ஆழ்வார்.

கண்ணன் யாதவ குலத்தில் பிறந்திருப்பவனாலும் க்ஷத்திரியன் என்று கூறப்படுகிறான். குருகுலத்தில் கல்வி கற்க வேண்டுமென்றால் அந்தணனாக இருத்தல் அவசியமாக இருந்தது. வேதங்களை ஓதவேண்டுமென்றால் அவனுக்கு உபநயனம்

செய்திருத்தல் (அந்தணனாக) அவசியமாக இருந்திருந்தது. அப்பிறப்பைக் கண்ணனுக்குச் சாந்தீபினி என்ற முனிவர் கொடுத்தருளினார். அத்தகைய உயர்ந்த பிறப்பை அளித்தவனும் சிறந்த கல்வியைக் கொடுத்தவனுமான அம்முனிவன் அவனது மகனை மீட்டுக்கொடுத்ததுமான குருதட்சணையைக் கண்ணனின் முயற்சியால் பெற்றார் என்ற இவ்வரலாற்றைத் தெளிவாகத் திருமங்கை ஆழ்வார் அருளியிருப்பது நோக்கத்தக்கது.

''ஓதுவாய்மையுமுவனியப் பிறப்பும் உனக்கு
முன்தந்த வந்தணாளொருவன்
காதலலென்மகன் புகலிடங்காணேன் கண்டுநீ
தருவா யெனக்கென்று
கோதில்வாய்மையினானுனை வேண்டிய குறைமுடித்தவன்
சிறுவனைக் கொடுத்தாய்')
(பெரிய. திரு. மொ. 5.8.7,

என்று கண்ணனது இச்செயலில் தமது மனதைப் பறிகொடுத்து' அவனது திருவடியை அடைய விழைகிறார் ஆழ்வார். இப்பாசுரத்தில் 'உவனியப்பிறப்பு' என்பதற்கு, அந்தணன் என்ற அந்தஸ்து பெறுதலுமான 'உபநயம் செய்தலால் வரும் இரண்டாவது பிறப்பு' என்று விளக்கம் கூறப்படுகிறது.

அனைத்துக் கலைகளைக் கற்றுக்கொடுக்கும்பொழுதே, அம்முனிவர் கண்ணனது சக்திகளை அறிந்திருந்ததால்தான், குருதட்சணையாகத் தனது மகனை மீட்டுக் கொடுக்கும்படியாகக் கேட்கிறார் என்று வரலாறு கூறுகிறது. முனிவரது பெயரை ஆழ்வார் பாசுரங்கள் குறிப்பிடவில்லை. 'அந்தணனொருவன்' என்றே குறிப்பிடப்படுகிறது. இச்சொல்லுக்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்திலே.

''முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களை யுமதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேப த்துக் குடலாக நியாய மீமாம்ஸைகளுமதிகரித்து, பொதுபோக்கும் அருளிச் செயலிலே யாம்படி பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே ஒருவன் என்பது'' என்றருளிச் செய்துள்ளார் என்று திவ்யார்த்த தீபிகை உரையில் விளக்கம் கூறப்படுகிறது. பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்ற மூன்று ஜாதியரும் இயற்கைப் பிறப்புடன், செயற்கைப் பிறப்பான உபநயனம் என்ற பூணூல் அணியும் சடங்கினால் இரு பிறப்பாளரால் உயர்

கின்றனர். இவ்வகையில், க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவனான கண்ணனும்பெற்றான்; இப்பிறப்பைக் கொடுத்தவன் சாந்தீபினி என்ற முனிவராவார் என்பதும் இதன்வழி அறியலாகிறது.

மற்றொரு பாசுரத்தில், திருமங்கை ஆழ்வார் மிகத் தெளிவாகக் குறிப்பிடுவது இதனோடு ஒப்புநோக்கத்தக்கது.

"முந்துநூலும் முப்புரிநூலும் முன்னீந்த
அந்தணாளன் பிள்ளையை அந்நான்றளித்தானூர்"

(பெரிய. திரு. மொ. 6.5.7)

முப்புரிநூல் அணிந்தபிறகே, வேதம் ஓதுதல் முறைமையாகும் என்பதனால், அதனைக் கண்ணனுக்குக் கொடுத்தவன் அந்தணன் என்று அம்முனிவரைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

பாகவத புராணம்[60] மற்றும் ஹரிவம்சத்தில்[61] ஆழ்வார்கள் குறிப்பிட்டிருப்பது போன்றே செய்திகள் இடம்பெற்றுள்ளன

இச்செய்தி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் அருளிய அஷ்டப் பிரபந்தத்தில் இடம்பெற்றிருப்பது ஆழ்வார் பாசுரங்களோடு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

"...பண்டு சாந்திபன் சொற்
கேளாக்கடல் புக்கசேயினை மீட்டதுங் கேதமுடன்
மாளாப்பதம் புக்கமைந்தரைமீட்டது"

(அஷ்ட. திருவரங். 72)

என்ற பாடலில், அந்தணன் பெயரைச் 'சாந்திபன்' என்றே குறிப்பிட்டுக் காட்டியிருக்கிறார்.

மல்லர்கள் மற்றும் அரசர்களை மாய்த்தது:

மதுராவிற்கு, வில் விழாவில் கலந்துகொள்ளக் கண்ணனை வரவழைத்த கம்சன், தொடக்கத்தில், குவலையாபீடம் என்ற யானையை ஏவிக் கொல்லச் சூழ்ச்சி செய்தான். அம்முயற்சி தோல்வியடைந்துவிடவே, மல்லர்களைக் கண்ணனிடத்து மற் போர் செய்யக் கட்டளையிட்டான். அம்முறையில், பலமல்லர்கள் போர் செய்து, சிறுவனான கண்ணனிடத்துத் தோல்வியடைந்து மாண்டனர். தொடர்ந்து, சாணூரன், முஷ்டிகன் என்ற இரு பெரும் மல்லர்களும் கம்சனுக்கு நெருங்கிய நண்பர்களுமான இவர்கள் முறையே கண்ணனையும், பலராமனையும் மற்போரில் சந்தித்துப் போர் செய்யத் தொடங்கினர். இறுதியில், கண்ணன்

பலராமனால் அவர்களிருவரும் மாண்டனர். இதனால், மக்கள் கண்ணனைப் பாராட்டி ஆதரவு கொடுத்தனர் என்று வரலாறு காட்டுகிறது.

மல்லர்களைக் கிருஷ்ணன் கொன்றான் என்ற செய்தியை ஆழ்வார்கள் பொதுவாகக் கூறிச் சென்றுள்ளனரே தவிர' சாணூரன், முஷ்டிகன் என்ற பெயர்களைக் குறிப்பிடாதது நோக்கத்தக்கது. "மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா" (திருப்பல்லாண்டு 1) என்று பெரியாழ்வார் கண்ணனைக் கொண்டாடுவது மல்லர்களைக் கொன்ற செயலை அடிப்படையாகக் கொண்டே ஆகும்.

கம்சன் மதுராவில் நிகழ்த்திய தனுர் யாகத்திலே கலந்து கொள்ளும் பொருட்டு, விருப்பத்துடன் வந்த கண்ணனைக் கொல்லுவதற்காக ஏவிய மல்லர்களை அவன் கொன்று வீழ்த்தினான் என்பதனைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார் திருமங்கை ஆழ்வார்.

"வில்லார் விழவில் வடமதுரை விரும்பி
விரும்பாமல்லடர்த்து" (பெரிய. திரு. மொ. 6.7.5)

இந்த மல்லர்கள் 'நாமே பலசாலிகள்' என்று அகம்பாவத்துடன் களத்தில் குதித்துக் கண்ணனுடன் போராட, அவன் அவர்களுடைய தலைகள் சிதறியொழியும்படி, கைகளாலே அடித்து ஒழித்ததாக நம்மாழ்வார் சுட்டிக் காட்டுதல் (பெரிய திருவந்தாதி. 41) ஒப்புநோக்கத்தக்கதாகும்.

பொய்கையாழ்வார்,[62] பேயாழ்வார்[63] குலசேகராழ்வார்[64] ஆண்டாள்,[65] நம்மாழ்வார்,[66] திருமங்கையாழ்வார்[67], பெரியாழ்வார்[68] இவர்களின் மற்ற பாசுரங்களில், இந்த மல்லர்களைக் கொன்றான் என்ற செய்தி பொதுவாகக் குறிப்பிடப்படுகிறதே தவிர, எவ்வகையில் கொன்றான் என்ற விளக்கம் இடம்பெற வில்லை. அவனுடைய வீரத்தைக் கூறுவதற்காக, இச்செய்தியைக் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர் ஆழ்வார்கள்.

பெரியாழ்வாருடைய ஒரு பாசுரத்தில் (பெரிய. திரு. மொ. 2.2.8) மட்டும் 'இருமலைபோலெதிர்ந்தமல்லர்' என்று சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. இதில், சாணூரன், முஷ்டிகன் என்ற இரு பெரும் மல்லர்களைக் குறிப்பிடுவது தெரியவருகிறது.

அ. கம்ச வதம்

மல்லர்களைக் கொன்றவுடன் மக்கள் அனைவரும் ஆரவாரம் செய்து, கண்ணனை வாழ்த்தினர். கண்ணன் உடனே, அரங்க மண்டபத்தில் வீற்றிருந்த மாமனான கம்சன்மீது பாய்ந்து, அவனது தலைமயிரைப் பிடித்துக் காலால் உதைத்துக் கொன்றது அவனது வீரச்செயலுக்கு எடுத்துக்காட்டாகும். அங்கு கூடியிருந்த மக்கள் அனைவரும் எதிர்பார்க்காத வகையில், ஒருசில மணிநேரத்திற்குள் கம்சனைக் கொன்றுவிடுகிறான் கண்ணன்.

கம்சன் மதுராபுரிக்கு அரசனாக இருந்தாலும், கொடுமைகள் பல செய்து, முனிவர்களை, மக்களை, இறைவனடியார்களைத் துன்புறுத்தி வந்திருக்கிறான். தன் தந்தையையே சிறையிட்டு அடைத்தவன். மக்கள் இறைவனை வணங்குதலை விட்டு, தன்னை இறைவனாகக் கருதி வணங்கவேண்டும் என்ற கர்வவுணர்வுடன் மக்களை துன்புறுத்தி வந்தவன். இந்தக் கொடுமைகளுக்கிடையில் கண்ணன் கம்சனைக் கொன்றதும், துன்பங்களிலிருந்து இனி விடுபட்டோம் என்ற உணர்வில் மக்கள் கண்ணனைக் கொண்டாடினர். கம்சனைக் கொல்வதற்காகவே கண்ணன் அவதாரம் ஏற்பட்டுள்ளது என்று அறிந்துகொண்டனர்.

> "சாது சனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு
> ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்திங்கு பிறந்த
> வேத முதல்வன்"
> (நம். தி. வா. மொ. 3.5.5)

என்று கண்ணன் அவதாரத்தின் நோக்கத்தைச் சுட்டிக் காட்டுகிறார் நம்மாழ்வார். ('சாதித்தல்' என்பது கொல்லுதல் என்று பொருள்படுகிறது.). 'சாதுக்களுடைய நலத்திற்காகவும், துஷ்டர்களுடைய நாசத்திற்காகவும் தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்,என்று கீதை (4:8) வாக்கியமும் ஒப்பு நோக்கத்தக்கது. ஆதலால், 'கம்சனைக் கொல்வதற்காகப் பிறந்த வேத முதல்வன்' என்றபொருளில் கண்ணனைக் குறிப்பிட்டு அருளியிருப்பது அறியத்தக்கது.

கண்ணன் மதுராவிற்கு வந்ததும், ஆயுதசாலையிலுள்ள ஆயுதங்களை முறிப்பது. வழியில் எதிர்வந்த வண்ணான், தனக்குத் துணிமணிகளைக் கொடுக்க மறுத்ததால் அவனைக்

கொன்று அரச உடைகளை அணிந்துகொண்டது, குவலையா பீடம் என்ற அரச யானையின் கொம்பை முறித்தது, மல்லர் களைக் கொல்வதுமான செயல்கள் அனைத்தும் வியப்பான செயல்களாகும் - மாயச்செயல்களாகும். இவ்வாறு கண்ணன் செய்துவந்த செயல்களை அறிந்த கம்சன் பொறுக்கமாட்டாது கூற்றவனைப் போல கிளர்ந்தெழுந்தான். இறுதியில். கண்ணனால் கொல்லப்பட்டான் இதனை, நம்மாழ்வார் (நம். தி. வா. மொ. 7 6.10) "மாயங்களே இயற்றி கூற்றியல் கஞ்சனைக் கொன்று" என்ற அடிகளில் அருளியிருப்பது காணத்தக்கது.

கண்ணன், கம்சன் அணிந்திருந்த கிரீடம் கழன்று கீழே விழும்படி, அவனதுத் தலையிரைப் பிடித்திழுத்துக் கீழே தள்ளி, அவனை வீழ்த்தினான், என்று விஷ்ணுபுராணத்தில் (5:20) கூறப்பட்டுள்ளது. இக்கருத்தைத் திருமங்கை ஆழ்வார் பாசுரத்தில் காணமுடிகிறது.

" ..கஞ்சன் குஞ்சி பிடித்தடித்த பிரான்"

(பெரிய. திரு. மொ. 3.10.3)

"இராஜ துரோகிகளைக் கொல்லும்போது இராஜசின்னங் களை வாங்கிக்கொல்லுவாரைப் போலே"[69] என்ற பழமொழிக்கு ஏற்ப கண்ணன் கம்சனைக் கொன்றான் என்பது கருத்தாகும். இப்பழமொழி, நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரத்திற்கு (7.6.10) விளக்கம் தரும்வகையில் அமைந்துள்ளது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

வேறுசில இடங்களில் 'காலினால் உதைத்துக்கொன்றான்' என்ற திருமங்கையாழ்வார் அருளியுள்ளார். சகடாசுரன், மல்லர்கள் இவர்களைக் காலினால் உதைத்துக் கொன்றதுபோல' கம்சனையும் மார்பில் உதைத்துக்கொன்றான் என்ற பொருளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.[70] மேலும் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்கள் பல[71] கஞ்சனைக் கடிந்த, கஞ்சனைக் காய்ந்த என்ற சொற்றொடர்கள் கம்சனைக் கொன்ற செய்தியை வெளிப்படுத்தியுள்ளன.

ஆ. அரசர்களைக் கொன்றது:

மல்லர்கள் மற்றும் கம்ச வதம் முடிந்த பிறகு, மதுராவில் கம்சனின் தந்தை உக்கிரசேனனுக்கு மீண்டும் அரசாட்சியை ஒப்படைத்து விட்டுத் தனது பெற்றோர்களான வசுதேவ -

தேவகியைக் கண்ணன் விடுவித்து மகிழ்ச்சி அடைந்தான். பின்பு, கல்வி கற்கக் குருகுலம் சென்று பல கலைகளையும் கற்கத் தொடங்கினான்.

கண்ணனுடைய வீரச் செயல் மதுராவில் நடந்ததோடு முடிவடைந்துவிடவில்லை. பல நாட்டு அரசர்களையும் கொன்று மக்களைக் காப்பாற்றிய செயலும் இதனுள் அடங்கும். அவ்வகையில் கண்ணன் ருக்மிணியைத் திருமணம் செய்து கொள்ளும் பொழுது, அதனை எதிர்த்து அவளை மணக்க விரும்பிய சிசுபாலனை எதிர்த்துப் போரிடல், நரகாசுரன் மகாபலியின் மகன் பாணாசுரன், வாசுதேவனைப் போல உருவம் கொண்டிருந்த பௌண்ட்ரக வாசுதேவன், தந்தவக்ரன் (சிசுபாலனின் நண்பன்) முரன் ஆகியோர்களைக் கண்ணன் கொன்றிருக்கிறான். இச்செய்திகளைப் பற்றியும் ஆழ்வார்கள் குறிப்பிட்டிருப்பது காணத்தக்கது.

கண்ணன் ருக்மிணியை விரும்பி, திருமணம் செய்து கொள்ளும் வேளையில், அதனை எதிர்த்த ருக்மிணியின் தமையன் ருக்மி என்பவனையும், ருக்மிணியை மணக்க விரும்பிய சிசுபாலனையும் எதிர்த்துப் போரில் வென்றுஅவனைத் தேரில் ஏற்றிச் சென்றான். பெரியாழ்வாரின் இருபாசுரங்கள் இச்செய்தியினைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

> "உருப்பிணி நங்கையை தேரேற்றிக் கொண்டு
> விருப்புற்றங்கேக விரைந்தெதிர் வந்து
> செருக்குற்றான் வீரஞ்சிதைய – தலையைச்
> சிரைத்திட்டான்" (பெரியா. திரு. மொ .3.9.3)

என்பதில் ருக்மிணியின் அண்ணன் ருக்மியின் தலையைக் கண்ணன் மொட்டை அடித்தான் (சிரைத்திட்டான்) என்று பொருள் கூறப்படுகிறது. மற்றொரு பாசுரத்தில்[72] அவனை, வென்ற செய்தியோடு, ருக்மன் என்ற பெயரும் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது அறியத்தக்கது.

நரகாசுரன் என்பவன் பல கன்னியர்களைச் சிறைவைத்து மக்களுக்குக் கொடுமைகள் பல செய்து வருபவன். அவனைக் 'கிழக்கிற்குடி மன்னர்' என்று பெரியாழ்வார் (2.5.6) சுட்டுகிறார். அவர்கள், 'எப்பொழுதும் தமக்கு அழிவில்லை' என்று நினைத்திருப்பவர்கள் என்பதனையும் சுட்டிக் காட்டியுள்ளார். இதற்கு

'ப்ராக்ஜ்யோதிஷபுரத்தில் வாழ்பவர்களான நரகாசுரன் முதலானோர்' என்று திவ்யார்த்த தீபிகையில் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கக் காணலாம். அவனுடைய கொடுமை களைக் கண்டு; கண்ணன் அவனுடைய சினத்தை அழித்து, அவனால் சிறை வைக்கப்பட்ட கன்னிகளைக் கவர்ந்து வந்தான் என்ற அவனது வரலாற்றைச் சுருக்கமாக அருளியிருப்பது நோக்கத்தக்கது.

''மன்னு நரகன்றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து
கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்த கடல் வண்ணன்''
(பெரியா. திரு. மொ. 4.3.3)

என்றடிகளின் வழி அறியவருகின்றது.

கண்ணால் விடுவிக்கப்பட்ட கன்னியர்களின் எண்ணிக்கை பதினாருயிரத்தொருநூறு என்பதாகும். அக்கன்னிகளின்விருப் பத்தினாலும் வற்புறுத்தலினாலும் அவர்களைத் தனது அந்தரக்கன்னிகளாக ஏற்றுக் கொண்டான் என்று புராணம் கூறுகிறது. இதனை அடிப்படையாகக் கொண்டு கண்ணனுக்கு 16'108; மனைவிகள் என்று கூறுவர். (நரகாசுரன் சிறை வைத்த கன்னிகள் 16,100; ஒவ்வொரு சூழ்நிலையின் காரணமாக மணந்த கன்னிகள் 8; எனவே, 16,108 மனைவிகள் என்று புராணம் எடுத்துரைக்கிறது).

''பல்லாயிரம் பெருந் தேவிமாரோடு
பௌவமெறி துவரை''
எல்லாருஞ் சூழச் சிங்காசனத்தே யிருந்தான்''
(பெரியா. திரு. மொ. 4.1.6)

''பதினாறாமாயிரவர் தேவிமா பணி செய்ய''
(மேற்படி. 4.9.4)

''பதினாறாமாயிரவர் தேவியார் பார்த்திருப்ப''
(நாச். திரு. 7.9)

என்று பாசுர அடிகள் மேற்கூறிய செய்தியினை எடுத்துரைப்ப தாக அமைந்திருக்கக் காணத்தக்கது.

நரகாசுரன் வதம் பற்றித் திருமங்கை ஆழ்வார் (பெரிய. திரு. மொ. 3.9.8; 3.10.2) மற்றும் நம்மாழ்வார் (திருவிருத்.78) கூறியிருப்பதும் அறியத்தக்கதாகும்.

மஹாபலியினுடைய மமன் பாரணாசுரன் என்பவனாவான்· இவனுடைய மகள் உஷை, அநிருத்தனை (கண்ணனின் பேரன்) விரும்பினாள்.இதையறிந்த பாணாசுரன் அநிருத்தனை மறைத்து வைத்தான். இதனால், அநிருத்தனைக் காணாது யாதவர்கள் எல்லோரும் கண்ணனிடம் சரண் புகுந்தனர். கண்ணன் பலராமனுடன் பாணபுரத்திற்குச் சென்றான். முருகன், கரிமுகத் தான் மற்றும் சிவன் ஆகியோரின் துணை கொண்டு எதிர்த்த பாணாசுரனது தோள்களை உதிரம் கொட்டும் படி அறுத்தான். மேலும். சிவபெருமான் முதலியோர்களை முதுகுகாட்டி ஓடும்படி செய்திருக்கிறான் கண்ணன் என்பது வரலாறாகும். ஆழ்வார்கள் இத்தகைய விளக்கங்களைக் குறிப்பிட்டுக் கூறவில்லை யென்றாலும் வாணனது தோள்களைக் கண்ணன் அறுத்தான் என்ற குறிப்பினை வலியுறுத்திக் காட்டியிருப்பது அறிய வருகின்றது,

"முக்கண்ணன்
கூடுசேனை மக்களொடு கொண்டு மண்டி வெஞ்சமத்து
ஓட வாணனாயிரங் கரங் கழித்த வாதிமால்"

(தி.ச.வி. 53)

"வாணபுரம் புக்கு முக்கட் பிரானைத் தொலைய
வெம்போர்கள் செய்து
வாணனை யாயிரந்தோள் துணிந்தான்"

(நம்.வா.மொ. 7.10.7)

"வள்ளி கொழுநன் முதலாய மக்களொடு முக்கணான்
வெள்கியோட விறல்வாணன்
வியன்தோள் வனத்தைத் துணித்துகந்தான்"

(பெரிய. திரு மொ. 6.7.6)

என்ற மூன்று பாசுரங்களில், மேற்கூறப்பட்ட வரலாற்றுச் செய்தியின் விளக்கத்தினைக் காணமுடிகிறது. கண்ணன் வாணனது தோள்களைத் துணித்த செயலும், சிவபெருமானை ஓடச் செய்த செய்தியும் குறிப்பிட்டு அருளியுள்ளதைப் பல பாசுரங்கள்[73] வழி அறியவருகின்றன.

மேலும் தந்தவக்கிரன், கரன், ஆகிய அரசர்களையும் கொன்றான் என்ற குறிப்பு ஆழ்வார்கள் பாசுரங்களில்[74] காணக்கிடக்கிறது.

**பௌண்ட்ரக வாசுதேவ – காசிராஜ மாலீ சுமாலீ பங்கம்:**

கிருஷ்ணனுக்கு வாசுதேவன் என்ற பெயருமுண்டு. கிருஷ்ண வாசேுதவனைப் போலவே. பௌண்ரக வாசுதேவன் 'நான் வாசுதேவன் அவதாரம்; தன்னைப் போலவே சங்கு சக்கரங் களைக் கண்ணன் கொண்டுள்ளான்; ஆகவே, வாசுதேவன் என்ற பெயரையும், தன் தோற்றத்தையும் கண்ணன் விட்டு விட வேண்டும் இல்லாவிடின் தன்னுடன் போர்புரிய வேண்டு மென்றும் தூது அனுப்பினான். அவன் சுருஷ தேசத்து மன்னன் என்று பாகவத புராணம் கூறுகிறது. கிருஷ்ணனும் அவனை எதிர்த்துப் போர் புரியத் துணிந்தான். பௌண்ட்ரகன் தன் போருக்குத் துணையாகக் காசிநாட்டு மன்னன் சுமாலியுடன் போர் புரியத் தொடங்கினான். இதனால் விளையாட்டாகத் தொடங்கிய இப்போரில் கண்ணன் தனது சக்கரத்தை ஏவி இருவரையும் வீழ்த்தினான் என்று வரலாறு கூறுகிறது. இச் செய்தியினை திருமழிசை ஆழ்வார் மற்றும் திருமங்கை மன்னன் ஆகிய இவருர் மட்டுமே சுட்டிக் காட்டியுள்ளனர்.

"காய்சினத்த காசி மன்னன்......
மாசினத்த மாலி மா சுமாலி... நாசமுற்று வீழ"
(தி.ச.வி. 107)

"புகராருருவாகி முனிந்தவனைப் புகழவிட முனிந்துயிருண்டு
அசுரர் நகராயின பாழ்பட நாமமெறிந்து"
(பெரிய. திரு. மொ. 2.4.7)

திருமங்கை மன்னன் பௌண்ட்ரகன் பற்றிய சிறப்பான செய்தி களைத் தெளிவாக அருளியுள்ளார். பல நகரங்களையும் கொண்டிருந்தவன்; அந்நகரங்களும் தானும் பாழ்பட்டுப் போகும்படியாகவும், தன் பெயரும் புகழும் கெடும்படியாகவும், தெய்வங்கள் கொடுத்த வரங்களைத் தனக்கு வலிமையாக நினைத்திருப்பவன் என்றும் குறிப்பிட்ருக்கிறார் ஆழ்வார்.

**கண்ணனின் இறைமைத் தன்மை:**

கண்ணன் அவதாரம் மற்ற எல்லா அவதாரங்களைக் காட்டிலும் சிறப்பானதாகக் கருதப்பட்டுவருகிறது. அவனது எளிமைத் தன்மை இதற்குக் காரணமாய் அமைந்துள்ளது. இராமாவதாரத்தில், இராமன், தனது வடிவை (விபூதி) வெளியிடாமல் சாதாரண மனிதன் போல நடந்து கொண்டான். உலகிற்கு உதாரண புருஷனாக விளங்கினான். தான் பரம்பொருள்

என்ற நினைவு அவனுக்கு எப்பொழுதும் இருந்ததில்லை. ஆனால். கிருஷ்ணாவதாரத்தைப் பூர்ண அவதாரம் என்பர். கண்ணன் சாதாரண ஆயர் குலத்தினில் வளர்ந்து வந்தாலும், தான் ஒரு பரம்பொருள் என்பதை அவ்வப் பொழுது காட்டிக் கொண்டே இருந்தான் என்பது அவனது வரலாற்றின் மூலம் தெரிய வருகிறது. தனது சக்தியை உணர்த்தியும் வெளிப்படுத்தியும் புரிய வைத்தான்.

மகாபாரதத்தில் பாண்டவர்த் தூதனாக இருந்த கண்ணன் சிறிது சிறிதாகத் தெய்வ நிலைக்கு உயர்கிறான். விஷ்ணுவின் 'முழு அம்சம்' என்று கருதப்பட்டு வந்தான். அவன் உரைத்த 'பகவத் கீதை' மூலம் கண்ணனின் செல்வாக்குச் சிறப்புற்றது. மகாபாரதத்தில் வரும் பீஷ்மர், விதுரர், முனிவர்கள் ஆகியோர் கண்ணனைத் தெய்வமாக – பரம் பொருளாகக் கண்டனர். இவ்வாறு, மகாபாரதத்தில் செல்வாக்குப் பெற்ற கண்ணன் வரலாற்றைப் பிறப்பு முதல் எடுத்துரைக்க முற்பட்டவைதான் புராணங்கள் என்பது இங்கு நினைக்கத்தக்கது. அந்த வரிசையில் பாகவத புராணம் கண்ணனது வரலாற்றை முழுமையாகக் கொடுத்துள்ளது. பிறந்தது முதல் இறைமைத் தன்மை வெளித் தோன்றும் படி அமைந்திருப்பது கண்ணனது பரம்பொருள் நிலையைக் காட்டுகிறது.

கண்ணன் செய்த மாயங்கள் பல ஆயர் மக்களை வியக்க வைத்துள்ளன. பூதனை, சகடாசுரன் இவர்கள் இறந்தது கண்ணனின் தெய்வத்தன்மையாலாகும் என்ற எண்ணம் ஆயர் களுக்குத் தோன்றவில்லை. ஏதோ கோள்களினால் (கிரகப் பீடை) ஏற்பட்ட தீமை என நினைத்துச் சாந்தி செய்திருக் கின்றனர். இதனைத் தொடர்ந்து நிகழ்ந்த செயல்கள் கண்ணனது வீரத்தைக் காட்டுவனவாக அமைந்துள்ளன. தெய்வச் சக்தி இருப்பினும் அவனிடத்தில் வெளிப்படையாகத் தெரிந்தது வீரம் என்று குறிப்பிடலாம். இருப்பினும், ஆயர் மக்களுக்குத் தீங்குகள் செய்து வந்த பல அசுரர்களைக் கொன்றது, காளியனை அடக்கியது, கோவர்த்தன மலையைத் தூக்கியது, போன்ற பல செயல்களின் மூலம் ஆயர் மக்கள் கண்ணனைத் தம் நண்பனாகவும், தம் குலத்தைக் காப்பாற்ற வந்த தெய்வமாகவும் கருதிச் சரணடைந்திருக்கின்றனர்.

சில நிகழ்ச்சிகள் மூலம் கண்ணனின் இறைமைத் தன்மை வெளிப்படையாகத் தோன்றியிருக்கிறது. அசோதை கண்ணனது வாயினில் ஏழு உலகம் கண்டது, அர்ச்சுனன் கண்ட கிருஷ்ண தரிசனம், துரியோதனன் சபையில் தனது பேருருவத்தினைக் காட்டியது, ராஸக்ரீடையில் பல உருவங்களாய் மாறியது; உத்தரையின் சிசுவை உயிர்ப்பித்தது, முதலியன அவனது கடவுட் சக்தியை உணர்த்தும் செயல்களாகும். இதனால், கண்ணன் செயல்களை மாயைத் தோற்றங்களாகக் கருதி வந்திருக்கின்றனர். இதனடிப்படையில் தொல்காப்பியர், கண்ணனை 'மாயோன்' 'மாயவன்' என்ற பெயர்களாகக் குறிப்பிட்டிருக்கக் கூடும் என்று எண்ண இடமுண்டு. இந்தச் செயல்களை ஆழ்வார்கள் தமது பாசுரங்களில் அருளியிருப்பது காணத்தக்கது.

அ. வாயினில் வையமேழுங்கண்டது:

அசோதை, கிருஷ்ணனது வாயில் ஏழு உலகங்களையும் கண்டு மயங்கிய செயல் பாகவதத்தில் இடம்பெற்றுள்ளது. மற்ற ஆழ்வார்கள் இச்செயலைக் குறிப்பிடவில்லை. இந் நிகழ்ச்சியைப் பெரியாழ்வார் மட்டும் பாடியிருப்பது குறிப்பிடத் தக்கது. பெரியாழ்வார் அசோதையாகவே மாறிய காரணத் தினால் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு அருளியுள்ளது சிறப்பிற் குரியது. கண்ணனது சின்னஞ்சிறு வாயினில், உலகம் முழுவதும் கண்டு, மயங்கிய செய்தியை இரு முறைகளில் சுட்டிக் காட்டு கிறார்.

1. குழந்தைக் கண்ணனை நீராட்டும் பொழுது, நாக்கை வழிக்குமளவில் அந்தக் குழந்தை வாயைத் திறக்க, அந்த வாயினில் அனைத்து உலகங்களையும் கண்டதாகக் குறிப்பிடு கிறார். தாய் நிலையில் குழந்தையை நீராட்டும் வழக்கத்தினைக் குறிப்பிட்டுக் காட்டுவதோடு, அந்நேரத்தில் அக்குழந்தை 'ஆயர் புத்திரனல்லன்; அருந்தெய்வம்' என்று உணர்ந்ததையும் சுட்டிக்காட்டுகிறார் பெரியாழ்வார்

"ஐயநாவழித்தாளுக்கு அங்காந்திட வையய
மேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே"
(பெரியா. திரு. மொ. 1.1.6)

"வாயுள் வையங்கண்ட மடநல்லார் ஆயர்புத்திரனல்லன்
அருந்தெய்வம்"
(மேற்படி. 1.1.7)

பாகவத புராணத்தில் இச்செய்தி இடம்பெற்றிருக்க காண முடிகிறது. ஆனால், கண்ணன் தன் நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கையில் மண்தின்றான் என்று கூறப்படுகிறது. மேலும், தாய் அதட்டி, வாயைப் பார்க்கையில் அதில் வையம் முழுதும் கண்டதும், வியப்படைகிறாள். இக்காட்சி, குழந்தைக்கு இயற்கையாக ஏற்பட்டுள்ள ஆத்ம சக்தியா என ஆராயப்புகும் பொழுது, புத்திரப்பாசம் வந்து தடுத்து தன் நிலையை அடைகிறாள் எனப் புராணம் (10.8: 32–44) விளக்கிக் கூறுவது நோக்கத்தக்கது. இக்கருத்திற்கு ஒப்ப பெரியாழ்வாரின் பாசுரம் அமைந்திருக்கக் காணத்தக்கது.

2. மற்றொரு பாசுரத்தில், மண் தின்றதற்குக் கோபம் கொண்டு அடிக்கையில், கண்ணன் அழும்பொழுது. அவன் வாயினில் உலகம் முழுதும் கண்டதாக அருளியுள்ளார்.

"விண்ணெல்லாங் கேட்க வழுதிட்டாய் உன்வாயில்
விரும்பியதனை நான் நோக்கி'
மண்ணெல்லாங்கண்டென் மனத்துள்ளே யஞ்சி"
(பெரியா. திரு. மொ. 2.36.)

"காதில் கடிப்பிடவேணுமென்று அசோதைஅழைத்துக் கொண்டிருக்கவும்,அவன் வாராமல் இருந்ததுமன்றி மண்ணைத தின்றானாக, அதற்கு அவள் கோபம் கொண்டு அவனை அடிக்க, அப்பொழுது அவன் ஆகாயம் முழுவதும் ஒலி எழும்படி வாயைத் திறந்து அழ,அது கண்டு அசோதை 'இவன் எவ்வளவு மண்தின்றிருப்பன்' என்பதை வாயிலுள்ள மண்சுவட்டைக் கொண்டு அறிந்து கொள்ளும்ஆசையில், விரும்பிப் பார்க்கையில், அவன் வாயிலுள்ளே உலகங்கெல்லாம் முன்போலக் கண்டு, இவன் தன் மகன் என்றெண்ணி அடித்தொமே;இவன் சர்வேசுரன் அன்றோ, என்று அஞ்சி நின்றாள் யசோதை" என்று திவ்யார்த்ததீபிகை விளககம் தருகிறது.

கண்ணனது வாயினுள், பூமி, எட்டுத்திக்குகள், குளிர்ந்த கடல், பெரிய மலைகள், ஆகிய எல்லாப் பொருள்களையும் கண்டு மகிழ்ந்ததாகப் பிள்ளைப் பெருமாளையங்கார்,

"...பாருந்திசையும் பனிக்கடலுந்
சண்டநெடுங்கிரித்தான மெல்லாஞ்
......அரங்கேசர் வாய்மலருட்
கண்டு மருவினள்."

(அஷ்ட, திருவரங். 49)

என்று கூறியிருப்பது ஆழ்வாரின் பாசுரத்தின் அடியொற்றியே ஆகும்.

**ஆ. உத்தரையின் சிசுவை உயிர்ப்பித்தது:**

அர்ஜுனன் மகனான அபிமன்யுவின் மனைவி உத்தரையின் கருவை நோக்கி அசுவத்தாமன் (துரோணாச்சாரியாரின் மகன்) "அபாண்டவ அத்திரம்" ஏவினான். இதனால், கருவிலிருந்த சிசு சிதைய அச்சிசுவை மீண்டும் உயிர்ப்பித்துத் தரவேண்டுமென சுபத்திரை (கண்ணன் தங்கை) பிராத்திக்க, அவன் தனது திருவடியால் அச்சிசுவை அடி முதல் தலை வரை தடவியதும், உடனே அக்குழந்தை மீண்டும் உயிர் பெற்றது. இச்செய்தி மகாபாரதம் அஸ்வமேதப் பருவத்தில்[75] விளக்கப்பட்டுள்ளது பாரதப்போரின் பொழுது, அபிமன்யு வம்சம் வளராமல் இருக்க, அஸ்வத்தாமன் இவ்வாறு செய்திருக்கிறான். இது, பாரத நிகழ்ச்சி என்றாலும், இறந்து பிறந்த குழந்தைக்கு மீண்டும் உயிர் கொடுத்த செயலை அவனது இறைத் தன்மைக்குச் சான்றாகக் கூறலாம் என்பதால் ஈண்டு எடுத்துக் கூறப் பட்டுள்ளது. இதனைப் பெரியாழ்வார்,

"மருமகன் தன் சந்ததியை உயிர்மீட்டுக்
........................ காத்தான்"

(பெரியா. திரு. மொ. 4.8.3)

"உத்தரை தன் சிறுவனையும் உயக்கொண்ட வுயிராளன்"

(மேற்படி 4.6.6)

என்று இருபாசுரங்களில் அருளியிப்பது நோக்கத்தக்கது.

**இ. அர்ச்சுனன் கண்ட பரம்பொருள்:**

பாண்டவ நண்பனாகக் கண்ணன் பழகி வந்தான். அர்ச்சுன னுக்கும் கண்ணனுக்குமிடையே நெருக்கிய உறவு இருந்து வந்தது. முற்பிறவிகளில் நர நாராயணனாகப் பிறந்து, இப்பிறவியில் அர்ச்சுனன், கண்ணன் என்று அவதரித்து இருப்பதால் இருவருக்கு மிடையே அதிக நெருக்கம் இருந்தது என்று கருத்துண்டு.

இருப்பினும், அர்ச்சுனன் கண்ணனையே சார்ந்து இருப்பவன். போரில் அவனுக்குச் சாரதியாக இருந்து, பகவத் கீதை அருளியவன் கண்ணன். அர்ச்சுனன், கண்ணன் அருளிய கீதை உரைகளைக் கேட்டும், அவன் காட்டிய வழிகளிலும் நடந்தவன். கண்ணனால் அர்ச்சுனக்கு ஞானம் பிறந்து, கண்ணனைப் பரம் பொருளாகக் கண்டவன். கண்ணனது பேருருவத்தைக் கண்டு அஞ்சி, வியந்து, அவனையே சரணடைந்தவன். இங்கு, நம்மாழ்வார் கூறும் செய்திக்குப் பாரதத்திலோ, புராணங் களிலோ சான்று இல்லை என்று தான் கூறவேண்டும். ஆழ்வார்கள் காட்டும் கிருஷ்ணதரிசனமானது சற்று வேறுபட்டு நிற்கிறது என்று கூறலாம்.

"தீர்த்தன் உலகு அளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தி அவையே சிவன் முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழா யான்பெருமை
போர்த்தும் ஒருவரலால் பேசக் கிடந்ததோ"

(நம்.தி.வா.மொ. 2.8.6)

என்றடிகளில், அர்ச்சுனன், கிருஷ்ணன் திருவடிகளில் சூட்டிய மாலையினையே சிவபெருமான் சடையின் மேலே நேரில் கண்டான். பின்பு, மாயையோ என்று தெளிந்து, "கண்ணனே பரம்பொருள் – சர்வேசுவரன்" என்பதனைத் தெளிந்து கொண்டான். இந்த வரலாறானது, (13–வது போர்ச்சுருக்கம் 193–221)வில்லிபாரதத்தில் விளக்கப்பட்டுள்ளது தெரியவருகிறது. இங்கு ஆழ்வார், இதனைச் குறிப்பிடுவதற்கான காரணம், அர்ச்சுனன் கண்ணனைத் தெளிவாக உணர்ந்திருக்கிறான் என்பதனைக் காட்டவே ஆகும்.

பாரதப் போரின் பொழுது, கண்ணன் தனது பேருருவத்தைக் காட்டிய பொழுது, அவனது பயங்கரமான பலதோற்றங்களைக் கண்டு, அர்ச்சுனன் வர்ணித்துள்ளது பகவத் கீதையில் (அத். 11) இடம்பெற்றுள்ளது. "அளவில்லாத வீரியமுடையவனும், அளவில்லாத பராக்ரம உடையவனுமான நீ எல்லாவற்றையும் வியாபிக்கின்றாய். எல்லாமுமாக ஆகின்றாய்" என்று அர்ச்சுனன் கூறுவது (11.40) இங்கு இதனோடு ஒப்பு நோக்கதாகும். ஆகவே பரம்பொருளில் எந்தவித பேதமின்றி, அனைத்தும் கண்ணனே என்பதனைத் தெளிவாக உணர்ந்து கொள்கிறான் அர்ச்சுனன் என்பதனை ஆழ்வார் சுட்டியிருப்பது இதன்பாற்படும்.

அடுத்து, ராஸக்ரீடை செய்யும் பொழுது, பல உருவங்களாய் பல கண்ணனாய், தான் இருந்து ஆடிய செயலும் கண்ணனது மாயைத் தோற்றத்தைக் காட்டுகிறது. இந்த ராஸக்ரீடை செய்த கண்ணனையும் ஆழ்வார்கள் அனுபவித்த முறைகளையும் தொடர்ந்து வரும் பகுதியில் குறிப்பிடப் பட்டுள்ளன.

இங்குக், குறிப்பிடப்பட்டிருந்த செயல்களால் மட்டும் அவனது இறைமைத் தன்மை வெளிப்பட்டது என்று கூறிவிட முடியாது. ஒவ்வொரு செயலிலும் அவனது சக்தி வெளிப்பட்டுக் கொண்டே இருந்திருக்கிறது. ஆழ்வார்கள் கண்ணனின் உண்மையான உருவத்தை அறிந்திருந்ததால் தான், அனைத்து செயல்களையும் (திருவிளையாடல்கள்) பாடி அனுபவித் துள்ளதைப் பாசுரங்கள் வழி அறிய முடிகிறது.

பாசுரங்களில் தமிழ் நாட்டு வழக்குகள்:

ஆழ்வார்கள் பாசுரங்கல் பரக்கக் காணப்படும் கண்ணனைப் பற்றிய பல செய்திகள் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருப் பதற்கு, மகாபாரதம் மற்றும் புராணங்களின் வளர்ச்சியே காரணம் ஆகும். ஆனால், கல்ப பேதம் (காலம்) மற்றும் புராண பேதத்தால் செய்திகளை விளக்கும் முறைகளில் சில வேறு பாடுகள் காணப்படுகின்றன. இதுவரை எடுத்துரைக்கப்பட்ட செய்திகள் சில, புராணங்களில் இடம் பெற்றிருப்பது போன்றும், சில சிற்சில வேறுபாட்டுடனும் கூறியிருப்பது காணத்தக்கது.

இவைகளைத்தவிர, மேலும் சில வரலாற்றுச் செய்திகளான குருந்தமரம் சாய்த்தது, கண்ணன் ஆடிய கூத்துக்கள், ஏழ்விடை செற்று நப்பின்னையை மணந்தது ஆகியவற்றை ஆழ்வார்கள் அருளியிருப்பது குறிப்பிடத்தக்க செய்திகளாகும். இவைகள், காலத்தினால் ஏற்பட்ட மாற்றமாகவும் அல்லது சமூகத்தில் வழங்கிய கதையாகவும் இருந்திருக்கக் கூடும். ஆகவே, அவைகளைத் தமது பாசுரங்களில் வழங்கியிருத்தல் புதிய செய்திகள் போன்று தோன்றக் கூடும். அந்த நிகழ்ச்சிகளுக்குத் தெளிவான அடிப்படைச் சான்று கிடைக்கப்பெறவில்லை என்று கூறவேண்டியுள்ளது. இருப்பினும், இவற்றைக் "கண்ணன் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள்"[76] என்று குறிப்பிடப்படுகிறது இதனால், இக்கதைகள், தமிழ்நாட்டில் வழங்கியிருத்தல் அறியத்தக்கது.

அ. குருந்த மரம் சாய்த்தது:

கம்சனால் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் குருந்த மரமொன்றில் பிரவேசித்திருந்தான். அம்மரத்தின் மீது பூக்கொய்யச் சென்ற கண்ணன் மீது மரம் முறிந்து விழும்படிச் செய்து, கண்ணனைக் கொல்லச் சூழ்ச்சி செய்தான். இதனை அறிந்த கண்ணன், அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன் வலிமையாற் முறித்து அழித்தான் என்பது வரலாறாகும். பூங்குருந்தம் ஒசித்த இந்த வரலாற்றுக்குப் புராணங்களில் சான்று இல்லை. ஆனால், பண்டைய தமிழ் நூல்களான அகநானூறு, சீவகசிந்தாமணி ஆகியவற்றில் சான்றுள்ளது என்பதனை முன் இயலிலே எடுத்துரைக்கப்பட்டது ஈண்டு நினைவு கூறப்படுகிறது. குருந்த மரம் ஒன்றின் கிளையிலே, கண்ணன் மறைந்து கொண்டு, நீராடும் கோபியர்களின் மானத்தை மறைக்க அம்மரக் கிளை களைத் தாழ்த்தியதாக அந்நூல்கள் கூறுவது அறியத்தக்கது.

இங்கு, ஆழ்வார்களின் பாசுரங்கள், 'பூங்குருந்தம் ஒசித்தவன் கண்ணன்' என்று இச்செயலை வலியுறுத்திக் காட்டுகின்றன. அம்மரம் உண்மையில் குருந்தமரம் அன்று; கம்சனால் ஏவப்பட்ட அசுரன் அம்மரத்தில் மறைந்திருந்தான்; அவனை அழித்தவன் கண்ணன் என்பது வைணவ உரையாசிரியர்களின் கருத்து ஆகும். "குருந்த மரம் அடியே பிடித்துத் தலையளவும் பூத்து அழகியதாய், அவுணன் ஏறியிருந்ததாலே கிருஷ்ணனை நலிவதற்கு வாய்ப்புத் தேடியதாய் நின்றது; இஃது அழகியதாய் இருந்தது; முறித்துப் பயன் கொள்வோம் என்று ஒசித்தான்"[77] என இச்செயலுக்கு விளக்கம் கொடுக்கப்படுகிறது.

'பூங்குருந்தம் சாய்த்தது'; 'பூஞ்குருந்தொசித்து' என்ற சொற்றொடர்களை ஆழ்வார்கள் பயன்படுத்தியிருப்பது பாசுரங்கள்[78] வழி அறியவருகின்றது.

"வைஷ்ணவ உரையாசிரியர்கள் கூறும் கருத்தானது (வியாக்யானமானது), பிற்காலத்தில் தோன்றிய புராணக் கதையை ஒட்டி எழுந்ததாகும். உண்மையில் இக்கதை வடநூல் வழக்கைத் தழுவியதன்று, தமிழ் நாட்டு வழக்கைத் தழுவியது"[79] என்று கூறுவது சிந்திக்கத்தக்கது.

ஆ. கண்ணன் ஆடிய கூத்துக்கள்:

கண்ணன் ஆடிய கூத்துக்களுள் குடக்கூத்து, குரவைக் கூத்து இவ்விரண்டினை ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர். இரண்டும்

தமிழ் நாட்டு வழக்கிலிருந்தவை என்பது தெரிய வந்தாலும், ஆழ்வார்கள் இக்கூத்துக்களை எங்ஙனம் அனுபவித்துப் பாடியிருக்கின்றனர் என்று காண்பது ஈண்டு தேவையாகிறது.

குடக்கூத்து:

கண்ணனைக் 'குடமாடு கூத்தன்' என்ற அடைமொழி கொடுத்து, அவனதுகூத்துக்களை அனுபவித்திருக்கக் காணமுடிகிறது, குடக்கூத்து என்பது தலையிலே அடுக்குக் குடம் இருக்க இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க' இரு கைகளிலும் குடங்களை ஏந்தி, ஆகாயத்திலே எறிந்து ஆடுவதொரு கூத்தாகும். "பிராமணர்களுக்குச் செல்வம் விஞ்சினால் யாகம் செய்வது போல, இடையர்களுக்குச் செல்வம் விஞ்சினால், அதனால் உண்டாகும், செருக்கைப் போக்குவீடாக அவர்கள் ஆடும் ஒரு வகைக் கூத்து இதுவாகும்"[80] என்று விளக்கப்படுகிறது.

"குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாடவல்ல வெங்கோவே"
(பெயரிா. திரு. மொ. .2.7.7)

என்று பெரியாழ்வார் கூறுவது நோக்கத்தக்கது. நம்மாழ்வாரின் திருவிருத்தப் பாசுரமும் (38) திருமங்கை ஆழ்வாரின் பாசுரமும் (சி.தி.ம. 12–13) மேற்சொன்ன கருத்தோடு ஒப்பு நோக்கத் தக்கவை.

கண்ணன் குடக்கூத்தாடும் பொழுது,குடங்களைத் தலையின் மேலே எடுத்து வைத்துக் கொண்டு ஆகாயத்திலே சுழன்று வரும்படிக் கூத்தாடும் திறம் கொண்டவன் என்று இக்கூத்தின் சிறப்பினை நம்மாழ்வார்[81] கூறி அகமகிழ்வது இதன்பாற்படும்.

இவ்வாறு, கண்ணன் ஆடும் கூத்தினைப் பெண்கள் எல்லாரும் கண்டு தம்மை மறந்து, அவன் மீது காதல் மீதூரப் பெறுகின்றனர். அந்த அளவிற்கு இக்கூத்து அனைவரையும் கவரக் கூடிய வகையில் அமைந்துள்ளது. என்பது (பெ.தி.ம. 142–143) தெரிய வருகிறது. இவ்வாறு, சில பெண்களைப் பிச்சேற்றும் வகையில் கூத்தாடின முறையைப் பலரும் அறியப் பேசியதோடு 'கூத்தாடிப் பயலோ இவன்? என்று எல்லோரும் அவமதிக்கும் படிச் செய்தும், இப்படியும் கூத்தாடுபவன் ஒருவன் உண்டோ? எனக் கூறும் படியும் அமைந்திருந்தது அக்கூத்து,[82] என்று திவ்யார்த்த தீபிகையில் விளக்கம் கொடுக்கப்படுவது அறியத்தக்கது.

மரக்கால் கூத்து:

கண்ணன்'மரக்கால் கூத்து' என்ற ஒரு கூத்தினைஆடியதாகத் திருமங்கை ஆழ்வார் குறிப்பிடுவது புதிய செய்தியாகும்.

"கன்ற பறை கறங்கக் கண்டவர்தம் கண்களிப்ப
மன்றில், மரக்கால் கூத்தாடினான்"

(பெரிய. திரு. மொ. 11.5.6)

என்பதில், காண்பவர் கண்டு களிக்கும் வகையில் நாற்சந்தியில் நின்று மரக்கால் கூத்தாடினான் என்பது கருத்தாகும். "குடங்களை எடுத்தெறிந்து ஆடுவதொரு கூத்து போல, மரக்கால்களை எடுத்தெறிந்து ஆடுவதொரு கூத்தாகும் என்பர் சிலர். ஆனால், இது வியாக்யானத்திற்குப் பொருந்தாததாகும். மரத்தைக் காலிலே கட்டி ஆடினான் காண்' என்று பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்யான ஸ்ரீஸூக்தி கூறுகிறது. மிக நீண்டதொரு கொம்பை நிலத்திலே நிறுத்தி அதன்மேலே கால் கட்டை விரலை ஊன்ற வைத்துக் கொண்டு அந்த ரத்திலே ஆடுவதொரு கூத்து மரக்கால் கூத்தாகும்"[83] என்று இப்பாசுரத்திற்கு விளக்கம் கொடுக்கப்பட்டிருப்பது அறியத் தக்கது. மற்ற ஆழ்வார்களின் பார்வையிலிருந்து, திருமங்கை ஆழ்வாரின் பார்வை-நோக்கு-அனுபவம் வேறுபட்டு நிற்பதைக் காண முடிகிறது. இக்கூத்திற்கான சான்று புராணங்களில் காணப்படவில்லை என்பது நோக்கத்தக்கது.

குரவைக்கூத்து:

குரவைக் கூத்து (ராஸக்ரீடை) என்ற கூத்தும் தமிழ் நாட்டு வழக்கிலிருந்த கூத்து வகையாகும் என்பது மீண்டும் இங்கு நினைவுக்கூறத்தக்கது. ஆழ்வார்கள் இக்கூத்தினை எவ்வகையில் பாடியிருக்கின்றனர் என்று காண்பது தேவையாகிறது. கண்ணன் பல ஆய்ச்சியரோடு சேர்ந்து ஆடினான் என்பதனை வலியுறுத்திக் குறிப்பிட்டிருக்கின்றனர். "குரவைக் கூத்து என்பது ராஸக்ரீடை என்பதன் தமிழக்கமாகும்"[84]ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகப் பல உருவெடுத்துக் கை கோத்தாடும் கூத்து என்பது முன்னரே எடுத்துக்கூறிய செய்தியாகும்.எனினும், இக்கருத்துப்பட பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் குறிப் பிட்டிருத்தல் இதன்பாற்படும்.

"......உருப்பலவாய்க்
காருந்தடித்தும் கலந்தது போல் இடைக் கன்னியர்கள்
யாருங்களிக்க விடையிடையே கலந்தின்பநலங்
கூருந்திருநடமாடிய மாயம்" (திருவரங்கத்து.58)

ஆழ்வார்கள் பாசுரங்களில், பல உருவமாய் மாறி ஆடினன் என்ற கருத்துக் காணப்படவில்லை. குரவை ஆடினான் என்ற பெயரிலே, ஆய்ச்சியரோடு இணைந்து ஆடினான் என்ற கருத்தளவில் காணப்படுகின்றன. இவ்வாறு, பெண்களோடு ஆடும் கண்ணனை அசோதை கடிந்து கொள்வதாக அசோதை நிலையில் நின்ற பெரியாழ்வார் கூறுவது (பெரியா. திரு. மொ. 2.3.5) அறியத்தக்கது.

"வல்லிசேர் நுண்ணிடை ஆய்ச்சியர் தம்மொடும்
கொல்லமை செய்து குரவை பிணைந்தவர்"
(நம். தி. வா. மொ. 4.2.2)

"இளையாரொடும் மன்றில் குரவை பிணைந்தமால்"
(பெரிய. திரு. மொ. 11.2.1)

"ஆடியசைந்து ஆய்மடவாரொடு நீபோய்
கூடிக் குரவைபிணை கோமளப் பிள்ளாய்"
(மேற்படி 10 8.9)

என்று ஆழ்வார்கள் குறிப்பிடுவது குரவைக் கூத்தினைப் பற்றிய தாகும். இக்கூத்துக்கள் பற்றிய குறிப்புக்கள் சிலப்பதிகாரத்தில் கிடைக்கப் பெற்றிருந்தாலும், அதிகமான விளக்கங்கள் இடம் பெறவில்லை. ஆழ்வார்கள் கண்ணன் ஆடிய இக்கூத்துக்களை அனுபவித்துப் பாடியதனை உரையாசிரியர்களும் அனுபவித்துக் கண்டதால் இவற்றை விளக்க முற்பட்டுள்ளனர். ஆதலால், மீண்டும் இச்கூத்துக்களைப் பற்றிய எடுத்துக்கூறி,ஆழ்வார்களின் நோக்கில்எவ்வகையில்இடம்பெற்றுள்ளன என்பதனை நோக்கவே ஈண்டு எடுத்துரைக்கப்பட்டனன்

இ. கண்ணன் ஏழ்விடை செற்றது:

கண்ணன் மனைவியாக நப்பின்னை கருதப்படுகிறாள். ஏழ்விடைகளை அடக்கி நப்பின்னையை மணந்ததாகக் கூறப் படுகிறது. கண்ணன் நப்பின்னையோடும் பலராமனோடும் குரவைக் கூத்து ஆடியதாகச் சிலப்பதிகாரத்தில் கூறியது தெரியவருகிறது. இங்கு ஆழ்வார்கள் பார்வையில், கண்ணன்

நப்பின்னையை மணந்த செய்தியும் நப்பின்னையின் சிறப்பும் எவ்வகையில் அமைந்துள்ளன என்பதனைக் காண்பது தேவையாகிறது.

கண்ணன் ஏழு எருதுகளை அடக்கி நப்பின்னையை மணந்து கொண்டான் என்ற செய்தியை அனைத்து ஆழ்வார்களும் வலியுறுத்திக் கூறியிருப்பது நோக்கத்தக்கது. கண்ணனது வீரச் செயலை அனுபவித்திருப்பது காண முடிகிறது.

"நப்பின்னை தன் திறமா நல்லிடை யேழவிய
நல்லதிறல் உடைய நாதவனும் ஆனவனே"
(பெரிய. திரு. மொ. 1.5.7)

"ஆயர் மடமகள் பின்னைக்காகி அடல்விடை யேழினையும்
வீயப் பொருது வியர்த்து நின்றானை"
(மேற்படி. 4.1.4)

என்று பெரியாழ்வார் கூறியிருப்பது அறியவருகின்றது.

"காம்பணைத்தோள் பின்னைக்காய் ஏறுடனேழ் சென்றதுவும்"
(நம்.தி.வா.மொ. 2.5.7)

"கொடியேரிடையாள் பொருட்டாக வன்தாள்
விடையேழன்றடர்த்த" (பெரிய.திரு.மொ. 8.6.1)

என்று கூறும் பாசுரங்களும் ஒப்பு நோக்கத்தக்கன. இக்கருத்துப் பட பல பாசுரங்கள்[85] திவ்வியப் பிரபந்தத்தில் பரக்கக் காண முடிகின்றன.

நப்பின்னை ஆயர்குலத்தினில் தோன்றியவள் என்பது தமிழ் நாட்டு மக்களின் நம்பிக்கையாகும். ஆழ்வார்களும் பின்னை, ஆயர் குடியில் தோன்றியவள் என்பதனை,

"தன்துணை ஆயர் பாவைநப்பின்னை"
(பெரிய.திரு.மொ. 2.3.5)

"குல ஆயர் கொழுந்து" (மேற்படி. 5.6.11)

"ஆயர்தங் கொம்பினுக்கே" (திருவிருத். 21)

என்றடிகளில் குறிப்பிட்டுள்ளது காணத்தக்கது.

கண்ணன் ஏறு தழுவிய வரலாற்றை ஆழ்வார்களின் பாசுரங்களிலிருந்து விரிவாக அறிய இயலவில்லை. ஆனால் அவற்றிற்குச் சிறப்பு மிக்க உரைவிளக்கம் வரைந்த உரை

யாசிரியர்கள் இதை விரித்துரைத்திருக்க அறியமுடிகிறது. "தாழ்விற்கு எல்லையான ஆயர் குலத்திலே கிருஷ்ணனாக வந்து பிறந்து தன்னைப் (நப்பின்னை) பெறுகைக்குச் (கன்யா) சுல்கமாக இட்ட யமனை ஒத்தவைகளான இடபங்களின் கொம்புகளின் இடையிலே கருமறிப் பாய்ந்தாற் போல"[86] என்று கூறப்படுகிறது. திருப்பாவை வியாக்யானங்களிலிருந்து, "கண்ணனுடைய வளர்ப்புத் தாயாகிய இடைக்குல மடந்தை யசோதையின் தமையன் கும்பகன் என்பது தெரியவருகிறது. அவனுடைய தொழுவத்தில் வளர்க்கப்பட்டு வந்த ஏழு காளைகள் மக்களுக்கும் பசுக்களுக்கும் பெருந்துன்பம் செய்து வந்தன. இக்காளைகளை அடக்குபவனுக்குத் தன் மகள் நப்பின்னையைத் திருமணம் செய்து கொடுப்பதாக அறிவித்தான். இதில் வெற்றி பெற்று, நப்பின்னையைக் கண்ணன் மணந்தான்"[87] என்ற செய்தியும் இடம்பெறக் காணமுடிகிறது.

கண்ணன் சரிதங்களைச் சிறப்பாக எடுத்துக்கூறும் மகாபாரதம், விஷ்ணு புராணம் மற்றும் பாகவத புராணம் ஆகியவற்றில் நப்பின்னையைப் பற்றிய வரலாறு காணப்பட வில்லை. நாக்னஜித் என்ற பெண்ணின் (நக்னஜித் என்பவன் மகள் நாக்னஜித் அல்லது சத்தியவதி) வரலாற்றோடு,[88] ஒப்பிட்டு அவளையே நப்பின்னையாக ஆழ்வார்கள் குறிப்பிட்டிருக்கக் கூடும் என்று எண்ண இடமுண்டு. அவளுடைய சரித்திரத்திலும் ஏறுதழுவுதல் என்பது இடம் பெற்றிருப்பதால் அதைக் கொண்டு இவ்வாறு கூற முயற்சிக் கலாம். ஆனால், அவள் அரசகுமாரியாகக் கூறப்பட்டிருக்கிறாள். கண்ணன் திருவாய்ப்பாடியில் வளர்ந்த பொழுது மணந்து கொண்டதாகவும் கதை கூறப்படவில்லை. நப்பின்னையை ஆயர்மகள் என்று தெளிவாகவே ஆழ்வார்கள் வருணித்திருப்பது நோக்கத்தக்கது ஆதலால் நாக்னஜித் என்பவளை நப்பின்னை யாகக் கொள்ள இடமில்லை என்று கூறலாம்.

நந்தகோபருடைய சகோதரியாக நாக்னஜித் கூறப்பட்டு வருகிறாள். இவளே நீளா தேவியின் அவதாரமான நப்பின்னை என்றுங் கூறப்படுகிறது என்று பாகவத புராணத்தின் விளக்க வுரையில்[89] குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தியினை, ஆசாரியர்கள் பயன்படுத்தி விளக்கம் தந்திருக்கின்றனர். ஆழ்வார்கள் எந்த இடத்திலும் நப்பின்னையைக் குறிக்க 'நீளா'

என்ற பெயரைக் குறிக்கவில்லை அப்படியிருக்க ஆசாரியர்கள் இச்சொல்லை அதிகம் பயன்படுத்தியிருக்கின்றனர்.

"திருமகள் மண்மகள் ஆயர்
மடமகள் என்றிவர் மூவர்" (நம்.தி.வா.மொ. 1.9.4)

"கூந்தல்மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும்
குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன் தன்னை"
(மேற்படி. 5.6.11)

என்று ஆழ்வாரின் பாசுர அடிகள், திருமாலின் முத்தேவியரைப் பற்றிக் குறிப்பிடுகையில் ஆயர்குல மங்கையாக நப்பின்னையைக் குறிப்பிட்டிருக்கக் காணலாம். நீளாதேவியின் ஸ்தானத்தில் நப்பின்னையை ஆழ்வார்கள் ஏற்றுக் கொண்டிருக்கக் கூடும் எனத் தெரிகிறது. 'பெருமான் பரமபதத்தில் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி என்று மூன்று பிராட்டிமார்களோடு கூடியிருப்பதாக ஸ்ரீபாஞ்சராத்திர ஆகம சாஸ்திரங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது'.[90] எனத் தெரியவருகிறது. இதனடிப்படையில், ஆழ்வார்கள் நப்பின்னைப் பிராட்டியை நீளாதேவியின் அம்சமாகக் கருதி கண்ணனின் மனைவியாகக் குறிப்பிட்டிருப்பது[91] அறியவருகிறது.

வடநாட்டு கண்ணன் பக்தி இயக்கத்தில், வட இந்திய மொழிகளில் கண்ணனுடைய காதலியாக 'ராதை' எனும் ஆயர் மகள் சித்தரிக்கப்படுகிறாள். ஆனால், அவளுடைய தோற்றம் பற்றி ஒன்றும் அறிய முடியவில்லை. கண்ணனுடன் சிறு வயதில், ஆயர்பாடியில் ஆடிப்பாடி மகிழ்ந்த கோபியருள், கண்ணனுடைய உள்ளத்தைக் கவர்ந்த ஓர் அழகிய இளம் ஆயர்மகள் குறிப்பிடப்படுவது பாகவத புராணத்தின்[92] வழி அறிய முடிகிறது. கண்ணனும் அவளைத் தன் காதலியாகப் போற்றி வாழ்த்தியிருக்கிறான். ஒரு சமயம், அவளைத் தனியே காட்டிற்கு அழைத்துச் சென்று கண்ணன் களியாட்டத்தில் ஈடுபட்டதாகப் புராணம் கூறுகிறது.

"தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச்
சோலை தடங்கொண்டு புக்கு
முத்தார் கொங்கை புணர்ந்திரா நாழிகை
மூவேழு சென்றபின் வந்தாய்"
(பெரியா.திரு.மொ.3.1.10)

என்று பெரியாழ்வார் குறிப்பிடும் செய்தியும், மேற்கண்ட பாகவத புராணக் கருத்தும் ஒன்றாக இருத்தல் அறிந்தக்கது. இந்தக் கோபியைத்தான் பிற்காலத்தில் ராதையாகக் கருதி வந்திருக்கக் கூடும். "கண்ணனுடன் சென்ற அந்தப் பிரியமான ஆயர்மடமகள் ஸ்ரீராதாதேவி என்பது மணவாள மாமுனிகளின் கருத்தாகும். இதனை நன்குணர்ந்தால், நப்பின்னை நங்கையே ஸ்ரீராதாதேவியாகக் குறிப்பிடப்படுகிறாள் என்பதைத் தெளியலாம்"[93] என்று கூறப்படுகிறது.

இளங்கோவடிகளும் ஆழ்வார்களும் கண்ட நப்பின்னை கன்னிப்பெண்ணாவாள். அவளைக் காதலித்த கண்ணன் அவளைத் திருமணம் செய்து கொள்ள எருதுகள் ஏழினை அடக்கியதாகக் கூறுவது தமிழ்நாட்டு மரபாக இருந்து வருகிறது. தமிழகத்து நப்பின்னைப் பிராட்டியே, வட இந்திய இலக்கியங் களில் சிற்சில மாற்றங்களோடு ராதையாக புது வடிவம் கொடுக்கப்பட்டிருக்கக் கூடும் என்று சிந்திக்க இடமுண்டு. ஆகவே, வைணவ மரபில், நப்பின்னைப் பிராட்டியானவள் நீளாதேவியின் அம்சமாகக் கருதப்பட்டு வருகிறாள்.

இயல் தொகுப்புரை:

கண்ணன் திருவிளையாடல்கள் இருவிதக் கோணங்களில் பிரிக்கப்பட்டுள்ளன. மகாபாரதக் கண்ணன், புராணக் கண்ணன் என்ற வகைகளில் கண்ணனின் திருவிளையாடல்களைக் காண இவ்வியல் முற்பட்டுள்ளது. இவ்வாறு, இதிகாச புராணங்களில் குறிப்பிடப்படும் கண்ணனின் திருவிளையாடல்கள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலிருந்து எவ்வகையில் ஒன்றுபடுகின்றன; எவ்வகையில் வேறுபடுகின்றன என்பது பாசுரங்கள் வழி புலப்படுத்தப்பட்டுள்ளது.

காண்டவ வனத்தை எரித்தல், பாஞ்சாலி மற்றும் பாண்டவர்களுக்குத் துணையாக இருத்தல், துரியோதன னிடத்துத் தூதுவனாகச் சென்றது, பாரதப் போரில் பங்கு கொண்டு பார்த்தசாரதியாய் நின்றது, ஆழி கொண்டு சூரியனை மறைத்தது ஆகிய செயல்கள் மகாபாரதத்தில் இடம் பெற்றிருப் பவைகளாகும். அவைகளை ஆழ்வார்களும் சுட்டிக் காட்டி யுள்ளமை ஒப்பு நோக்கத்தக்கவை. மேலும், பாஞ்சாலியின் சபதத்தை முடிப்பதற்காகவே, கண்ணன் தூதுவனாக நடந்ததும்

தேரோட்டியாகச் செயல்பட்டதுமான செயல்களைச் செய்தான் என ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளது அறிய வருகின்றது, இவ்வாறு, பாரதக் கூறுகள் குறைந்ததாகவே காணப்படு கின்றன.

திவ்வியப் பிரபந்த பாசுரங்களில் பரக்கக் காணப்பெறுவது கண்ணன் லீலைகளே ஆகும். கண்ணனது திருவிளையாடல்களை, கண்ணன் செய்த குறும்புகள், கண்ணனது வீரதீரச் செயல்கள், கண்ணனின் இறைமைத் தன்மை, பாசுரங்களில் இடம்பெறும் தமிழ் நாட்டு வழக்குகள் என்று நான்குவிதப் பார்வைகளில் பிரித்து, ஆழ்வார்கள் இத்திருவிளையாடல்களில் ஆழங்கால்பட்டு அனுபவித்த நிலைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆழ்வார்கள் கண்ணனது இளமைப் பருவ விளையாட்டுகளில் திளைத்து அனுபவித்துள்ளனர். குறிப்பாக, பெரியாழ்வார் அனுபவித்தது போன்ற, சிறப்பினை மற்ற ஆழ்வார்களின் அனுபவ நிலைகளில் காண இயலாது பெரியாழ்வார் அசோதை யாகவே மாறி நின்று தாய்மை உணர்வில் அருளியிருப்பது இவண் எண்ணத்தக்கது. தன் மகனின் குறும்புச் செயல்களால் ஒரு தாய் எப்படியெல்லாம் அவதிப்படுகிறாள் - மனம் வருத்த மடைகிறாள் – ஊர் மக்களால் பழிச் சொற்களைப் பெறுகிறாள் என்பதனைப் பாடி அகமகிழ்ந்துள்ளது அறியத்தக்கது. புராணக் கூறுகளோடு ஒத்திருப்பவைகளாகப் பெரியாழ்வாரின் பாசுரங்கள், இடம்பெற்றிருக்கக் காணலாம். கண்ணன் விளையாடியது, குறும்புச் செயல்கள் செய்ததுஆகிய அனைத்தும் பெண்களிடத்திலாகும். இவை, பரமான்மவிற்கும் ஜீவன்மாவிற்கு மிடையே உள்ள உறவினை விளக்கிக் காட்டுவனவாக அமைகின்றன. இத்தகையக் குறும்புகளினால் மனம் தாங்க முடியாத அசோதை, கண்ணனை ஆநிரை மேய்க்க அனுப்பி விடுவதாகக் காட்டுமிடம் அக்நலத் தொழிலைக் குறிப் பிடுவதாகக் கொள்ளலாம். கண்ணன் ஆயர் குலத்தினில் வளர்ந்து, அம்மக்களைப் பல கொடுமைகளிலிருந்து காப்பாற்றிய தால் அவர்கள் தம் தொழுகுலத் தெய்வமாகவே கண்டிருக் கின்றனர். எத்தனைக் குறும்புகள் செய்தாலும், அவனிடம் கொண்டிருந்த அன்பு சற்றும் குறையாத அளவிலேயே அவனைக் கொண்டாடி வந்திருக்கின்றனர் என்பது தெரியவருகிறது. ஆதலால், கண்ணனை,ஆயர் குலத்தினில் வளர்ந்து வந்ததாகவே ஆழ்வார்கள் வலியுறுத்திக் காட்டியுள்ளனர்.

கண்ணன் செய்த குறும்புகளுள் ஆழ்வார்களால் பெரிதும் அனுபவிக்கப்பட்ட செயல் வெண்ணெய்க் களவுச் செயலாகும். ஆழ்வார்கள் அனுபவித்தது போன்று புராணங்கள் அத்தகைய சிறப்பாக எடுத்துரைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். வெண்ணெய் களவாடியது, தயிர் நெய் திருடி உண்டது, இக்களவுச் செயலால் தாயிடம் அகப்பட்டுக் கொண்டது, அதனால் உரலில் கட்டுண்டது, ததிபாண்டவன் என்ற தயிர் விற்பவனுக்கும் அவனது தாழிக்கும் வீடுபேற்றை அளித்தது ஆகிய செயல்களை விரிவாகவே ஆழ்வார்கள் வருணித்துள்ளது சிறப்பிற்குரியது. இத்திருவிளையாடலினால் கண்ணனுக்கு வெண்ணெய்க்காடும் பிள்ளை, தாமோதரன் முதலிய சிறப்புப் பெயர்கள் உண்டானதை ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர். ஆழ்வார்கள், கண்ணன் இடையர் குலத்தில் வளர்ந்து, இத்தகைய இழி செயலான வெண்ணெய்த் திருடி உண்ட செயலை வலியுறுத்திப் பாடியிருப்பினும், பல நோக்கு களில் ஆழங்கால் பட்டு, அனுபவித்துப் பாசுரங்கள் அருளியுள்ளனர். இதனால், இத்திருவிளையாடல், புராணத்தில் கூறப்பட்டதை விட ஆழ்வார்கள் கூறியதே சிறப்பானதாகப் போற்றப்பட்டு வருகின்றது. குறிப்பாக, வெண்ணெயைத் திருடி உண்பதற்காகவே, இழிவான இடையர் குலத்திலே வளர்ந்து வந்திருக்கிறான் என்று அவனது அவதார நோக்கத்தினை ஆழ்வார்கள் குறிப்பிட்டுக் காட்டியிருப்பது சிறப்பான செய்தியாகும்.

பூதனை, சகடாசுரன், தேனுகன், பகாசுரன், போன்ற அசுரர்களையும், கம்சன், முதலிய பலநாட்டு அரசர்களையும் கொன்ற நிகழ்ச்சி வீரதீரச் செயல்களின் பாற்படும். பூதனைக் கொல்லப்பட்டதை அதிகமாகப் பாடியுள்ளவரும் செறிந்த கருத்துக்கள் கொடுத்தவரும் திருமங்கை ஆழ்வார் என்று குறிப் பிடலாம். விஷ்ணுபுராணம் மற்றும் பாகவத புராணம் கூறுவன போல 'தாய் வடிவு கொண்டு வந்த பேய்ச்சி' என்றும், ஹரிவம்சம் கூறுவது போல 'பறவை வடிவத்தோடு வந்து மாறியவள்' என்றும் கூறுவன எல்லாம் ஆழ்வார்கள் பாசுரங்களோடு ஒத்து இயைவனவாக அமைந்துள்ளன. ஆகவே, ஆழ்வார்கள் பாசுரங்களின் கருத்துக்கள், ஒரே புராணத்தின், கருத்தோடு ஒத்து காணப்படுவனவாக இல்லை. ஹரிவம்சம்,

விஷ்ணு புராணம், பாகவத புராணம் ஆகிய இவற்றோடு ஒப்பு நோக்கும்படியாக அமைந்துள்ளன.

கண்ணன் சாந்தீபினியின் புத்திரனை மீட்கும் செயலை, பெரியாழ்வார், திருமங்கை ஆழ்வார் இருவர்மட்டுமே குறிப்பிட்டுள்ளனர். இதனால் மற்றைய ஆழ்வார்கள் அறிந்திருக்கவில்லை என்று கூறமுடியாது. மக்கள் மத்தியில் விழிப்பூட்ட வல்ல, மக்கள் அறிந்த நிகழ்ச்சிகளைப் பாடுதலே மற்றையோர் வழக்கமாகக் கொண்டிருந்த காரணத்தினால் பாடாதிருந்திருக்கலாம்.

கண்ணன் மருத மரத்தை முறித்தது, அசுரர்களான பகன், தேனுகன், கபித்தாஸுரன் - வத்ஸாஸுரன், அரிஷ்டன், கேசி, காளியன் இவர்களை எதிர்த்தது, கோவர்த்தனமலையை எடுத்தது, குவலையாடபீடம் என்ற யானையை அடக்கியது, மல்லர்களை அடக்கியது, முதலிய திருவிளையாடல்கள் பாகவத புராணத்தோடு ஒப்பு நோக்கத்தக்கனவாகும்.

ஆழ்வார்களுக்கே உரிய திருவிளையாடல்கள் சில தமிழ் நாட்டு வழக்குகளாகக் கருதப்பட்டு வருகின்றன. அவைகளுக்குப் புராணங்களில் ஆதாரம் இல்லை. குருந்தொசித்தல், குரவையாடியது, குடமாடியது, மரக்கால் கூத்து, நப்பின்னைத் திருமணம் முதலியன தமிழ் நிலத்திற்கே உரிய கண்ணன் திருவிளையாடல்களாகக் கூறப்படுகின்றன. இவற்றில், மரக்கால் கூத்துப் பற்றிய செய்தியினைத் திருமங்கை ஆழ்வார் மட்டுமே குறிப்பிட்டிருத்தல் நோக்கத்தக்கது. நப்பின்னையைக் கண்ணனின் மனைவியாக - ஏழ்விடைகளை அடக்கிக் கண்ணன் மணம் செய்து கொண்டவள் என்ற கருத்துப்பட ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர். நப்பின்னையை மணந்த செய்தியினைத் திவ்வியப் பிரபந்தத்தில் பரக்கக் காணமுடிகின்றது. நப்பின்னையானவள் நீளாதேவியின் அம்சமாக வைணவ மரபில் ஆசாரியர்கள் கருதி வந்திருக்கின்றனர். நப்பின்னையின் கதையானது புராணங்களில் சிற்சில வேறுபாட்டுடன் காணப்படுவது அறியத்தக்கது. இருப்பினும், ஆழ்வார்களால் குறிப்பிடப்படும் நப்பின்னை, கண்ணனின் மனைவி ஆயர்மகள் என்பதும் வலியுறுத்திக் காட்டப்பட்டுள்ளது.

கண்ணனது செயல்கள் அனைத்தும் தெய்வ சக்தி அதிமானுட சக்தி) கொண்டவை என்றாலும், அவைகள் வீரத்தோடு இயைந்து காணப்பட்டவை. ஆனால், தெய்வத் தன்மையை (இறைமைத் தன்மை) உணரும்படி செய்ததாகச் சிலவற்றைக் கூறமுடியும். அசோதை கண்ணன் வாயினில் உலக மேழுங் கண்டது, உத்தரையின் சிசுவை உயிர்ப்பித்தது, அர்ச்சுனன் கிருஷ்ணனின் தரிசனத்தைக் (விஸ்வரூபம்) கண்டது முதலிய சில நிகழ்ச்சிகள் இதன்பாற்படும். அவற்றையும் ஆழ்வார்கள் குறிப்பிட்டு அருளியிருப்பது அறியவருகின்றது.

கண்ணனது லீலைகளைப் பாடவிழைந்த ஆழ்வார்கள், கண்ணனின் உருவ அமைப்பினையும் (Iconography) சிறப்பாக எடுத்துரைத்துள்ளது காணத்தக்கது. வெண்ணெய்க்காடும் பிள்ளையின் உருவம், பார்த்தசாரதி உருவம், புல்லாங்குழல் ஊதும் அழகு, காளியநர்த்தனம் அமைப்பு, கூத்தாடும் அழகு ஆகிய உருவ அமைப்புக்களையும் திருவிளையாடல்களோடு இணைத்துப் பாடியிருப்பது சிறப்பிற்குரிய செய்திகளாகும் இவ்வுருவ அமைப்புக்கள் இன்றும், ஓவியம், சிற்பம்,வரைபடங்கள் போன்ற கலை அமைப்புக்களில் இடம்பெற்றிருத்தல் மூலம் இவ்வமைப்புக்களின் சிறப்பு மற்றும் செல்வாக்கு அறியத்தக்கது.

கண்ணனது 'திவ்விய சேஷ்டிதங்கள்' என்று கூறப்படும் திருவிளையாடல்களில் (லீலைகள்) ஆழ்வார்கள் மோகித்துக் கிடந்து ஆழங்கால்பட்டிருப்பது பாசுரங்கள் வழிப் புலப்படுகிறது. கண்ணனது திருவிளையாடல்களைப் பாடி அனுபவித்த தோடன்றி, அவர்களின் பக்தி நெறியில் அவை பெரிதும் இடம் பெறலாயின. இதனால், ஆழ்வார்கள் கண்ணனை வேறு சில கோணங்களிலும் அனுபவிக்க எண்ணியிருக்கின்றனர் என்பது தெரிய வருகிறது. ஆகவே, கண்ணனை அனுபவிக்கும் முறைகள் பல இருப்பினும், அவனது திருவிளையாடல்களைப் பாடி இன்புறுதல் ஒரு வகையாகக் குறிப்பிடலாம். ஆழ்வார்களின் நோக்கம் கண்ணனது லீலைகளைப் பாடி மகிழ்வதே என்று கூறுமளவிற்குக் கரும்பின் சுவை போன்று ஆழங்கால் பட்டிருப்பது இதுகாறும் கூறிய கருத்துக்கள் வழி அறியப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புக்கள்

1. தே. பத்மாசினி., பெரியவாச்சான் பிள்ளையின் திருவாய் மொழி வியாக்யானம் – ஓர் ஆய்வு (முனைவர்ப்பட்ட, ஆய்வேடு)., தொ. 1., ப. 362.
2. ஆ. வேலுப்பிள்ளை., தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும்., ப. 91.
3. எஸ். வையாபுரிப் பிள்ளை., இலக்கிய உதயம்., தொ. 4., ப. 210.
4. சுவாமி சித்பவானந்தர்., ஸ்ரீமத் பகவத் கீதை, முகவுரை ப. 5
5. பெரிய. திருமொழி., (6,7,8,9 – பத்துக்கள்), திவ்யார்த்த தீபிகை உரை., 6.7.8., ப. 67
6. தெ. ஞானசுந்தரம்., பெரிய. திருமொழி., (முதல் 200 பாசுரங்கள்), 2.4.2., ப. 400
7. பெரிய. திரு. மொ., 6.7.8

    "பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப்
    பாரதத்துக் கந்தார் கயிற்றுக்கழல் மன்னர்
    கலங்கச் சங்கம் வாய் வைத்தான்"

8. பெரிய. திரு. மொ. 4.6.6., 5.3.4., 7.3.4., 8.5.4., 10.9.5., நம். தி. வா. மொ. 3.2.4., 3.5.7,. 3.6 10., 5.7.4.: 5.10.1., 6.8.3., 10.6.4.
    பே.மு.தி. 28, 60.
9. பெரியா. திரு. மொ. 4.1.7., 1.8.6.,
    நம்,தி.வா.மொ. 3.6.10., 4.6.1.,
    பெரிய.திரு.மொ. 1.8.4., 3.1.9., 6.8.8., 9.1.9., 9.9.8.,
10. அ. லெ. நடராஜன்., மகாபாரதம்., 3–ஆம் பகுதி., துரோணப்பருவம்., ப. 152.
11. "விசயற்காய் விறல் வியூகம் விள்ளச்
    சிந்துகோன் விழ ஊர்ந்த விமலனூர்"

    (பெரிய.திரு.மொ. 6.5.8)
12. ந. சுப்புரெட்டியார்., விட்டுசித்தன் விரித்த தமிழ்., ப. 120

13. பெரியா.திரு.மொ. 2.9.3., 2.10.2., 3.1.2., 3.1.4., 3.1.6., 3.1.7., 3.1.8., 3.1.9., 3.1.10., 3.2.1., 3.2.2., 3.2.3., 3.2.4., 3.2.5., 3.2.7., 3.2.8., 3.2.9., 3.2.10.,

14. "வேர்த்துப் பசித்து வயிறசைந்து
வேண்டடி சிலுண்ணும் போதீ தென்று
பார்த்திருந்து நெடு நோக்குக் கொள்ளும்
பத்த விலோசனத்துய்த்திடுமின்"

(நாச்.திரு. 12.6)

15. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம்., திவ்யார்த்த தீபிகை உரை., பா.எ.21., ப.88.
"சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீ
ராட்டியந்தூபந் தரா நிற்கவே யங்கு, ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ண போந்து"

(திருவிருத். 21)

16. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம்., கி. வெங்கடசாமி ரெட்டியார் (உ.ஆ)., ப. 92

17. "நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்கா"

(நம்.தி.வா.மொ. 7.5.2)

18. சி.தி.ம. 30–37
"சீரார் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...
ஆரா வயிற்றினோ டாற்றாதான்"

19. சி.தி.ம. 27–28

20. சிறிய திருமடல் வியாக்யானம்., 30–33., ப. 77

21. இயற்பா ஆயிரத்தின் முதல் ஸம்புடம்., திவ்யார்த்த தீபிகை உரை., ப. 68.

22. "தாயர் மனங்கள் தடிப்பத் தயிர் நெய்யுண்டே
எம்பிராக்கள்" (பெரிய.திரு மொ. 10.5.2)

23. "தொடுவே செய்து இளவாய்ச்சியர் கண்ணினுள்
விடவே செய்து விழிக்கும் பிரானையே"

(நம்.தி.வா.மொ. 1.7.6)

24. பெரிய. திரு. மொ. 2.10.6., 6.7.4

25. "உந்தம் அடிகள் முனிகள் உன்னை நான்
என் கையிற் கோலாற்
நொந்திட மோதவுங் கில்லேன்"
(பெரிய. திரு. மொ. 10.4.8)

26. எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன்., வெண்ணெய்க்கு ஆடும் பிள்ளை ப. 63.

27. திருவாய்மொழி., ஈட்டின் தமிழாக்கம்,, முதற்பத்து, 1.4.8., ப. 214.

28. "முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்
முகிழினம் சிறுத்தாமரைக் கையும்
எழில் கொள்தாம்பு கொண்டடிப்பதற்கெள்கு நிலையும்
வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சி நோக்குமந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்
தொழுகை யுமிவை கண்டவ சோதை
தொல்லையின்பத்திறுதி கண்டாளே"
(பெரு. திரு. 8.7)

29. "மைந்நம்பு வேற்கண் நல்லார் முன்மை
பெற்ற வளைவண்ண நன்மேனி
தன் நம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது அவனிவை
செய்தறியான்
பொய்ந்நம்பி புள்ளுவன் கர்வம் பொதியறை போகின்ற
வா தவழ்ந்திட்டு
இந்நம்பி நம்பியா ஆய்ச்சியர்க்குய்வில்லை என்
செய்கேனென் செய்கேனோ"
(பெரிய. திரு. 10.7.4)

"தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு
வருவான்
பொன்னேய் நெய்யோடு பாலமுதுண்டு ஒரு புள்ளுவன்
பொய்யே தவழும்"
(பெரியா. திரு. மொ. 3.1.1)

30. பாகவதபுராணம் - (10-9; 1-18)

ஒரு சமயம், கண்ணன் முலைப்பாலுண்ண விரும்பி, தயிர் கடைந்து கொண்டிருந்த அசோதையிடம் வந்து, மத்தைப்

பிடித்துக் கொண்டு அவளுடைய அன்பை வளர்ப்பவனாய், தயிர்க்கடைய விடாமல் தடுத்தான். மடியில் ஏறிய கண்ணனுக்கு அன்புடன் பால் கொடுத்தாள். அச்சமயம், அடுப்பில் வைத்த பால் பொங்கி வழியவே, இவனுக்குப் பால் கொடுப்பதை நிறுத்தி விட்டு எழுந்து சென்றாள். அதனால் கண்ணன் கோபம் கொண்டவனாய், அழுது கொண்டு, கற்குழவியால் தயிர் கடையும் பாத்திரத்தை உடைத்து, வீட்டினுள் சென்று வெண்ணெய் உண்ணத் தலைப்பட்டான், அசோதை, உடைந்திருந்த தயிர்ப்பாத்திரத்தைக் கண்டு, தன் பிள்ளைதான் செய்திருக்கிறான் என்றுணர்ந்து கண்ணனைத் தேடினாள். வீட்டினுள் ஒரு உரலின் மேலமர்ந்து கொண்டு,தன்தோழர்களுக்கு வெண்ணெய் கொடுத்துக் கொண்டு கள்ள விழிதோன்ற விழிப்பவனுமான கண்ணனைக் கண்டாள். அதற்குள், கண்ணன் ஓடிவிடவே, அவனைத் துரத்திக் கொண்டு பின்தொடர்ந்தாள். அவனை, பிடித்துவிட்டு அடிக்க மனம் வராததால், அவனைக் கட்ட முயன்றாள், பரமபுருஷனை அவன் தன் மகனாகவே எண்ணியதால் கயிறு கொண்டு, உரலோடு சேர்த்துக் கட்ட தொடங்கினாள். அக்கயிற்றின் நீளம் குறையவே மற்றொரு கயிறையும் அதனோடு சேர்த்தாள். அதுவும் போதவில்லை வீட்டிலுள்ள எல்லா கயிற்றையும் கொண்டு பிணைத்துக் கொண்டே இருந்தாள். இதனைக் கோபியர்கள் அனைவரும் கண்டு வியப்புற்றனர். அதற்குள், கண்ணன், தன் தாய் உடல் வியர்க்க நின்ற வருத்தத்தைக் கண்டு, அன்பினால் தன்னைக் கட்டுவதற்கு உட்படுத்திக்கொண்டான்.

31. திருவிருத். 98.
 "தஞ்சார் விலாத தனிப்பெருமூர்த்திகள் மாயம் செவ்வே
 நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்
 —னுமீனச் சொல்லே"

32. எம். ஏ. வேங்கடகிருஷ்ணன்., வெண்ணெய்க்கு ஆடும் பிள்ளை. பக். 154–155.

33. மேற்படி., ப. 156.

34. சுவாமி. சித்பவானந்தர்., கண்ணன் என்னும் கடவுள் பக். 32-33

35. தெ. ஞானசுந்தரம்., பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும் பக். 138–139

36. திவ்யப் பிரபந்த அகராதி., ப. 756

37. "மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கைதுஞ்ச
வாய் வைத்த பிரானே
அன்னே யுன்னை அறிந்து கொண்டேன்'.
(பெரியா. திரு. மொ. 3.1.1)

38. "பேய்ச்சி முலையுண்ட பின்னைப் பிள்ளையைத்
பேசுவதஞ்சுவனே"
(பெரிய. திரு. மொ. 10.7.8)

39. இயற்பா ஆயிரத்தின் முதல்ஸம்புடம்., பேய்.மூ.தி29. ப.24.
"பேய்ச்சி பாலுண்ட பெருமனைப் பேர்ந்தெடுத்து
ஆய்ச்சி முலை கொடுத்தாள் அஞ்சாதே"
(பேய்.மு.தி. 29)

40. "பேய்ச்சி முலையுண்ணக் கண்டு பின்னையும்
நில்லா என் நெஞ்சம்'.
(பெரியா. திரு. மொ. 2.4.3)

41. "பிள்ளையரசே நீ பேயைப் பிடித்து முளையுண்ட பிள்ளை
உள்ளவா றொன்றுமறியேன்" (பெரியா. திரு. மொ. 2.8.7)

42. "மனமேவு வஞ்சனையால் வந்த பேய்ச்சி"
(பெரிய. திரு. மொ. 7.8.5)

43. ஹரிவம்சம்., பகுதி. 1., அத்தி. 6., (22-33)

44. முற்பிறவியில், பலி சக்ரவத்தியின் மகள் ரத்நாவளி என்பவள், வாமன் உருவத்துடன் வந்த பெருமானை வாத்சல்ய பாவத்துடன் நோக்கினாள். அவனை தன் மடி மீது வைத்து பால் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவள் இருந்தாள். இதன் காரணமாக, மறுபிறவியில் பூதனையாகப் பிறந்து கண்ணனுக்கு முலைப்பால் கொடுத்தாள். முற்பிறவியிலே வஞ்சக எண்ணத்துடன் இருந்ததால், பூதனை பிறப்பிலும் அவ்வெண்ணம் உண்டாகி கண்ணனால் கொல்லப்பட்டாள். ஆகவே, அவளது ஆசை பூதனைப் பிறப்பின் பொழுது (கிருஷ்ணாவதாரத்தின் பொழுது) நிறைவேறியது.

45. வி. எஸ். இராமஸ்வாமி சாஸ்திரி., ஸ்ரீ கிருஷ்ண சரித்திர விமர்சம்., ப. 33

46 திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும்., திவ்யார்த்த தீபிகை உரை., 1.3.11., ப. 36

47. பேய். மு. தி. 51; தி. ச. வி. 58; பெரியா. திரு. மொ. 1. 2.10; நாச். திரு. 4.7., நம். தி. வா. மொ. 5.3.8; சி. த. ம., பெரிய. திரு. மொ. 1.8.3; 2.10.7; 4.10.1; 8.6.8.

48. திருவாய்மொழி, ஈட்டின் தமிழாக்கம், பகுதி 9. 9.1.3., பக் 12–13.

49. திருப் 13., நாச். திரு. 1.2., 1.10., 4.7., 14.9. நம். தி. வா. மொ. 5.3.8., 5.7.8., 5.7.9., 6.4.6., பெரிய. திரு. மொ, 1.8.1., 7.1.4., 4.9.7., 10.5.7.

50. பெரியா. திரு. மொ. 1.5.4., 2.10.4., 3.6.4., நாச். திரு' 14.9., பெரிய. திரு. மொ. 3.10.7., 8.6.8.

51. சிலப். மதுரை., ஆய்ச். குர., 1,

52. இயற்பா ஆயிரத்தின் முதல் ஸம்புடம்., திவ்யார்த்த தீபிகை உரை.. பூ.இ.தி.93., ப. 75

53. பெரிய. திரு. மொ. 2.5.1., 2.10.7., 4.2.7., 7.3.5., 7.10.7.

54. பெரிய. திரு. மொ. 3.6.4., 4.9.3. நாச். திரு. 12.7.

55. டி. எஸ். ராஜகோபாலன்., நாச்சியார் திருமொழி., ப. 63

56. திருவெழுக் கூற்றிருக்கை, சிறிய திருமடல் – பெரிய திருமடல்., திவ்யார்த்த தீபிகை உரை., ப. 42

57. "தன் பேரிட்டுக் கொண்டு தரணி தன்னில் தாமோதரன் தாங்கு தடவரைதான்" (பெரியா. திரு. 3.5.9)

58. பெரிய. திருமொழி., (10, 11 பத்துக்கள்)., திவ்யார்த்த தீபிகை உரை., 10.10.3., ப.99.

59. 'கோவிந்தன்' என்ற பெயர் பற்றிய கருத்துக்களுக்கு வேறு சான்றுகளும் கிடைக்கப்பெறுகின்றன.

(அ) ருக்வேதத்தில், இந்திரனுக்கு 'கோவிந்தா', 'கேசின் சுதானா, என்ற பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

(P. B. Vidyarthi., Early Indian Religious Thought., P. 101)

இவ்வாறு, இந்திரனுக்கு இருந்த பெயர்கள், மகா பாரதத்தில் கிருஷ்ணன் உயர்நிலை அடைந்த பொழுது அவனுக்குக் கொடுக்கப்பட்டுச் சிறப்புப் பெற்றன. (ஆ)

பாணினியில் இப்பெயர் பற்றிய செய்தியும் குறிப்பிடப் பட்டுள்ளது. 'இப்பெயர் கிருஷ்ணனுக்குக் கொடுக்கப்பட்ட அடைமொழியாகும். கிருஷ்ணன் கோகுலத்தில் வாழ்ந்த பொழுது, ஆவினங்களுடன் கொண்டிருந்த தொடர்பால் இப்பெயர் வழங்கப்பட்டது' என்ற கருத்துண்டு,

(R.B. Bhandharkar., **Saivism. Vaisnavism and Minor Religious Systems**., P. 31) (இ) மகாபாரத சாந்தி பருவத்தில், 'நான் கோவிந்தன்; முன்னொரு காலத்தில் நீரில் மூழ்கிய பூமியை வெளிக் கொணர்ந்தேன் என வாசுதேவன் கூறுவதாகச் சான்றுள்ளது. (E.S. Varadaraja Ayyar., **A History of Tamil Literature** P. 218)

60. ஸ்ரீமத் பாகவத புராணம்., பத்தாவது ஸ்கந்தம்., மதுராலீலை (1)., பக். 127–129
61. ஹரிவம்சம்., அத். 33
62. பொய். மு. தி. 54
63. பேய். மு. தி. 69
64. பெ. திரு. 6. 6.,
65. திருப். 8. 4
66. நம். தி. வா. மொ. 6.4.3., 6.6.10., 7.4.5., 8.4.1.,
67. தி. நெ. தா. 13
68. பெரிய. திரு. மொ. 2.10.7., 3.3.1., 4.2.1., 4.3.7 , 4.6.6., 5.1.3., 5.4.7., 6.2.6., 7.8.6., 8.6.8., 10.8.7.,
69. திருவாய்மொழி., ஈட்டின் தமிழாக்கம் 7–ஆம் பத்து., 7.6.10., ப. 282
70. பெரிய. திரு. மொ, 5.4.7., 7.8.9.
71. பொய்.மு.தி. 39.,
பூ. இ. தி. 92
பேய். மு. தி. 34.,
தி. ச. வி. 43
பெரு. தி. 7.10., 7.11
பெரியா. திரு. மொ. 2.1.4., 2.2.4., 2.6.3., 2.7.6., 2.8.8., 3.2.1., 4.3.2 , 4.7.7., 5.1.4
திரு. 25.1

நாச். திரு. 3.9., 4.6., 4.7., 13.3
தி. குறு. தா. 1.
நம். தி. வா. மொ. 2.4.8., 3.8.9., 6.4.5., 8.4.1., 9.6.11.
பெரிய. திரு. மொ. 2.3.1., 2.6.7., 2.10.7., 3.10.9 4.2.4., 4.3.7., 4.6.6., 4.10.4., 5.4.7, 5.6.6.. 6.7.5., 7.6.5., 7.6.5., 7.7.7., 7.8.9., 7,10.8., 9.2.6., 10.9.3., 11.2.3.

72. "உருப்பிணி நங்கை தன்னை மீட்பான் தொடர்ந்
தோடிச் சென்ற உருப்பனை யோட்டி"
(பெரியா. திரு. மொ. 4.3.1)

73. பேய்.மு.தி. 80; 92
தி. ச. வி. 70; 71
திருப்பல். 7., திருவிருத். 78
நம். தி. வா. மொ. 2.4.2., 3.8.9., 4.8.9., 6.4.8., 7.4.8
திரு. நெ. தா. 20
பெரிய. திரு மொ. 3.4.3. 4.2.5., 4.3.8., 5.1.7., 7.6.3.. 8.6.6.,

74. சிசுபாலன் தருமருடைய இராஜசூய யாகத்தில் கொல்லப் பட்டபிறகு, சால்வன் துவாரகையைத் தாக்குகிறான். அந்தப் போரில் சால்வனும், தந்தவக்ரனும் கண்ணனால் கொல்லப்பட்டனர். கரன் என்பவன் இராம அவதாரத்தில் கொல்லப்பட்ட அரக்கன். இவன் சூர்ப்பணகையின் சிற்றன்னை மகன்.
தி. ச. வி. 59; 107
பெரிய. திரு. மொ. 5.9.5

75. வியாசர் அருளிய மகாபாரதம்., அ.லெ, நடராஜன் (தமிழாக்.)., நான்காம்பகுதி., பக்.191–193.

76. மு. இராகவையங்கார்., ஆராய்ச்சித் தொகுதி., பக். 52–69.

77. தெ. ஞானசுந்தரம்., பெரிய திருமொழி உரையும் தமிழாக் கமும்., 1.8.1., ப.263

78. பொய். மு. தி. 27, 54 62
பேய். மு. தி. 32
நான். திரு. 57
தி. ச. வி. 37; நம்.தி.வா.மொ. 6.4.6; 6.6.8,
பெரிய. திரு. மொ. 1.8.1; 3.8.5; 4.5.4; 4.5.4; 9.10.8. 10.5.7; 11.2.2,

79. பி.ஸ்ரீ. பகவானை வளர்த்த பக்தர்., ப. 111

80. திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும்., திவ்யார்த்த தீபிகை உரை., 2.7.7., பக். 127–128

81. "...............சுழலக்
குடங்கள் தலைமீதெடுத்துக் கொண்டாடி"
(பெரிய திருவந். 31)

82. "கொன்னவிலும் கூத்தனாய்ப் பேர்த்தும் குடமாடி
என்னிவ னென்னப்படுகின்ற வீடறவும்"
(பெ. தி. ம. 143)

83. பெரிய. திருமொழி., (10, 11 பத்துக்கள்)., திவ்யார்த்த தீபிகை உரை., 11.5.6., ப.145

84. தெ. ஞானசுந்தரம் , பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும்., 1.8.4., ப. 271.

85. பொய்.மு.தி. 62.83; பூ.இ தி. 62.63; பேய்.மூ.தி. 25,49,85 நான்.திரு. 23; 33; தி.ச வி. 13,33,40,41,42,55,92,99 பெரு திரு. 2.3., 2.5; 4.1 பெரியா.திரு.மொ. 1.5.7; 2.4.9; 2.7.6; 3.3.3; 4.1.4;
திருப். 18.19.20; நாச்.திரு. 4.7; திருவிருத். 21;
நம்.தி வா.மொ. 1.5.1; 1.7.8; 1.8.7; 2.5.7; 2.9.10; 3.5.2; 3.9.8; 4.2.5; 4.3.1; 4.3.1; 4.3.1; 4.8.4; 5.6.6; 5.7.9; 5.10.2; 6.4.2; 7.2.9; 8.1.7; 9.8.2; 9.8.4; 10.4.3;
பெரிய.திரு.மொ. 1.2.3; 1.4.6; 1.10.7; 2.2.4; 2.3.5; 2.9.9; 2.10.7; 3.1.5; 3.2.7; 3.3.5; 3.4.4; 3.7.7; 3.8.9; 3.10.10; 4.4.4; 4.5.3; 4.5.4; 5.1.6; 5.2.2; 5.9.8; 6.5.4; 6.5.5; 6.6.8; 6.6.9; 6.10.5; 7.7.7; 7.8.8; 8.3.3; 8.6.6; 8.6.7; 8.7.1; 8.7.2; 8.9.3; 10.1.6; 10.9.2; 11.2.2; 11.2.5; 11.2.10; 11.7.9.

86. க.த. திருநாவுக்கரசு., வாழ்வும் இலக்கியமும்., ப. 64.

87. மேற்படி., பக். 64–65.

88. கோசல நாட்டு அரசன் நக்னஜித் என்பவனின் மகள் நாக்னஜித் அல்லது சத்தியவள் என்பவளாவள். அரசன், தன்னுடைய தொழுவத்தில் உள்ள ஏழு காளைகளை அடக்கிப் பிடித்துக் கட்டுபவனுக்கே தன்னுடைய மகளைத் திருமணம் செய்து கொடுப்பதாக அறிவித்தான். இதனை அறிந்த கண்ணன் அங்கு சென்று காளைகளை அடக்க

நினைத்தான். அவ்வெருதுகள் காலநேமி என்ற அசுரனுடைய பிள்ளைகள் என்பதனை அறிந்து கொண்டான். எனவே, தாம் தனித்தனியாக ஏழு வடிவங் கொண்டு அவற்றைப் பிடித்துக் கட்டி அப்பெண்ணை மணந்தான். அவள் கண்ணனுடைய தேவியர் எண்மரில் ஒருத்தியாக விளங்கினாள் என்பது பாகவத புராணத்தால் அறிய வருகின்றது.

(பாகவத புராணம் 10–ஆவது ஸ்கந்தம் துவாரகாலீலை (2); 58. 32–35; பக். 188–189).

89. பாகவத புராணம்., 10–ஆவது ஸ்கந்தம்., துவாரகலீலை (2)., ப. 189.

90. கிருஷ்ணசுவாமி திருவாலாயம் (மலர்)., 'பின்னை மணாளன்'., இரா. அரங்கராஜன்., ப. 7.

## இயல் - நான்கு

# ஆழ்வார்களின் பக்தி அனுபவங்கள்

**இயல் அறிமுகம்:**

தமிழகத்தில் மிகத் தொன்மையும் புகழும் வாய்ந்த வைணவ சமயம் இன்றும் மிகச் சிறந்து விளங்குவதைக் காணமுடிகிறது. இதன் வளர்ச்சிக்கு ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. ஆழ்வார்களின் இறையனுபவத்திற்குப் பண்டைய இலக்கியங் களில் இடம்பெற்றிருந்த கண்ணனின் செல்வாக்கும் புராணங் களின் வளர்ச்சியுமே காரணங்களாகும். கண்ணனைப் பற்றிய செய்திகள் பழந்தமிழ் இலக்கியங்களில் உவமைகளாகவும், சிறப்புக் கூறுகளாகவும் கொடுக்கப்பட்டிருந்தனவே தவிர தனிப் பக்தி இலக்கியமாக உருப்பெறவில்லை.

சங்க காலத்தை அடுத்து வளர்ந்து பக்தி இலக்கிய மறுமலர்ச்சிக் காலத்தில், 'மக்களின் மீது பாடப்பட்ட காதல் பாட்டுக்களின் நிலைமாறி, இறைவன் மீது. காதல் பாட்டுக்கள் பாடும் நிலை வளரலாயிற்று. மேலும். அரசர்களின் வீரச் செயல்கள், வள்ளல்களின் கொடை, ஊர்களின் இயற்கைச் சூழல் ஆகியன குறித்துப் பாடிய காலம் மாறி, இறைவனின் அற்புத விளையாட்டுகள், அருட்செயல்கள். இறைவன் கோயில் கொண்டுள்ள திருத்தலங்கள் ஆகியனக் குறித்துப் பாடும் நிலைமை வளரலாயிற்று. சங்க இலக்கியப் பாடல்கள் கற்றவர்களுக்கு மட்டும் உரியனவாக இருந்து வந்தன. ஆனால், ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்களின் பாடல்கள் கற்றவரோடு மற்றவர்களுக்கும் ஏற்றவாறு, எளிய தமிழ் நடையில் அமைந் திருந்தன. இவ்வாறு, நடை எளிமையும், இசை இனிமையும் கொண்ட பாடல்களின் மூலம் தமிழ் இலக்கியத்தில் ஒரு மாறுதல் ஏற்பட முடிந்தது'[1] என்பது அறியத்தக்கது.

திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் 'நாதமுனி'[2] என்பவரால் தொகுக்கப்பட்டது என்றும், அவைகளை நான்கு பகுப்புக்களாகப் பிரித்தார் என்றும் கருதப்படுகிறது. மேலும், இராமனுஜர்[3] காலத்தைத் தொடர்ந்துவைணவ ஆச்சாரிய பரம்பரை வளர்ந்து வந்தது. இவர்களின் சமயப்பணி, தமிழில் கால் கொள்ளாது, வடமொழியிலேயே வளரத் தொடங்கியது. பாசுரங்களுக்கு உரை கொடுக்கும் பணியில் வடமொழியையே ஆதாரமாகக் கொண்டு செய்தனர். தமிழும் வடமொழியும் கலந்த மணிப் பிரவாளம் என்ற புதிய தமிழ் நடையைப் பின்பற்றிச் சமய நூல்களுக்கு வியாக்யானங்களைத் (உரை) தோற்றுவித்துக் கொண்டனர். திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களுக்குப் பலர்[4] உரை கொடுத்துள்ளனர்.

வைணவர்கள், பிரபந்தத்தை வேதமாகவும், வேதாந்த கிரந்தமாகவும் கருதுகின்றனர். அதனால், உரைகளில் வேத உபநிடதங்கள் இதிகாச புராணங்கள், கீதை ஆகியவற்றைக் கொண்டு பக்தி உணர்வு, பௌராணிகப் பண்பு ஆகியவற்றையும் எடுத்து விளக்கி, அனைத்து மக்களும் புரிந்து கொள்ளும் முறையில் எளிமையான மணிப்பிரவாள நடையில் எழுதியுள்ளனர்.

'ஆழ்வார்கள் விஷ்ணுவைப் பற்றிப் பாடிய பாசுரங்கள் தத்துவப் பொருளை வெளிப்படையாகக் கொண்டிருக்கவில்லை. பக்தி நிலை உணர்வுகளையே அடிப்படையாகக் கொண்டிருந்தன. நாதமுனி இப்பாசுரங்களைச் சேகரித்தார். ஆச்சாரியர்கள் அவற்றிற்குத் தத்துவப் பொருள் வழங்கி, ஸ்ரீ வைஷ்ணவ பாரம்பரியத்தை அதன் அடிப்படையில் நிறுவினர். நாதமுனி களின் முயற்சி இந்தப் பிரபந்தங்களை வேதங்களின் முறையில் நான்கு பகுதிகளாகத் தொகுத்து, நான்கு ஆயிரங்களாக அவற்றை வேதத்திற்குச் சமமானவைகளாகக் கொள்ளும் வழக்கத்தினை ஏற்படுத்தியது[5] என்பது வைணவ சமயத்திற்கு ஏற்பட்ட பெருமையாகும். இதனை, முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளார். ஆசாரிய ஹிருதய சூத்திரம்[6] இக்கருத்தினை வலியுறுத்திக் கூறுகிறது.

ஆழ்வார்கள் கண்ணனை அனுபவித்துப் பாடியிருப்பினும் அவர்களது அனுபவத்தில் ஆசாரியர்களும் பங்கு கொண்டு, அவ்வனுபவங்களைச் சிறப்புடன் எடுத்து விளக்கிப் பிரபந்தப்

பாசுரங்களை மிளிரச் செய்த பெருமை அந்த உரையாசிரியர் களையே சார்ந்தது. அந்த அளவிற்கு வியாக்யானங்களால் மேன்மை பெற்றது திவ்வியப் பிரபந்தம் என்று கூறுமளவிற்கு அமைந்துள்ளன.

'உலகிலுள்ள அனைத்துச் சமயங்களைப் பற்றியும் ஆய்வு ஒன்றினை நிகழ்த்த முற்பட்டால் இறை அனுபவம் என்ற புது எண்ணத்தை முதன் முதலில் அறிமுகப் படுத்யதி பெருமை ஆழ்வார்களையே சாரும்[7] என்ற ஆய்வு முடிபைக் காணும் நிலையினை வைணவம் கொண்டுள்ளது. அந்த அளவிற்கு இறை அனுபவங்களைத் தாம் அனுபவித்ததோடு மட்டுமன்றி மக்களும் அனுபவித்து, பக்தியில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணத்தில் உருவாகியிருப்பது தான் ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களாகும். இதுவே, அவர்களின் நோக்கமும் ஆகும்.

இறைவனை அனுபவித்தல் என்பதில் பலவகை இருக்கலாம். இறைவனின் திருநாமங்களைச் சொல்லி அனுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லிப் பாடி அனுபவித்தல், பாதாதி கேச வருணனைகளைச் சொல்லி அனுபவித்தல், இறைவன் எழுந்தருளியுள்ள திவ்விய தேசங்களைப் பற்றிப் பாடி அனுபவித்தல், ஸ்ரீவைஷ்ணவர்களைப் பற்றிய பாடுதல், என்று பல வகைகளில் பகவத் அனுபவம் அமைகின்றன. இக்கூறுகள் ஆழ்வார்களின் பக்தி அனுபவங்கள், வழிபாட்டு நெறிகள், என்று பிரிவுகளில் அடங்கும் ஆகவே, ஆழ்வார்கள் அனுபவம் என்று எடுத்து கொள்கையில் கண்ணனுடைய அழகை அனுபவிப்பது, கண்ணனின் குணங்களை அனுபவிப்பது என்று பெரும் பிரிவுகளாகக் கொள்ளலாம். குணங்கள் என்பது திருவிளையாடல்களில் அடங்குகிறது. அவ்வனுபவங்களைப் பற்றி, தனி இயலாக இவ்வாய்வேட்டில் மேற்கொள்ளப் பட்டுள்ளது.

இந்த இயலில் கண்ணனின் உடலழகு மற்றும், ஆழ்வார் களின் பக்தி அனுபவங்கள் தனித்தனியாகக் கொடுக்கப்பட்டு விளக்க முற்படுகின்றன.

**ஆழ்வார்கள் கண்ட அழகுத் தெய்வம்:**

பாரதப் பண்பாட்டில், பகவத் கீதையின் பெருமையாலும் பாகவத புராணத்தின் பெருமையாலும் கிருஷ்ணாவதாரத்தின்

சிறப்பு, அழகு ஆகியன மக்கள் மனதை எளிதில் கவர்ந்தன. முதலில், பாகவதத்தின் கதை, கிருஷ்ணனுடைய லீலைகள் மக்கள் மனதைக் கவர்ந்ததைப் போன்று வேறு கதைகள் எதுவும் இந்த அளவிற்குக் கவரவில்லை என்று தான் கூற வேண்டும். அந்த அளவிற்கு அவனது அழகு அனைவரது உள்ளத்திலும் குடி கொண்டு விட்டது.

உலகம் அழகு மயமானது, இந்த அழகை உணரும் உலக உயிரானது, எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து இருக்கும் இறைவனது அழகைக் காண்கிறது. அவ்வழகானது அனைத்து வடிவங்களிலும் வெளிப்பட்டு நிற்பதையும் உணருகிறது. இந்த அழகுணர்ச்சியின் அனுபவமானது, இறைவன் மனித வடிவில் தோன்றி, மக்களை உய்விக்கும் காலத்தில் முழுமை அடைகிறது என்று கூறலாம். அந்த நோக்கத்தில் காணும் பொழுது, கிருஷ்ணாவதாரத்தின் அழகு-சிறப்பு முழுமை பெறுகிறது.

கண்ணனிடத்துத் தெய்வீக சக்திகள் மிளிர்ந்து கொண் டிருந்தன என்பது தொடக்கத்தில் யாருக்கும் தெரியவில்லை. அவனுடைய அழகிலே தம்மை மறந்தவராயினர். உலகஉயிர் களின் ஆத்மாவாகக் கண்ணன் போற்றப்படுகிறான். என்பது பாகவதத்தின் வழி தெரியவருகிறது. ஆகவே, அழகிற்கு இருப் பிடம் பரமாத்மா என்ற கருத்திற்குக் கண்ணனைச் சான்று கூறலாம். அவனுடைய உடலழகு, நிறம், குழலூதும் அழகு, பேச்சுத்திறம், ஆகிய அனைத்துச் செயல்களிலும் அவனது அழகைக் கண்டனர், குறிப்பாகப் பால்ய லீலைகளில் தம் மனதைக் கொடுத்தனர் என்பது பாகவத புராணத்தின் வழி அறியவரும் செய்திகளாகும்.

கண்ணனுடைய இந்தப் பால்ய லீலைகள் கீதையைக் காட்டிலும் சிறப்பிடம் பெற்று, ஆழ்வார்களின் பக்தி நெறியில் முதன்மை இடம் பெற்றன. குழந்தை என்று சொன்ன அளவிலேயே, மகிழ்ந்து விடும் மனம் மக்களிடையே காணப் படுகிறது. அதுவும், அழகுள்ள குழந்தை என்றால், அதனிடம் செலுத்தும் அன்பிற்கு எல்லையே இல்லை.

''குழல் இனிது யாழ் இனிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்'

(குறள். 66)

என்ற குறளின் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது. அந்த அளவிற்குக் கண்ணனின் குழந்தைப் பருவத்தின் மேல் மக்கள் அன்பு கொண்டு, அழகில் மயங்கி போற்றி வந்தனர். இவ்வாறு, வேறு தெய்வத்தின்பால் அவ்வளவு அன்பு கொண்டதன் நிலை குறைவாகவே இருந்திருக்கிறது என்று கூறலாம். அந்த நோக்கில் ஆழ்வார்களும் விலக்கல்லர். அவர்களின், "ஜகன் மோகன்", "வெண்ணெயுண்ட பிள்ளை", "வேணுகோபாலன்" "பாலகோபாலன்" என்ற கண்ணன் கீதாசாரியனைக் காட்டிலும் பிரேமபக்திக்கு-அன்பை அடிப்படையாகக் கொண்ட பக்திக்குக் குறிக்கோளாய்த் திகழ்ந்து வந்தான்.

யசோதையும் நந்தகோபனும் இந்த அழகுக் குழந்தையான கண்ணனைத் தங்கள் செல்வ மகன் என்றே கருதினர். கோபியர்களும் சிறுவர்களும் கண்ணனைத் தங்கள் உயிருக்கு உயிர் என்று எண்ணினர். பரம்பொருளே இந்த வடிவத்தில் வந்திருக்கிறான் என்று முனிவர்கள் (ரிஷிகள்) அவனுடைய யதார்த்தமான உருவத்தை அறிந்து கொண்டார்கள். அவனுடைய செயல்களைப் புரிந்து கொண்ட யோகிகள் எந்த ஒரு செயலிலும் அடங்காத கண்ணனை உயர்ந்த ஒரு ஆன்மாவாகக் கருதிப் போற்றினர். அந்த முறைகளில் கிருஷ்ணனுடன் உறவு கொண்டிருந்தனர்.

> "பண்டைய தத்துவாதிகள் உளவியல் முறையில் சமயத்தை அணுகியதில் தான் 'ரஸக் கோட்பாடு' தோற்றம் பெற்றதை இந்திய அழகியற் கோட்பாடு உணர்த்தும், 'ரஸம்' என்பது அழகியல் இன்பம். அது, கடவுளை உணர்வது என்ற விழுமிய பேரின்பத்துடன் அணுக்கவுறவு பூண்டது. கடவுளை ஆனந்த வடிவமாக உபநிடதங்கள் விளக்குகின்றன. ஆகவே, 'ரஸம்' ஞானத்தின் வடிவமாகிறது".[8]

ஆகவே, பக்தி 'ரஸமாக' விளக்கப்படுகிறது; 'அனுபவிக்கக் கூடிய தன்மை' என்பதாகப் பொருள் கூறுவர். பக்தி கொண்டுள்ளவனுடைய புலன்கள் அனைத்தும் இறை பக்தியிலேயே ஈடுபட்டு நிற்க வேண்டும். இவ்வுணர்வைக் கோபியர்களிடத்துக் கண்டது போல ஆழ்வார்களிடத்தும் காணமுடிகின்றது.

பெரியாழ்வார் வாத்சல்ய பாவத்துடன் கண்டு அனுபவித்துள்ளார். ஆண்டாள், கண்ணனை யௌவனப் பருவத்திலுள்ள

நாயகனாகப் போற்றிப் பாடி அவனது அழகில் தன்னை மறந்தவள். குலசேகரர் நட்புடனும், முதலாழ்வார்கள் பக்தி பாவத்துடனும், திருமங்கை ஆழ்வார் கண்ணனைப் பெருமித பாவத்துடனும், கண்டு தம்மை மறந்தனர். இவ்விதமான உறவு களில் பக்தியைப் பரப்பினர். ஆழ்வார்கள் தங்களது அழகு தெய்வத்தின் நிறம், அவதரித்த காரணம், குழலூதும் அழகு, வெண்ணெய் உண்ட அழகு, போன்றவற்றில் கண்ணனின் அழகினைக் கண்டிருக்கின்றனர்.

இறைவனின் அழகு முழுமையாக இவ்வுலகிலே வெளிப்பட்டு வாழ்கிறது என்று மெய்யுணர்வாளன் நம்புகிறான். மெய்ப் பொருளியல் நோக்கில், "பிரம்மம் 'புவனசுந்தரன்' என்று கூறப்பெறுகிறது. இதன் பொருள் உயரிய அழகுடையோன்' என்பதாகும். தலைசிறந்த அழகுடையவனாதல், அனுபூதி நெறிக்கு பெரிதும் வேண்டுவதாகும். உண்மை, நன்மை ஆகிய பண்புகளை விட அழகு, முக்கியமாகும். விசிஷ்டாத்வைதத்தில் அழகுணர்வின் அடியாக எழும் மெய்ப் பொருளியல் பாகவதத்தில் நிலைபெறுகிறது"[9] இதனடியாகப் பிறக்கும் அழகுணர்ச்சி, வைணவத்தில் கண்ணனிடத்தில் மட்டும் ஏற்படுகிறது. மெய்யுணர்வாளர்களாகக் கருதப்படும் ஆழ்வார்கள் திருமாலை கண்ணனைப் புவனசுந்தரன் என்று உணர்ந்தனர். ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் பிரம்மத்தைக் கிருஷ்ணனாக உணர்ந்து, ஆன்மாக்களை, இன்பத்துள் ஆழ்த்துவோனாக, உடல் உணர்விலின்று அகற்றுவோனாக அவனை கண்டனர் என்பதனை அவர்களது அனுபவப் பாடல்களின் மூலம் அறியமுடிகிறது. திருமாலின் எல்லா அவதாரங்களிலும் கண்ணனே மிகுதியாகப் பேசப்பட்டும் கொண்டாடப்பட்டும் வழிபடப்பட்டும் வருகிறான். ஏனெனில், 'புவனசுந்தரன்' என்ற பெயரானது கண்ணனிடத்தில் முழுமை பெறுகிறது. சான்றாக பேயாழ்வாரை எடுத்துக் கொள்ளலாம் இயற்கையிலே அழகுமிக்க எல்லாப் பொருட் களிலும் கடவுளைக் கண்டு, வழிபடும் பேயாழ்வார் முழுமையான மனநிறைவு தரும் அழகுமிக்க வடிவமாகக் கண்ணனைப் போற்றி அனுபவித்ததை மூன்றாந் திருவந்தாதியில் பரக்கக் காணமுடிகிறது.

அ. கண்ணன் - திருமேனி அழகு:

ஆழ்வார்கள் கண்ணனின் குறும்புச் செயல்களை மட்டும் அனுபவித்ததோடு அன்றி, அவனது திருமேனி அழகிலும் கிளர்ச்சி பெற்றுள்ளனர்.

பெரியாழ்வார் கண்ணனின் திருமேனி அழகினைத் திருவடி முதல் திருமுடி வரை (பாதாதி கேசமாக) அனுபவிக்கின்றார். அசோதையாக நின்று பாடியிருக்கிறார். குழந்தை பிறந்ததும், மற்றப் பெண்களுக்குக் குழந்தையைக் காட்ட விரும்பிய அசோதையைப் போலவே, இவரும் தாம் கண்ட அழியா அழகினை காணீர்! காணீர் என்று அருளிய பாசுரங்கள் சிறப்பிற்குரியனவாகும். (பெரியா.திரு.மொ. 1.3) அசோதை தானே சொல்லும் பாசுரங்களாக அருளிச் செய்தாலும், இடையில் ஆழ்வார் தமது தன்மையும் தோன்றுமாறு அருளிச் செய்துள்ளார். பிற ஆழ்வார்களை விட, கண்ணனது திருமேனி அழகில் தம்மை முழுதும் ஈடுபடுத்திக் கொண்ட பெருமை பெரியாழ்வாரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். திருவடியை முதலில் அருளிச் செய்துள்ளார். 'பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாடிக் கமலங்கள்' (பெரியா.திரு.மொ. 1.3.1) என்று வருணித்துள்ளார். திருவடியை முதலில் அருளிச் செய்தமையை முமுட்சுப்படி[10] வாக்கியங்கள் தெளிவு படுத்தும். இதன் காரணமாகவே, திருப்பாணாழ்வாரும் 'கமலப்பாதம்'[11] மீது முதலில் கண் வைத்து தொடங்குதலும், இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. பாதங்களைத் தொடர்ந்து, பாத விரல்கள், கணைக்கால், தொடைகள், உந்தி, திருவயிறு, திருமார்பு, திருத்தோள்கள், கழுத்து, வாய் ஆகிய உறுப்புக்களின் அழகும் அத்திருமொழியில் (1.3 1) எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

சிறு குழந்தைக்கு அணிகலன்கள் பூட்டி அதனழகினைக் கண்டு மகிழ்வது இயல்பாகும். அம்முறையில், குழந்தை கண்ணனுக்கு அணிவித்த அணிகலன்கள் பலவாகும். கண்ணனது அழகிய கணுக்கால்களில் வெள்ளித் தண்டை (1.3.3), காதில் மகரக் குண்டலங்கள் அரையில் செறியக் கோத்த பவளவடமும், அழகிய அரை நாணும் முத்துவடமும் சேர்த்து அணிவிக்கப் பட்டுள்ளன. திருமார்பில் கௌஸ்துபமாலை விளங்குகிறது. இவைமட்டுமல்லாது, குழந்தைக் கண்ணனைத் தொட்டிலிடும் விழாவில் பிரம்மன், குபேரன், இந்திரன், வருணன், பெரிய

பிராட்டி, பூமிதேவி துர்க்கா ஆகியோர் கண்ணனுக்குப் பல விதமான அணிக்கலன்களைக் கொண்டு வந்து கொடுப்பதாக, 'திருத்தாலாட்டு', எனும் (1.4) பகுதியில் பெரியாழ்வார் பாடி அனுபவித்துள்ளது திருமேனி அழகினை எடுத்துரைக்கிறது.

உறுப்புக்கள் அனைத்தும் சேர்ந்த அழகினைச் சமுதாய சோபை என்று கூறுவர். உடலுறுப்புக்களுள் கண்களின் அழகு சிறப்பாக எடுத்துரைக்கப்படுகிறது. (பெரியா. திரு. மொ. 1.3.15) திருப்பாணழ்வார், கண்ணனது கண்கள் அழகில் மயங்கி விட்டதாக

"கரிய வாகிப் புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரியோடி, நீண்டவப்
பெரிய வாய கண்கள் என்னைப் பேதமை
செய்தவனவே" (அமலனாதி. 8)

என்றடிகளின் மூலம் அருளிச் செய்துள்ளார். அடியவர்களை, இறைவனது அழகில் ஈடுபடுத்தும் பாடு சொல்லுதற்கரியது. கண்ணனது ஒவ்வொரு அழகிலும் ஈடுபட்டுப் பேசும் திருப்பாணழ்வார்,

"அண்டர் கோனணி யரங்கன் என் னமுதினைக்
கண்ட கண்கள், மற்றொன்றினைக் காணாவே"
(அமலனதி. 10)

என்று கூறுவது நோக்கத்தக்கது.

கண்ணனது முழு அழகில் ஆண்டாள் ஆழங்கால்பட்டு, காமுறுவதில் அவனது அழகு வெளிப்படுகிறது.

"………என்னரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானர்" (நாச். திரு. 11. 2)

என்று ஒவ்வொரு உறுப்பிலும் அவனது அழகில் மயங்கியது அறியத்தக்கது. இவ்வாறு, வரையறையின்றி அமையும் கண்ணனது அழகிற்கு எல்லையே இல்லை என்று கூறுமாறு போல திருமேனி யழகு அமைந்துள்ளது.

பேயாழ்வார் கண்ணனின் அழியா அழகினை விளக்கி யுள்ளார். 'திருக்கண்டேன்; பொன்மேனி கண்டேன் (பேய். மு. தி. 1) என்று கண்ணனைக் கண்ணாரக் கண்டு பெரும் பயன்

பெற்றதாகச் சுட்டுகிறார். திருவாழி ஏந்திய ஒளி பொருந்திய கையின் அழகும், கடல் நீரின் வண்ணம் போன்ற நிறம் கொண்ட மேனி அழகும் சொல்லுதற்கரியது என்று பாடி அகமகிழ்கிறார். இவற்றையெல்லாம் கூறி, 'அழகன்றே' என்ற சொல்லாட்சியால் ஒவ்வொரு உறுப்பின் அழகினையும் வலியுறுத்திக் காட்டுகிறார். (பேய். மு. தி. 4.5)

கண்ணனது திருமேனியின் கருமை நிறத்தில் தம்மை ஈடுபடுத்திய அனுபவமும் இங்கு நோக்கத்தக்கது. கருமை நிறத்தைக் காணும் பொழுது கண்ணனை நினைப்பூட்டும். அந்த அளவிற்கு கருமை நிறம் கண்ணனோடு ஒன்றிய நிறமாகும்.

"கண்ணனென்னும் கருந்தெய்வம்
காட்சிப் பழகிக் கிடப்பேனை" (நாச் திரு. 13.1)

"...... கண்ட நாள்
காருருவம் காண் தோறும் நெஞ்சோடும் கண்ணனார்
பேருருவென் றெம்மைப் பிரிந்து"
(பெரிய. திருவந். 49)

"பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலரென்று காண்தோறும் – பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
எல்லாம் பிரானுருவே என்று" (பெரிய. திருவந். 73)

என்றடிகளில் கருமை நிறப் பூக்கள், கருமை நிறம் காணும் பொழுது கண்ணனது திருமேனி நிற அழகு நினைப்பூட்டும். மேலும், கண்ணனது இந்த கருமை நிறத்தைப் பெற அவைகள் என்ன தவம் செய்தனவோ? என்று உயர்வாகக் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

கண்ணனது திருமேனி அழகினைப் பாடுகையில், அவன் அணிந்திருந்த பீதக ஆடையின் அழகும் ஆழ்வார்களை ஈர்த்துள்ளது. அந்த ஆடையின் சிறப்பிலே ஆண்டாள் காமுற்றுப் பேசுவது நோக்கத்தக்கது.

"பெருமான் அரையில் பீதக
வண்ண ஆடை கொண்டு, என்னை
வாட்டம் தணிய வீசிரே" (நாச். திரு. 13.1)

என்று, தன்னுடைய வாட்டம் தீர, அவனது ஆடையை தன் மீது வீசுங்கள் என்று அகப்பொருள் அனுபவம் வெளிப்பட பாடப்பட்டுள்ளது. மற்றொரு பாசுரத்திலும் (14.5) பீதக ஆடை பற்றிய குறிப்புள்ளது. பெரியாழ்வாரும், 'உடுத்துக் களைந்த நின் பீதக ஆடை'' என்று (பெரியா. திரு. மொ. 1.1.9) குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு, கண்ணனது ஒவ்வொரு பொருளும், ஒவ்வொரு உறுப்பும் அழகு வாய்ந்ததாக அமைந்துள்ளது.

ஆ. இடையர் கோல அழகு:

கண்ணன் ஆயர்பாடியில் வளர்ந்து வந்ததால், இடையர் குலத்தோற்றத்துடன் காணப்படுகிறான். கன்றுகளை மேய்த்து விட்டுத் திரும்பும் கண்ணனது அலங்காரங்களை, அவனது இடையர் கோலத்தின் அழகினை அசோதை மற்றப் பெண்களுக்கும் கூறி மகிழ்வாள். இந்தப் பாவனையில் பெரியாழ்வார் தமது பாசுரங்களில் அவ்வுருவ அழகினில் ஆழங்கால் பட்டது இங்கு எடுத்துரைக்கப்படுகின்றது. கண்ணனின் இக்கோல அழகிலே மயங்கிய பெரியாழ்வார், 'சீலைக்குதம்பை' (3.3) என்று தொடங்கும் திருமொழி முழுவதிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளதை அறிய முடிகிறது.

''சீலைக் குதம்பை யொரு காதொருகாது செந்நிற
மேற்றோன்றிப் பூ
கோலப் பணைக்கச்சுங் கூறையுடையுங் குளிர்
முகத்தின் கோடாலமும்
காலிப்பின்னே வருகின்ற கடல் வண்ணன்''
(பெரியா. திரு. மொ. 3.3.1)

என்று, அவனுடைய தோற்றத்தைக் காட்டி மகிழ்வதாக அமைந்துள்ளது. அவன் மாடு மேய்க்கச் செல்லும் அழகிலும் (1.3,20) தம்மை ஈடுபடுத்திக் கொண்டு மற்றவர்களையும் காணுமாறு வழிப்படுத்துகிறார்.

அவ்வாறு, காலிப்பின் வரும் கண்ணனைக் கண்ட மகளிர் அவன்மீது காமுறுகின்றனர். பல இசைகளும் மேளங்களும் முழங்க நண்பர்களோடு ஆரவாரமாக வருவதைக் கண்ட மகளிர் அவன் மீது காமுற்றுக்கூறிய வார்த்தைகளும் பெரியாழ்வார் பாசுரங்களில்கிடைக்கின்றன. (3.4) 'குழலூதி இசைபாடிக் குனிந்து ஆயரோடு ஆலித்து வருகின்ற ஆயப்பிள்ளை அழகு கண்டு' (3.4.7) மயங்கிய நிலை அறியத்தக்கது. இவ்வாறு, பெண்களைக்

காமுறச் செய்யும் அளவிற்கு அழகினையுடையவனை கண்ணன் பெரியாழ்வாருக்கு, அழகுத் தெய்வமாக – அழகு மகனாகவே காட்சி தந்திருக்கிறான். தன் மகனாகப் பாவித்துப் பாடினாலும் 'ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்' (1.2.7) என்று தெய்வமாகவும் கருதி பாடியிருப்பது நோக்கத்தக்கது.

இ. வெண்ணெய் உண்ட அழகு:

திருப்பாணாழ்வார், கண்ணன் வெண்ணெய் உண்ட வாயின் அழகில் தன் உள்ளத்தைச் செலுத்தியதாகக் குறிப்பிட்டுள்ளனர்.

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன் என்னுள்ளம் கவர்ந்தானை"

(அமலனாதி. 10)

கண்ணன் வெண்ணெயை அப்படியே உண்டு விடவில்லை. அப்படியே விழுங்கி விட்டால் உடனே தீர்ந்துவிடும் என்பதால்' ஒரு கையில் வெண்ணெய் வைத்துக் கொண்டு, மறுகையிலுள்ள விரலால் வெண்ணெயைத் தொட்டுத் தொட்டு உண்ணும் அழகினைக் குலசேகர ஆழ்வார் அனுபவிப்பது போன்று மற்ற ஆழ்வார்கள் சிறப்பாக எடுத்துக் கூறவில்லை. சிறு பிள்ளைகளின் இயற்கையான குறும்பினை அப்படியே படம்பிடித்துக் காட்டு கிறார் குலசேகர ஆழ்வார்.

"முழுதும் வெண்ணெ யளைந்துதொட் டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்
... ... வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்
... ... ... ...
அழுகை யுமஞ்சி நோக்குமந்த நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய் நெளிப் பதுவும்"

(பெரு. திரு. 7.8)

என்று, அவன் வெண்ணெய் உண்ணும் அழகினைக் கண்டு, அவ்வழகிலே தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறார். மேலும், இளந்தளிர் போலவும் சிவந்த தாமரை போலவும் உள்ள அழகிய சிறிய கைகளையுடைய கண்ணனது அழகே அழகு என்கிறார். யசோதை, இவ்வழகிலே, வாழ்க்கை இன்பத்தின் இறுதியைக் காண்கிறாள் என்று கூறலாம். அவ்வின்பத்தினை யசோதை பெற்றது போல தாம் பெற முடியவில்லை என்று தேவகி நிலையினின்று குலசேகர ஆழ்வார் புலம்புவது போன்று அப்பாசுரம் அமைந்துள்ளது.

இவ்வாறு, கண்ணன் அடியவர்களின் உள்ளத்தில் ஊறும் தேனாகக் விளங்குகிறான் என்பதைத் திருமங்கை ஆழ்வார்,

"களங்கனி வண்ணா! கண்ணனே! என்றன்
கார்முகிலே! என நினைந்திட்டு,
உளங்கனிந் திருக்கு மடியவர் தங்கள்
உள்ளத்து குறிய தேனை"

(பெரிய. திரு. மொ. 4.3.9)

என்ற பாசுரத்தின் வழி வெளிப்படுத்துகிறார். ஆனால் உலக மேழும் உண்டு குழந்தையாய் வளர்ந்த கண்ணன் தன் நெஞ்சை விட்டு அகலாது நிற்கிறான் (பூத.இ.திரு. 98) என்றும், எத்தனை காலம் ஏற்பட்டாலும் தன்னுடைய சித்தமானது நின்பாலதே இருக்கும் என்று (பெரியா. திரு. மொ. 5.3.8) ஆழ்வார்கள் வலியுறுத்திக் கூறுவதும் நோக்கத்தக்கது. அவனுடைய காட்சி இன்பத்தில் முழ்கியதன் விளைவாக அவனுடைய அழகு, ஆழ்வார்களை இவ்வாறு, அனுபவிக்கச் செய்கிறது.

இவ்வாறு, ஆழ்வார்கள் கண்ணனது அழகுத் தோற்றத்தில் தம்மை முழுவதும் ஈடுபடுத்திக் கொண்டு, ஒவ்வொரு வித நோக்கில் அனுபவித்துள்ளது நோக்குதற்குரியது. பெண்கள் நிலையினின்று பாடுகையில் அவனது அழகில் காமுற்று, தம்மை மறந்த நிலையில் பாடிய இடங்களும் பாசுரங்களில் கிடைக்கின்றன. ஆகவே, ஆழ்வார்கள் கண்ணனது அருள் கிடைத்து, பரவசமடைந்த பெருமையாலும், பக்தியாலும் அவ்வழகில் மயங்கினர். அதன் விளைவாக, கண்ணனைப் பற்றிய எண்ணத்தில் திளைத்து இருந்தனர், என்று கூறலாம்.

**ஆழ்வார்களின் பக்தி அனுபவங்கள்:**

இறைவனை முன்னிலைப்படுத்தி, மனித உறவு என்ற அடிப்படையில் மனித உறவுகள் கற்பித்து, அதன் வழியே தோன்றும் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதே பக்தி அனுபவத்தின் அடிப்படைக் கருத்தாகும். இதனால்,கண்ணனைக் குழந்தையாக – மகனாக-நண்பனாக – தாயாக – தந்தையாக – குருவாக – அன்புக் காதலனாக – காதலியாக – கணவனாக – பரம்பொருளாகக் கருதி அவ்வுறவுகளுக்குரிய, அன்போடும் உரிமையோடும் பக்தி கொள்வதுண்டு. இது போன்ற பக்தி அனுபவங்களை ஆழ்வார்களிடத்துக் காணமுடிகின்றன.

உலகிலுள்ள பக்தர்களுள், கண்ணன் மீது ஆசை கொண்ட கோபியர்களின் பக்தியே முதலிடம் பெறுவதாகக் கூறுவர். பாகவத புராணத்தில் கண்ணன் கோபிகைகளுடன் நடத்திய லீலைகள் படிப்போர் மனதில்,சிற்றின்பத்தைச் சித்தரிக்கின்றது என்று எண்ணுவதுண்டு. ஆனால், அது, உண்மையான பிரேம பாவத்தை – அன்பைக் காட்டுவதாக விளக்கம் தருவர். அக் கோபியர்களுக்குச் சரீர இன்பத்தில் நாட்டமில்லை; ஆனால், கண்ணனது உடலைக் கண்டனர்;அவ்வழகிய உருவம் அவர்களது உள்ளுணர்ச்சியை அடைந்து, தங்கள் உடல் பொருள் ஆவி ஆகிய அனைத்தையும் அவனிடத்தில் ஒப்படைத்து அன்பு செலுத்தியதே ஆகும். ஆகவே, இது பிரேம பக்தியைக் காட்டுகிறதே தவிர, காமத்தைக் குறிப்பதல்ல. ஆகவே. கிருஷ்ண பக்தி என்றாலே, கோபிகைகளின் பக்தியைச் சான்று காட்டுவர்.எங்குப் பார்ப்பினும்,தம் கண்களிலும் தம் மனத்திலும் கிருஷ்ணனைக் கண்டு மகிழ்ந்தனர். ஆனால் அக் கோபியர்கள் பக்தியைப் பற்றியோ, யோகத்தைப் பற்றியோ எந்தவிதக் கல்வியும் கற்கவில்லை. உண்மையான அன்பினாலே உயர்ந்த பேரானந்த நிலையை அடைந்தனர் என்பதனைக் கிருஷ்ணன் வாயிலாகப் பாகவதபுராணம் எடுத்துரைக்கின்றது. இந்த வகைப் பக்தி நம்மாழ்வாரிடம் ''உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்'' (நம். தி. வா. மொ. 6.7.4) என்ற முறையில் காணப்படுவது ஒப்புநோக்கத்தக்கதாகும்.

''மத அனுபவத்தின் பல்வகைக் கோலத்தை உளவியல் நிலைநின்று ஆராயின், மனிதர்களின் தனிநிலைப்பட்ட மத அனுபவத்தையே முக்கியமானதாகக் கொள்வர். இந்த அனுபவம் அவர்களது ஆளுமையின் அடியாக வருகிறது. ஆகவே, இத்தன்மையே, தமிழ் இலக்கியத்தில் பேசப்படும் பக்திஉணர்வின் அடிப்படையாகும்''[12] என்று பக்தி அனுபவத்தைப் பற்றி உளவியல் நோக்கில் விளக்கப்படுகிறது. மானுட உடம்பிலேயே ஒருவன் இறைவனுடன் கலந்து, திவ்விய ஞானம், திவ்விய சக்தி ஆகியவை பெறமுடியும்; தெய்வீக மனோபாவம் மற்றும் தெய்வீக ஆனந்தம் அடைய முடியும் என்பதற்கு ஆழ்வார் களின் வாழ்வும் பக்தி அனுபவங்களுமே சான்றுகளாகும்.

இறைவனைப் பாடுதல் என்பது இரண்டு வகைகளில் அமைகின்றன. 'ஒன்று, உலகியல் வட்டத்திலிருந்து பாடுதல்;

> பரமபக்திகள் இவை தலைஎடுத்து, இறுதியில் ஆழ்வார் அவாவற்று வீடுபேற்றைப் பெற்று இறைவனடி சேர்ந்தார். இந்நிலை, 'இறைமைக்கலவி' என்ற நிலையினைக் குறிக்கிறது. 'இறைவனது திருவுருவ அழகினை விளக்குதலை முதன்மையாகக் கொண்ட திருவாய்மொழியானது வேத உப பிரம்மணத்திற்கு ஒப்பாக உள்ளது'[16] என மணவாள மாமுனிகள் விளக்கம் தருகிறார்.

இந்நான்கு நிலைகளிலும், ஆழ்வாருக்கு இறைவனது கல்யாண குணங்களை அனுபவிக்கக்கூடிய இறையனுபவம் பொறுமை யாகவே கிடைக்கப்பெற்றது. இந்நான்கு நிலைகளையும் முழுவதுமாகப் பெற்றுத் தம் அனுபவத்தை வெளியிட்டா ராதலின் நம்மாழ்வாரை ஞானிகளில் தலைவராக உரை யாசிரியர்கள் கொண்டாடுகின்றனர்.

அ. நம்மாழ்வாரின் கண்ணன் பக்தி:

ஆழ்வார் இறைவனிடத்துக் குறிப்பாகக் கண்ணனிடத்துக் கொண்ட அளவிறந்த அன்பினால் அவனன்றி வேறு ஒருவரையும் நினைக்கமுடியாத நிலையில், அவனை மறக்கமுடியாத நிலையில், அவனை உள்ளத்தில் நினைத்தபொழுதே உண்டான மகிழ்ச்சியில் பாசுரங்கள் பாடுவாரானார். அறியாக்காலமான இளம் பருவந் தொட்டே, இவ்வாழ்வாருக்குக் கண்ணனிடத்து இருந்துவந்த பேரன்பு, நாளுக்குநாள் பெருகி வளர்வதாயிற்று.

'இறைவன், என்னைத் தனக்கு அடிமை ஆக்கி, என்னால் தன்னை இனிய தமிழ்ப் பாசுரங்களைப் பாடுவித்துக் கொண்டான்' என்பதிலும், ''பிடாத்தை விழவிட்டுத் தன் வடிவழகைக் காட்டினான். திருத்திரை எடுத்தாற் கூப்பிடுமாற் போல கூப்பிட்டேன்; அது கவியாய் தலைக் காட்டிற்று என்றும், தன் வடிவழகைக் காட்டியாயிற்றுக் கவிக்கு உள்ளுறை கொடுத்து[17] என்று ஆழ்வாரின் கவி பாடுகைக்குரிய காரணம் விளக்கப்படுகிறது முருகு உணர்ச்சியே கவிதையின் தூண்டுகோல் என்ற அரிய கொள்கையும் வெளிப்படுத்தப்படுகிறது.

ஆழ்வார்கள் அனைவரும் கிருஷ்ணாவதாரத்தில் மண்டி யிருப்பர்களாவர். 'பிறந்தவாறும்' எனும் பதிகத்தில் (நம் தி வா.மொ. 5.10) ஆழ்வார் கண்ணன் பிறந்திருந்தபோது, தாம் பிறக்காத குறைதீர அவன் பிறப்பு, வளர்ப்பு, திருவிளையாடல்கள் (லீலைகள்) ஆகியவற்றில் மிகவும் ஈடுபட்டு அதன் விளைவாக மோகித்து ஆறு மாதம் இருந்ததாகக்[18] கூறப்படுகிறது. மேலும் 'கண்ணன் திறத்து ஆசையே ஒரு வடிவு கொண்டாற்போல இருக்கிறது ஆழ்வாருடைய அவதாரம்'[19] என்றும் கூறப்படுகிறது. இந்த அளவிற்கு, நம்மாழ்வார் கண்ணனைத் தத்துவப் பரம்பொருளாக உயர்த்திக் காட்டியிருக்கிறார். அவனுடைய அழகை வேறு எதனோடும் ஒப்பிடமுடியாத சிறப்பு வாய்ந்ததாகக் காட்டுகிறார்.

''அறியாக் காலத்துள்ளே அடிமைகண் அன்பு செய்வித்து
அறியா மாமாயத் தடியேனை வைத்தாயால்''
(நம். தி. வா. மொ. 2.3.3)

என்பதில், அறியாமையை உண்டுபண்ணும் மிகக்கொடிய பிறவியில் அகப்பட்டிருக்கும் தன்னை ஒன்றையும் அறியா மிகச்சிறிய வயதிலேயே இறையன்பால் அடிமை செய்வதில் அருள் செய்ததைக் குறிப்பிடுகிறார்.இதனால், இளம்வயதிலேயே இறையருள் பெற்றவர் என்பது விளங்குகிறது.

இயல்பாகவே எல்லோரும் இறைவனை எண்ணுவதும் துதிப்பதுமான செயல், தங்களுக்குரிய துன்பம் நீங்கவும் இன்பம் உண்டாவதற்குமேயாகும். அந்தப் பயனைப் பெற்றுவிட்டால், இறைநினைப்பு குறைந்துவிடுவது பலரிடையே காணப்பட்டு வரும் வழக்கமாகும். ஆனால், ஆழ்வார் நிலை இதுபோன்றன்று. பயன்கருதிக் கண்ணனிடத்து அன்பு கொண்டிலர் ஆழ்வார். பிறவித்துயர் நீக்கவே வேண்டிப் பாடுவது ஆழ்வாரது விருப்பமாகும். கண்ணனிடத்து நீங்காது அன்பு கொள்வதும், அவனை வணங்குவதும், அவனைப் புகழ்ந்து பாடுதலுமே ஆழ்வார் விரும்பும் பயன்களாகும்.

''சிறப்பில் வீடு சொர்க்கம் நரகம்
இறப்பில் எய்துக எய்தற்க யானும்
பிறப்பில் பலபிற விப்பெருமானை
மறப்பொன் றின்றிஎன் றும்மகிழ் வேனே''
(நம். தி. வா. மொ. 2.9.5)

என்று கூறுவதில் மேற்சொன்ன கருத்தின் விளக்கம் அமைகிறது. இவ்வாறு, பிறவிப்பயன் பற்றிப் பாடும் முறையானது சமய இலக்கியங்களுக்கேயுரிய சிறப்பாகும், ''பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உனை என்றும் மறவாமை வேண்டும்'' என்று காரைக்கால் அம்மையார் பாடுவதும், திருநாவுக்கரசர் சிவபெருமானிடம் கேட்கும் வரமும்[20] மேற்சொன்ன கருத்தோடு ஒப்பு நோக்கத்தக்கதாகும். இவ்வாறு, பக்தி உணர்வில் இறைவனை அனுபவிப்பவர் மனமானது, பிறவிப்பயனைப்பற்றிப் பேசுவதையே நோக்கமுடிகிறது.

கண்ணனிடத்துக் கொண்ட அன்பானது, மேன்மேலும் பெருகியதன் விளைவினால் ஆழ்வார் இரவும் பகலும் கண்ணனையே நினைந்திருந்தார். அவனைக் காணுதலல்லாது வேறுஇன்பம் தனக்கு இல்லை என்று கூறிக்கொள்வதைக் காணமுடிகிறது. தம்முடைய ஐம்புலன்களும் கண்ணனை அடைந்து அனுபவிக்க வேண்டுமென்று பெருவிடாய் கொண்டிருந்தார் (நம்.தி வா.மொ. 3.8) என்பது அறியத்தக்கது. மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத நீரும் உணவும் போல' நம்மாழ்வாருக்கு கண்ணனை நினைக்கும் அன்பே தனக்கு உணவும் நீரும் போல அமைந்திருந்தது.

ஆ. இறையருள் பெற விழைதல்:

கண்ணனை நினைப்பது மட்டுமன்றி, அவனுக்கு வேண்டிய தொண்டுகளையும் தொடர்ந்து செய்தல் வேண்டும் என்று விரும்புகிறார். இறையருள் கிடைக்க எதுவேண்டுமானாலும் செய்வதாகக் கூறுகிறார். தான் செய்யும் தொண்டுகளையும் நினைக்கும் நினைப்புக்களையும் கண்டு, கண்ணன் மகிழ்ச்சியடைந்தால், அம்மகிழ்ச்சியைக் காண்பதேதனக்கு உண்டாகும் பேரின்பமாகும் என்று கூறி, அவனருளைப் பெற அவனது காட்சியைக் காண உருகுகிறார். கண்ணனது கழலினை ஏற்கவேண்டும் (நம். தி. வா. மொ. 2 9 3), எந்தப் பிறவி எடுத்தாலும் அவனைக் காணவேண்டும் (2.9.4) அவனை அடைதற்கான வழியைக் கண்ணனிடமே கேட்டுப் புலம்பும் பாசுரங்களும், (3.2.3) கண்ணனோடு எவ்விதத்தில் ஒன்றுவது (3.8.9) என்று ஆர்வம் மிகுதியால் அழுது புலம்பும் பாசுரங்களும் திருவாய்மொழியில் கிடைக்கப்பெறுகின்றன. இம்முறையில் ஆழ்வார் தாமாகவே அழுது புலம்புவதும், தமது நெஞ்சிடம் கூறி

அவனருளைப் பெற விழைவதுமான பாசுரங்களும் இடம் பெற்றுள்ளன. ஆற்றாமை மிகுதியால், நம் நெஞ்சிடம் கூறி ஆற்றுப்படுத்தும் முறையானது இலக்கியத்திற்கேயுரிய தனிச் சிறப்பாகும்.

"எனக்கே யாட்செய் எக் காலத்தும் என்று என்
மனக்கே வந்திடை வீடின்றி மன்னித்
தனக்கே யாக எனைக்கொள்ளு மீதே
எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே"

(நம். தி. வா. மொ. 2.9.8)

என்று, தாம் செய்யும் தொண்டுகள் தன் விருப்பத்திற்காக அன்றி கண்ணனது விருப்பத்திற்காகவே செய்தல்வேண்டும் என்று அருளிச்செய்கிறார்.

கண்ணன் திருவடிகளைக் காணவேண்டும் என்ற விருப்பத் தால் புலம்புவதும் (3.8.10) இத்தனை காலம் புலம்பினாலும் கண்ணன் காட்சி கிடைக்கப்பெறாமையால், அவனது திருவடி-களையாவது தன் தலைக்கு அணியாய் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்திப் பாடுவதுமான (4.3.6) பாசுரங் களையும் நம்மாழ்வார் அருளியுள்ளார்.

இ. கண்ணன் காட்சி இன்பம் பெறல்:

கண்ணனது அருள் கிடைப்பதற்கும், திருவடிப் பயனை எய்து வதற்கும், கண்ணன் காட்சி இன்பம் பெறுவதற்கும் புலம்பிய நம்மாழ்வாருக்கு கண்ணனது காட்சி கிடைக்கப்பெற்றது. அக்காட்சி பெற்ற மகிழ்ச்சியை ஆழ்வார் 'மையார்' எனத் தொடங்கும் (9.4) திருவாய்மொழிப் பதிகம் முழுதும் அருளிச் செய்துள்ளார்.

கண்ணனது காட்சியை,

"உருவா கியஆறு சமயங்கட்கெல்லாம்
பொருவாகி நின்றான் அவனெல்லாப் பொருட்கும்,
அருவாகிய ஆதியைத் தேவர்கட் கெல்லாம்
கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே"

(நம்.தி.வா.மொ. 9.4.8)

என்றும், அக்காட்சி பெற்றதும் பாசுரங்கள் பாடத் தொடங் கினேன் என்பதனை,

"கண்டுகொண் டென்கண் ணிணையார களித்து
பண்டை வினையாயின பற்றோ டறுத்து
தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்'
(நம்.தி.வா.மொ. 9.4.9

என்றும் கூறியுள்ளார். இனி, கண்ணனைத் தவிர மனிதரைப் பாடேன் என்பதில் உறுதியாக இருந்தார். ஆகவே, கண்ணனே, தம் வாழ்வின் குறிக்கோள் - வாழ்வின் பேரின்பமும் ஆகும் என்பதனை உணர்த்தினார். கண்ணனைத் தவிர வேறு தெய்வ மில்லை; அவனே மாபெருந்தெய்வம் என்பதனையும் (திருவா சிரியம். 7) வலியுறுத்திக் கூறியுள்ளார்.

"வாய் கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்"
(நம்.தி.வா.மொ. 3.9.9

"ஒன்றி யொன் றியுலகம் படைத்தான் கவி 'யாயனேற்கு
என்றுமொன் றுமினி மற்றொருவர் கவியேற்குமே?"
(நம்.தி.வா.மொ. 3.9.10)

என்ற அடிகளில், கண்ணனை உயர்த்திப் போற்றுகிறார். கண்ணன் காட்சி பெற்ற ஆழ்வாருக்குப் பெருமித உணர்வு ஏற்பட்டுவிடுகிறது. எல்லா உலகினையும் தம்மிடத்தே கொண்ட நாராயணான கண்ணன் பெரியவனாவான்; அவனையே தம்மிடம் கொண்டவர் ஆழ்வார் என்பதால் இறைவனைவிடத் தாமே பெரியவர் என்று தற்பெருமையாகக் காட்டிக்கொண்டு பாடும் பாசுரங்கள் பெரிய திருவந்தாதி முழுவதிலும் காண முடிகின்றன.

**ஈ. இறைமைக் கலவி:**

ஆழ்வார் கண்ணனின் காட்சி இன்பம் கிடைக்கப்பெற்ற மகிழ்ச்சியில், தம்மைச் சிறியேன் என்று தம் தாழ்மையை எடுத்துக்கூறி இறைவனது மனதைக் கரைக்கச் செய்தார். அழுது புலம்பி இறையருள்பெற விழைவது பக்தியாளர்களின் இயல் பாகும். அம்முறையில், ஆழ்வாரது இத்துன்பம் முற்றிவிடாமல் இருக்கவே, கண்ணன் ஆழ்வாரோடு கலந்த உணர்விணை மிக்க மகிழ்ச்சியுடன் எடுத்துரைப்பது நோக்கத்தக்கது. ஆழ்வார், ஆத்மாவின் உயர்வை அறிந்து தம்முடன் கலந்த இறையனுப வத்தின் நிலைகளை ஒரு பதிகம் முழுவதிலும் (8.8) அருளி யிருப்பது அறியத்தக்கது,

"யானும் தானா யொழிந்தானை யாதும் யவர்க்கும்
முன்னோனை
... ... ... ... ... ...
... ... ... ... ... ... என்
னுனி லுயிரி லுணர்வினில் நின்ற வொன்றை
புணர்ந்தேன்"
(நம். தி. வா. மொ. 8.8.4)

ஆழ்வார் கண்ணனைக் கண்டு கலந்தமையை, மணவாள மாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில்[21] கூறுவது இதனோடு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

கண்ணன் தன்னோடு கலந்த இன்பத்தால் இனித் தமக்கு எந்தத் துயரும் இடையூறும் ஏற்பட வாய்ப்பில்லை; அவன் தன் அருகிலேயே இருக்கப் போகிறான் என்று இன்பவெள்ளத்தில் மூழ்கிப் பாடிய பாசுரங்கள் பரக்கக் காணமுடிகின்றன. குழந்தைக்குத் தாய் உணவிட்டு வளர்ப்பதுபோல, இறைவனும் அடியவருக்குச் சிறிது சிறிதான இன்பத்தையே தருகிறான் என்பதனை நம்மாழ்வார் சுட்டிக்காட்டுகிறார். கண்ணன் தன் சுற்றுப்புறத்தில் வந்து, பக்கத்தில் இருக்கிறான் (1.9.1), தன் அருகில் வருகிறான் (1.9.2), தன்னோடு கூடிநிற்கிறான் (1 9.3), தன் இடுப்பில் ஏறி அமருகிறான் (1 9.4), தன் தோள்களில் தங்கினான் (1.9.6), தன் கண்ணுக்குள் நாவினுள் இருக்கிறான் (1,9.7; 1.9.8), என்றெல்லாம், இறை அனுபவத்தின் உணர்வினை, தன்னை மறந்த நிலையில் (பித்துப் பிடித்தவர் போன்ற நிலையில்) பாசுரங்களை அருளியிருப்பது நோக்கத்தக்கது.

இந்த இறைமைக் கலவியில், முன்பு ஏற்பட்ட சிறிது சிறிதான இன்ப உணர்வுகளே மேற்கூறப்பட்ட உணர்வுகளாகும். இவ்வுணர்வுகளின் முற்றிய நிலையே இறைவனுடன் கலந்த அனுபவமாகும். இவ்வாறெல்லாம் பாடும்பொழுது, ஆழ்வார் முற்றாக இறை வட்டத்தில் நின்று இறைவனோடு ஒன்றிப் பாடுவது அறியத்தக்கது.

"நானே என் முயற்சியால் இறைவனை என்னுள்ளத்தில் இருக்கச் செய்வேன் என்று கூறவில்லை. அவனே என்பால் நெருங்கிவந்து. சட உணர்வோடு என்னை ஏமாற்றி என் உடலோடு ஒன்றி, உயிரிற் கலந்து வாழ்கின்றான். அவன்

பெரும்பிடியுள் அகப்பட்டுவிட்டதால், இனி விடுவித்துக்கொள்ள முடியாது; ஒருநாளும் அவனைவிட்டு அகலவும் முடியாது. மேலும், என் உயிரிற் கலப்பதற்கு முன்பே அதற்கேற்றவாறு என்னைப் பக்குவப்படுத்தியவனும் அவனே" என்று திருவாய் மொழியில் கூறியிருப்பதில் (1.7.7) நம்மாழ்வாரின் ஞான அனுபவம் வெளிப்படுகிறது. நம்மைப் பிடித்திருக்கும் இரு வினைகள் ஒழிந்து ஞானமயமான தன்னிடத்தே நம் உள்ளம் செல்லுமாறு நம்மை விளங்கச் செய்பவனும் அவனே' என்பதனையும் (1.6 10) வலியுறுத்திக் காட்டுகிறார்.

இறையருளால் ஞானம் பெற்று இறைவனோடு பிரிப்பின்றி வாழ்ந்த நம்மாழ்வார் பல வகைகளிலும் இறைவன் தம்மோடு கலந்து நிற்றலைப் பாடி அனுபவித்தலும் இதன் பாற்படும். எல்லாப் பொருள்களிலும் உள்ளுறையாக விளங்குகின்ற உண்மையை எடுத்துரைப்பது இங்கு நோக்கமன்று... 'தம் உயிரினுள் பிரிப்பின்றி நிற்கும் உணர்வினையே கைவந்த நிலையில் பாடியிருப்பதே சிறப்பாகும்'.[22]

உ. பரமபதம் அடைந்த இன்பம்:

அடியவர்க்கு இறைவனது திருவடி கிடைக்க வேண்டுவதும், அவனது காட்சியைக் காண புலம்புவதுமான உணர்வுகள் ஏற்படுவது இயல்பே அவனது இறைக்காட்சியைக் கண்டு, தம்மை மறந்து, மீண்டும் மீண்டும் அக்காட்சி மற்றும் இறைமைக் கலவியின் உணர்வு ஆகியன கிடைப்பதற்கு உருகிப்பாடுவதும் இயற்கையே. இவையாவும், பக்தியின் அடிப்படையில் அன்பின் மேலிட்டால் உண்டாகும் உணர்வுகளாகும். இந்தப் பக்தி-இறை அனுபவங்களைப் பாடியதோடு அன்றி, இறைவனது இருப்பிடமான பரமபதப் பதவி கிடைத்த அனுபவத்தையும் நம்மாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

ஆழ்வாரின் திருமேனியின் மீது இறைவனுக்கு அளவு கடந்த ஆசை ஏற்பட்டதன் விளைவு, ஆழ்வாரை அந்தத் திருமேனியோடு பரமபதத்திற்கு அழைத்து செல்ல விரும்பினான். ஆனால் உடலின் தன்மையைக் கூறி, ஆழ்வார் இவ்விருப்பத்தினைத் தடுத்தார். இருப்பினும், இறைவன் விரைவு கருதி, எக்காரணமும் இல்லாமல், ஆழ்வாரை அங்கீகரித்து அழைத்துச் சென்றார்.

பரமபதத்தில் ஆழ்வாருக்குக் கிடைத்த நல்ல வரவேற்பை ஆழ்வார் அனுபவித்துப்பாடிய பாசுரங்கள் 'சூழ்விசும்பு' எனத் தொடங்கும் (10.9) திருவாய்மொழிப் பதிகம் முழுவதும் காணப் பெறுகின்றன. ஆழ்வார் பரமபதத்திற்கு எழுந்தருளும் பொழுது, அரசமரியாதை போன்று மேகங்கள் முழங்கின; கடலலைகள் அசைந்தாடின; கின்னரர் கெருடர்கள் கீதங்கள் பாடினர்; தேவமடந்தையர் வாழ்த்தினர்; (10.9.1) என்று அவருக்குக் கிடைத்த வரவேற்பு சுட்டிக் காட்டப்படுகிறது.

ஆழ்வார், பரமபதம் செல்லுங்கால் உலகோர் தொழுது வணங்கினர்; தேவலோகத்தவர் ஆழ்வாரை எதிர் கொண்டு வரவேற்று, பூரணகும்பம் மரியாதை செலுத்தி வாழ்த்தினர். வைகுந்தத்தில் ஆழ்வாரைச் சிறப்பாக வாழ்த்திப் போற்றினர் என்று ஆழ்வாரின் பரமபதப்பதவி கிடைத்த அனுபவங்களை இத்திருவாய் மொழிப்பதிகம் முழுதும் (10.9) பரக்கக் காண முடிகின்றன. 'வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே' (10.9.9) என்பதனையும் குறிப்பிடுகிறார் ஆழ்வார். இவ்வாறு, அடியவர்களது கூட்டத்தில் ஆழ்வார் சேர்ந்து விட்டார். வீடுபேறு பெற்றுய்ந்த சிறப்பு மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் நம்மாழ்வாருக்கே கிடைத்திருப்பது அறியத்தக்கது. திருமால் ஆழ்வாரைச் சூழ்ந்து நின்றதையும், அதனால் ஆழ்வாருக்குக் கிடைத்த பேரின்பப் பெருவாழ்வையும் மணவாள மாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில்[23] குறிப்பிட்டுள்ளது இங்கு நினைக்கத்தக்கது.

இவ்விதமாக, இறைவனுடன் கலந்த அனுபவத்தோடு மட்டுமன்றி, இறையிடமான பரமபதப் பதவி கிடைக்கப்பெற்ற அனுபவத்தையும் பாடி அருளியிருப்பது ஆழ்வாரது ஞான நிலையினைக் குறிக்கிறது. இறைவட்டத்தில் நின்று கொண்டே அவ்வனுபவங்களை உணர்த்தியிருப்பதும் அறிய வருகிறது. 'இறைவனுக்கும் உலக உயிர்களுக்கும் உள்ள தொடர்பினை நம்மாழ்வாரின் பக்தி அனுபவத்தின் மூலம் அறிய வருகிறது. இருப்பினும், இறைவனோடு பிரிப்பின்றி வாழும் ஞான அனுபவம் இறையருளான் வாய்ப்பதேயன்றி தன் முயற்சியா லன்று என்ற சிந்தனையை நம்மாழ்வாரது அனுபவ வழியே அறியத்தக்கது.

**திருமங்கை ஆழ்வாரின் அனுபவங்கள்:**

நம்மாழ்வாருக்கு அடுத்தபடியாக அதிகமான பாசுரங்களைப் பாடியவர் திருமங்கை ஆழ்வார். இவர் பாடியனவாக ஆறு பிரபந்தங்கள் நாலாயிரத்துள் உள்ளன. இவ்வாறனையும், நம்மாழ்வார் பாடிய நான்கு பிரபந்தங்களாகிய வேதங்களுக்கு ஆறு அங்கங்களாகக் கருதுவர்.

ஆழ்வார் தம் வாழ்நாளில் சிற்றின்பத்தில் மூழ்கித் திரிந்தார். இவ்வாறு திரிந்த ஆழ்வாரை, இறைவன் தன் எழிலைக் காட்டியும், நாராயண மந்திரத்தை உபதேசித்தும் ஆட்கொண்டார் என்பதனை,

'மாயோன் வாள்வலியால் மந்திரங்கொள்
மங்கையர் கோன்
தூயோன் சுடர்மான வேல்'
(பெரிய. திரு. மொ. தனியன்)

என்ற அடிகளால் அறியப்படுகிறது. அவ்வுபதேசத்தால் பெற்ற ஞானமே பக்திப் பாடல்களாகப் பெருகின. மந்திரம் பெற்றுய்வதற்கு முன் வாழ்ந்த இழிந்த வாழ்க்கையினையும், மந்திரம் பெற்றுய்ந்த நிலையில் அடைந்த பெருமிதத்தையும் முதல் பாடலிலே அருளியிருப்பது நோக்கத்தக்கது.

"வாடினேன்; வாடி வருந்தினேன் மனத்தால்,
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன்; கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் திரிந்து
நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்"
(பெரிய.திரு.மொ. 1.1.1)

திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் உலகியல் வாழ்க்கையிலிருந்து – சிற்றின்ப வாழ்க்கையிலிருந்து மீண்டு, இறைவன் திருவடி நீழலுக்குத் தன்னை ஒப்படைத்துக் கொள்ளும் அனுபவமானது உணர்ச்சி வேகத்தில் பக்தி அனுபவப் பாசுரங்களாக வெளிப்படுகின்றது.

பொதுவாக, இறைவன் அருட்கோலமே பக்தர்களுக்குச் சிறந்த அமுதாகும். அவ்வமுதினைப் பருகி அடியவர்கள்

இன்புற்று மகிழ்வதுண்டு அந்த வகையில், கண்ணன் தரிசனம் கிடைத்த ஆனந்த இன்பத்தில், இனிக் கண்ணனது திருவடி களையே நினைத்துக் கொள்ளவும் பிறவிப்பயன் பெறவும் வேண்டி காட்சி இன்பத்தின் அனுபவத்தை மெய்யுணர்வோடு பாடுகிறார்.

"வெள்ளத்துள் ஓராலிலைமேல்
மேவி அடியேன் மனம் புகுந்தென்
உள்ளத்துள்ளும் கண்ணுள்ளும் நின்றார்"
(பெரிய.திரு.மொ. 7.5.4)

என்று ஆழ்வாரின் கண்களிலும், நெஞ்சத்திலும் கண்ணன் திருக்கோலம் நன்றாகப் பதிந்து விட்டது என்பதனை வெளிப் படுத்துகிறார்.

இவ்வாறு பெற்ற காட்சி அனுபவம், ஆழ்வாரை ஒவ்வொரு திருத்தலங்களுக்கும் அழைத்துச் சென்றது. இவர் பல திருக்கோவில்களை மையமாகக் கொண்டு பதிகங்கள் அருளி யிருப்பது அறியத்தக்கது. இதன்மூலம், கண்ணனது பெருமைகள், தலத்தின் இயற்கை எழில், விஷ்ணு பரத்வம், ஆகியன வெளிப் படுத்தப் படுகின்றன. மேலும் கண்ணனது பெருமைகளைப் புராண இதிகாச நிகழ்ச்சிகளைக் கொண்டு பாடியிருப்பதும் நோக்கத்தக்கது.

ஒவ்வொரு தலத்திலுமுள்ள பெருமானைக் கண்ணனாகக் கொண்டு, தமக்குப் பிறவித்துயர் நீக்கச் செய்தும், அவனன்றி வேறு பற்றில்லை என்றும், அவனே தன் வாழ்வின் அடைக்கலம் என்றும், அவன் உறையும் இடமே தன் மனம் என்றும் பலவித முறைகளில் அனுபவித்துள்ளதை பல பாசுரங்களில்[24] வழி அறிய முடிகின்றது. இவையாவும் இறையருள் கிடைத்த அனுபவத்தின் வெளிப்பாடுகளாகும்.

இவ்வாறு, தெய்வ அழகைப் புராண இதிகாசக் கூறுகளிலும், திருக்கோவிலைச் சூழ்ந்த இயற்கை எழிலும் கண்டு அனுபவித்த ஆழ்வார், தாய்மை உணர்விலும் நின்று பாடியிருப்பது நோக்கத் தக்கது. அழகுத் திருமேனியனாகக் காட்சி கொடுத்த கண்ணன், அத்திருமேனி அழகில் ஆழ்வாரது உணர்வுகளைத் தூண்டச் செய்தான். அதன் விளைவாக, கண்ணன் ஆழ்வாரது உள்ளத்தில் குழந்தையாகவும் காதலனாகவும் இருந்து அன்புணர்வைக் கிளர்ந்தெழச் செய்தான்.

கண்ணன் எனும் அழகுத் தெய்வத்தைக் குழந்தையாகக் கொள்ளத் தாய்மை உணர்வு ஆழ்வாருக்குக் கிளர்ந்தெழுகிறது. தாயாக நின்று பாடவிழைந்த ஆழ்வாருக்குப் பிருந்தாவனக் கண்ணனே முன் நின்றான் (பெரிய.திரு மொ.10.4.1) இருப்பினும், பெரியாழ்வாரின் தாய்மை அனுபவம் போன்று திருமங்கை ஆழ்வாரின் தாயுள்ளம் அத்தகைய அனுபவத்தைக் கொடுக்கவில்லை. அசோதையாக நின்று பாடும் பாடல்களும், ஆய்ச்சியர் அசோதையிடம் முறையிடும் பாசுரங்களும் சிறப்பாக அமையப் பெற்றுள்ளன.

திருமங்கை ஆழ்வார் பாடிய பாசுரங்கள் பல காதல் உணர்வில் நின்று பாடியனவாகவே அமைந்துள்ளன. அவைகள் பிருந்தாவனக் கண்ணனாகக் கண்ட அனுபவத்தைப் பாடுவனவாக அமையவில்லை, திருக்கோவிலில் தரிசித்த கண்ணனை பிரேம பக்தி மிகுதியால் காதல் உணர்வில் பாடுவதாக அமைந்திருக்கக் காணமுடிகிறது. காதல் மீதூறுவதால் மடலேறுவதாகவும் தூது விடுவதுமான பாசுரங்கள் பல[25] ஆழ்வாரது பாசுரங்களில் காணப்படுகின்றன.அவைகள் அகப்பொருள் சார்ந்தவைகளாகும்.

ஆழ்வாரின் வாழ்க்கையில் ஏற்பட்ட படிப்படியான உணர்ச்சிப் பெருக்கினைக் கொண்டு அவரது ஆறு படைப்புகள் அமைந்துள்ளன.

தொடக்கத்தில் பெண் இன்பத்தில் மூழ்கிய ஆழ்வாருக்கு, இறைவன் தனது அழகினைக் காட்டி, அவரை ஆட்கொண்டார். இறைவனது அருளால் திருமந்திரத்தையும் திவ்விய தேசங்களையும் ஆழ்வாருக்குக் காட்டியருளினார். அவ்வாழ்வாரும் அவ்விடங்களைத் தரிசித்துப் பெற்ற அனுபங்கள் பெரிய திருமொழிப் பாசுரங்களில் வெளிப்படுகின்றன.

இங்ஙனம் அனுபவித்த ஆழ்வாருக்கு இவ்வனுபவம் நிலைக்க, இறைவன் முகம் காட்டாது ஒதுங்கி நின்றார். ஒரு கணமும் பிரிந்திருக்க மாட்டாத ஆழ்வார் தாகம் மிகுந்தவராகி, தம் நெஞ்சாலே நினைத்து கண்ணனைத் தரிசித்தார், என்பதனைத் திருக்குறுந்தாண்டகம் எடுத்துரைக்கின்றது.

இதனால் ஏற்பட்ட ஆர்வம் இறைவனிடம் சரணடையச் செய்ததைத் திருவெழுக் கூற்றிருக்கை விளக்குகிறது.

ஆழ்வாரின் வேண்டுகோளை நிறைவேற்றாத பொழுது, பிரிந்த வேதனையில் நின்று பாடிய அனுபவம் சிறிய திருமடலில் வெளிப்படுகின்றது. இம்முயற்சியும் பயனற்று போனதை, நினைத்து வருந்திப் பாடிய பாசுரங்களைப் பெரிய திருமடலில் காணமுடிகிறது.

இறைவன் ஆழ்வாருக்கு முகம் காட்ட, ஆதனால் பிறந்த பேரின்பத்தைத் திருநெடுந்தாண்டகத்தில் வெளிப்படுத்துகிறார். இவ்வாறு, ஆழ்வாரின் பக்தி அனுபவம் படிப்படியாக வளர்ந்து வளர்ச்சி பெற்றது அறியத்தக்கது.

பெரியாழ்வாரின் வாத்சல்ய பக்தி: (அசோதை பாவனை)

பெரியாழ்வாரின் அருளிச் செயல்களை நோக்குமிடத்து, திருமால் அவதாரங்களில் சிறப்பாகக் கண்ணன் அவதாரத்தையே பெரிதும் விரும்பியிருக்கிறார் என்பது தெரிய வருகிறது. இவருடைய உள்ளம் 'கண்ணன்' என்னும் தெய்வக் குழந்தை யினையே காண விரும்பிற்று. அதனால், கண்ணனுடைய செயல்களில் பெரிதும் ஈடுபட்டுப் பாடியிருக்கிறார். இங்கு வெறும் ஈடுபாடு என்று கூறினால் போதாது. 'உன்னுடைய விக்கிரமம் ஒன்றொழியாமல் எல்லாம் என்னுடைய நெஞ்சகம் பால் சுவர் வழி எழுதிக் கொண்டேன் (5.4.5) என்று பாடுவது இங்குக் கருதத்தக்கது. அந்த அளவிற்குக் கண்ணனது சுய உருவமே ஒளிவீசிக் கொண்டிருந்தது. அந்த ஒளி அனுபவத்தில், தாய்மை உணர்வில் பாடி அனுபவித்த பக்தி, சிறப்புத் தந்து நிற்கிறது.

என்றோ நடந்ததாகக் கூறப்படும் கிருஷ்ணன் லீலைகள் ஆழ்வார் உள்ளத்தில் ஒரு இறந்தகால நிகழ்ச்சியன்று. ஆகையால் நிகழ்கால நிகழ்ச்சி அனுபவத்தில் கிளர்ச்சி பெற்று நிற்கிறார். பிறந்த குழந்தையான கண்ணன் மீது பெரியாழ் வாருக்குப் பரிவு பொங்குகிறது. அவனது பேரழகினைக் காணக்காண இப்பேரழகிற்குக் கண்ணே (திருஷ்டி) பட்டுவிடுமோ எனப் பெரியாழ்வாரின் மனம் நினைக்கிறது. அதன் விளைவாகப் பாடியதுதான் பல்லாண்டுப் பாசுரமாகும். இறைவனுக்கு எத்தகைய தீங்கும் நேரிடாது வண்ணம் இருக்க, பல்லாண்டு பாடித் தொடங்கிய பெருமை ஆழ்வாரைச் சாரும். இதனால் தான், வைணவ உலகம் விஷ்ணு சித்தரைப் 'பெரியாழ்வார்' என்று அழைப்பது நினைக்கத்தக்கது.

குழந்தைக் கண்ணனை, பிறந்தது முதல் காண விழைந்த தால், தாலப்பருவம், அம்புலிப்பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப் பருவம், தளர் நடைப் பருவம், என்று பலபருவங்களில் கண்டு இன்புற்றிருக்கிறார். இவற்றோடும் அமையாது, புறம்புல்கல், அப்பூச்சிக் காட்டுதல், தாய்பால் உண்ண அழைத்தல், காதுகுத்தல், பூச்சூடல், காப்பிடல் போன்ற தலைப்புக்களிலும் தெய்வக் குழந்தையின் அனுபவத்தில் திளைத்துப் பாடியுள்ளார். இவ்வாறு, குழந்தையழகில் ஈடுபட்டுப் பாடியது. தமிழிலக்கியத்தில் பின்னர் வளர்ந்து வந்த பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு ஓர் அடிப்படையாக அமைந்துள்ளது.

கண்ணனது வாயினில் வையம் முழுதும் கண்ட அசோதை மற்ற பெண்களையும் அழைத்துக் காட்டுகிறாள். அதனைக் கண்ட அப்பெண்கள் ஆச்சரியத்தில் மூழ்கி "ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்" (1.1.7) என்று கூறி மகிழ்ந்தனர். அவர்கள் கூறியது கண்டு மகிழ்ந்த அசோதை, கண்ணன் பிள்ளையாகப் பிறந்ததைப் பெரும் பேறாகக் கருதி, அவர்களுக்குக் கண்ணனின் திருமேனி அழகினைக் காட்ட முற்படுகிறாள். தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பது போல, தாம் கண்ட கண்ணன் அழகினை, மற்றப் பெண்களுக்கும் காட்டி பெருமை கொள்வது நோக்கத்தக்கது. 'சீதக்கடல்' எனத் தொடங்கும் (1 3) திருமொழியில், கண்ணன் பாதாதி கேச வருணனை சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது.

ஒரு குழந்தையின் வளர்ச்சியில் தாய்க்குள்ள பங்கு எத்தகையது என்பதனையும், அக்குழந்தையின் பழக்க வழக்கங் களையும் அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார். குழந்தையைப் பற்றி வருணிக்கையில், தயக்கமான கூறுகளைக் கூட பெரியாழ்வார் நடப்பியல் தன்மையுடன் பாடுவது என்பது தாய்மை உணர்ச்சியை வெளிப்படுத்துவதாகிறது.

"வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தே போல்
சொட்டு சொட்டென்னத் துளிக்கத் துளிக்கக் என்
குட்டன் வந்து என்னைப் புறம் ல்குவான்"

பு)பெரியா.திரு.மொ.1.10.1)

என்று குறிப்பிட்டுள்ளது தாய்மை நிலையைக் குறிப்பிடுவதோடு அன்றிகண்ணனுக்கும் ஆழ்வாருக்குமிடையே உள்ள உறவினை வெளிப்படுத்துகிறது. இலக்கியத்திற்கு உள்ளீடாக இதனைத் தான் பாட வேண்டுமென்ற வரையறை பற்றிக் கவலை கொள்ளாது பாடியமையானது, கண்ணன் மீது ஆழ்வார் கொண்ட வாத்சல்ய பக்தியே காரணமாகும். குழந்தையின் அழகை நேசிக்கத் தெரிந்த – அனுபவிக்கத் தெரிந்த ஒருவனால் மட்டுமே இரசிக்க முடியும். அவ்வகையில், ஆழ்வாரின் உணர்ச்சி நிலைகள், தாய்மை அன்போடு கூடிய அனுபவங்களாக வெளிப் படுகின்றன, குறிப்பாக அசோதையாக மாறி நின்று பாடும் பொழுது அவ்வுணர்வின் ஆழ்ந்த நெருக்கம் மிகத் தெளிவாகப் புலப்படுகிறது.

குழந்தைகளை நீராட்டுவிப்பது என்பது ஒரு பெரும் போராட்டம் போன்று தோன்றுவது இயல்பு. அந்த அளவிற்கு, அக்குழந்தைகள் தாயைப் பாடுபடுத்துவது என்பது எல்லா வீடுகளிலும் காணப்படுகின்ற ஒன்றாகும். இச்செயல், அசோதை வீட்டிலும் நிகழ்கிறது. கண்ணனை நீராட அழைப்பதில், அவள் படும்பாட்டை ஆழ்வார் அசோதை நிலையில் நின்று அனுபவித்துப் பாடுகிறார். ஒரு சாதாரண நடப்பியல் செயல் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. தண்ணீரை மட்டும் கொண்டு கண்ணனை நீராட்டவில்லை. எண்ணெய், சியக்காய், புளிப்பழம் போன்ற அனைத்தையும் சேர்த்துக் குளிப்பாட்ட வைத்திருக்கிறாள் அசோதை. வெகுநேரம் நீராட அழைத்து, கண்ணன் வாராது போக, கண்ணனைப் பலவாறாகப் புகழ்ந்து அழைக்கும் பகுதியாக ‘வெண்ணெயளந்த’ (2.4) என்ற திருமொழி அமைந்துள்ளது.

எண்ணெய், புளிப்பழம் கொண்டு குளிப்பாட்டும் அசோதையின் பாக்கியத்தை நினைந்து, தாமும் அனுபவிப்பது (2.4.1.) இங்கு நினைக்கத்தக்கது. குழந்தையின் விளையாட்டுத் தனத்தைச் சுட்டிக் காட்டுகிறார். விளையாடும் குழந்தையின் உடலில் இருக்கும் அழுக்கைப் போக்கத் தாய் பலவழிகளில் முயன்று நீராட்டி விடுவது இயல்பாகும். அந்த எண்ணத்தில் இங்குக் கண்ணனை அழைப்பதில், ஒரு தாயின் மன இயல்பு வெளிப்படுகிறது. கண்ணன் ஆயர்களோடு வளர்ந்தவனாலகயால், வெண்ணெய் உண்டதாலும், விளையாடியதால் உடம்பில்

ஒட்டிக்கொண்ட புழுதியினாலும், ஒருவித நாற்றம் ஏற்படும். அதைப் போக்க நீராட அழைப்பதாகப் பெரியாழ்வாரின் தாய்மை உள்ளம் வெளிப்படுகிறது. இதற்குக் குழந்தைகள் நீராட வருவதில் மறுப்பதுண்டு. அதே போன்று, கண்ணனும் தாயின் அழைப்பிற்கு மறுத்ததால், அசோதையான பெரியாழ்வார், கண்ணனின் பிறந்த நாளை நினைவூட்டி நீராட அழைப்பது நோக்கத்தக்கது. பிறந்த நாள் என்றாலே எண்ணெய் தேய்த்துக் குளிப்பது என்பது நடை முறை வாழ்க்கையில் இருந்து வரும் ஒரு வழக்காகும். அவ்வழகத்தினையும் பெரியாழ்வார் எடுத்துக் கூறியிருப்பது அறியத்தக்கது. குழந்தையின் மன இயல்பினைப் புரிந்து கொண்டு செயல்படுவது என்பது ஒரு தாயின் கடமையாகும். அவ்வகையில் கண்ணனுக்கு மகிழ்ச்சி தருவதும், நீராட வருவதற்கு இணங்குவதுமான செயலுக்கு அவனது பிறந்த நாளைக் காரணம் காட்டும் முறையானது (2.4.2) தாயன்பினை வெளிக்காட்டுவதாக அமைகிறது.

குழந்தையை நீராட்டும் அனுபவத்தில் ஆழ்வார் ஆழங்கால் படுகிறார். குழந்தையை நீராட்டுதல் என்பது ஒரு கலையாகும். நீராட்டுதலில் ஒரு முறையைப் பின்பற்றுவது வழக்கமாகும். பதமாக எண்ணெய் காய்ச்சி, கால்களில் குழந்தையை இட்டு, குழந்தையின் உடம்பில் எண்ணெய் தேய்த்துப் பின், கை கால்களை நீவி விடுவர். பதமான நீரில் நீராட்டுதல் வேண்டும்: அதிகமான பலத்தைக் குழந்தையிடம் காட்டுதல் கூடாது. இம்முறைகளை நன்கறிந்த ஆழ்வார், அசோதையாக மாறி, குழந்தைக் கண்ணனை நீராட்டும் செயலை நம் கண் முன் கொண்டு வருகிறார். குழந்தையின் வாயினைப் பசுஞ்சிறு, மஞ்சளால் நாக்கை வழிப்பதுமான செயலையும் குறிப்பிட்டிருப்பது (1.2.6) நோக்கத்தக்கது ஒரு சாதாரண செயல் என்று எச்செயலையும் ஒதுக்கி விடாமல், கண்ணனைக் கண்டதும் ஏற்பட்ட வாதசல்ய பக்தியில் நடைமுறையில் இருக்கும் தாயின் கடமைகளைக் கண்ணனுக்குச் செய்து அனுபவிக்கும் அனுபவத்திற்கு ஈடாக வேறு எந்த அனுபவத்தையும் குறிப்பிட முடியாது. அந்த அளவிற்கு, தம்மை மறந்த நிலையில், நடைமுறை வழக்கப்படி குழந்தையின் வளர்ப்பில், குறிப்பாகக் கண்ணனின் வளர்ப்பில் அசோதையாக மாறி ஆழங்கால் பட்டு அனுபவித்திருப்பது அறியத்தக்கது.

அடுத்து, குழந்தை முலை உண்ணும் செயலை-இயல்பினை எடுத்துக் காட்டியுள்ளார். இது, தாய்மை உணர்வுக்குச் சான்றாகும்.

"... ... உன்
திருமலிந்து மாரீவு தேக்கவந் தென்னல் குலேறி
ஒரு முலையை வாய்மடுத்து ஒரு முலையை
நெருடிக் கொண்டு
இருமுலையும் முறைமுறையாய் ஏங்கியேங்கி
யிருந்துரையே"
(பெரியா.திரு.மொ. 2.2.8)

என்று அருளிச் செய்துள்ளார். இந்த இயல்பினைக் குலுசேகர ஆழ்வாரும் (பெருமாள். திரு. 7.7), திருமங்கை ஆழ்வாரும் (பெரிய.திரு.மொ. 10.4) குறிப்பிட்டிருப்பது ஒப்பு நோக்கத் தக்கனவாகும். தன் குழந்தைக்கு முலை கொடுக்கும் தாயின் மகிழ்ச்சியும், விருப்பம் பற்றித் திருமங்கை ஆழ்வார் பாடி அனுபவிப்பதும் (பெரிய.திரு.மொ. 10.4.1) இங்கு நினைக்கத் தக்கது.

இவ்வாறு, குழந்தையின் பருவச் செயல்களில் தம்மை ஈடுபடுத்தி அனுபவித்திருப்பது புலப்படுகிறது. கண்ணனைக் குழந்தையாகக் கொண்டு பாடினாலும் 'வாத்சல்ய பாவம்' இவரது பாடல்களில் மிகுதியாகவுள்ளது என்று கூறமுடியாது. கண்ணன் ஆண்டாளுக்குக் காதலனாகவே தோன்றியது போல, பெரியாழ்வாருக்குப் பிள்ளையாகவே தோன்றினான் என்று கூறமுடியவில்லை. ஏனெனில், நாயக - நாயகி பாவமான, அகவுணர்விலும், பல திருப்பதிகள் பற்றியும், கண்ணன் - ஒரு பரம்பொருள் என்ற உணர்ச்சியிலும் பாடியிருப்பது அறியத் தக்கன. ஆதலால், பெரியாழ்வாரின் அனுபவங்கள் வாத்சல்ய பாவத்தோடு, நின்று விடாது ஒரு மகளுக்குரிய தாய் என்ற நிலையிலும், ஒரு அடியவன் என்ற நிலையிலும் அனுபவித்துப் பாடியிருப்பது தெரியவருகிறது.

## குலசேகர ஆழ்வாரின் அனுபவம்:

குலசேகரர், இறைவனின் அருட் கோலத்திலும் அருட் செயல்களிலும் ஆழங்கால்பட்டு, அவனுடன் ஒன்று கலக்க வேண்டுமென்ற துடிப்பில் பாசுரங்களை அருளியுள்ளார்,

இவரது பாசுரங்களில் குழந்தையைப் பிரிந்த தாயின் (தேவகி) மன நிலையும், மகனைப் பிரிந்த தந்தையின் மனவுணர்வும் மிக நுட்பமாக வெளிப்படுத்தப்படுகிறது. வாத்சல்ய உணர்வினில் நின்று பாடினாலும், இறைவனுடன் கலக்கும் ஆன்ம பக்தியின் வெளியீடாகப் பல பாசுரங்கள் அமைந்துள்ளன.

இறைவன் தரிசனத்தை எப்பொழுது பெறப் போகிறோம்; அடியவரோடு எப்பொழுது சேரப் போகிறோம் என்ற நிலையில் விழையும் உள்ளத்தைப் பார்க்க முடிகிறது. இறைவனுக்கு அடிமைத் திறம் பூண்டு நிற்பதில் இவ்வாழ்வாருக்கு வேட்கை மிகுதியாக உள்ளது.

இறைவனுக்கு அடிமை செய்யும் செயலே ஆன்மாவின் சிறப்பியல்பாகும். அதற்கு ஏற்றதான பிறவி எதுவாயினும் அதுவே உயர்ந்த பிறவி என்பதைப் பெரியோர்கள் கருதி வந்தனர். இவ்வுணர்வு குலசேகரர் பாசுரங்களில் காண முடிகின்றது.

"அணைய ஊர புனைய அடியும் பொடியும்
பட பர்வத பவனங்களிலே ஏதேனுமாக
ஜனிக்கப் பெறுகிற திரியக் ஸ்வதாவர
ஜன்மங்களைப் பெருமக்களும் பெரியோரும்
பரிக்ரஹித்துப் பிரார்த்திப்பார்கள்" (ஸ்ரீவசன. 87)

என்பதில், இறைவனுக்குத் தொண்டு செய்யும் இச்சையிலே எந்தப் பிறவி எடுத்தேனும் விருப்பமுடையதே ஆகும் என்று விளக்கம்[26] கொடுக்கப்படுகிறது.

பிறவி என்பது வெல்லத்தக்கது என்ற கருத்தினை இந்திய சமயங்கள் அனைத்தும் ஒன்றுபோல் கூறி வந்தாலும், தாம் கொண்ட குறிக்கோளை மறவாது வாழும் பிறவி பாராட்டத் தக்கது என்ற நிலையில் அடியார்கள் பாடுகின்றனர். எப்பிறவி கிடைக்கிறது என்பது பற்றிக் கவலைப்படாமல், அப்பிறவியில் உன்னை என்றும் மறவாத நிலை தனக்கிருக்க வேண்டும் என்ற உண்மையினைச் சைவ சமயப் பெரியோர்களின் பக்திப் பாடல் களில் வலியுறுத்திக் கூறப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இக்கருத்தினைப் பலவகைகளில் குலசேகர ஆழ்வார் எடுத் துரைப்பது நோக்கத்தக்கது.

இறைவன் வட்டத்தில் வாழும் எப்பிறவியும் தனக்கு விருப்பமானதே ஆகும். வெளி வட்டத்தில் மனிதனாக வாழும் பிறவியை விட, இறைவனோடு சேர்ந்து வாழும் எந்தப் பிறவியும் தமக்கு விருப்பமானதே ஆகும் என்பதனை வலியுறுத்திக் காட்டியிருக்கிறார்.

"கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே?"
(பெரு. திரு. 4.1)

"மீனாய் பிறக்கும் விதியுடையே னாவேனே"
(பெரு. திரு. 4.2)

"செண்பகமாய் நிற்கும் திருவுடையே னாவேனே"
(பெரு. திரு. 4.4)

"தம்பகமாய் நிற்கும் தவமுடையே னாவேனே"
(பெரு. திரு. 4.5)

"எம்பெருமான் பொன்மலைமே லேதேனு மாவேனே"
(பெரு. திரு. 4.10)

என்று ஏங்கும் அனுபவத்தைக் குலசேகர ஆழ்வாரின் பாசுரங்கள் சித்தரித்துக்காட்டுகின்றன,

"பிறவி வேண்டாம்" (பிறவாமை) என்று இறைவனிடம் கேட்கும் சில அடியவர்களின் நடுவே, உலகில் பிறவி வேண்டும்; அதுவும் இறை வட்டத்திலே அமைந்துவிடல் வேண்டும் என்று ஏங்கிக் கேட்பது நோக்கத்தக்கது. இறைப்பணியில் ஈடுபடும் பொழுது, உலகத்துப் பிறவிகளிலுள்ள உயர்வு தாழ்வினைப் பொருட்படுத்தலாகாது; அதுபற்றி இழிவுபடவும் தேவையில்லை, என்பதனை உணர்த்துவதாக இவரது பாசுரங்கள் எடுத்துரைக்கின்றன. இவ்வுணர்வுகள் அனைத்தும், உலக ஈடுபாடுகளை ஒழித்து, இறைவனிடம் பித்துக் கொண்டு விட்ட பெருமிதத்தில் ஏற்பட்டவையாகும்.

கண்ணனின் ஆயர்பாடிச் செயல்கள் பலரையும் கவர்ந்திருந்தது போல ஆழ்வாரையும் கவரவே செய்தன, ஆய்ச்சியர்களுள் ஒருத்தியாக நின்று பாடும் அனுபவத்தையும் இவரது பாசுரங்களில் காண முடிகிறது. ஆண்டாள் போல, பிரேம பக்தியின் எதிரொலியாக காதல் உணர்வில் நின்று பாடும் பாசுரங்களும்[27] இடம் பெற்றுள்ளன.

ஆயர்பாடி நிகழ்ச்சியில் ஆய்ச்சியாக நின்று காதலை வெளிப் படுத்தியது போல, ஆயர்பாடியில் கண்ணன் தரிசனத்தைக் கண்டு விட்ட குலசேகரர் கண்கள் தேவகியாக நின்று ஏங்கிப் பாடும் பாசுரங்கள் புலம்பலாக வெளிப்படுகின்றன. கண்ணனது ஆயர்பாடிச் செயல்களைக் கண்டு களிக்கும் அனுபவத்தை இழந்து விட்ட தேவகியின் நிலையில் நின்று பாடும் பாசுரங்கள்[28] வாத்சல்ய உணர்வினை வெளிக்காட்டுகின்றன.

இவ்விதமாக, குலசேகர ஆழ்வாரின் பக்தி அனுபவங்கள் இரு கோணங்களில் அமைந்துள்ளன. இறைவட்டத்தில் வாழத் துடிக்கும் துடிப்பைப் பாடிய ஆழ்வார், தன்னை உய்விக்க இறைவன் எழுந்தருளி வரவில்லையே என்ற ஏக்கத்தைப் பாடியருளினார். அவனையன்றி வாழ்வில்லை என்ற உறுதியில் உருகிப் பாடியது ஒருமுறையாகும். அடுத்து.வாத்சல்ய உணர்வும், காதல் உணர்வும் கண்ணன் பால் கொண்டு பாடிய அனுபவம் மற்றொரு கோணமாகும். உலக வாழ்க்கையை வெறுத்து, இறைவனிடம் கொண்ட அன்பின் வெளிப்பாடே இவரது பக்தி அனுபவமாகும். திருவேங்கடமுடையானைக் கண்டதும் தான் பிறவி எடுத்ததன் உண்மையை அறிந்து கொண்டு இறைவனிடம் தன்னை அடிமைப்படுத்திக் கொண்டவராவர்,

**திருமழிசையாழ்வாரின் பக்தி அனுபவம்:**

நாலாயிரத்தில் திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி என்னும் இரண்டு பிரபந்தங்களும் திருமழிசை ஆழ்வார் அருளியவையாகும்.

மற்ற ஆழ்வார்களைப் போல, ஒரு குறிப்பிட்ட பாவத்தில் முனைந்து நின்று பாடுகிறார் என்று கூற முடியாது. விஷ்ணு பரத்துவத்தைப்பாடினார் என்று ஒரளவிற்குக் கூறமுடியும்.மேலும் விஷ்ணு பரத்துவத்தில் தாம் கொண்டிருந்த ஞான உறுதியினை உள்ளம் உருகி நின்று அன்புமயமாகப் பாடிய ஆழ்வார்களைப் போலவே இவரும் சிறப்பாகப் பாடினார் என்றும் கூறமுடியாது. பல பாசுரங்கள் இறைவன் புகழைக் கூறுவனவாகவும், இறைவனின் தன்மை,அவதாரங்கள் ஆகியன பற்றியும் அவற்றின் பெருமைகளைப் பற்றியுமே[29] பாடியிருக்கிறார். கண்ணன் அவதாரத்தினைப் பாடுவதன் மூலம் விஷ்ணு பரத்துவத்தையும்[30] வெளிப்படுத்துகிறார் என்று கூறலாம்.

நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்த விருத்தம் போன்ற அனுபவத்தையே வெளிக்காட்டுகிறது இறைவனின் பரத்துவத்தை உணராதார்க்கு உணர்த்த விரும்பும் துடிப்பே மிகுதியாகவுள்ளது. கண்ணன் அருளாலே கண்ணனை நினைத்தல் வேண்டும் (நான், திருவந். 16); நிலையற்ற மனத்தினையுடைய ஆழ்வார். கண்ணனை நினைத்ததால், தெளிவான மனம் உண்டாகியது மகிழ்தலும் குறித்து சுட்டிக் காட்டப்படுகிறது.

"எனக்காவா ராரொருவரே எம்பெருமான்
தனக்காவான் தானே மற்றல்லால் – புனக்காயா
வண்ணனே! உன்னைப் பிரறியார் என்மதிக்கு
விண்ணெல்லா முண்டோ விலை" (நான். திருவந். 51)

என்று, கண்ணனது அருள் கிடைத்ததைப் பெருமையாகப் பாடுகிறார். தன்னைத் தவிர கண்ணனை வேறு எவரும் அறிய மாட்டார்கள்; அத்தகைய அருள் கிடைத்த ஆழ்வாரது புத்திக்கு விண்ணுலகம் எல்லாம் கூடினாலும் ஒப்பாகாது' என்று தற் பெருமையாகக் கூறிக் கொள்வது நோக்கத்தக்கது. அத்தகைய இன்பம் கொடுக்கும் கண்ணன், தன்னை விட்டு பிரிந்து விடுதலும் கூடாது என்றும் கேட்டுக் கொள்கிறார்.

கண்ணனை விட்டுப் பிரியாத பேரின்பம் பெற்றதால் அவனை 'பத்தியுழவன்' என்று புகழ்வதும் இங்கு நினைக்கத் தக்கது.

"வித்தும் இடல் வேண்டும் கொல்லோ விடையடர்த்த
பத்தியுழவன் பனம் புனத்து, மொய்த் தெழுந்த
கார்மேகம் அன்ன கருமால் திருமேனி
நீர்வானம் காட்டும் நிகழ்ந்து" (நான். திருவந். 23)

ஒரு உழவனைப் போன்று கண்ணன் உலகின் நிலையைக் கருத்திற் கொண்டு, உலகத்தவர்க்களுக்கு அனைத்து இந்திரியங்களைக் கொடுத்து, அந்தர்யாமியாக நின்றும் அவதாரங்களைச் செய்தும் காப்பாற்றுகிறான் என்று விளக்கம்[31] கொடுக்கப்படுகிறது. இதே கருத்துடைய நம்மாழ்வாரின் திருவாய் மொழி பாசுரம் ஒன்றும்[32] இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பிற ஆழ்வார்கள் பெற்ற மெய்யுணர்வு அனுபவமே இவரது பக்தி அனுபவத்திலும் காண முடிகிறது. இறைவனோடு ஒன்றி நின்று பெற்ற அனுபவத்தையே அருளிச் செய்துள்ளார்.

"கதவு மனமென்றும் காணலா மென்றும்
குதையும் வினை ஆவி தீர்ந்தேன் – விதையாக
நற்றமிழை வித்தி என் னுள்ளத்தை நீ விளைத்தாய்
கற்ற மொழியாகிக் கலந்து" (நான். திருவருந். 81)

என்பதில் தனக்கு தமிழ் கற்பித்தவன் கண்ணன் என்று சுட்டிக் காட்டுகிறார். இவ்வனுபவத்தைப் பாடியதோடு இவ்வனுபவத்தின் முடிவில் தாம் இறைவனோடு இரண்டறக் கலந்து விட்டமை யினையும் (திருச். விரு. 120) இவர் பாடலிலேயே காணமுடிகிறது.

**தொண்டரடிப்பொடியாழ்வாரின் அனுபவம்:**

பக்தி உணர்வில் விளைந்து பக்தி உணர்வினைத் தூண்ட வல்ல பாசுரங்களாக இவரது பாசுரங்கள் அமைந்துள்ளன. பக்திச் சுவை நிரம்பியனவாக இவரது பாசுரங்கள் இடம் பெற்றுள்ளன. திருமால் தொண்டர்களிடம் இவர் கொண்டுள்ள பக்தியை இவரது பாசுரங்களே எடுத்துரைக்கும்.

இறைவன் திருமேனி அழகு ஆழ்வார் உள்ளத்தில் நிலைத் திருப்பினும், அவர் பாடல்கள் அப்பெருமானுக்கு ஆளாகி உய்யத் துடிக்கும் துடிப்பையே புலப்படுத்துவனவாக உள்ளன.

"ஆயர் தம் கொழுந்தே! என்னும்
இச்சுவைத் தவிர யான் போய் இந்திரலோகம் மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருள்ளானே" (திருமாலை. 2)

என்று. திருவரங்கநாதனின் பெருமையைச் சொல்லி பேரின்பம் அடைகிறார். திருவரங்கநாதனைத் தவிர வேறு எவரையும் பாடாதவர். அழகின் ஒட்டு மொத்த வடிவமாக அரங்கனை – கண்ணனை அவர் வழிபட்டு வந்தார்.

கண்ணனைக் கண்டதும் தனக்கு கண்களில் நீர் வருகிறது என்றும் (திருமாலை. 18), 'அத்தகைய அழகுடைய கண்ணனை முன்பு காணாமல் இருந்து விட்டேனே! என்று (திருமாலை. 32) வருந்துவதாகவும் கூறுகிறார். இவ்வாறு, இறையருளைப் பெறுவதற்கான கண்களில் நீர் வருதல், மெய் சிலிர்த்தல், கதறுதல், உருகுதல் முதலிய மெய்யுணர்வு அனுபவங்களை இவ்வாழ்வாரது பக்தி அனுபவத்தில் காண முடிகிறது.

திருமாலிடம் பக்தி கொண்டதோடு அன்றி, அவன் அடியவர் களிடத்திலும் பெரும் பக்திமை வாய்ந்தவர். ஒருவனுக்கு பெருமை என்பது, இறைவனுக்கு அடிமைத் திறம் பூண்பதில் இருக்கிறதே தவிர பிறப்பில் இருப்பதில்லை என்பதனை[33] வலியுறுத்திக் காட்டினார். உயர்ந்த சாதியில் பிறந்த அந்தணர் களானாலும் இறைவன் அடியார்களைப் பழிப்பவர்களானால் அவர்கள் தாழ்ந்தவர்களே என்பதனைச் சுட்டிக்காட்டி, தாமும் சாதி நெறிகளைத் துறந்து இறைவனுக்குத் தொண்டு செய்யும் நெறியில் சேர்ந்து விட்டதையும் (திருமாலை. 25) குறிப்பிட்டுக் காட்டியிருப்பது நோக்கத்தக்கது. இம்முறைகளில் ஆழ்வாரின் பக்தி உணர்வு வேகமாக வெளிப்படுகிறது.

**இயல் தொகுப்புரை:**

இறைவனைப் பாடுவது என்பது இறைவன் திருக்கோயில் களைப் பாடுவதோடு அன்றி, இறையனுபவத்தைப் பாடுவதே என்பதே பக்தி இலக்கியப் பாடல்களின் நோக்கமாகும். இவ்விறையனுபவம் மெய்யுணர்வு அனுபவமாகும். ஆழ்வார்கள் தாம் பெற்று அனுபவித்த தெய்வ அனுபவத்தைத் தாம் பெற்று இன்புறுவதோடு அமையாது பிறரும் அனுபவிக்கச் செய்தனர். இறைவனோடு ஒன்றி வாழ்ந்தவனாகக் கருதினர். இத்தகைய உள்மன அனுபவத்தால் தெய்வம் ஒன்றையே நிலையான இன்பப் பொருளாகக் கொண்டு, அதனோடு ஊன் உருகி, உணர்வு கனிய எவ்வளவு ஒன்றி நிற்க முடிகிறதோ அந்த அளவிற்கு இவ்வின்பம் கை கொடுக்கிறது என்பதனை வெளிப்படுத்திக் காட்டினர். இவ்வின்பத்தையே ஆழ்வார்கள் கண்ணனிடம் கொண்ட அன்பினால் – பக்தியினால் பெற்று அனுபவித்தனர்.

பேரழகனாக விளங்கும் இறைவனால் கவரப்பட்டு இறை யனுபவத்தில் திளைத்துப் பாடிய இறையனுபவப் பாடல்களான அவர்கள் அனுபவித்த இன்பங்கள் கண்ணனின் சௌலப்பிய பண்பினை எடுத்து விளக்குவதாக அமைந்துள்ளன.

'பக்தி, 'ரஸமாக' விளக்கப்படுகிறது. 'அனுபவிக்கக் கூடிய தன்மை' என்பதாகப் பொருள் கூறப்படுகிறது. பக்தி கொண்டுள்ளவனின் புலன்கள் அனைத்தும் இறை பக்தியிலேயே ஈடுபட்டு நிற்கும் உணர்வினை - அனுபவத்தை ஆழ்வார் களிடத்துக் காணமுடிகின்றது.

விசிஷ்டாத்வைதத்தில் அழகுணர்ச்சியின் அடியாக எழும் மெய்ப்பொருளியல் பாகவத புராணத்தில் நிலைபெறுகிறது என்ற கருத்தினடியாகப் பிறக்கும் அழகுணர்ச்சியானது கண்ணனிடத்தில் முழுமை பெறுகிறது. மெய்யுணர்வாளர்களான ஆழ்வார்கள் கண்ணனைப் 'புவனசுந்தரன்' என்று உணர்ந்தனர். அந்த அழகுமிக்கக் கண்ணனின் அங்க அழகுகளைப் பாடி அனுபவித்துள்ளமைப் பாசுரங்கள் வழிப் புலனாகின்றன. கண்ணனை அழகுத் தெய்வமாகவே போற்றியும் வந்தனர். கண்ணனின் திருமேனி அழகு, வெண்ணெய் உண்ட அழகு, இடையர் கோல அழகு ஆகிய அனைத்துப் பார்வைகளிலும் கண்ணனின் அழகினை வருணித்து மகிழ்ந்துள்ளனர் ஆழ்வார்கள்.

பக்திப் பாடல்களில் ஆழ்வார்கள் தங்களது தனி வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் சுட்டிக் காட்டியுள்ளனர். ஆதலால், இவர்கள் வாழ்க்கையின் முற்பகுதி உலகியல் வாழ்க்கை என்றும், பிற்பகுதி தெய்வீக வாழ்க்கை என்றும் இரு முறைகளில் அமைந்துள்ளன, எனினும் வாழ்க்கையில் உலகியல் நிலையின்று விடுபட்டுத் தாம் பெற்ற தெய்வ அனுபவங்களை வலியுறுத்திப் பாடி மகிழ்ந்துள்ளனர். இறையருளாலே ஞானம் பெற்று, அந்த ஞான அனுபவத்தால் தங்கள் அனுபவங்களைப் பாடி, தங்களை மறந்தனர். மானுட உடம்பிலேயே ஒருவன் இறைவனுடன் கலந்து, திவ்விய ஞானம், திவ்விய சக்தி ஆகியவை பெறமுடியும், தெய்வீக மனோபாவம் மற்றும் தெய்வீக ஆனந்தம் அடைய முடியும் என்பதற்கு ஆழ்வார்களின் வாழ்வும் பக்தி அனுபவங்களுமே சான்றுகளாகும்.

## அடிக்குறிப்புக்கள்

1. மு. வரதராசனார், தமிழ் இலக்கியவரலாறு., ப. 128
2. நாதமுனி என்பவர் வைணவ ஆச்சாரியர்களுள் முதலாவதாக வைத்து போற்றப்படுபவர். இவரது காலம் கி.பி. 823-903 என்பதாகும் (N. Subbu Reddiar., *Religion and philosophy of Nalayiram with Special Reference to Nammalvar*., Appendix VI)
3. இராமனுஜம் காலம் கி.பி. 1017 – 1187 என்பதாகும். (மேற்படி நூலிலிருந்து எடுக்கப்பட்டது.

4. திருக்குருகைப் பிரான், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரிய வாச்சான் பிள்ளை, அழகிய மணவாள ஜீயர், அழகிய மணவாள பெருமாள் நாயனார், மணவாள மாமுனிகள் முதலியோர்.

5. N. Jagadeesan., *History of Sri Vaisnavism in Tamil Country*., P. 10.

6. "வேத சதுஷ்டய அங்க உபாங்கங்கள்
பதினாலும் போலே, இந்நாலுக்கும் இருந்தமிழ்
நூற்புலவர் பனுவல் ஆறாம் மற்றை எண்மர்
நன்மாலைகளும்" (ஆசாரிய. ஹிரு. 43)

நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு பிரபந்தங்களும் நான்கு வேதங்களாகவும், திருமங்கையாழ்வார் அருளிச் செய்த ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கங்களாகவும், மற்றை எண்மரும் அருளிச் செய்தவை உபாகங்களாகவும் அமைந்துள்ளன. என்று கூறப்படுகின்றன.

7, N. Subbu Reddiar., *Religion and philosophy of Nalayiram with Special Reference to Nammalvar*., P. 198.

8. இந்திரா பார்த்தசாரதி., **தமிழ் இலக்கியங்களில் வைணவம்** , ப. 253.

9. இராதாகிருஷ்ணன் (பதி.ஆ)., **கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருளியல் இயல் வரலாறு** (தொ. 1) ப. 562.

10. "பிராட்டியும் அவனும் விடினும் திருவடிகள்
விடாது, திண்கழலா யிருக்கும்"

"சேழிபக்கல் சேஷபூதன் இழியுந் துறை;
பிரஜை முலையிலே வைக்குமாப் போலே"
(முமுட்சு. 146, 147)

11. திருப்பாணா. அமலனா., 1.

12. கா. சிவத்தம்பி, **தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும்.**, ப. 22.

13. ப. அருணாசலம்., **பக்தி இலக்கியம்.**, பக். 90, 96.

14. பூதத்தாழ்வாரைத் தலைவராகவும். பொய்கை யாழ்வார் பேயாழ்வார்களைத் திருக்கண்களாகவும், பெரி யாழ்வாரைத் திருமுகமாகவும், திருமழிசைப்பிரானைக்

கண்டமாகவும், குலசேகர ஆழ்வார் திருப்பாணாழ்வார் களைத் திருக்கரங்களாகவும், தொண்டரடிப் பொடி யாழ்வாரைத் திருமார்பாகவும், திருமங்கை ஆழ்வாரைத் திருநாபியாகவும், மதுரகவிகளையும் எம்பெருமானாகவும் திருவடிகளாகவும் பெரியோர் அருளிச்செய்வர். (நம்.தி.வா மொ. 1.4.3) திருவாய்மொழி., ஈட்டின் தமிழாக்கம்., பகுதி. 1., ப. 196.

15. இரா. அரங்கராஜன்., நம்பிள்ளை உரைத்திறன்., ப. 98.

16. 'அன்றிக்கே ஸ்வரூப குண விபூதி
சேஷ்டிதங்களை விசதமாக்குகிற பாஞ்சராத்திர
புராண இதிகாசங்கள் போலே, நீல பாரூப
உக்தி தெரியச் சொன்ன வேத உப பிரம்ஹணம்
என்பார்கள்' (ஆசாரிய ஹிரு. 54)

17. நம்.தி.வா.மொ. 7.9.1. ஈட்டின் தமிழாக்க உரையில் இவ்விளக்கம் இடம் பெற்றுள்ளது திருவாய்மொழி, பகுதி 7., பக். 348 – 349.

18. எம். வரதராஜன்., பன்னீராயிரப்படி – ஓர் ஆய்வு., ப. 97.

19. ஆசாரிய. ஹிரு. சூத். எ. 77, ப. 175.

20. "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவாதிருக்க வரந்தர வேண்டும் இவ்வையகத்தே"
(திருநாவுக். 4.94.8)

21. "இருந்தவன் தன் வந்து இங்கு இவர் எண்ணம் எல்லாம்
திருந்த இவர்தம் திறத்தே செய்து – பொருந்தக்
கலந்து இனியவனாய் நிற்கக் கண்ட சடகோபர்
கலந்த நெறி கட்டுரைத்தார் கண்டு"
(திருவாய். நூற். 77)
(நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் (பாகம் 2), ப. 1272)

22. "எனதாவியுள் கலந்தபெரு நல்லுதவிக் கைம்மாறு
எனதா விதந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே
எனதாவி ஆவியும் நீ பொழில் ஏழும் உண்ட எந்தாய்
எனதாவியார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே"
(நம். தி. வா. மொ. 2.3.4)

"ஊனில் வாழ் உயிரே நல்லை போ உன்னைப் பெற்று
வானுளார் பெருமான் மதுசூதன் என் கம்மான்
தானும் யானு மெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்
தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுது மொத்தே"
(நம். தி. வா. மொ. 2 3.1)

23. "திருமால்தன் பால் விருப்பஞ் செய்கின்ற நேர்கண்டு
அருமாயத் தன்றகல்விப் பானென்? - பெருமால்நீ
இன்றென்பாற் செய்வானென்? என்னவிடர் உற்றுநின்றான்
துன்று புகழ் மாறனைத்தான் சூழ்ந்து"
(திருவாய். நூற்.98)
(நாலாயிரத்திவ்விய பிரபந்தம்: (பாகம் 2)., (10.8)., ப.1354

24. பெரிய.திரு. மொ. 1.10.6; 1.10.8; 5.9.7; 5.9.8; 7.3.2; 7.3.4; 7.3.5; 8.8.1.

25. காதல் உணர்வுமிக்கு பாடிய பாசுரங்களை, 'ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவம்' எனும் இயலில் கொடுக்கப் படுகின்றன. கண்ணனைக் காதலனாகக் கொண்டுப் பாடியிருப்பதால்,அப்பக்தி அனுபவக் கூறுகள் மேற்சொன்ன இயலில் எடுத்துரைக்கப்படுகின்றன,

26. 'இறைவன் கண் வளர்வதற்கு ஏற்றதான அரவணையாகவும் அவன் ஏறி ஊர்வதற்கான கருடப் புள்ளாயும், அவனி விரும்பி அணிதற்குத் தகுதியான திருத்துழாய்மாலையாயும் இருக்கும், விலங்கு, பறவை, தாவப் பிறவிகளைப் பெருமக்களாகிய நித்திய சூரிகள் இறைவனுக்குத் தொண்டு செய்யும் இச்சையாலே மேற்கொண்டார்கள் என்று கூறப்படுகிறது.
(ஸ்ரீவசன.87)

27. பெருமா. திரு 6., 'ஏர்மலர்ப் பூங்குழல்' எனத் தொடங்கும் திருமொழி.

28. பெருமா.திரு 7. 'ஆலிலை நீள் கரும்பு' எனத் தொடங்கும் திருமொழி.

29. திருச்.விரு.13; 1; 5; 6; 10.

30. திருச் விரு. 22: 25; 26; 30; 35; 36; 37; 38; 41; 43; 48.

31. நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம்., திவ்யார்த்த தீபிகை உரை., ப. 114-115.

32. "ஊரவர் கவ்வை எருவிட்டு அன்னை சொல் நீர் மடுத்து
ஈர நெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த
காரமர் மேனி நம் கண்ணன்"

(நம்.தி.வா.மொ. 5.3.4)

33. "பழுதிலா ஒழுக லாற்றுப் பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்களேலும் எம்அடி யார்க ளாகில்
தொழுமின்நீர் கொடுமின் கொண்மின் என்று
நின்னோடும் ஒக்க
வழிபட அருளினாய் போல், மதில் திரு வரங்கத்தானே"

(திருமாலை.42)

## இயல் - ஐந்து

# ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவம்

**இயல் அறிமுகம்:**

உலகத்திலுள்ள சமய நூல்கள் பலவற்றிலும் இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள தொடர்பு பற்றிப் பல கருத்துக்கள் உள்ளன. அவற்றில் சிறந்த ஒன்று, தலைவன்-தலைவி (நாயகன்-நாயகி-Bridal Mysticism) பாவமாகும். இறைவனை அனுபவிக்கும் முறைகளில் இதுவும் ஒன்றாகும். வைணவ சமயம் இதனைப் பெரிதும் போற்றி உரைக்கின்றது. பரமாத்மா மட்டுமே புருஷோத்தமன். அவன் முன்னிலையில் மற்ற அனைத்து உயிர்களும் (ஆத்மா) பெண் நிலையினரே என்ற கருத்து இங்கு நினைவு கொள்ளத்தக்கது. ஆழ்வார்களுக்கு, அகப்பொருட் துறைகளை அமைத்துப் பாடுவதில் இக் கோட்பாடு பெரிதும் பயன்பட்டது. ஆகவே, அகப்பொருள் நெறியில் மெய்யுணர்வுப் பாடல் பாடுவோர் ஆணாயினும், பெண்ணாயினும், அவர் தன்னை இறைவனின் காதலியாக-பிராட்டியாகக் கருதிக் கொண்டு பாடி அனுபவிக்கும் முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

வேதாந்தங்களில் குறிப்பிடப்படும் பக்தி ஆழ்வார்களிடம் காதல் முறையில் நிற்கிறது. இது 'கண்ணன் மீது கொள்ளும் பகவத் விஷயகாமம்'[1] என்று வழக்கப்படுகிறது. பக்திச் சுவையின் அடிப்படையில் பாசுரங்கள் அமைந்திருப்பினும், காதல் சுவை கலந்த பாசுரங்களும் இடம்பெற்றிருக்கக் காரணலாம். இவை, சிற்றின்பத்தின் வழி பேரின்பத்தைப் பெற முடியும் என்பதனை உணர்த்தவேயாகும் என்று கூறலாம். ஆகவே, அகத்துறைகளைப் பயன்படுத்தி, ஆழ்வார்கள் தமது உண்மையான பக்தியினை அகப்பொருள் கலந்த சுவையோடு எவ்வகையில் அனுபவித்துள்ளனர் என்பதனை விளக்குமுகமாக இவ்வியல் அமைகிறது.

**தாய்மையும் பெண்மையும்:**

வைணவர்களிடையே நிலவும் ஒரு மரபு இங்கு நினைவு கொள்ளத்தக்கது. தண்டகாரண்ய முனிவர்கள் இராமனின் பேரழகில் ஈடுபட்டு பெண்மையை விரும்பியதால், அடுத்த பிறவியில் ஆயர்மங்கையர்களாகப் பிறந்து கண்ணனைக் கூடினர் என்ற கருத்து உண்டு. ஆனால், ஆழ்வார்கள் அவ்வாறன்றி அப்பொழுதே பெண் தன்மை கொண்டு புருஷோத்தமனாகிய கண்ணனை அனுபவிக்கக் காதலித்தனர் என்று கூறுவதுமுண்டு. நம்மாழ்வார் போன்றோரிடத்தில் சில சமயம் ஞானம் தலைதூக்கி நின்றாலும் சில சமயம் காதலும் மீதூர்ந்து நின்றது. இந்த இரு நிலைகளிலும் பாசுரங்கள் அருளியிருப்பது அறியத்தக்கது.

"ஞானத்தில் தன் பேச்சு; பிரேமத்தில்
பெண் பேச்சு" (ஆசா. ஹிரு. 118)

ஞான நிலையில் தாமான தன்மையில் நின்றும், அன்பு மிக்க நிலையில் பெண் தன்மையில் நின்றும் பேசுவர் என்று ஆசாரிய ஹிருதயம் விளக்கும் தருகிறது. இந்நிலையினைக் கொண்டு நோக்குங்கால், நம்மாழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும் பெண் தன்மை மேலிட்டு அர்ச்சாவதார நிலையை அனுபவித்ததை அவர்களுடைய அருளிச் செயல்களின் மூலம் எடுத்துரைக்க முடியும். எனவே, நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண் பெயர் நீங்கிப் 'பராங்குச நாயகி' என்ற பெண் பெயரும், திருமங்கையாழ்வாருக்குப் 'பரகாலர்' என்ற பெயர் நீங்கி, 'பரகால நாயகி' என்ற பெண் பெயரும்" ஏற்படுவது அறியத் தக்கது.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிருந்து கொண்டு பெருமானை அனுபவிக்கும்பொழுது, தலைவி நிலையினில் மட்டுமன்றி அவர்கள் தோழி, தாய் என்ற தன்மைகளில் ஒருவரின் தன்மையை ஏற்றும் கூற்றுகள் நிகழ்த்தியுள்ளனர்.

"சம்பந்த உபாய பலங்களில் உணர்த்தி
துணிவு பதற்றம் ஆகிற பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத்
தோழி தாயார், மகள் என்று பேர்"
(ஆசா. ஹிரு. 133)

என்று மூன்று நிலைகளைப் பற்றி ஆசாரிய ஹிருதயம் கூறுகிறது. ஆதலால், தோழி பாசுரம், தலைவிபாசுரம், தாய்ப் பாசுரம்

என்று அகப்பொருள் பாசுரங்கள் பெயர் பெறுகின்றன. அகத் துறைகளான வெறியாட்டு, மடலூர்தல், உருவெளிப்பாடு கண்டு புலம்பல், தூது அனுப்புதல், போன்ற துறைகளிலும் ஆழ்வார்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர். இக்கூறுகள் தமிழிலக்கிய அகப் பொருள் மரபினை அடியொற்றியே அமைந்துள்ளன. பாசுரங்கள் சில கோபிகை பாவத்திலும், காணப்படுதல் குறிப்பிடத்தக்க செய்தியாகும். தலைவியாகப் பாடுகையில், பிராட்டி நிலை எய்திப் பாடுவதும் உண்டு கண்ணன் அவதாரம் அகப்பொருள் கொண்டு பாடுவதற்கு இடமளித்துள்ளதால் ஆழ்வார்கள் கோபிகை பாவத்தில் (ஆய்ச்சி) நின்று பாடியமை தலைவியின் தன்மையைக் காட்டுகிறது. அவைகள் சிற்றின்பத்தைப் பாடுவதாகக் கொள்ளாமல் பேரின்ப நிலை எய்துவதற்கான பாடல் எனக் கருதுதல் வேண்டும். பக்தியின் உச்சநிலையின் வடிவமே இவ்வாறு பாடச் செய்தன என்று கூறலாம்.

ஆழ்வார்கள் பெண் தன்மை ஏறிட்டுக் கொள்வது என்பது வலிந்து வருவதில்லை அந்நிலை, தானாக வந்தடைகிறது இறைவனது ஆண்மையும் வடிவழகும் சில குணமும் அவர்களை இந்நிலைக்குக் கொண்டு செல்கின்றன. "உயிரின் இயல்பு அவனுடைமையாம் தன்மையாகலின் பெண் தன்மை இயல்பாக வந்தடைகிறது. பெண்களுக்கு மோட்ச நிலை இல்லை என்ற கருத்துண்டு; ஆனால். இங்கு ஆழ்வார்கள் பெண் நிலையடைந்து இறைவனை அனுபவித்தலைக்,[2] காண முடிகிறது. மேலும், 'இது காமுகர் பேச்சன்று; இறைவன் கேட்கத்தக்கவன்' நினைக்கத்தக்கவன், தியானம் செய்யத் தக்கவன், பார்க்கத் தக்கவன் என்று பிருஹதாரண்ய உபநிடதம் கூறுவது போல கொள்ளப்படும் பகவத் காமம் ஆகும்; நல்வினை உள்ள ஒருவனே இப்பேறு பெறுகிறான்"[3] என்றும் கூறப்படுகிறது.

**பெண் பேச்சு என்பதன் விளக்கம்:**

ஆழ்வார் பெண் தன்மை ஏற்பட்டுப் பேசும் நிலையினராக ஆதலை மிகத் தெளிவான முறையில் ஆசாரிய ஹ்ருதயம் அமைத்துக் காட்டுகிறது. (ஆசா. ஹ்ரு 121) 'ஒரு பெண்ணிற்குத் தாய் தந்தை இருப்பது போன்று இப்புதுப் பெண்ணிற்குத் திருமந்திரம் ஆகிய கல்வி தாய் என்றும், ஆசாரியன் தந்தை என்றும் கொள்ள வேண்டும். திருமந்திரமாகிற மங்கள சூத்திரம் பெற்று ஒருவர் அழகிய மணவாளர்க்கு உரியவராகிறார்,

ஒரு ஜீவாத்மா பரமபதத்திற்குப் போக, முறையாகச் சொல்லப் பட்டயாவும், ஒரு புது மணப்பெண் தன் நாயகன் வீட்டிற்குரிய செயல்கள் போல உள்ளன. பரமபதம் சென்று இறைவனை அனுபவிக்கிற முறையும் ஒரு பெண் தன் நாயகனை அடைந்து கல்வி பெறும் தன்மையதாக இருக்கிறது. ஆகவே, ஆழ்வாரை ஒரு பெண் என்றும், அவரது பேச்சினைப் பெண் தன்மையோடு கூடின பேச்சு என்றும்; அதுவே இயல்பானது என்றும் அறிதல் வேண்டும்'[4] என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது. இந்நிலையில் ஒரு பெண்ணாக மட்டுமல்லாமல் தாய், தோழி, தலைவி ஆகிய மூவகை நிலைகளையும் அடைகின்றனர். இந்த மூவகை நிலைகளுக்கு ஆழ்வார்கள் உட்படுகின்றனர். இம்மூவகையினர் பேச்சிலும் வரும் பல சொற்கள் வேறு உள்ளுறைப் பொருள் கொண்டவையாக உள்ளன இவற்றின் விரிவான விளக்கத்தினை ஆசாரிய ஹிருதய சூத்திரங்கள் (137-150) எடுத்துரைக்கின்றன. ஆழ்வார்களுள் நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகியோர் பாசுரங்களில் அகப் பொருள் கலந்த அனுபவக் கூறுகள் அதிகமாகக் காண முடிகின்றன.

**தலைவி பேச்சு – அகப்பொருள்**

நம்மாழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும் மகள் – தலைவி தன்மை ஏறிட்டு அதிகமான பாசுரங்களை அருளியுள்ளனர். 'இறைவனின் ஒப்புயர்வற்ற உயர்வினை மனத்திற் கொண்டு, அவனை நுகர்வதற்கு இடையில் உண்டாகும் கால தாமதத்திற்கு ஆற்றாது. அவனே உபாயம் என்ற உறுதியையும் மீறி, அவனை அடைந்து அனுபவித்தலல்லாது, தரிக்காத பலத்திலே, பதற்றுகிற நிலைக்குத் தலைவி – மகள் என்ற பெயர்கள்'[5] இடம்பெறுகின்றன. இதனைப் பிராட்டி பாவம் (அ) நாயகி பாவம் எனப்படுகிறது.

''அன்யாபதேசப் பேச்சு (வெளிப்படையான பேச்சு) ஆழ்வார்க்கு வருவதற்கு ஆறு காரணங்கள் கூறப்படுகின்றன. அதாவது, பிராட்டி நிலைக்கும் ஆழ்வாருக்கும் இடையே ஆறு வித ஒப்புமைகள் உள்ளன என்பதனை ஆசாரிய ஹிருதயம் காட்டுகிறது.

"இன்பம் அன்பும் முற்படுவது
கொழுந்து விடுவதாகிறது கடிமலர்ப்
பாவையோடு உள்ள சாம்ய ஷட்கத்தாலே"

(ஆசா. ஹிரு. 122)

அதாவது, பெண்களுக்குள் உயர்ந்தவான பிராட்டியோடே ஒப்புமையும் உண்மையான ஆன்ம சொரூபத்திற்கு உண்டு. என்று குறிப்பிடப்படுகிறது. 'சாம்ய ஷட்கத்தாலே என்பதற்கு, 1) அவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல், 2) அவன் ஒருவனையே புகலாக நம்பியிருத்தல், 3) அவன் ஒருவனுக்கே இனியவனாக இருத்தல் 4) சேர்க்கையில் தரித்திருத்தல் 5) பிரிவில் தரியாதிருத்தல் 6) அவன் ஒருவனாலேயே காப்பாற்றப்படுதல் என்பனவாக ஆறு ஒப்புமைகள் பற்றி மணவாள மாமுனிகள் விளக்கம் கொடுத்துள்ளார், இந்நிலைகள் ஆழ்வாருக்குத் தானாக – இயல்பாக வருவதாகும். "அன்யாபதேசமாய் மணிவல்லிப் பேச்சைப் பேசும் ஆழ்வாரைத் தலைவி என்று கூறாது 'பிராட்டி' என்றே நம்பிள்ளை குறிப்பிடுகிறார். இறைவியோடு முற்றுவமை பெற்றிருக்கிற படியால் பிராட்டி என்று குறிப்பதாகக் காரணம்"[6] கூறப்படு கிறது.

நம்மாழ்வார் பாசுரங்களும் திருமங்கை ஆழ்வார் பாசுரங்களும் அகத்துறைகளில் பாடுதற்கு இடமளித்துள்ளன. அகப்பொருள் மரபுப்படி பிரிவுத்துயர், ஆற்றாமை உணர்வு, தலைவனது உருவெளிப்பாடு, பொருள்வயிற்பிரிவு, தூது, போன்ற துறைகளில் அமைந்த பாசுரங்கள் திவ்வியப் பிரபந்தத்தில் பரக்கக் காண முடிகின்றன. இவைதவிர்த்து, தலைவியின் காதல் நிலைமைகளும் குறிப்பிடப்படுகின்றன. மேலும், மடலேறல், நலம்பாராட்டல், ஊடல், போன்ற அகக் கூறுகளும் தலைவி பாசுரங்களாகப் பேசப்படுகின்றன.

அ. உருவெளிப்பாடு:

புற அழகால் ஈர்க்கப்பட்டு, ஆணும் பெண்ணும் ஒருவரோடு ஒருவர் காதல் கொள்கின்றனர். இதுவே, அடிப்படை நிலையாகும். இக்கருத்து, தொல்காப்பியர் கூறும் 'உருவு நிறுத்த காம வாயில்' என்ற அகப்பொருள் கருத்தைச் சார்ந்துள்ளது, முதற்சந்திப்பில், அவனது அழகிலே தம்மை மறந்தவளாகிறாள். இங்கு, அவன் அவள் என்பது கண்ணனையும், நாயகிபாவனை லுள்ள ஆழ்வாரையும் சுட்டுகிறது. இவ்வாறு, கண்ணன் மீது

கொள்ளும் காமம் பகவத் விஷய காமம் என்பதால், சிற்றின்ப அனுபவமாகிய காதலுக்குக் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் இந்த பகவத் விஷயகாமத்திற்கும் கூறப்பெறும். ஆகவே, பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபே இவ்வகக் கூறுகள் ஆகும்.

தலைவனது உருவைக் கண்டதும், தலைவி அவனையே நினைத்திருக்கிறாள். இதனால், அவள்பார்க்கின்ற பொருள் களெல்லாம் தம் உள்ளத்திருக்கின்ற பொருள் போலத் தோன்றுவது, பிரிவால் வரும் துன்பமே ஆகும். அம்முறையில், தலைவனது உருவம் அவள் காணுமிடமெங்கும் தெரிய வருவது 'உருவெளிப்பாடு' எனப்படுகிறது.

திருக்குறுங்குடி நம்பியான கண்ணனை மனதிற்கொண்டு, அவனது உருவம் தன் மனக்கண் முன் தோன்றிய படியே உள்ளது என்று பாராங்குச நாயகி கூறுகிறாள். இக்காதல் நோய்க்கு அறிவுரை கூறும் தாயையும் தோழியையும் பார்த்து, இந்நிலையில் தவிக்கும் தன்னை கோபித்துக் கொள்வதால் பொருளில்லை; அவனைக் கண்டதோடு அன்றி அவனது அவயவ அழகிலும் தன் நெஞ்சு சென்று கொண்டிருக்கிறது என்றும் கூறி வருந்துகிறாள். 'எங்ஙனேயோ' எனத் தொடங்கும் திருவாய்மொழிப் பாசுரத்தில் (5.5), தன் நெஞ்சில் அவனை வைத்துக் காண வேண்டும் என்பது வலியுறுத்திக் காட்டப்படுகிறது.

"நம்பியை நான் கண்டபின்
சங்கினொடும் நேமியோடும் தாமரைக் கண்களொடும்
செங்கனி வாயொன்றி னோடும் செல்கின்ற தென்நெஞ்சமே"
(நம்.தி.வா.மொ.5.5 1)

"செய்ய தாமரைக் கண்ணு மல்குலும் சிற்றிடையும் வடிவும்
மொய்ய நீள் குழல் தாழ்ந்த தோள்களும் பாவியேன்
முன்னிற்குமே"
(நம்.தி.வா.மொ.5.5.8)

"கன்னல் பாலமு தாகி வந்தென் னெஞ்சம் கழியானே"
(நம்.தி.வா.மொ.5.5.9)

எழுவ தோ ருரு வென் னெஞ்சள் ளெழு மார்க்கு மறிவரிதே')
(நம்.தி.வா.மொ.5.5.10)

என்பதனை வற்புறுத்திக் கூறுகிறாள் பராங்குச நாயகி. இதே போன்று. 'ஏழையராவி' (7.7) எனும் திருவாய்மொழியிலும் உருவெளிப்பாடு பேசப்படுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இறைவனது உருவழகினால் தனி மனம் எவ்வாறெல்லாம் துன்புறுகிறது என்பதனை விளக்குமுகமாக இத்திருவாய்மொழி அமைந்துள்ளது கண்ணனுடைய கண்கள், மூக்கு, வாய், புருவம், காதுகள். முறுவல், திருநுதல் ஆகியவை தன் முன்னே தோன்றி நின்று தன்னை வதைக்கும் அனுபவத்தையும் வெளியிட்டுள்ளது அறியத்தக்கது.

உரு வெளிப்பாடு என்ற உணர்வு, தலைவனுடன் தொடர்புடைய பொருள்கள் அனைத்தும் தம் கண்களுக்குள் பார்த்து மிகவும் துன்பமடைவதாகும். அதன் வழி தலைவனுடைய அழகு வெளிப்படுகிறது. ஆகவே. தலைவியைப் பொறுத்த வரையில் உரு வெளிப்பாடு என்பது உண்மை அனுபவம் என்றாலும் மாயத் தோற்றமாகும். அந்த அனுபவத்தில் அவன் பங்கேற்பதால், பெறும் உணர்வுகள் மெய்ப்பாட்டைத் தோற்றுவிக்கின்றன. கடவுளை மனிதனாகவும் தெய்வீக அவதாரங்களாகவும் அவள் கண்டு மகிழ்கிறாள். அம்முறையில் திருக்குறுங்குடியிலுள்ள அர்ச்சாவதார நம்பியைக் குறித்து இவ்வுரு வெளிப்பாட்டுணர்வு எடுத்துரைக்கப்படுகிறது கண்ணனது ஒவ்வொரு உறுப்பும் ஒவ்வொரு உவமையோடும ஒப்பிட்டுக் கண்டு மகிழ்கிறார். ஆகவே, அர்ச்சை நிலையில் இருக்கும் திருக்குறுங்குடி இறைவனுக்கு. அவள் விரும்புகின்ற அனைத்து அழகு நலன்களையும் இணைத்துப் பேசுவதாகவே அத்திருவாய் மொழி (7.7) அமைந்துள்ளது, உரு வெளிப்பாட்டை எடுத்துரைக்கும் திருவிருத்தப் பாசுரங்களும் (திருவருத். 39, 82) அவற்றோடு ஒப்பு நோக்கத்தக்கனவாகும்.

### ஆ. தலைவியின் கனவு நிலை:

பல்வேறு காரணங்களுக்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவதை அக இலக்கிய மரபு விளக்குகிறது. இரங்கத்தக்க நிலையில் தலைவி பெரிதும் வருந்துவாள். தன் உடலும் ஆன்மாவும் தன் தலைவனுக்குரியன என்பதால், அவனது பிரிவு அவளை மிகவும் வாட்டும். பிரிவினால் ஏற்பட்ட துன்பம் விரக தாபமாக மாறிப் பொறுக்க முடியாத நிலையில், பிரிவானது துன்பம் மிக்க நீண்ட இடைவெளியாக அவளுக்குத் தோன்றுகிறது.

இச்சூழலில், அவனது மனம் ஆற்றாமை காரணமாகப் பலமுறை களில் பேசத்தொடங்கிவிடும். இந்த உணர்வு ஆண்டாளின் அகப் பொருள் கலந்து பக்தி அனுபவத்தில் காணமுடிகிறது. பிரிவுத் துயரைப் பற்றிப் பல பாசுரங்களில் எடுத்துரைத்துள்ளது நோக்கத் தக்கது. குயில், மேகம் முதலியவற்றைத் தூது அனுப்பிய பிறகும், கண்ணன் முகம் காட்டவில்லை, அதனால், அவள் தரித்திருக்க மாட்டாள் என அறிந்த கண்ணன் கனவில் திருமணக் காட்சியைக் காட்டுகிறான், திருமணத் தொடக்கம் முதலாக, காதலியைக கைப்பிடித்தல் வரை நடைபெறும் அனைத்து நிகழ்ச்சிகளையும் ஆண்டாள் கனவில் கண்டு அனுபவிப்பதாக 'வாரணம் ஆயிரம்' எனத் தொடங்கும் திருமொழி (6) அமைந்துள்ளது,

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் கூறும் மெய்ப்பாடு (தொல். மெய்ப். 12) இந்தக் கனவு நிலையாகும். காதலனை விட்டுப் பிரிந்துள்ள நிலையில் தலைவி அரிதாகவே உறங்கு கிறாள். முழுவதும் புற அழகை மட்டுமே எண்ணிய மனநிலையில் தூங்கினாலும் கூட அவனுடைய அழகினையும் அவனுடன் கூடுவதுமான செயல்களையும் அவள் கனவில் கண்டு அனுபவிக் கிறாள். தொல்காப்பியத்தில், "கனவும் உரித்தால் அவ்விடத்தான" (தொல். பொது 47) என்று இடம்பெற்றிருப்பது இதன்பாற்படுகிறது.

சங்க இலக்கியங்களில் சில குறிப்புக்கள் கனவு பற்றி இருந்திருந்தாலும் மணவினை நிகழ்ந்ததாகக் குறிப்பு காணப்பட வில்லை. நாயக நாயகி பாவனையில் அமைந்த பிற பக்திப் பாடல்களிலும் இதுபோன்று திருமணக் கனவுகள் பற்றிக் குறிப்பிடப்படவில்லை. கண்ணனையே திருமணம் புரிந்து கொள்ள வேண்டும் என்று பெரிதும் விருப்பம் கொண்டிருந்ததால் ஆண்டாள் இத்தகைய கனவு நிலைப் பாசுரங்களை அருளி யுள்ளார்.

தோரணம் நாட்டல், நாளை மணமென்று நாளிட்டு பந்தற்கீழ் காளைபுகல், தேவர்கள் எல்லோரும் சூழ, தன்னை மகள் பேசி முடித்தல், மணமாலை சூட்டல், நால் திசைத் தீர்த்தம் கொணர்ந்து பார்ப்பனச்சிறார் வேதம் எடுத்தோதி, காப்புநாண் கட்டல், தீபம், கலசம் ஏந்திய மங்கையர் வலம் வந்து வதுவை எதிர்கொள்ளல், மத்தளம், சங்கம் ஒலிக்க

மதுசூதனான கண்ணன் வந்து கைத்தலம் பற்றல், இருவரும் கைபற்றித் தீவலம் வரச்செய்தல், அம்மி மிதித்தல் ஆகிய இத்தகைய சடங்குகள் நடந்தேறியதாகக் கனவு காண்கிறாள் ஆண்டாள்.

இவ்வாறு, பாடப்பட்டிருக்கும் முறையானது, தமிழ் மரபிலிருந்து மாறுபட்ட ஒன்றாக அமைகிறது. இதற்கு முன்னர் திருமணச் சடங்குகள் கனவின் மூலம் இவ்வாறு கூறப்பட வில்லை. மானுட நிலையில் இயற்கைப் புணர்ச்சி நிகழ்வது என்பது தமிழ் மரபில் கூறப்படும் அகப்பொருள் அனுபவமாகும். இங்கு. பத்துப்பாசுரங்களிலும் எடுத்துரைக்கப்படும். திருமண நிகழ்ச்சிகள் யாவும் கடவுளை முழு மனிதனாகக் காட்டுகிறது கடவுளைத் தவிர வேறு யாரையும் மனத்தால் நினைக்க மாட்டேன் என்ற ஆண்டாளின் நம்பிக்கை,

"அங்கைத் தலத்திடை யாழி கொண்டான்
அவன் முகத்தன்றி விழியேனென்று
செங்கச்சுக் கொண்டுகண் ணாடை யார்த்துச்
சிறுமானிடவரைக் காணில் நாணும்
கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்"
(நாச் திரு 12-4)

என்றடிகளில் புலப்படுத்தப்படுகிறது. கடவுளையே மணாள னாகக் கொள்ளும் நிலையை அவள் விரும்பினாள்

மங்கல வீதி வலம் வந்து மஞ்சனம் ஆட்டுமனவும் (6.10) ஆண்டாள் கனவு கண்டதாகக் கூறப்படுகிறது. ஆனால், 'அதற்கு அடுத்த படியாக வரும் புணர்ச்சியும் (அடுத்த திருமொழியில் வரும் பகுதி) கனவிலேயே நடைபெற்றதாகக் கொள்ள வேண்டும் (நாச் திரு 7) இந்நிலையோடு கனவு கலைகின்றது'[7] என்று கூறப்படுகிறது. உண்மையிலேயே கண்ணனுடைய திருவாய் அமுதத்தை நாள்தோறும் இடைவிடாது பருகும் திருச்சங்கை நோக்கி வினவுவதாகப் பாசுரம் அமைந்துள்ளது. சங்கை விளித்து, அது கண்ணனோடு நெருங்கிய உறவு கொண்டுள்ளதைப் பற்றிக் கூறுவதாக, அமைந்துள்ளது. 'மதுசூதனன் வாயமுதம் பன்னாளும் உண்கிறாய்' (நாச். திரு. 7.5); 'செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்' (7 6) என்று வாயமுதம் பெற்ற நிலை எடுத்துக் கூறப்படுகிறது. மேலும், கண்ணனின் வாய்ச்

சுவையும் மணமும் எப்படி இருக்குமென விருப்புற்று வினவுவதை 'கருப்பூரம்' நாறுமோ' எனத் தொடங்கும் பாசுரத்தினால் (7.1) அறிய முடிகிறது. பெண்கள் சங்கின் மேல் சினம் கொள்வதையும் (7.8.) அதற்கு கண்ணனது வாயமுதம் உண்பதே காரணம் என்பதும் (7.9) சுட்டிக்காட்டப்படுகிறது.

இவ்வாறு, சங்கை விளித்து வாயமுதம் பற்றிப் பேசும் நிலை, நாயகி நாயக பாவனையில் அமைந்த பிற பாடல்களில காணமுடியாத ஒன்றாகும். பாடுவது பெண் என்பதாலும், பாடப்படும் செய்தி அகப்பொருள் சார்ந்ததாக அமைந்துள்ள தாலும். இதில் பக்தி உணர்வினைக் காட்டிலும் காதல் உணர்வே மேலோங்கி இருப்பது காண முடிகிறது. ஆண்டாளது இப் பாசுரங்களை நாயக நாயகி பாவனையில் அமைந்த பிற பாசுரங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டிய சிறப்பு நோக்கத் தக்கது.

இ. தூது:

தூது என்பது ஒருவர் தம்முடைய கருத்தை வேறொரு வருக்கு இடை நின்ற ஒருவர் வாயிலாகக் கூறி விடுப்பதாகும். காமம் மிக்க கழிபடர்க் கிளவிகளாக இருந்த துறையே பிற், காலத்தில் தூது இலக்கியங்களாக வடிவு கொண்டது என்பர். பக்தி இயக்கம் வளர்ந்த காலத்தில், ஆழ்வார்கள் இந்த அகத்துறையைப் பயன்படுத்தினர். ஆழ்வார்கள் தாமான தன்மையை விட்டுப் பிராட்டியின் நிலையை ஏறிட்டுக் கொண்டு பாடும்பொழுது இத்துறையில் பாசுரங்களை அமைத்துள்ளனர். பெரும்பாலும் புள்ளினங்களையே தூதுப் பொருள்களாகப் பயன்படுத்தியிருப்பது காணத்தக்கது. 'ஆழ்வார் பாடல்களே. பறவைகளைத் தூதுபோக்கும் சிற்றிலக்கியங்களுக்கு முன்னோடி'[8] என்று கூறப்படுகிறது.

இங்ஙனம் பறவைகளைத் தூது விடுதற்கு உட்பொருள் உண்டு என்பதனை 'ஆசாரிய ஹிருதயம்' எடுத்துக் கூறுகிறது.

> "சேர்ப்பாரைப் பக்ஷிகள் ஆக்கி, ஜ்ஞாந கர்
> மங்களைச் சிறகு என்று. குரு ஸப்ரஹ்மசாரி
> புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும்" (ஆசா. ஹிரு 150)

என்று குறிப்பிடுகின்றது. 'விண்ணோர் பிரானார் மாசுகில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே (திருவிருத்·54)

என்று ஆழ்வார் அருளிச் செய்ததில், பகவத் விஷயத்தில், இறைவனிடம் கொண்டு சேர்க்குமவர்கள் பறவைகளாகக் கொள்ளப்பெறுவர். 'இரண்டு சிறகுகளைக் கொண்டு பறவைகள் எங்ஙனம் பறந்து செல்கின்றனவோ அங்ஙனமே மனிதனும், ஞானம், ஒழுக்கம் எனும் இரண்டாலும் இறைவனை அடைகிறான், என்பது ஆன்றோர் கொள்கையாகும். எனவே, ஞானத்தையும் ஒழுக்கத்தையும் சிறகுகளாகக் கொள்ளல் வேண்டும். ஆச்சாரியர்களும், ஒரு சாலை மாணாக்கர்களும் புத்திரர்களும் இறைவனை அடையும் பேற்றுக்குத் துணையாக இருப்பவர்கள்' என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது.

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் தூது விடும் பதிகங்கள் நான்கு உள்ளன. இவையாவும், மகள் பாசுரங்களாகவே அமைகின்றன. அவை, 'அஞ்சிறைய மடநாராய்' (நம்.தி வா.மொ. 1.4) 'வைகல் பூங்கழிவாய் (6.1); பொன்னுலகாளீரோ (6 8), 'எம் கானல் அகங்கழிவாய்' (9.7) என்ற திருவாய்மொழிகளாகும்.

"தம்பிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும்,
தமரோட்டை வாசமும் மறப்பித்த ஷமா
தீஷா சாரஸ்ய சௌந்தர்யங்களை உணர்த்தும்
வியூக விபவ பரத்வ துவய அர்ச்சைகள்
தூது நாலுக்கும் விஷயம்" (ஆசா. ஹிரு. 156)

என்று சூத்திரம் கூறுகிறது. இதனை, நிரல் நிறையாகப் பொருள் கொள்ளுதல் வேண்டும் என்று விளக்கம் தரப்படுகிறது. 'தம் பிழையை மறப்பித்த க்ஷமையை உணர்த்தும் வியூகம் தூது விஷயம் என்றும், சிறந்த செல்வத்தை மறப்பித்த தீக்ஷையை உணர்த்தும் விபவம் இரண்டாவது தூதுக்கு விஷயம் என்றும், படைத்த பரப்பை மறப்பித்த சாரஸ்யத்தை உணர்த்தும் பரத்வ துவயம் மூன்றாவது தூது விஷயம் என்றும், தமரோட்டை வாசம் மறப்பித்த சௌந்தர்யத்தை உணர்த்தும் அர்ச்சை நான்காம் தூதுக்கு விஷயம் என்றும் பொருள் கொள்ள வேண்டும். இதனைத் திருவாய்மொழிப் பாசுரங்களில் காண முடிகிறது. 'தூது நாலுக்கும்' என்பது தூது விடுகின்ற நான்கு திருப்பாசுரங்களைக் குறிக்கிறது. இவ்வாறு, இறைவன் தூது விடும்படி முகம் காட்டாமைக்குக் காரணம், தம் பிழை,

சிறந்த செல்வம், படைத்த படைப்பு தமரோட்டை வாசம் என்பவனவாகும் என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது[9]

'அஞ்சிறைய மடநாராய்' என்ற திருவாய் மொழிப் பாசுரங்கள் (1.4) தூது பற்றிய முதல் பாசுரங்களாகும். தலைவனைக் குறித்து, நாரை, வண்டு, கிளி, பூவை முதலிய வற்றைத் தூது விடுகிறார் பராங்குசநாயகி. ஞான அனுட்டாங் களைக் (ஒழுக்கம்) கொண்ட ஆச்சாரியர்களையே பறவைகளாகக் கொள்ள வேண்டும் என்றும் இங்கு கூறப்படுகிறது.

"கடல்ஆழ் நீர்தேற்றி யதனுள்ளே கண்வளரும்
அடலாழி அம்மானைக் கண்டக்கால் இது சொல்லி
விடலாழி மடநெஞ்சே! வினையோ மொன்றாமளவே"
(நம். தி. வா. மொ. 1.4.10)

என்பதால், வியூகத்தில் தூது அறியப்படுகிறது. (பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் நிலை வியூக நிலையகும்). பறவைகளைத் தூது விடும் ஐதிகத்தைக் குறிப்பிடும் பராசரபட்டர் 'சக்ரவர்த்தித் திருமகன் திருவவதரித்த பின்பு வானர ஜாதி வீறு பெற்றது போல ஆழ்வார்கள் திருவவதரித்த பின்பு பட்சி ஜாதி வீறு பெற்றது,[10] என்று அருளிச் செய்துள்ளார். இத்திருவாய்மொழியில் அனைத்துப் பறவைகளையும் தூது விடுவதினால் பராங்குச நாயகியின் மிகுதியான 'கலக்கம் நன்கு' புலனாகிறது. பிரிவு ஆற்றாமையின் வெளிப்பாடே இத்தூது உணர்வாகும்.

விபவ நிலையில் இருக்கும் இறைவனிடத்தில் தூது விடும் பகுதியானது, திருவாய்மொழி 'வைகல் பூங்கழிவாய்' (6.1.) என்று தொடங்கும் பாசுரமாகும். இத்திருவாய் மொழியிலும் தலைவி, குருகு, நாரை, வண்டினம், புள்ளினம், அன்னம், குயில், கிளி, பூவை ஆகிய பறவைகளைத் தூது விடுவதாகப் பாசுரங்கள் உள்ளன.

திருவண்வண்டூர் எனும் திவ்விய தேசத்துப் பெருமானிடம் தூது விடுகிறாள் நாயகி. தன்னுடைய ஆராக் காதலைத் தலைவனிடம் சென்று கூறுமாறு தூதனுப்புகிறாள்.

"நாதன் ஞால மெல் லாமுண்ட நம் பெருமானைக் கண்டு
பாதம் கைதொழுது பணியீரடியேன் திறமே"
(நம். தி. வா. மொ. 6.1.2)

"கடிய மாயன் தன்னைக் கண்ணனை நெடுமாளைக் கண்டு
கொடிய வல்வினை யேயன்திறம் கூறுமின் வேறு
கொண்டே"
(நம் தி. வா. மொ. 6.1.9)

என்று திருநாரையையும், அன்னங்களையும் தூது அனுப்புகிறாள். தன்னைப் பற்றியும், தன் காதல் பற்றியும் கண்ணனிடம் எடுத்துக் கூறித் தன் துன்பத்தையும் காதல் நோயையும் விளக்குமாறு பெருமானிடம் சென்று கூறுங்கள் என்று வருந்துகிறாள் பராங்குச நாயகி. இங்குத் திருவண்வண்டூர் என்பது நெய்தல் நிலத்தைச் சார்ந்தது. ஆகவே, பிரிந்தார் இரங்குதல் நெய்தல் நிலத்தில் நிகழும் என்பது இங்கு நினைவிற் கொள்ளத் தக்கது. அந்த வகையில், நெய்தல் நிலத்தில் இப்பிரிவுணர்ச்சியை நினைவிற் கொண்டு வருகிறார் நம்மாழ்வார். நெய்தல் திணையின் ஒழுக்கத்தில் ஆற்றாமை வெளிப்பாட்டின் முதல் நிலையாக தூது அமைகிறது.

மூன்றாம் வகையானது, பரத்வம், அந்தர்யாமித்துவம் ஆகிய இருநிலைகளிலுமுள்ள இறைவனை நோக்கி விடப்படும் தூதாகும். 'பொன்னுல காளீரோ' எனத் தொடங்கும் திருவாய் மொழி (6 8) இவ்வகையைச் சார்ந்ததாகும். கண்ணனிடம் தன் நிலையை எடுத்துரைக்குமாறும் கண்ணனைத் தவிர வேறு வாழ்வில்லை என்பதனை எடுத்துக் கூறுமாறும் இத்திருவாய் மொழியில் கூறப்படுகிறது.

"முன்னுல கங்களெல்லாம் படைத் தமுகில் வண்ணன் கண்ணன்
எண்ணலங் கொண்ட பிரான் றனக் கென்னிலை
மையுரைத்தே"
(நம். தி. வா. மொ. 6.8.1)

"மாசறு நீலச்சுடர் முடிவானார் கோனைக் கண்டு
ஏசறும் நம்மை யில்லால் மறுநோக்குவர் பேர்த்துமற்றே"
(நம். தி. வா. மொ. 6.8 8)

"கார்த்திரள் மாமுகில் போல் கண்ணன்
விண்ணவர் கோனைக் கண்டு"
(நம். தி. வா. மொ. 6.8.9)

இவ்வடிகளில், வானவர் கோன், விண்ணவர் கோன் என்று வருவதால் பரத்துவத்தைக் குறிப்பதாகக் கொள்ள முடிகிறது

அர்ச்சை நிலையில் இருக்கும் திருமூழிக்குளம், என்ற மலை நாட்டுத் திவ்விய தேசத்தில் எழுந்தருளியுள்ள பெருமானிடம் தூது அனுப்புகிறாள் நாயகி. 'எம் கானலங்கழிவாய்' (9-7) எனவரும் திருவாய்மொழி இந்நிலையில் அமைகிறது. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து பிரிந்த நிலையில் தலைவனின் வடிவழகிலே ஈடுபட்டுத் துன்பம் மிக்கவளாய் ஆற்றாமைக்கு வனத்தில் சென்று, அங்குள்ள பறவைகளைக் கண்டு தூது அனுப்புகிறாள், தலைவி இங்கும் தூது அனுப்பப்படும் இடம் நெய்தல் நிலமாகும்.

"கொங்கார்பூந் துழாய் முடியெங் குடக் கூத்தரிக்
கென் தூதாய்
நுங்கால்க ளென் தலைமேல் கெழுமீரோ நுமரோடே"
(நம். தி. வா. மொ. 9 7.1)

"செக்க மலத் தலர் போலும் கண் கைகளால் செங்கனிவாய்
அக்கமலத் திலைபோலும் திருமேனி யடிகளுக்கே"
(நம். தி. வா. மொ. 9.7.3)

முதலில் எடுத்துக் கூறப்பட்டுள்ள பாசுரத்தில், பெருமானுடைய திருவடிக்கீழ் தம்மைச் சேர்ப்பிக்க வல்ல ஆற்றல் வாய்ந்த ஆச்சாரியர்களே தூதர்களாய்க் கொண்ட சிறப்பினை நன்கு காட்டியுள்ளார். அப்படிப்பட்ட ஆச்சாரியர்கள் தம் சுற்றத்துடன் தம் தலைமீது திருவடிகளை வைப்பதே பெறற்கரிய பேறு என்பதை இத்தூதுப் பதிகத்தில் அருளிச் செய்துள்ளார்.

"எம்மீசர் விண்ணோர்' பிரானார் மாசின் மலரடிக் கீழ்,
எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே" (திருவிருத். 54)

என்று கூறுவதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். இளம் குருகையும் அன்னங்களையும் மேகங்களையும் விரித்துத் தன் நிலையை எடுத்துரைக்குமாறு வலிந்து கூறுவதாக அப்பாசுரங்கள் அமைந்துள்ளன.

இவ்வாறு, தூது சென்றவர்கள் மீண்டும் வந்து செய்திகளைச் சொல்லும் வரை ஆழ்வாரால் பொறுத்திருக்க முடியவில்லை 'திருநாவாய்' சென்று இறைவனை அடைந்து, அவனைக் கண்ணாரக் கண்டு அடிமை செய்வோம் என்று தலைவி நினைக்கிறாள். ஆனால், அப்போது கிடைக்கப் பெறாமையால் மனம் வருந்துவதாக, 'அறுக்கும் வினை' (9.8) எனும் திருவாய்மொழி விளக்குகிறது. காரணம், காதல் மயக்கம் மிகவும்

உச்சக்கட்டமாக இருக்கும் பொழுதிலும், தூது போனவர்களின் நினைப்பு ஏற்படுவதாலும் இத்தவிப்பு உண்டாகிறது. திருநாவாய் தேசத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனிடம் - கண்ணனிடம், அவனிடம் சென்று சேரும் நாள் பற்றிக் கண்ணாரக் கண்டு களிக்கும் படியும், கண்ணனின் தொண்டனாகுவது எந்நாளோ என்று மனம் குழம்பிப் பேசுமிடங்கள் இப்பாசுரங்களில் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு, ஆழ்வாராகிய பராங்குச நாயகி, பல வகைகளில் பாடி அனுபவித்துத் தனது பிரிவுத் துயரை மெய்ப்பித்துள்ளது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

ஆண்டாளும், தனது பிரிவாற்றாமையினைப் போக்க, குயிலையும் மேகத்தையும் தூது விடுவதாகப் பாசுரங்கள் (நாச். திரு. 5.8) அமைந்துள்ளன. இவைகள், மேற்சொன்ன தூதுப் பாசுரங்களோடு ஒப்பு நோக்கத்தக்கனவாகும்.

இவ்விதமாக, இறைவன் உறைந்திருக்கும் ஐவகை இடங்களில் தூது விட்டாலும் அடையும் பொருள் ஒன்றேயாகும். ஐவகை நிலைகளிலும் இருப்பவன் பெருமானான கண்ணன் ஒருவனே ஆகும் என்பது ஆழ்வாரிடம் காணப்பட்ட கருத்து என்று கூறலாம். இடத்திறல் வேற்றுமையே தவிர, பொருளில் வேற்றுமை இல்லை என்பதனைக் காட்டியுள்ளார். இவ்வுணவை உண்மையினை உணர்த்த இவ்வகத்துறை பயன்பட்டது என்று கூறலாம்.

ஈ. மடலேறல்:

ஆழ்வார்களுள் திருமங்கை ஆழ்வார் 'மடல்' என்னும் துறையைப் பெருக்கித் தனியே பிரபந்தமாக உருவாக்கிய நிலை தமிழ் அகஇலக்கியத்தில் நிகழ்ந்த ஒரு புதிய மாற்றம் என்று கூறலாம். அவர் பாடிய மடல்கள் சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற பெயரில் வழங்குகின்றன. மடலானது, காதல் ஆற்றாமை வெளிப்பாட்டின் இறுதிநிலையாகும்.

மடலூர்தலை ஆடவர்க்குரியதாகவே தமிழ்நூல்கள் வகுத்துரைக்கின்றன. எனினும் இறைவனிடத்துக் காதல் கொண்ட பெண் ஒருத்தி 'நான் மடலூர்வேன்' என்று கூறும் அமைப்பு முறையில் திருமங்கை ஆழ்வார் அருளியுள்ளார். ஆகவே, காதலியை அடைவதற்குத் தலைவன் மடலூர்தல் எனும் பழைய அடிப்படையில் இருந்து 'கடவுளைத் தலைவராகக் கொண்டு

பெண்கள் மடலூரும் ஒரு புதிய இலக்கியநெறி உருவாக்கி விட்டது என்பது இவரது அருளிச் செயல்கள் வழி கூற வழியுண்டு. பிற்காலத்தில் தோன்றிய பன்னிரு பாட்டியல் எனும் நூலில் மடல்பற்றி.

"மடன்மா பெண்டிர் ஏறார் ஏறுவர்
கடவுளர் தலைவராய் வருங் காலே" (பன்னிரு 147)

என்று பேசுகிறது. தமிழ்மொழி கூறவில்லையென்றாலும் வடமொழி நூல்கள் கூறுகின்றன என்பதனைச் சுட்டிக் காட்டுகிறார் ஆழ்வார். அவரது பெரிய திருமடலில்,

"அன்ன நடையார் அவரே ஆடவர்மேல்
மன்னும் மடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவதுண்டு"
(பெரிய. தி. ம. 38-39)

என்னுமிடத்தில், மகளிர் மடலூரார் என்பதனை தான் அறிந்திருப்பதாகவும் தலைவி பேச்சாகக் கூறுகிறார். அவரது காலத்தில் இவ்வழக்கு இல்லை என்பதும் புலனாகிறது. ஆகவே, இம்முறையானது தமிழிலக்கியத்திற்குரிய ஒரு புதிய நெறியாகும். இவ்வாறு, அறிந்திருந்தும் "மன்னும் வடநெறியே வேண்டினோம் (40) என்று கூறுவதால் இவ்வுத்தி வடமொழி நூல் மரபினைக் காட்டுகிறது. பெரியதிருமடல், சிறிய திருமடல் இரண்டும் தலைவி கூற்றாகவே அமைந்துள்ளன.

கிருஷ்ணாவதாரத்திலே, அவனுடைய குடக்கூத்திலே அகப்பட்டு, அவனை அனுபவிக்கப்பெறாது, வருந்தி, மடலெடுக்கத் துணிந்த ஒரு பிராட்டியின் – நாயகியின் தன்மையிலே, தான் நின்று அவனது உணர்வுகளை வெளிப் படுத்துகிறார் ஆழ்வார். இது, சிறிய திருமடலைக் குறிக்கிறது. தலைவனது பிரிவைத் தாங்கமுடியாத அவள் அவனோடு கூடுதற்கு மேற்கொள்ளும் துணிச்சலான செயலே மடலூர்த லாகும். பின்பு, இறைவனுடன் கலந்து, பிரிந்த நாயகியானவள் அவனைப் பெறாமல் தரிக்கமாட்டாமையால் 'மடலூர்ந்தாகிலும் காணவேணும்' என்று பேசும் முறை பெரிய திருமடலைக் காட்டுகிறது.

சிறிய திருமடலில், மடலூர்வேன் என்று சொன்ன அளவிலேயே இறைவன் தன்னை வந்து அடைவான் என்று

எதிர்பார்க்கிறாள். ஆனால் அவன் வந்திலன்; ஆகவே மடலெடுத்தே தீர்வது எனும் தனது திண்ணிய துணிவைப் பெரிய திருமடலில் மேலும் விரிவுபடுத்திக் காட்டுகிறாள் பரகால நாயகி. இவ்வாறு, இருமடல்களில் நாயகியின் நிலைமைகளைச் சுட்டிக்காட்டுகிறார். பெரிய திருமொழியிலும் நாயகி பாவத்தில் பாடியிருப்பினும் கண்ணனது, அருள் கிடைக்கப்பெறாமையால், மடலேறினாலாவது அவனை அடையலாம் என்று நினைத்த நாயகியின் எண்ணத்தை ஆழ்வார் பெண்நிலையில் நின்று இவ்விரு திருமடல்களை அருளிச்செய்து காட்டியிருப்பது சிறப்பிற்குரிய செய்திகளாகும்.

அறம், பொருளால் பெறப்படுவது காமமே ஆகும். ஆதலால், காம புருஷார்த்தமே சிறந்தது. 'நான் பகவத் காமத்தைப் பற்றினேன்; அதனால் இறைவனை அடைய மடலூரத் துணிந்தேன். காம புருஷார்த்தத்தை விரும்பாதார் இரசிகளல்லர் என்று கூறப்படுவதுமுண்டு.

> ''அன்னதோர் தன்மை அறியாதார் - ஆயன்வேய்
> இன்னிசை ஓசைக் கிரங்காதார், மால்விடையின்
> மன்னும் மணிபுலம்ப வாடாதார்'' (பெ. தி. ம. 41–42)

நாயகனை விட்டுப்பிரிய மனமில்லாத பெண்களும் உண்டு. சீதை, உலூபி, உஷை, பார்வதி முதலியவர்களின் செயல்களைப் பின்பற்றியிருப்பேன் என்று நாயகி கூறுவதாக ஆழ்வார் (47–70) அருளியிருக்கிறார். திருநறையூர்ப் பெருமானை வணங்கியது முதல் பகவத் காம்மாகிற மனநோய் ஏற்பட்டுவிட்டது. அவன் எழுந்தருளியிருக்கும் திவ்யதேசம் சென்று, தன் உடலழகினைக் காட்டி, தனது இளமையின்பத்தை அவனுக்கே அர்ப்பணித்து விடுவதாகக் கூறப்படுகிறது. அப்படியும் தன்னை ஏற்காவிட்டால் அவன் செயல்களைக் கூறி, 'ஊரறிய மடலூர்வேன்' என்று நாயகி கூறி வருந்துவதாகவும் கூறப்படுகிறது. ''மன்னுலகில் என்னிலைமை கண்டு மிரங்காரே யாமாகில் மன்னு மடலூர்வேன் வந்து'' (பெரியதிருமடல் தனியன்.) என்று கூறியும் அச்சுறுத்தப் படுகிறது.

சிறியதிருமடல் பாசுர அடிகளில் (11–14) நாயகியின் காமவுணர்வு சுட்டிக்காட்டப்படுகிறது. கண்ணனைக் கண்ட உடன், அவனழகில் மயங்கி மடலூரப் போவதாக அச்சுறுத்தும்

நாயகி கூறுவதும் (சி. த. ம. 75-77) இங்கு நோக்கத்தக்கது. இவ்வாறு, பிதற்றிய தலைவி,

"உலகறிய ஊர்வன் நான்
முன்னி முளைத்தெழுந்து ஓங்கி ஒளிபரந்த
மன்னியம்பூம் பெண்ணை மடல்" (பெ தி.ம 145-148)

என்று பெரியதிருமடலில் வலியுறுத்திக் கூறப்படுகிறது, கண்ணன் மீது கொண்ட அளவுகடந்த வேட்கையின் காரணமாகப் பெண்கள் மேற்கொள்ள விரும்பும் முறையே இம்மடலூர் தலாகும், என்பதனை வலியுறுத்திக் காட்டுகிறார் திருமங்கை ஆழ்வார்.

"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்" (குறள். 1137)

என்ற குறளுக்கேற்ப ஆழ்வாரது மடல் பாசுரங்கள் அமைந்துள்ளன. மடலூர்ந்ததாகக் காட்டாமல், மடலூர்வேன் என்று அச்சுறுத்துவதாகக் காட்டியிருத்தல் நினைக்கத்தக்கது. இதே கருத்துடைய நம்மாழ்வாரின்,

"தோழி! உலகு தோற்றலர் தூற்றி, ஆம்
கோணைகள் செய்துகுதிரியாய் மடலூர்துமே"
(நம். தி. வா. மொ. 5.3.9)

"யாமட லூடர்ந்தும் எம்மாழி யங்கைப் பிரானுடை
தூமடல் தண்ணந் துழாய்மலர் கொண்டு குடுவோம்
யாமட மின்றித் தெருவு தோறயல் தையலார்
நாமடங் காப்பழி தூற்றி நாடும் இரைக்கவே"
(நம். தி வா. மொ, 5.3.10)

என்ற பாசுரங்கள் இங்கு ஒப்புநோக்கத் தக்கனவாகும். கண்ணன் தன்னைக் கவர்ந்துவிட்டதால் அவனிடம் கொண்ட காதல் முளைவிட்டுத் தழைத்து வளர்ந்துவிட்டது. இதனால், கண்ணனைத் தூற்றியவாறு மடலூர்வேன் என்று கூறுவதாகப் பாசுரங்கள் அமையப்பெற்றுள்ளன. மேலும், 'மாசறு சோதி' எனத் தொடங்கும் (5.3) திருவாய்மொழியின் இரண்டு பாசுரங்களில் மடலூர்வதாகக் கூறப்படுவதும் இங்கு நினைத்தற்பாலது.

இவ்வாறு, மடலூர்வதாக மேற்கொள்ளும் தலைவியின் முயற்சி நின்றுவிடுகிறது தான் விரும்புகின்ற நாயகனை ஒரு

படத்தில் எழுதவேண்டும் என்று அவள் எண்ணியபொழுது, சூரியன் மறைந்து இருள்வந்து அவளது முயற்சியைத் தடுத்து விடுகிறது என்பதனை நம்மாழ்வார் 'ஊரெல்லாம்' எனும் திருவாய்மொழியில் (5.4) குறிப்பிட்டிருக்கிறார். இவ்வாறு செய்தது, கண்ணன் செயலோ என்று அவள் சந்தேகிக்கிறாள். தான் மடலூரார்தலால் அவனுக்கு இழுக்கு வந்துவிடுமோ? என்பதனை உணர்ந்து, அவன்தான், இருளை வரச் செய்து விட்டானோ என்று அவள் நினைத்துப் புலம்பும் பாசுரங்கள் இத்திருவாய்மொழியில் இடம்பெற்றுள்ளன.

'மடல் எடுப்பது என்பது தூது விடுவதைக் காட்டிலும் இழிந்தது. ஆனால் அதைவிட விரைவில் பயன்தர வல்லது; அரிய முயற்சியால் எளிய பலனைக் கருதியது,[11] என்று மடலேறல் சிறப்பு எடுத்துரைக்கப்படுகிறது பெண் மடலேறுவதாகக் கூறப்படும் இத்தகைய சிறப்புடைய மடலேறல் துறையை ஆழ்வார்கள் பயன்படுத்தியிருப்பது, அவர்களின் அகப்பொருள் அனுபவத்தின் நோக்கத்தைப் புலப்படுத்துகிறது.

**உ. கோபிகை பாவனை ஊடல்:**

அகப்பொருள் மரபில் நாயகி-பிராட்டி நிலையில் நின்று தலைவனை அடைவதற்கான முறைகளை ஆழ்வார்கள் மேற்கொண்டு பாசுரங்கள் அருளியிருந்தனர். அந்நிலையிலும் அவனது அருள் கிடைக்கப்பெறாமையால் அவனை இழித்துப் பேசியஇடங்களும் திவ்வியப்பிரபந்தத்தில் கிடைக்கின்றன. கண்ணனைப் பற்றிய செய்திகள் என்பதாலும், கண்ணனை மையமாக வைத்துப்பாசுரங்கள் அருளியமையாலும் ஆழ்வார்கள் பிராட்டி நிலையைப் போன்றே கண்ணனை விரும்பிய கோபிகை பாவனையிலும் தமது அனுபவங்களை வெளியிட்டுள்ளமை அறியத்தக்கது அகப்பொருள் அனுபவ முறையில் கோபிகை பாவனை ஏறிட்டுப் பாடிய நிலை ஒரு புதிய முறையாக உள்ளது.

ஊடல் என்பது காமத்தின் பால் வருவதாகும். அகத்திணைக் குரிய உரிப்பொருள்களுள் ஒன்றாகும். புணர்ச்சி இன்பத்திற்காகத் தலைவன் தலைவியரிடையே ஏற்படுவதாகும். "போகப் பிரகாரந்தான் மூன்று வகைப்பட்டாயிற்று. அவை, ஊடல், உணர்தல், புணர்தல்" என்பனவாகும். ஊடல், உணர்தல், புணர்தல் இவை மூன்றும் காமத்திற் பெற்ற பயன் என்று

மூன்றையும் பிரயோஜனமாகச் சொன்னார்கள் தமிழர்கள்'' என்று ஈட்டின்[12] வியாக்யானம் விளக்கம் தருகிறது.

''ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம்
கூடியார் பெற்ற பயன்'' (குறள். 1109)

என்ற குறள் இங்கு நினைக்கத்தக்கது.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஊடல் பற்றி மூன்று பதிகங்கள் காணப்பெறுகின்றன. அவை அனைத்தும், ஆழ்வார்கள் கோபிகை பாவனையில் நின்று அருளினவையாகும்.

'மின்னிடை மடவார்கள்' என்ற திருவாய்மொழி (6.2); 'ஏர்மலர்ப்பூங்குழல்' என்ற பெருமாள் திருமொழி (6); 'காதில் கடிப்பு' என்ற பெரியதிருமொழி (10.8) ஆகிய மூன்று பதிகங்கள் கோபிகையின் ஊடல்துறை இடம்பெற்றுள்ளது. கிருஷ்ணாவ தாரத்தில் கண்ணனோடு ஊடிய ஆய மங்கையர் நிலையைத் தாம் ஏற்றுப் பாடியுள்ளமை அறியத்தக்கது.

'மின்னிடை மடவார்' என்று தொடங்கும் (6.2) திருவாய்மொழியில் கண்ணனது பிரிவாற்றமையால் புள்ளினங்களைத் தூதுவிட்டாள் நாயகி. அவளது துன்பத்தை அறிந்த அவன் முதலை வயப்பட்ட யானைக்கு அருள வந்தாற்போல, ஓடிவந்து காட்சிதர எண்ணினான். தாமதித்து வந்ததன் காரணமாகக் கண்ணனுடன் ஊடல் கொண்டு, 'உமக்கு இங்குச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை; இங்கு எதற்கு வந்தாய்; உனக்கு விருப்பமானவர்கள் பக்கலிலே சென்று தங்குவாய்' என்று பலவாறு ஊடல் கொண்டு பேசுவதாக இப்பாசுரம் அமைந்துள்ளது. பதிகத்தின் பாசுரங்கள் முழுவதும் ஊடல் அனுபவத்தையே வெளிப்படுத்துகின்றன. கண்ணனுடன் உறவு கொண்டிருந்தால், அவனால் எப்பொழுதும் துன்பம்தான் ஏற்படுகிறது என்று காமநோய் பற்றி விளக்கப்படுகிறது. அவனுடைய செயல்களை எல்லாம் எடுத்துரைத்து, 'அவனால் ஆய்ச்சியாளர்களாகிய அனைவருக்கும் நலிவு படும் நிலையே ஏற்பட்டுவிட்டதாகப் பேசப்படுகிறது. அகத்திணையின் பொருளுணர்ந்தே ஆழ்வார் இத்துறையைப் பயன்படுத்தி யுள்ளார்.

திருமங்கை ஆழ்வாரின் 'காதில் கடிப்பு' எனத்தொடங்கும் பெரியதிருமொழியில் (10.8) கண்ணன் செயல்களால் சினம்

கொண்ட ஆய்ச்சி பேசுவதாக பாசுரங்கள் இடம்பெற்றுள்ளன. கண்ணன் ஓர் ஆயர் மங்கையுடன் புணர்ந்து பிரிகிறான். பிரியும்போது திரும்பிவரும் காலத்தைக் குறித்துச் செல்கிறான். ஆனால் அந்தச் சமயத்தில் அங்கு வந்து சேரமுடியாதபடி. வேறொரு ஆய்ச்சியிடம் சென்றுவிட்டுத் திரும்பிய கண்ணன் மீது, அந்தக் கோபிகை ஊடல் கொண்டு ஏசும் பாவனையில் ஆழ்வார் பாசுரங்களை அருளியுள்ளார்.

"காதில் கடிப்பிட்டுக் கலிங்க முடுத்து
தாது நல் லதண்ணத் துழாய்கொ டணிந்து
போது மறுத்துப் புறமே வந் துநின்றீர்
ஏதுக்கிது என்னிது என்னிது என்னோ!"

(பெரிய திரு மொ. 10.8.1)

"தக்கார் பலர்தேவி மார்சால வுடையீர்
எக்கே! இதுவென் னிது வென் னிது வென்னோ!"

(பெரிய.திரு.மொ. 10.8.8)

திருமங்கை ஆழ்வார் கருத்துக்கள்போல, குலசேகர ஆழ்வாரின் ஊடல் பாசுரங்களும் அமைந்துள்ளன. 'ஏர்மலர் பூங்குழல்' என்று தொடங்கும் பெருமாள் திருமொழியில், (5) ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு வகையில் வெறுத்துக் கூறுவதுபோல பதிகம் அமைந்துள்ளது. இப்பாசுரங்கள், நம்மாழ்வார் திருவாய்மொழிப் பாசுரங்களோடும் (ஊடல் பாசுரங்கள்) ஒப்புநோக்கத் தக்கனவாகும். இவ்விதமாக ஊடல் பாசுரங்களை ஆயர்மகள் பாவனையில் காட்டியிருப்பதால் கண்ணன்மீது கொண்ட காமவின்பம் வலுப்பெறுகிறது பிராட்டி நிலையைவிட கண்ணனோடு தொடர்புடைய ஆயர் மகளின் நிலையையே பயன்படுத்திப் பிரிவுத் துயரைக் காட்டுவது ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவத்தின் சிறப்பம்சமாகும்.

**தோழி பாசுரங்கள்:**

தோழி என்னும் பாத்திரம் ஐந்திணை இலக்கியத்தில் சிறப்பாக இடம்பெறுகிறது தலைவனும் தலைவியும் ஒன்று படுவதற்கும் அவர்கள் மணம் நிறைவேறுதற்கும் இன்றியமை யாதவளாய்த் தோழி இடம்பெறுகிறாள்.

இறைவனுக்கு இவ்வுயிர் அடிமைப்பட்டது; பிறர்க்கு இல்லை; எனின் தொடர்பை அறிவதே இவ்வுயிர் இறைவனோடு

சேருவதற்கு அடிப்படையான நிலையாகும். அந்தத் தொடர்பை அறிகின்ற உணர்வுநிலை ஆழ்வாருக்கு நடக்கின்றது என்பது தோழி பேச்சாக வரும் பாசுரங்களின் மூலம் விளங்கிக்கொள்ள முடிகிறது. 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழ்கிலேன்' என்று ஆண்டாள் கூறுவதும் இதன்பாற்படும். ஏனெனில் அவள் இறைவனுக்கு அடிமைப்பட்டு அவனோடு சேர்தலையே குறிக்கோளாய்க் கொண்டிருந்தவள். இது, இறைவன்–உயிர் இரண்டின் இணைப்பிற்காக ஏற்பட்டதாகும்.

'பக்தி நிலையில் உள்ளபோது இறைவனுக்கும் ஆன்மாவிற்கு மிடையே உள்ள ஞானத்தை உணர்ந்த நிலை தோழி எனப்பெறும். ஏனெனில், 'சம்பந்த ஞானமானது அவன் ஒருவனுக்கே அடிமை என்றும் அறிவு என்பது ஆன்மா இறைவனோடு சேர்தற்குச் காரணமானது. அதுபோன்று தோழி, தலைவன் தலைவியை இணைக்கிச் சேர்க்குமவள்'[13] என்று கூறப்படுகிறது.

அக இலக்கியங்களில் தோழியானவள், வெறியாட்டினைத் தடுத்தல், தலைவியின் கற்புக்கு இழுக்கு நேரா வண்ணம் அறத்தொடு நிற்றல், தலைவியின் உடன்போக்கிற்குத் துணை போதல் முதலிய நிலைகளில் தோழியின் பங்கு அவசியமானதாக அமைகிறது. திவ்வியப் பிரபந்தத்தில், ஆழ்வார்கள் தோழி பாவனையில் நின்றும் பாசுரங்கள் அருளியிருக்கக் காணமுடி கின்றது. 'தோழியின் பாசுரங்களினால், ஆன்மா யாவும் பிற தெய்வங்கட்கு அடிமைப்பட்டது அன்று எனவும், அவை தமக்குத் தாமே அடிமை அன்று' எனவும் ஆசாரிய உறிருதயத்தில்[14] காட்டப்படுகிறது.

தோழி பாசுரங்களாக நிகழ்ந்துள்ள திருப்பதிகங்கள் மூன்றாகும். 'தீர்ப்பாரை யாமினி' (நம்.தி.வா.மொ.4 6) என்று தொடங்கும் திருவாய்மொழியில் வெறி விலக்கியும், 'துவளில் மணிமாடம்' என்ற (6.5) திருவாய்மொழியில் ஆசை அறுத்தும், 'கருமாணிக்கமலை' என்று தொடங்கும் திருவாய்மொழியில் (8.9) அறத்தொடு நின்றும் தோழி பேசுவதாகப் பாசுரங்கள் இடம்பெற்றுள்ளன. 'சம்பந்த ஞானநிலையில் நின்று பேசின பேச்சாக இம்மூன்று திருப்பதிகங்கள் அநந்யார்ஹசேஷத்துவத்தை விளக்குகின்றன'[15] என்றும் கூறப்படுகிறது.

அ. வெறிவிலக்கு:

தலைவிக்குப் பெருமானிடம் இயற்கைப் புணர்ச்சி நடை பெற்றுவிடுகிறது. பின்பு, பிரிவு ஏற்பட்டுத் தலைவனது பிரிவாற்றாமையால் தலைவி வருந்துகின்றாள். தலைவியது வேறுபாடு கண்டு, தாய் இவளது நோயினையும், அதன் காரணத்தையும் ஆராயப் புகுகிறாள். இவ்வாராய்ச்சி இருவகைகளில் நிகழ்தலுண்டு. ஒன்று, குறிபார்க்கும் கட்டு விச்சியை அழைத்துத் தலைவியின் நிலைக்குரிய காரணத்தை வினவுவர்; மற்றொன்று முருகன் கோயில் பூசாரியான வேலனை அழைத்து வினவுவர். குறிப்பாக, வேலனது வெறியாட்டு தலினால் தலைவியின் நோயை அறிந்துகொள்வது குறிஞ்சி நில மக்களிடையே காணப்பட்டுவரும் வழக்கமாகும்.

"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும், .." (தொல் புறம்.36)

என்று வெறியாட்டினைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. குறிஞ்சித் தெய்வமான முருகன் வெறியாடும் பூசாரியான வேலன் மீதோ, அன்றி வேறு மகளிர் மீதோ தோன்றி, தான் கூறவேண்டியதைக் கூறுவான் என மக்கள் நம்பிவந்தனர். அந்நம்பிக்கையின் அடிப்படையில், எழுந்தது இவ்வகத் துறையாகும். வெறியாடும் பொழுது, தலைவியின் காதல்நோய்க்குரிய காரணத்தை மறை முகமாகக் கூறுவதுமுண்டு. ஆகவே, வெறிவிலக்குத் துறையில் தோழியின் பங்கு இன்றியமையாததாகக் கூறப்படுகிறது ஆகவே, இவ்வகத்துறை ஆழ்வார் பாசுரங்களில் இடம்பெற்றிருக்கக் காணலாம்.

பராங்குச நாயகி கண்ணன்மீது காதல் கொண்டிருந்ததை அறிந்த தோழி, இவ்வெறியாட்டினைத் தடுத்து, வேறு பரிகார முறைகள் இவளது நோயைத் தீர்க்கமாட்டாது; கண்ணனுடன் சேர்ப்பித்தலே இவளது நோய்க்கு மருந்து என்று கூறுவதாகத் 'தீர்ப்பாரை யாமினி' எனும் திருவாய்மொழி (4.6) அமைந்துள்ளது. 'தலைவனது சங்கு சக்கரம் பற்றி உரைத்தால் தலைவி நோய் தீரும்; தலைவி கண்ணனை எண்ணியுள்ளதால் அவன் கழல் ஏத்துக; அவனது திருநாமங்களைச் சொன்னால் தலைவி பிழைப்பாள்; வெறியாடல் வேண்டாம்; ஸ்ரீ சூர்ணக் குறியிட்டால் அவள் பிழைப்பாள். கண்ணன் அடியார்களின் பாதத்துளியே இவள் நோயைத்

தீர்க்கும்' என்று பலவாறு தோழி கூறுவதாக பாசுரங்கள் அமைந்துள்ளன.

"தீர்ப்பாரை யாமினி யெங்ஙனம் நாடுதும் அன்னையீர்
... ... ... ... ... ... ... ... ...
போர்ப்பாகு தான் செய்தன் றைவரை வெல்வித்த
மாயப் போர்த்
தேர்ப்பாக னார்க்கிவன் சிந்தை துழாய்த்திசைக்கின் றதே"
(நம். தி. வா. மொ. 4.6.1)

"...... இக் கட்டுவிச்சி சொற்கொண்டு, நீர்
எதுவாயினும் செய்தங்கோர் கள்ளும் இறைச்சியும்
தூவேல்மின்,
மதுவார் துழாய் முடிமாயப் பிரான் கழல் வாழ்த்தினால்
அதுவே யிவளுற்ற நோய்க்கும் அருமருந்தாகுமே"
(நம். தி. வா. மொ. 4.6.3)

என்பதாகத் தோழி கூறினாலும், 'பெருந்தேவன் பேர் சொல்ல" என்றும், 'மாயன் தமரனு நீறு கொண்டு அணிய முயலின் மற்றில்லை' என்றும், 'வணங்கீர்கள் மாயப்பிரான் தமர்' என்றும் இறைவனின் பெருமைகளை வலியுறுத்திக் கூறுவதும் நோக்கத் தக்கது. அவ்வாறு எடுத்துக் கூறினால், தலைவியின் நோய்க்குரிய காரணத்தை அறிந்துகொள்வர் என்பதற்காகக் கண்ணனைப் பற்றி பேசிவந்தாள் என்பதனைக் குறிப்பால் உணர அறிய முடிகிறது.

"திசைக்கின்ற தேஇவள் நோய்; இது
மிக்க பெருந்தெய்வம்
இசைப்பு இன்றி நீ அணங்காடும் இளந்தெய்வம்
அன்றிது"
(நம். தி. வா. மொ. 4.6.2)

என்று, பெருந்தெய்வத்தால் ஏற்பட்ட நோய் என்பதனைச் சுட்டிக்காட்டி விடுகிறாள் தோழி. ஆதலால், சிறு தெய்வங்-கட்குச் செய்யும் சாந்திகளால் இவளுடைய நோயினைப் போக்கஇயலாது; என்பதனையும் எடுத்துரைக்கிறாள். ஆதலால், உலகம் உண்ட பெருமானுடைய திருநாமங்களை இவள் செவியில் படுமாறு ஓதியும், அவனது திருமேனியில் அணிந்துள்ள திருதுழாய் மாலையைக் கொண்டுவந்து கொடுத்தும் வந்தால் இவளது நோய் தீர்ந்துவிடும் என்பதனை வெளிப்படையாகவே எடுத்துக்

கூறுவதுமான பாசுரங்களும் கிடைத்துள்ளன. திருவிருத்தத்தில் இக்கருத்திலமைந்த, பாடலும் (திருவிருத்தம் 20)[16] இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

வெறிவிலக்குத் துறையில், கட்டுவிச்சியைக் கொண்டும் தலைவியின் நோய் பற்றிய காரணத்தை அறிந்துகொள்ள முடிகிறது. இதனை,

''வாராயின முலை யாளிவள் வானோர் தலைமகனாம்
சீராயின தெய்வ நன்னோ யிது, தெய்வத்
தண்ணந் துழாய்த்
தாராயினும் தழையாயினும் தண்கொம் பதாயினும் கீழ்
வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினோ''
(திருவிருத்.53)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. சிறு தெய்வங்களால் அல்லற்படும் தீய நோய் அன்று என்பதனை உணர்த்தவே 'வானோர் தலைமகனாம் சீராயினி தெய்வ நன்னோய் இது' என்கிறாள் தெய்வ நன்னோய் என்பதால், இப்படிப்பட்ட நோய் இவ்வுலகில் பெறுவதற்கு அரியது என்றும், பேரின்பம் உடைய நோய் என்றும் கட்டுவிச்சி கூறுகின்றாள். அதனால், திவ்வியமான திருத்துழாய் மாலையாயினும் அதன் ஓர் இலையாயினும் அதன் கிளை அல்லது வேராயினும் அல்லது மண்ணினையாவது கொண்டுவந்து பூசுங்கள்; வீசுங்கள்; அப்பொழுது அவள் பிழைப்பாள் எனக் கட்டுவிச்சிக் கூறும் கருத்தானது தோழிப் பாசுரத்தோடு ஒப்புநோக்கத்தக்கது. இதே கருத்துடைய தலைவி பாசுரம் ஒன்றும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும் நாச்சியார் திருமொழியில் (14.5) ஆண்டாள் கண்ணன் மீது கொண்ட காதல் உணர்வின் உச்ச நிலையாக அப்பகுதி அமைகிறது. கண்ணனுடன் இணைவதற்கு முடியாததால், தன் காதல் வாட்டத்தைக் குறைக்க, அவனது பீதக ஆடையைக் கொண்டுவந்து தன்மீது வீசுங்கள் என்று கூறும் பகுதியானது மேற்சொன்ன கருத்துக்களோடு ஒப்பு நோக்குதற்குரியது. இவை அனைத்தும், காதல் உணர்ச்சியின் உச்சநிலையைக் குறைப்பதற்கும், அந் நோயினைத் தீர்ப்பதற்குமான செயல்களாகும் காரணம். காதல் உணர்வின் உச்சநிலையில் தலைவனது எல்லாப் பொருளும் அழகு வாய்ந்ததாகவும், அப்பொருள்களைப் பெற்றால், தம் காதல் நோய்க்கு மருந்தாகும் என்பதும் இதன்

வழி அறியப்படுகிறது. பகவத் விஷயத்தில் ஈடுபாடு காரணமாக உண்டான இவ்வாற்றாமைக்கு, அதன் சம்பந்தமான பரிகாரமும் செய்தலேதகுதி என்று கூறுதல் இப்பாசுரங்களின் உள்ளுறைப் பொருளாகக் கொள்ளமுடிகிறது.

**ஆ. தலைவியின் பெருமை:**

தொலைவில்லிமங்கலம் என்ற திவ்வியதேசத்தில் எழுந்தருளி யுள்ள பெருமான்மீது நாயகி கொண்டிருந்த காதலைத் தோழி தாயர்க்கு உரைப்பது போன்ற பாசுரங்கள் அடங்கியது 'துவளில் மாமணி' (நம். தி. வா. மொ. 6.5) என்ற திருவாய் மொழியாகும். தலைவியின் பெருமைகளைத் தோழி வாயிலாகப் பேசவைக்கிறார் ஆழ்வார். தம் ,பெருமைகளைத் தாமே வெளியிட்டுக்கொள்ள வேண்டுமென்ற ஆசையில், மற்றொருவர் பேச்சாகத் தோழி மீது ஏற்றிப் பாசுரங்கள் அருளியிருப்பது அறியத்தக்கது. இச்சிறப்பினை, "இத்திருவாய்மொழிக்கு முன்னும் பின்னும் எல்லாம் எம் பெருமானைக் கவிபாடினார்; இத் திருவாய்மொழியில் தம்முடைய படி சொல்லுகிறார்; இத் திருவாய்மொழி, ஆழ்வார் தம்மை சொல்லுகிறது" என்று ஈட்டின் தமிழாக்கம்[17] எடுத்துரைப்பது நோக்கத்தக்கது. இறைவனைப் பற்றிப் பிற திருவாய்மொழிகள் பேச, இங்கு ஆழ்வார் பற்றிய செய்தி விளக்கப்பெறுவது இதன் சிறப்பாகும்.

தொலைவில்லிமங்கலம் நாயகனைக் காதலித்த தலைவியின், நிலையை அறிந்த அவளது அன்னை, அவளை அழைத்துச் சென்று. அவ்வூரைக் காட்டினாள். அவள், அவ்வூரில் எழுந்தருளி யுள்ள பெருமானைக் கண்டு மகிழ்ந்தாள். அப்பெருமானிடத்துக் காதல் கொண்டு தன் மகளை தாம் இழக்க நேரிடுமோ என்று அஞ்சிய தாய், தோழியிடத்து சென்று கூறுகிறாள். அதற்குத் தோழி, 'இனித் தலைவியை மீட்க நினைப்பதில் பயனேது மில்லை; அவள் தலைவன்மீது ஆசை கொள்ளும் முன்பே அவளைத் தடுத்திருத்தல் வேண்டும்; ஆகையால் அவன் பால் உள்ள ஆசையை – அன்பை விடுத்து, அவளை வாழ வழி செய்யவேண்டும்' என்று எடுத்துரைக்கிறாள். கண்ணனை நினைத்து உருகிக்கொண்டிருக்கும் இவளை வாழவைக்கத் துணை செய்தலே சிறப்புடைத்து என்றும் கூறுவதாக இத் திருவாய்மொழி அமைந்துள்ளது. தலைவியின் காதல் நிலைகள் தோழி வாயிலாக எடுத்துரைக்கப்படுகின்றன. 'கண்ணன் பெயர்

கூறிக்கொண்டே இருக்கிறாள். (6.5.4), அவனது ஊர் பற்றியே கேட்க விரும்புகிறாள் (6.5.7), அவனது இருப்பிடம் நோக்கியே தலையால் வணங்குகிறாள் (6.5.10) போன்ற செயல்களைச் செய்வதால், அவனது மகிழ்ச்சிக்காக அவளைக் கண்ணனிடம் சேர்ப்பிக்க முயலவேண்டுமே தவிர, வேறு வழிகளைப் பின்பற்ற லாகாது என்று தோழி வலியுறுத்திக் கூறுகிறாள். தலைவியின் காதல் நிலையின் உச்சக்கட்ட உணர்வினை தோழி பாவனையில் எடுத்துரைப்பதாக இத்திருவாய்மொழி அமைந்துள்ளது.

### இ. அறத்தொடு நிற்றல்:

அகப்பொருளில் அறத்தொடு நிற்றல் என்பது மிக இன்றி-யமையாத செயலாகும். தலைவியது கற்பொழுக்கம் காக்கப்படும் முறையில் இத்துறை அமைகிறது. தோழி, தலைமகனின் அனுமதிபெற்றுச் செவிலிக்கும் தாயார்க்கும் அறந்தொடு நிற்றலுண்டு. தலைவியின் காதலுக்கு இழுக்கு வராதவாறும், தலைமகனது பெருமைக்கு முரணாகாதவாறும் தனது காவலுக்குச் சோர்வு ஏற்படா வண்ணமும் தலைவி தலைவனோடு கொண்ட தொடர்பினை வெளிப்படுத்துவாள் தோழி.

> "எம்பெருமானோடே இயற்கையில் புணர்ந்து பிரிந்தாள் பிராட்டி. அவனால் சிந்தை பறியுண்டபடியே உயிர்த் தோழியானவள் கண்டு, தலைவியின் வடிவில் வேறு பாட்டாலும், சொற்களின் வேறுபாட்டாலும், புணர்ச்சி நிகழ்ந்ததை அறிகிறாள். இவையொன்றும் அறியாதே மணப்பருவம் அடைந்தாள் என்றும், இதனைக் கொண்டு பெற்றோர்கள் அவளது சுயம்வரத்திற்காக மணமுரசு அறைவிக்க, அத்தைக் கேட்ட தோழி துடித்து, இவ்வொலியைத் தலைவி கேட்டால் உயிர் தரியாள்; மேலும், இவளது காதல் தெரியவரின் தம்முடைய காவலுக்கு இழுக்கு வந்து விடும் என்று நினைத்து உடனே அறத்தோடு நிற்கிறாள் தோழி, சுயம்வரத்தைத் தவிர்த்து விடுமின் என்று மணத்தினை விலக்குகிறாள். ஆகவே, இது 'மணவிலக்கு' என்பதொரு கிளவித் துறையாகும்." என்று ஈட்டின் தமிழாக்க[18] விளக்கம்

எடுத்துரைக்கின்றது. இக்கருத்துக்கள் அடங்கிய பாசுரங்கள், 'கருமாணிக்கமலை' எனத் தொடங்கும் (8.9) திருவாய்மொழிப் பதிகத்தில் இடம்பெற்றுள்ளன. திருப்புலியூர்ப் பெருமானோடு

கலப்பு ஏற்பட்டுவிட்டதை அறிந்த தோழி, அயல் மணத்தை விலக்க முயற்சித்து, தலைவியின் காதல் நிலைமைகளைக் கூறுவதாகப் பாசுரங்கள் அமைந்துள்ளன.

இவ்வாறு, தோழியின் மூன்று பதிகங்களில், இந்த ஆன்மா பிற தெய்வங்கட்கு அடிமைப்பட்டது அன்று; தனக்கும் அடிமைப்பட்டது அன்று; கண்ணன் ஒருவனுக்கே உரியது என்ற கருத்தை வலியுறுத்திக் காட்டப்பட்டுள்ளது அறியத்தக்கது.

**தாய்ப்பாசுரங்களின் அகப்பொருள்:**

அகப்பொருள் மரபில் நாயகி-நாயக பாவனை சிறப்பிடம் பெற்றாலும் அவற்றிற்கு உறுதுணையாக அமையும் தாய் பாவனை, தோழி பாவனை ஆகியனவும் இடம்பெற்றிருக்கக் காணமுடிகின்றன.

"உபாயத்தில் துணிவு' ஆகிய நிலை தாய் எனப்பெறும், தலைவியானவள் மிக்க பெருங்காவலாலே தலைவன் இருக்குமிடம் தேடிப்போவதைவிட அவன் இங்கு வரப் பார்த்திருக்க வேண்டுமேயன்றி, படி கடந்து போதல் குலமரியாதைக்கு உரியது அன்று என்று துணிந்து கூறுபவள் தாய். இவ்வாறு, இறைவனே உபாயம் என்று உறுதியில் பேசும் நிலை தாய்"[19] என உருவகிக்கப்பெறுகின்றது. நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார், பெரியாழ்வார் ஆகியோர் தாய் பாவனையில் நின்று பாசுரங்கள் அருளியுள்ளனர்.

நம்மாழ்வார் தாய் நிலையில் நின்று பேசிய இடங்கள் ஏழு திருமொழிகளில் ஆகும். தலைவியைப் பெற்ற தாயை 'நற்றாய்' என்றும், வளர்த்தத் தாயைச் செவிலித்தாய் என்றும் கூறுதல் அகப்பொருள் நூல் மரபாகும். செவிலிப் பேச்சுக்களே சங்கப் பாடல்களில் பலவிடங்களிலும் காணப்பெறுகின்றன. ஆனால், திருவாய்மொழியில் அவ்வேறுபாடு இல்லை. நற்றாய், தன் மகள் நிலை கண்டு பேசிய பகுதிகளே பல உள்ளன.

**அ. தலைவி நிலை கண்டு தாய் இரங்கல்:**

"ஆடியாடி" (2.4.) என்ற திருவாய்மொழியில், தலைவ-னாகிய பெருமான் மீது கொண்ட காதலினால் பெரும் அவதிப்படுகிறாள் பராங்குச நாயகி. இதனால், தலைவனிடம்

தன் மகளின் நிலையை எடுத்துரைத்து, அவளுக்கு அருள்-செய்யுமாறு தாய் வேண்டுவதாகப் பாசுரங்கள் அமைந்துள்ளன. இவ்விடத்தில், ஆழ்வார் தாய் நிலையில் நின்றுபேசுகிறார் என்பது அறியத்தக்கது. இத்தகைய ஒரு நிலை அகநூலில் காணப்படவில்லை. அகநூல்களில் தலைவியின் தாய் தலைமகன் பால் பேசுவதாகப் பாடல் செய்யும் மரபு இல்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. கண்ணன்மீது கொண்ட அளவு கடந்த அன்பின் – காதலின் நிலையை எடுத்துரைக்கத் தாய் பாவனையிலும் நின்று பாடியிருப்பது புதுமையான முறை என்று கூறலாம். தலைவனிடத்தே தாய் நேரிடையாகப் பேசும் முறை இங்கு புதிய முறையே ஆகும்.

"வாணுதலிம் மடவரல் ... உம்மைக்
காணு மாசையுள் நைகின்றாள்...
... ... ... ... ... ... உம்மைக்
காண நீ ரிரக்க மிலிரே" (நம்.தி.வா.மொ. 2.4.1)

"உள்ளு ளாவி யுலர்ந்துலர்ந்து, என்
வள்ளலே! கண்ணனே! என்னும் பின்னும்
வெள்ள நீர்க் கிடந்தாய்! என்னும் என்
கள்விதான் பட்ட வஞ்சனையே"
(நம் தி.வா.மொ. 2.4.7)

என்று தன் மகள் தலைவனைக் கண்ட மயக்கத்தில் பித்துப் பிடித்தவள் போலுள்ளாள் என்று தலைவி நிலையைப் பற்றிக் கூறுகிறாள். அவனது அழகு, தன் மகளை வாட்டுகிறது என்பதனையும் சுட்டிக்காட்டுகிறாள்.

இறைவனிடம் காதல் மிகுந்து அவனோடு சேர்க்கை கிடைக்கப் பெறாதகாரணத்தால் உடல் மெலிந்தது. அகநிலையை நினைத்துத் தாய் இரங்குதல் போன்ற பாசுரங்-களும் ஆழ்வார் அருளியுள்ளார்.

"கையொரு கால்செய்ய கண்ணபிரானுக்கு என்
தையல் இழந்தது தன்னுடைச் சாயே"
(நம்.தி வா.மொ. 6.6.7)

இதே கருத்துடைய மற்றப் பாசுரங்களும் இத்திருவாய்மொழியில் (6.6) கிடைக்கின்றன.

பெரியாழ்வாரின், தாய்நிலை இரங்கற் பாசுரங்களும் (3.8) மேற்சொன்னவற்றோடு ஒப்பு நோக்கத்தக்கன. தன் மகளின் காதல் நிலையை உணர்ந்து, தலைவனுடன் சேர்த்து வைத்துத் திருமணத்தை முடித்துவிடல் வேண்டுமென நினைப்பது பெரியாழ்வாரின் தாய்ப்பாசுர அனுபவத்தில் குறிப்பிடப் படுகிறது. தன் மகளின் திருமணத்தைக் கண்ணனோடு சேர்த்து வைத்தே செய்யவேண்டுமென நினைக்கும் தாயின் மனநிலை நோக்குதற்குரியது.

"கைத்தலத் துள்ள மாடழியக்
கண்ணா லங்கள் செய்து இவளை
வைத்து வைத்துக் கொண்டென்ன வாணிபம்
நம்மை வகுப்படுத்தும்
செய்த்தலை யெழு நாற்றுப் போல் அவன் செய்வன
செய்து கொள்ள
மைத்தடமுகில் வண்ணன் பக்கல் வரைவிடுமின் களே"
(பெரியா. திரு. மொ. 3.7.9)

திருமங்கை ஆழ்வாரின் தாய்ப் பாசுரங்களும் (பெரிய. திரு. மொ. 8.3) இதே கருத்துடையனவாக அமைந்துள்ளவை ஒப்பு-நோக்குதற்குரியன.

இவ்வாறு தன் மகளின் நிலையைத் தலைவனிடத்து வலியுறுத்திக் கூறினும், தலைவனது அருள் கிடைக்கப் பெற-வில்லை. இத்தவிப்பினை அறிந்ததாய் மிகவும் கோபமடைந்து தலைவனை இழித்துப்பேசும் தாயின் மனநிலையினையும் ஆழ்வார்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். அவ்வாறு சுட்டிக்காட்டப்-படும்பொழுது, ஒவ்வொரு பழமொழியினையும் இணைத்துப் பழித்து பேசியிருப்பது புதிய உத்தியாகும். ஒரு தவறு சுட்டிக்-காட்டப்படும்பொழுது, ஒரு பழமொழியைக் கூறிப் பேசுவது என்பது மக்களிடையே இருந்துவரும் இயல்பாகும். குறிப்பாக, கிராமப்புற மக்களிடம் இப்பழக்கம் இருந்துவருவதைக் காண முடிகிறது. அவ்வகையில் இங்கு திருமங்கை ஆழ்வார் பாடி-யிருப்பது சிறப்பிற்குரிய பகுதியாகும். 'புள்ளுருவாகி' எனத் தொடங்கும் திருமொழி (10.9) முழுதும் பழமொழியைக் கொண்டே அருளியுள்ளார். இதனால் இப்பதிகம் 'பழமொழியால் பணிந்துரைத்த பாட்டு' என்று பெயர் பெறுகிறது.

தன் மகளோடு சேராமல், அவனைத் துன்புற விடுவதென்பது தலைவனது பெருமைக்கு இழுக்கு என்பதனை எடுத்துக்காட்டி, அதனை விளக்குமுகமாக பழமொழிகளைக் குறிப்பிட்டுக் காட்டி பாசுரங்கள் அருளியிருப்பது அறியத்தக்கது.

"புள்ளுருவாகி நள்ளிருள் வந்த
பூதனை மாள ... ... ... ...
... ... ... ... ...
கள்ளவிழ கோதை காதலுமெங்கள்
காரிகை மாதர் கருத்தும்
பிள்ளைதன் கையில் கிண்ணமே ஒக்கப்
பேசுவ தெந்தை பிரானே"

(பெரிய. திரு. மொ. 10.9.1)

இப்பாசுரம், 'பிள்ளை கையிற் கிண்ணம் மெள்ளவே கொள்ளலாம்' என்ற பழமொழி கொண்டு பேசப்பட்டுள்ளது.

"மிக்க வலிமையுள்ளவர்கள் பொற்கிண்ணமொன்றைக் கவர்ந்தால் அதை மீட்டுக் கைப்பற்றுவதற்கு ப்ரயாஸங் கொள்ள வேணும்; அங்ஙனமில்லாமல் சிறு பிள்ளை கவர்ந்த கிண்ணத்தைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டுமானால் அதற்காக முயற்சிப்பட வேண்டியதில்லை; நினைத்தபொழுது எளிதாக வாங்கிக் கொள்ளுகிறோமென்று, பதற வேண்டியிராது. அதுபோல இப்பரகால நாயகி விஷயத்தில் நீ நினைத்திருக்கிறாய்"[20] என்று விளக்கப்படுகிறது. அதுபோன்று பரகால நாயகி விஷயத்தில் கண்ணன் அலட்சியம் செய்திருக்கிறான் என்பதனைச் சுட்டிக்காட்டுகிறாள் தாய் கிருஷ்ணாவதாரத்திலும் இராமவதாரத்திலும் காட்டிய திருவிளையாடல்களை நினைத்துச் செருக்காக இருக்கிறான் போலும்! என்று தாய் பழித்துப்பேசுவதாக இப்பாடலின் கருத்து அமைந்துள்ளது. இதே கருத்துடையதாய்ப் பத்து பாசுரங்களும் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

## ஆ. உடன்போக்கு:

கண்ணனிடம் காதல் கொண்டிருந்த தலைவியை ஒருநாள் இரவு காணவில்லை. தன்னுடன் படுத்துறங்கிய தலைவியைக் காணாத நிலையில் தாய் இரங்கும் பாசுரங்கள் திவ்வியப் பிரபந்தத்தில் பரக்கக் காணமுடிகின்றன. இச்சூழலில் 'உடன்

போக்கு' துறையை ஆழ்வார்கள் கைக்கொண்டுள்ளனர். தலைவி, தலைவனுடன் 'உடன்போக்கு' சென்றிருப்பாளோ என்ற எண்ணம் பெரியாழ்வார், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகியோரது பாசுரங்களில் காணமுடிகின்றது.

தன் மகளுக்கு, இறைவனுடன் கலவி ஏற்பட்டதை அறிந்து, ஊரிலே பழிச்சொல் தோன்றுவதற்கு முன்பு, கண்ணனுடன் சேர்த்து விடல்வேண்டும் என்று உறவினர்களின் கருத்தைச் செவிமடுக்காமல் இருந்தாள் தாய். ஆனால், ஒரு நாள் இரவில் மகள் காணவில்லை, கண்ணனுடன் பின் சென்று இருப்பாளோ என்று புலம்புமிடங்கள் 'நல்லதோர் தாமரை' எனத் தொடங்கும் பெரியாழ்வார் திருமொழியில் (3.8) காணப்படுகின்றன.

> "மல்லரையட்டவன் பின்போய்
> மதுரைப் புறம் புக்காள் கொல்லோ"
>
> (பெரியா. திரு. மொ. 3.8.1)

ஆனால், திருமங்கை ஆழ்வார், எம்பெருமான் தன் மகளான பரகால நாயகியை அழைத்துச் சென்று விட்டதாக நினைத்துப் புலம்பும் பாசுரங்கள் 'கள்வன் கொல்' எனத் தொடங்கும் திருமொழியில் (3.7) காணப்பெறுகின்றன. தலைவனுடன் உடன்போக்கு நிகழ்ந்த பின் இரங்கும் தாயின் நிலை அத்திருமொழியில் எடுத்துரைக்கப்படுகின்றது. இது, பெரியாழ்வாரின் திருமொழியோடு ஒப்பு நோக்கத்தக்கது.

நம்மாழ்வாரின் தாய் உள்ளமும் இதே எண்ணத்தை எடுத்துக்காட்டுகின்றது. தலைவி தனியே, தலைவனது ஊர் நோக்கிச் சென்றுவிட்டதாகக் கருதிப் புலம்புகிறாள். பெரியாழ்வார் திருமங்கை ஆழ்வார் பாசுரங்களை விட நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரங்கள் (6.7) சற்று மாறுபட்ட கோணத்தில் காணப்படுகின்றன. 'உண்ணுஞ்சோறு' எனத் தொடங்கும் திருவாய்மொழியில் (6.7) தன் மகள் தலைவனது ஊர் நோக்கிச் சென்று விட்டதாகக் காட்டியிருக்கிறார்.

**இ. தலைவனின் பிரிவுத்துயர்:**

தலைவனுடன் கலவி ஏற்பட்ட பிறகு, பிரிவு ஏற்படுகிறது. இந்நிலையில் தலைவி நிலை கண்டு இரங்கும் தாய்ப் பாசுரங்களையும் ஆழ்வார்கள் குறிப்பிட்டு அனுபவித்துள்ளனர்.

இப்பிரிவுத் துயரினால், தலைவிக்கு, தான் காணும் பொருள் களெல்லாம் கண்ணனை நினைப்பூட்டுவதாக மயங்கி நிற்கும் இடங்களும் உண்டு. இப்பிரிவு நிலைப் பாடல்களை, தாய்ப் பாசுரங்களாக அருளியிருப்பதும் புதிய உத்தியாகும். காதலை வலியுறுத்திக் கூறவே இப்புதிய உத்திப்பயன்படுத்தி யிருக்கக் கூடும்.

பராங்குச நாயகி, பிரிவுத் துயரினால், தன்மை எம்பெருமானாகவே கருதிப் பேசிக் கொண்டிருக்கும் நிலையைக் கண்டு, இவளின் நிலை இத்தகைய உச்சநிலையை அடைந்து விட்டதே எனத் தாய் இரங்குதலுமான பாசுரம் ஒன்றினைத் திருவாய்மொழியில் காணமுடிகிறது.

''கடல் ஞாலம் செய்தேனும் யானே, என்னும்
கடல் ஞாலம் ஆவேனும் யானே, என்னும்
கடல் ஞாலம் கொண்டேனும் யானே, என்னும்
கடல் ஞாலம் கீண்டேனும் யானே, என்னும்
கடல் ஞாலம் உண்டேனும் யானே, என்னும்
கடல் ஞாலத் தீசன் வந் தேறக் கொல்லோ
கடல் ஞாலத் தீர்க் கிவையென் சொல்லுகேன்
கடல் ஞாலத்தென் மகள் கற் கின்றவே''

(நம்.தி.வா.மொ. 5.6.1)

கண்ணன் செயல்கள் அனைத்தும் தன் மீது ஏற்றிக் கொண்டு ஆவேசம் வந்தது போல பேசும் தலைவியின் நிலையைக் கண்டு தாய் வருந்துவதாக இத்திருவாய்மொழி முழுதும் அமையப் பெற்றுள்ளது. பித்து பிடித்தவள் போலிருக்கும் இவளின் நிலை பற்றி உறவினர்கள் வந்து கேட்பதாலும் தாய்க்கு மேலும் வருத்தம் உண்டாகிய நிலைகளிலும் பாசுரங்கள் இடம் பெற்றுள்ளன.

இவ்வாறு ''தலைவனுடைய செயல்களையும் சொற்களையும் அவனாகவே தன்னைக் கருதித் தன்னுடைய மெய்ப்பாடுகளாக ஆக்கித் தரிக்கப் பார்ப்பதும் ஆற்றாமையின் விளைவினாலாகும் இதனை 'அனுகரித்தல்' என்பர். 'போலச் செய்தல்' என்பது இதன் பொருளாகும். அனுகாரத்திற்கு அடிப்படையாக அமைவது நினைவின் முதிர்ச்சியாகும். முக்தியடைந்தவன் ஒருவன் தன்னைப் பிரம்மமாகவே நினைத்து அது முதிர்ந்த நிலையில் தனக்கும்பிரம்மத்திற்கும் வேறுபாட்டை மறந்து

ஒன்றாகிப் பேசுவான், என்று கூறப்படுகிறது. நினைவின் முதிர்வால் உடலுறுப்புக்களிலும் மாற்றங்கள் விளையும் என்பதும் காட்டப்படுகிறது. சான்றாக, நினைவின் முதிர்ச்சியால் ஆண்டாளுக்கு இடைநடையும் இடைப்பேச்சும் முடை நாற்றமும் உண்டாயின என்பர் பெரியவாச்சான் பிள்ளை. அதற்கு அடிப்படைக் கொள்கை வழங்கியவர் நம்பிள்ளை ஆவர். அனுகாரம் என்பது ஒருவகை இறைத் தொண்டாகும். தலைவியின் அனுகாரத்தால் தலைவனுக்கு மகிழ்ச்சி உண்டாக்குவதே இறையடிமையாகும்."[21] என்று விளக்கம் கூறப்படுகிறது. இவ்வகையில் அமைந்திருக்கும் தலைவியின் காதலானது சங்க அகப்பாடல்களில் காண்பது அரிதாகவே உள்ளது. காதல் ஆற்றாமையின் மிகுதியைக் காட்ட ஆழ்வார்கள் இவ்வுத்தியைப் பயன்படுத்தியிருப்பது நோக்கத்தக்கது.

அடுத்து, கண்ணன் என்றோ செய்த செயல்களைப் பற்றிக் கூறி, அவற்றை இப்பொழுதே அனுபவிக்க வேண்டும் என்றும் அவனுடைய திருத்துழாய் மாலையையாவது பெற வேண்டு மென்றும் மயங்கிப் பேசும் இடங்களில் தாய் கண்டு வருந்து மிடங்கள் 'பாலனாய் ஏழுலகு' எனத் தொடங்கும் திருவாய் மொழியில் (4.2) இடம்பெற்றுள்ளன. பாலகனாய் ஏழுலகுண்டதும் ஆலிலைமேல் வாசம் செய்ததும் எப்பொழுதோ கழிந்ததாயினும் அப்பொழுது அணிந்த திருத்துழாய் மாலை இப்பொழுதுகிடைக்க வழி இல்லையே என்று மீண்டும் மீண்டும் கூறும் நிலை, பித்து பிடித்த நிலையைத் தாய் நினைத்து வருந்துவதாக இத்திருவாய் மொழிப் பாசுரங்கள் எடுத்துரைக்கின்றன. இதே கருத்துடைய தாய்ப் பாசுரங்களைத் திருமங்கை ஆழ்வாரும் (பெரிய.திரு. மொ.5.5) அருளியிருப்பது ஒப்புநோக்கத்தக்கது. 'மாயவன் தன் மகளை மாற்றிவிட்டான்; அதனால் தான் அவள் பித்தாகி விட்டாள்; அவன் பெயரைக் கூறிக் கொண்டேயிருக்கிறாள். இந்நிலைகளுக்குக் காரணம் கண்ணன்தான்' என்று தாய் வருந்திப் பேசுவதாகப் பாசுரங்கள் அமைந்திருப்பன ஒப்புநோக்கத்தக்கன வாகும். இந்நிலை, கண்ணனுடன் கலந்த பின்பு ஏற்பட்ட பிரிவின் ஆற்றாமையினால் உண்டாவதைக் காட்டுகின்றது. இவ்வகை, சங்க அகப்பொருள் மரபினைக் காட்டிலும் ஒரு புதிய கோணத்தில் அமைந்திருப்பதைக் காட்டுகிறது.

**தொகுப்புரை:**

ஆழ்வார் பாடல்களில் அகப்பொருள் கலந்து பாடியமையில், புணர்ச்சி நிலையிலானப் பாசுரங்களை விட, பிரிவு நிலைப் பாடல்களே மிகுதியாகக் காணப்படுகின்றது. ஆன்மா இறைவனை விட்டுத் தனியே பிரிந்ததாக உணருகிறது ஏனெனில் அவனது அருள் கிடைக்கப் பெறாமையால் இவ்வுணர்வு தோன்றுகிறது.பிரிவுத் துயரில்தான், ஆன்மா பெருமானோடு கூட வேண்டும் என்ற ஆசை வலிமைபெறுகிறது. அதாவது, பிரிவுத் துயரின் ஆற்றாமையில் காதல் மிகவும் வலிமை பெற்று நிற்கிறது என்பதால் பிரிவு நிலைப் பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

இப்பிரிவு உணர்வினை உணர்த்தவேண்டியும் இறைவனுடைய அருள் பெறவும் அகத்துறைகளைப் பயன்படுத்திப் பாசுரங்கள் அருளியுள்ளனர் ஆழ்வார்கள். அகப்பொருள் மரபினை அடியொற்றிப் பாடினாலும்,சுவைக்காக-பக்தியின் அனுபவத்தை வலியுறுத்துவதற்காக அம்மரபிலே சில புதுமைக் கூறுகளையும் பயன்படுத்தியிருப்பது நோக்கத்தக்கது. நாயகி, தோழி, தாய்ப் பாவனையோடு கோபிகை பாவனையையும் ஏறிட்டுக் கொண்டு பாடியமை திவ்வியப் பிரபந்தத்தின் சிறப்பாகும். கண்ணன் அவதாரத்தின் மேல் கொண்ட ஆழ்ந்த ஈடுபாட்டை இவ்வகப் பொருள் பாவனைகள் எடுத்துரைக்கின்றன.

அகத்துறைகளான வெறியாட்டு,மடலூர்தல்,உருவெளிப்பாடு கண்டு புலம்பல், தலைவி கனவு கண்டு மயங்கல்.தூது அனுப்புதல் போன்ற துறைகளில் ஆழ்வார்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர். தமிழிலக்கிய மரபினை அடியொற்றியே அப்பாசுரங்கள் அமைந்துள்ளன. கண்ணன் அவதாரம்-கண்ணனின் திருவிளையாடல்கள் அகப்பொருள் கொண்டு பாடுதற்கு இடமளித்துள்ளதால் அந்த அனுபவத்தையும் பெற்று மகிழ்ந்தனர் அக்கூறுகள் சிற்றின்பத்தைப் பாடுவதாகக் கொள்ளாது, பேரின்ப நிலை எய்துவதற்கான பாடல் என்று கொள்ளுதல் வேண்டும், பக்தியின் உச்சநிலையின் வடிவமே, இவ்வகப்பொருள் அனுபவமாகும். இறைவனது ஆண்மையும் வடிவழகும் சில குணமும் அவர்களை இந்தப் பெண் நிலைக்குக் கொண்டு சென்றுள்ளன. ஆகவே, ஆழ்வார்கள் அர்ச்சாவதார மூர்த்தியைக் கண்ட உடனேயே பெண் தன்மை ஏறிட்டு அகப்பொருள்

அனுபவத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டது அறியத்தக்கது. நம்மாழ்வார் பாசுரங்களில் அதிகமான அகப்பொருள் அனுபவத்தைக் காணமுடிகின்றது. இவருக்கு அடுத்தபடியாக: திருமங்கை ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரது பாசுரங்களும் அகப்பொருள் அனுபவத்தைக் காட்டுனவாக அமைந்துள்ளன. ஒரு ஆழ்வாரே தலைவி தோழி, தாய் ஆகிய மூன்று பாவனைகளிலும் நின்று கண்ணனை அனுபவித்துள்ளார் என்பதும் காணத்தக்கது.

பல்வேறு காரணங்களுக்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவதை அக இலக்கிய மரபு விளக்குகிறது. தன் உடலும் ஆன்மாவும் தன் தலைவனுக்கே உரியன என்பதால், அவனது பிரிவு அவளை மிகவும் வாட்டும். இந்நிலையில், அவளது மனம் பல வகைகளில் பேசத் தொடங்கிவிடும். அவற்றில் ஒன்றாக தலைவி கனவு காணும் நிலையாகும். இந்நிலை, ஆண்டாளின் அகப்பொருள் அனுபவத்தில் அமைந்திருந்த புதிய அனுபவம் என்று கூறலாம் கனவில் கண்ணனைத் திருமணம் செய்து கொள்வதாகக் காணும் முறை, பிற பக்திப் பாடல்களைக் காட்டிலும் மாறுபட்டு காணப்படுகிறது கனவுநிலைப்பாடல் களாகப் பாடப்பட்டிருக்கும் முறையானது தமிழ் மரபிலிருந்து மாறுபட்ட ஒன்றாக அமைகிறது என்று கூறலாம். இதற்கு முன்பு இருந்த அகப்பாடல்களில் திருமணச் சடங்குகள் கனவின் மூலம் இவ்வாறு கூறப்படவில்லை என்பது நோக்குதற்குரியது. ஆகவே, நாயகி, பாவனையில் அமைந்த ஆண்டாளின் பாசுரங்களில், பக்தி உணர்வினைக் காட்டிலும் காதல் உணர்வே மேலோங்கி இருப்பது காணமுடிகிறது.

தூது நிலைப் பாசுரங்களில், பறவைகளைத் தலைவனிடத்து தூது விடுதல் என்பது அக இலக்கிய மரபாகும். இம்மரபினை அடியொற்றி, இறைவனின் ஐவகை நிலைகளான பரம், வியூகம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி ஆகிய நிலைகளிலும் தூது அனுப்பிய செயல் ஒரு புதிய கோணமாகும். காதலின் ஆற்றாமை மிகுதியைக் காட்டுவதாக இப்பாசுரங்கள் அமைந்துள்ளன. இவ்வகப் பொருள் அனுபவம், உள்ளுறைப் பொருளைக் கொண்டு அமைந்துள்ளது.

தாய் தலைவனிடத்துத் தலைவியின் காதல் நிலையைப் பற்றி எடுத்துக் கூறுவதும், தலைவனது நிலையை பழிப்பதுமான

கூறுகள் அகத்திணை மரபுகளில் இல்லாத ஒரு புதிய நோக்கு என்று கூறலாம். அக இலக்கியங்களில் செவிலித்தாயின் பங்கே அதிகமாகக் காணப்படும். ஆனால், ஆழ்வார்களின் அனுபவங்களில் செவிலித்தாய்க்கு இடமே இல்லாது, நற்றாய் பங்கே முழுவதும் காணப்படுகிறது. இக்கூறுகளும் ஒரு புதியனவாக இருப்பதற்குக் காரணம் தலைவியின் ஆழ்ந்த காதலை வெளிப்படுத்தவே ஆகும்.

பெண்கள் மடலூர்வதாக அச்சுறுத்துவது அகப்பொருள் துறையைச் சார்ந்தது என்றாலும், வடமொழி மரபினை மனத்திற் கொண்டு காதல் உறுதியை வெளிப்படுத்தப் பயன்படுத்திய முறை புதிய சிந்தனையாகும். ஆழ்வார்களுள், திருமங்கை ஆழ்வார் 'மடல்' என்னும் இந்தத் துறையைப் பெருக்கித் தனியே பிரபந்தமாக உருவாக்கிய நிலை தமிழ் அக இலக்கியத்தில் நிகழ்ந்த ஒரு புதிய மாற்றம் என்று கூறலாம்.

இவ்வாறு, தமிழிலக்கிய மரபையும் வைணவ சமயக் கோட்பாட்டையும் இணைத்துப் பாடுகையில் ஆழ்வார்கள் பழைய தமிழ் மரபுகளுக்கு அடங்கியும், அம்மரபுகளை மீறி ஒரு புதிய சிந்தனையில் பாடியதையும் காண முடிகின்றது. அதுவே, ஒரு புதிய மரபாகத் தோற்றம் பெறுகின்றது. அப்பொழுது, இலக்கிய வரலாற்றில் ஒரு வளர்ச்சி உண்டாக வழி ஏற்படுகிறது என்ற எண்ணத்திற்கு ஆழ்வார்கள் அகப்பொருள் அனுபவங்கள் இடமளிக்கின்றன. ஆகவே, பக்தியை எவ்வகையெல்லாம் செலுத்தி, அவனை அனுபவிக்க முடிகிறதோ அந்த அளவிற்கு அவனருளைப் பெற முடியும் என்ற உறுதிப்பாட்டினை உணர்த்துவதாக ஆழ்வார்களது அகப்பொருள் பாசுரங்கள் அமைந்துள்ளன.

## அடிக்குறிப்புக்கள்

1. ந. சுப்புரெட்டியார்., வைணவ உரைவளம்., ப. 104.
2. கு. தாமோதரன்., ஆழ்வார் திருவுள்ளம்., ப. 66.
3. மேற்படி நூல்., ப. 65.
4. கு. தாமோதரன்., திருவாய் மொழித்திறன்., ப. 66.
5. மேற்படி நூல்., ப. 67.

6 இரா. அரங்கராஜன்., **நம்பிள்ளை உரைத்திறன்.,** ப. 140.

7. ந. சுப்பு ரெட்டியார்., **ஆழ்வார்களின் ஆரா அமுது.,** ப. 38.

8 இரா. அரங்கராஜன்., **நம்பிள்ளை உரைத்திறன்.,** ப. 125.

9. **ஆசா.** ஹிரு., சூ.எ. 156., ப. 418.

10. **திருவாய்மொழி.,** ஈட்டின் தமிழாக்கம்., பகுதி. 1., 1.4.0 (முன்னுரைப்பகுதி)., ப. 182.

11. இரா. அரங்கராஜன்., **நம்பிள்ளை உரைத்திறன்.,** ப. 127.

12. **திருவாய்மொழி.,** ஈட்டின் தமிழாக்கம்., பகுதி: 6, 6.1.5., பக். 29–30.

13. கு. தாமோதரன்., **திருவாய்மொழித் திறன்.,** ப. 66.

14. **ஆசா.** ஹிரு , சூ எ. 134; ப. 360.

15. **மேற்படி** நூல்., சூ எ. 134., ப. 360,

16. ''சின்மொழி நோயோ கழிபெருந்தெய்வம் இந்
நோயின் தென்
றின் மொழி கேட்கு மிளந்தெய்வம் மன்றிது வேல! நின் நீ
என் மொழி கேண்மிரனன் அம்மனை மீர்
. உலகேழு முண்டான்
சொல்மொழி. மாலையந் தண்ணந்துழாய் கொண்டு
சூட்டுமினே"
(திருவிருத். 20)

17. **திருவாய்மொழி.,** ஈட்டின் தமிழாக்கம்., பகுதி 6 , 6 5 1 ப. 217

18. மேற்படி நூல்., பகுதி 8, 8.9.0 (முன்னுரைப் பகுதி)., பக். 226–228.

19. கு தாமோதரன்., **திருவாய்மொழித்திறன்..** ப. 67.

20 **பெரிய திருமொழி.,** 10, 11 பத்துக்கள், திவ்யார்த்த தீபிகை உரை , 10.9.1., ப. 86.

21. இரா. அரங்கராஜன்., **நம்பிள்ளை உரைத்திறன்.** பக். 134–135.

## இயல் - ஆறு

# ஆழ்வார்கள் உணர்த்தும் வழிபாட்டு நெறிகள்

**இயல் அறுமுகம்:**

இறைவனது அருட்செயல்களில் மூழ்கி அனுபவித்த ஆழ்வார்கள் வழிபாட்டு நெறிகளை எடுத்துரைத்துள்ளனர். ஆன்மா இறைவனை அடவதற்கு வைணவ சமயத்தில் !இரண்டு வழிகள் கூறப்பெறுகின்றன. ஒன்று பக்தி; மற்றொன்று பிரபத்தியாகும் கருமயோகம், ஞானயோகம் மூலம் பக்தியோகம் சரியான பக்குவ நிலையினை அடைகிறது என்று கூறப்படுகிறது.

இறைவனிடத்தும் அவனது அடியவர்களிடத்தும் செலுத்தும் அளவற்ற அன்பே பக்தி என்று கூறப்படுகிறது. இப்பக்தியானது பகவத்பக்தி, பாகவத பக்தி என்று இரு வகையாக அமைகிறது. பக்தி அடிப்படையாக அமைவது ஞானம் என்று கொள்ளலாம். ஆகவே இறைவனை அடைய பக்தியும் ஞான ரூபமான பிரபத்தி நெறியுமே (சரணாகதியும்) படிகளாக அமைகின்றன. வைணவம் மக்கள் சமயமாக மலர்ச்சியுற்றதற்குப் பக்தி நெறியும் பிரபத்தி நெறியுமே முதன்மைக் காரணங்களாக அமைகின்றன.

இறைவனை அடைவதற்கான உணர்வுப் பூர்வமான அணுகுமுறைகளை அடிப்படையாகக் கொண்டு, பக்தி இயக்கத்தினை வளர்த்த பெருமை ஆழ்வார்களையே சாரும், இறைவனிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொள்ளும் சரணாகதி மார்க்கமும் பக்தியுமே இறைவனது அருளைப் பெற வழிசெய்யும் என்பதனை உணர்த்தி, அடியவர்களுக்கும் மக்களுக்கும் வழிகாட்டிய முறைகளையே இப்பகுதி எடுத்துரைக்கின்றது.

ஆழ்வார்களுடைய இறை அனுபவத்தின் விளைவாக வழிபாட்டு நெறிகள் ஏற்பட்டுள்ளன. அதாவது, தாம் பெற்ற

இன்பம் மக்களும் பெற வேண்டுமென ஆற்றுப்படுத்த எண்ணிய வகையில் வழிபாட்டு நெறிகளைத் தமது பாசுரங்களில் அருளியிருக்கும் முறைகளை இவ்வியல் எடுத்தோதுகின்றது. பிரபத்தி, அர்ச்சாவதார சிறப்பு, கண்ணன் திருத்தலங்கள் பற்றிய சிறப்பு, கண்ணனை வழிபடும் முறைகள், கண்ணனின் திருநாமச் சிறப்பு, கண்ணன் தொடர்பான விழாக்கள் ஆகியவற்றை எடுத்துரைத்து மக்களை நெறிப்படுத்துவதாக ஆழ்வார்களது பாசுரங்கள் அமைந்துள்ளன. அவர்களது அனுபவத்தின் வெளிப் பாடாக இவ்வழிபாட்டு நெறி அமைகிறது என்று கூறலாம். மக்களை நெறிப்படுத்துவதாக அவர்களது பக்தி நெறியும் பிரபத்தி நெறியும் அமைந்துள்ளன.

**பக்தி நெறி:**

பேரன்பின் முதிர்ச்சியே பக்தி எனப்படுகிறது. மெய்விளக்க அறிஞர்கள் இந்தப் பக்தி நிலையைப் 'பக்தி யோகம்' என்று வழங்கி அதனை எட்டு அங்கங்களாக[1] முறைப்படுத்தி வகுத்துள்ளது நோக்கத்தக்கது. இந்த எட்டு அங்கங்களின் வழியொழுகுவார்க்கு, இறைப்பேறு கிடைக்கும் என்பது கருத்தாகும். இந்தப் பக்தி யோகத்தை அனைவராலும் பின்பற்ற முடியும் என்று கூற இயலாது.

ஆனால், பக்தி என்பது இறைவன்பால் மனிதனுக்கு இருக்கும் அன்பின் அகத்தோற்றம் என்று கூறமுடியும். பூசை அல்லது வழிபாடு என்பது அதன் புறவழிபாடு ஆகும். மனிதன், தனது இறையன்பை பூசை அல்லது வழிபாடு வாயிலாக வெளிப்படுத்துவதற்கு அர்ச்சை வடிவமே எளிதாயிருக்கிறது என்று கருதுகிறான்.

வழிபாட்டை பல வழிகளில் மேற்கொள்ள முடியும். தியானத்தினால், இடையறாத அகநினைவினால், கடவுளை வழிபட முடியும். மேலும், பூ, தூபம் அல்லது வாசனைப்புகை ஆகியவற்றை வழங்கியும் பூசிக்க முடியும். இறைவனது திருநாமங்களைச் சொல்லியும் அவரை வணங்க முடியும். இவற்றுள், எல்லோராலும் பின் பற்றக் கூடியதாக மூன்றாவது வகை வழிபாட்டைக் கூறலாம்.

ஆழ்வார் பாசுரங்களில் பக்தி நெறி குறிப்பிட்டுள்ளது அறியத்தக்கது.

"அறிந்து ஐந்தும் உள்ளடக்கி ஆய்மலர் கொண்டு ஆர்வம்
செறிந்த மனத்தாராய் செவ்வே – அறிந்து அவன்தன்
பேர் ஓதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
கார் ஓத வண்ணன் கழல்" (பூத. இ. திரு. 6)

என்ற பூதத்தாழ்வாரின் பாசுரத்தில் இந்த பக்தி நெறியைக் காணமுடிகிறது. பெரியாழ்வாரின் பாசுரமும்,

"ஆர்வம் என்பதோர் கோயில் அமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூஇட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆம்"
(பெரியா. திரு.மொ.4.5.3)

என்று பக்தி நெறியைக் காட்டுகிறது. நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரத்தையும் (4.3.2) இந்தப் பக்தி நெறிக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். நம்மாழ்வாரின் சில பாசுரங்கள் பூசையைப் பற்றிக் (1·6) குறிப்பிட்டுள்ளன. மனநிறைவு கொண்டு, பக்தியோடு பூ, பழம் முதலிய எதைக் கொடுத்தாலும், ஏற்றுக் கொள்பவன் இறைவன். அவ்வகையில் பூசைக்கு எளியவனாகத் திருமால் விளங்குகிறான் என்பதனை வலியுறுத்திக் காட்டியுள்ளார். பகவத் கீதையில் பக்தி செய்வது பற்றிக் கண்ணன் குறிப்பிட்டுள்ளதை (12 6; 12·2; 9.26) ஆழ்வாரை இவ்வாறு பாடச் செய்ததாகும்.

'மெய்விளக்க அறிஞர்கள், இப்பத்தி நெறியைக் கர்மயோகம், ஞான யோகம், பக்தி யோகம் என்று மூன்று நிலைகளில் பயிற்சி அடைய வேண்டிய நெறி' என்று[2] கூறுகின்றனர். யாதொரு பலனையும் எதிர்பாராது செய்யப் பெறும் கருமத்தால் மனம் தூய்மை அடைகிறது. இஃது, ஆன்மா தியானத்தில் அழுந்த வழியாகவும் அமைகிறது.

"பரிவது இல் ஈசனைப்பாடி
விரிவது மேவல் உறுவீர்!
பிரிவகை இன்றிநல் நீர்தூய்
புரிவதம் புகை பூவே" (நம்.தி.வா.மொ.1.6.1)

என்ற பாசுரத்தில் பலனை எதிர்பாராது இறைவனுக்குச் செய்ய பெறும் கருமம் கூறப் பெறுகின்றது. இறைவன் பூசைக்கு எளியவன் என்பதும் இதனால் பெறப்படுகிறது. எளியவனாக

இருப்பதுடன் பூசை செல்பவர்களுக்கு இனியவனாகவும் இருக்கிறான் என்பதனையும்,

"ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும்
மாயப்பிரானை என் மாணிக்கச் சோதியை
தூய அமுதைப் பருகிப் பருகி என்
மாயப் பிறவி மயர்வறுத் தேனே,' (நம்.தி.வா.மொ.1.7.3)

என்ற பாசுரததினால் விளக்கப்படுகிறது. இவை, ஆழ்வாரின் அனுபவ நிலையில் பெற்ற பலனை வெளிப்படுத்துகிறது.

அடுத்தநிலை ஞானயோகமாகும். கருமயோகத்தில் தூய்மை அடைந்த ஆன்மா இந்நிலையில் தியானத்தில் ஆழங்கால்படுகின்றது. தியானத்தின் மூலம் ஆன்மா தன் உண்மை உணர்ந்து, தான் இறைவனைச் சார்ந்திருக்கும் நிலையை நிலையை அறிகின்றது. அதன்பிறகு அஃது இறைவனை அடைய அவாக் கொள்ளுகின்றது.

"ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன் தன் நாமங்கள்
தானத்தால் மற்று அவன்பேர் சாற்றினால், வானத்து
அணி அமரர் ஆக்குவிக்கும்" (பூத. இ. தி. 2)

என்று ஞானநிலையைப் பூதத்தாழ்வார் குறிப்பிடுகிறார்.

ஞான நிலைக்கு அடுத்த நிலையே பக்தி யோகம் என்பதாகும். ஞானநிலை போல் பக்தியிலும் தியான நிலை உண்டு. இந்நிலையில்தான் தனக்கும் இறைவனுக்குமுள்ள தொடர்பினை ஆன்மா அறிகின்றது.

"உய்த்து உணர்வு என்னும் ஒளிகொள் விளக்கேற்றி
வைத்து அவனை நாடி வலைப்பூடுத்தேன்"
(பேய். மு. தி. 94)

என்ற பேயாழ்வாரின் பாசுரம் பக்தி நெறியினைக் குறிப்பிடுகின்றது. பக்தி முதிர்ந்து முழு நிலையினை அடையுக்கால் ஆன்மா இறைவனைக் காண்கின்றது. அந்த ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிய அனுபவத்தை ஆழ்வார்கள் திவ்வியப் பிரபந்தத்தில் ஆங்காங்குச் சுட்டிக் காட்டியுள்ளனர்.

நம்மாழ்வார், பக்தி செய்யும் முறைகளைப் பற்றிக் 'கண்ணன் கழலிணை' எனத் தொடங்கும் திருவாய்மொழியில் (10.5) எடுத்துரைத்துள்ளது அறியத்தக்கது.

"கண்ணன் கழலினை - நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் - திண்ணம் நாரணமே"
(நம். தி. வா. மொ. 10.5.1)

என்பதில், பக்தியோகத்தில் ஒரு நிலையான திருநாம கீர்த்தனம் பற்றி உபதேசித்துள்ளார். பக்தி யோகத்தின் மற்றொரு நிலையாக உருவ வழிபாட்டைக் குறிப்பிடலாம். அதை

"தெரித்து எழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது" (நான். திருவந். 63)

என்று திருமழிசையாழ்வார் அருளியிருப்பது நோக்கத்தக்கது. இறைவனது பெயரைப் படித்தும், கேட்டும் தொழுதும், வழிபட்டும், பூசை செய்வதுமான செயல்களிலே ஈடுபட்டு, தனது பொழுதைப் போக்கியதாகக் கூறுகிறார். இறைவனுக்காகவே பொழுதைச் செலவழிக்க வேண்டியது அவசியம் என்பதனை வலியுறுத்திக் காட்டுகிறார். பக்தியே வடிவெடுத்தவராக இருப்பதால், இவர் 'பக்திசாரர்' என்று போற்றப்பட்டு வருகிறார்.

இத்தகைய நிலைகளில பக்தி நெறியைப் பின்பற்றுவது என்பது எல்லோராலும் இயலாத ஒன்றாகும். இவற்றைப் பற்றி அறியாதோர், திருக்கோவில் வழிபாட்டினை மேற்கொள்ளுதலையே பக்தி என்று கூறுவர்.

பக்திநெறியினர், அனைத்து கல்யாண குணங்களைக் கொண்ட இறைவனை அர்ச்சாவதார மூர்த்தியாக இருக்கும் வடிவத்தில் கண்டு ஏற்றுக் கொண்டுள்ளனர். கோவில்களில் எழுந்தருளியிருந்து மக்களைக் கவர்ந்து அவர்களை அடியவர்களாக்கி அவர்கள் உள்ளங்களில் எழுந்தருளியிருந்து வாழ்கிறான் என்பதே ஆகும். ஆகம அடிப்படையில் பெரிய அளவிலான வழிபாடுகளை, பூசைகளை வைணவ நெறி பேசுவதுண்டு. தூய அன்பினையும் எளிமையினையும் பற்றி எடுத்துக் கூறுவதுமுண்டு. "என்னைப் பக்தியோடு வழிபடுகின்றவர்கள் என்னில் கலந்து போவார்கள்; எனக்கு வேண்டுவது ஓர் இலை; பூ; பழம் என்பவனவே" என்று கூறும் கீதை வாக்கியங்களும் (9.26) தூய அன்பையும் எளிமையையுமே வற்புறுத்துகின்றன. இவ்வாறு, வழிபாடு எளிய நிலையிலும் அமைவதுண்டு; பெரிய அளவிலும் அமையலாம். ஆயினும் விதிப்படி அமைதல் வேண்டும் என்று கூறப்படுகிறது. விதிப்படி செய்ய வேண்டிய வழிபாட்டையே 'பக்தி போகம்'

பேசுகிறது என்று கூறுவர். 'உபநிடதங்களில் தியானம் அல்லது உபாசனையே பக்தி என்று கூறப்படுகிறது'.[3] இறைவனைப் பற்றிய முழுமையான ஞானத்தை அமைதியாக, தியான நிலையிலிருந்து பெறுதலே பக்தி என்றும் கூறப்படுகிறது. இவ்வாறு, பக்தி ஞானம் இரண்டையும் பிரித்து விளக்குவது என்பது அருமைப்பாடாகும். ஆகவே, வெறும் உணர்ச்சி வயப்பட்ட ஒன்றாகப் பக்தியை விளக்குவதில்லை; உள்ளத்தையும் அறிவையும் பண்படுத்தி நிற்கும் சாதனத்தையே பக்தி எனப்படுகிறது, என்ற அளவில் மட்டும் பக்திநெறியை ஈண்டு விளக்கமுடிகிறது.

**பிரபத்தி நெறி:**

பக்தி வழியை எல்லாராலும் பின்பற்ற இயலவில்லை என்றால், எல்லாராலும்–எல்லா நிலையினராலும் மேற்கொள்ள எளிதாக இருப்பது 'பிரபத்தி' எனப்படும் 'சரணாகதி' நெறியாகும். ஆழ்வார்கள் பக்தி நெறியை ஆங்காங்குக் குறிப்பிட்டிருந்தாலும், அதிகமாக வலியுறுத்தியிருப்பது இந்தப் பிரபத்தி மார்க்கத்தையே ஆகும்.

"எல்லாரிக்கும் எளிதான ஏற்றத் தாலும்
இனி உரைக்க மிகையான இரக்கத் தாலும்
சொல்லார்க்கும் அளவாலும் அமைதலாலும்
துணிவு அரிதாய்த் துணை துறக்கும் சுகரத் தாலும்
கல்லார்க்கும் கற்றார் சொல் கவர்தலாலும்
கண்ணன் உரை முடிசூடி முடித்தலாலும்
நல்லார்க்கும் தீயார்க்கும் இதுவே நன்றாம்
நாரணற்கே அடைக்கலமாய் நணுகு வீரே"

(தே.பி. 200)

என்று பிரபத்தியின் சிறப்பும், அதனை மேற்கொள்ளும் எளிமையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இந்நெறியை ஆழ்வார்களும் மேற்கொண்டு இறையருளைப் பெற விழைந்தனர் என்பது பாசுரங்கள் வழி அறியலாகின்றது.

பார்த்தனுக்குப், பிரபத்திநெறி போர்க்களத்தில் உபதேசிக்கப்பட்டது. அன்று நிகழ்ந்த பாரதப் போரில் சாரதியாக நின்ற கண்ணன் அர்ச்சுனனுக்குத், தத்துவப் பொருளை விளக்கி, சரணாகதியைப் பற்றி எடுத்துரைத்து

அவனது மயக்கத்தைப் போக்கி அறிவைத் தெளிய வைத்தான். அவனால் கூறப்பட்ட இந்நெறி வைணவ சமயத்தின் உயிர் நாடியாக அமைந்துள்ளது.

பிரபத்தி நெறிக்கு தேச நியமம், கால நியமம் முதலான வரையறைகள் இல்லை என்பதை,

"ப்ரபத்திக்கு தேசநியமமும், காலநியமமும்
ப்ரகார நியமமும் அதிகாரி நியமமும் பல
நியமமும் இல்லை" (ஸ்ரீவசன. 27)

என்று பிள்ளை லோகாசாரியார் குறிப்பிடுகிறார். இக்கருத்தினை அரண் செய்யும் வகையில் அமைவது திரௌபதிக்கு அருள் செய்ததும், வீடணனுக்கு அடைக்கலம் கொடுத்ததுமாகும்.

மாத விலக்காக இருக்கும் திரௌபதியைத் துச்சாதனன், சபைக்கு இழுத்து வருகின்றான். அவளது சேலையைக் கழற்றி அவளது கணவன்மார்களால் (பாண்டவர்கள்) ஒன்றும் செய்ய இயலவில்லை. திரௌபதி உலகினை மறந்தாள்; கண்ணனிடம் சரண் புகுந்துவிடுகிறாள். கண்ணன் அருளால், சேலை புதிய வண்ணங்களில் வளர்ந்தன. இதனால், பிரபத்தி செய்வோர் தூயராய் நின்று பிரபத்தி செய்ய வேண்டும் என்ற நியதி இல்லை என்பது அறியத்தக்கது.

பார்த்தனுக்குக் கண்ணன் தேர்த்தட்டில் இருந்து கொண்டு பிரபத்தி நெறியை உபதேசித்த இடம் போர்களமாகும். இதனால் புண்ணிய பூமியில் செய்ய வேண்டும் என்ற நியதி இல்லாமல் போயிற்று. பிரபத்தியைச் செய்யத் தொடங்கும் பொழுது தூய்மையில்லாதிருப்பவனுக்குத் தூய்மை சம்பாதிக்க வேண்டாம்; தூய்மையாயிருப்பவனுக்குத் தூய்மையின்மையைச் சம்பாதிக்க வேண்டாம் என்று கூறப்படுகிறது.

"த்ரௌபதி ஸ்நாதையா யன்றே ப்ரபத்தி
பண்ணிற்று: அர்ஜுனன் நீசர் நடுவேயிறே
இவ்வர்த்தம் கேட்டது" (ஸ்ரீவசன. 29)

என்று திரௌபதி மற்றும் அர்ச்சுனனின் சரணாகதிபற்றிக் கூறப்படுகிறது. ஒருவன் இருக்கும் நிலையிலேயே அசுத்தனா யிருந்தாலும் பிரபத்தி செய்யலாம் என்று பிள்ளை லோகாசாரி யார் (ஸ்ரீவசன. 30) கூறுவதும் இங்கு நோக்கத்தக்கது.

திரௌபதியின் சரணாகதிக்குக் கண்ணன் அருள் செய்த செயலைத் திருமங்கை ஆழ்வார் பாசுரத்தில் (பெரிய. திரு. மொ. 2.3.6) காணமுடிகிறது.

மேலும், காளியன், முசுகுந்தன், க்ஷத்திரபந்து, காளியன் மனைவியர், இந்திரன் முதலிய தேவர்கள், கோபிகைப் பெண்கள், ஆயர் சிறுவர்கள் ஆகியோர் கண்ணனிடத்துச் சரண் புகுந்ததையும் அறிய முடிகிறது.

ஆயர்கள் கண்ணனின் திருவடியைச் சரணடைய, அவர் களுக்கு அடைக்கலம் கொடுத்ததைப் பெரியாழ்வார்,

"அம்மைத் தடங்கண் மடவாய் சியரும்
ஆனா யருமா நிரையும் அலறி
எம்மைச் சரண் என்று கொள்ளென் றிரப்ப
இலங்கா ழிக்கை எந்தையெடுத்த மலை"
(பெரியா. திரு. மொ. 3.5.3)

என்ற அடிகளில் கூறியிருப்பது சரணாகதியைக் காட்டுகிறது.

நம்மாழ்வார், சரணாகதி மார்க்கத்தின் சிறப்பைத் திருவாய் மொழியில் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

"சரணமாகும் தன் தாளடைந் தார்க் கெல்லாம்
மரணமா னால்வைகுந்தம் கொடுக்கும் பிரான்"
(நம். தி. வா. மொ. 9.10.5)

"... வட மதுரைப் பிறந்தவன் வண்புகழே
சரணென் றுய்யப் போகல் அல்லால் இல்லை
கண்டீரசதிரே" (நம். தி. வா. மொ. 9 1.4)

என்று கண்ணன் புகழைப் பாடிச் சரணடைந்தால் வைகுந்தம் பெறலாம் என்று விளக்குகிறார். திருமழிசை ஆழ்வாரும், இம்மார்க்கத்தைப் பின்பற்றியவர் என்பது திருச்சந்த விருத்தப் பாசுரங்கள் (90,92) வழி அறியத்தக்கது. ஆழ்வார்கள் அனைவரும் திருவடி அருளையே பெரிதும் அனுபவிக்கத் துடித்தவர் என்பது,

"சேஷி பக்கல் சேஷபூதன் இழியுந்துறை
பிரஜை முலையிலே வாய் வைக்குமாப் போலே"
(முமுட்சு. 147)

என்ற முமுட்சுப்படியின் மூலம் அறிய வருகின்றது. பாலுண்ணும் குழவி தாயின் முலையில் இயல்பாய் வாய் வைத்துப் பருகி இன்புறுவது போல, அடியவனானவன் இறைவனது திருவடிகளை மிக விரும்பி வணங்கி இன்புறுதலே சிறந்தது என்று கருதுகிறான். ஆகவே, இறைவனது திருவடியைப் பெறலே பிரபத்தியின் சிறப்பாகும்.

இத்தகைய சிறப்புடைய சரணாகதி மார்க்கத்தை வலியுறுத்திப் பாடிய ஆழ்வார்களுள் நம்மாழ்வாரை, 'சரணாகதி தத்துவத்தின் தந்தை' போன்றவர் என்றதால் அவரைப் 'பிரபந்நஜன கூடஸ்தர்' என்று வழங்குதல் மரபாகும். ஆழ்வார்கள் பிரபத்தி மார்க்கத்தையே வலியுறுத்திப் பேசியதால் பிரபந்நர்கள்' என்று அழைக்கப்படுகிறார்கள். ஸ்ரீவைஷ்ணவ குலமே 'பிரபந்நகுலம்'[4] எனப்படுகிறது.

அ. அர்ச்சாவதாரத்தில் பிரபத்தி:

'பிரபத்தி' செய்வதற்கு உரிய இடம் அர்ச்சாவதாரமே ஆகும். ஆழ்வார்கள் இறைவனின் ஐந்து நிலைகளையும் தெளிவாகக் கண்டவர்கள். இவ்வைந்து நிலைகளிலும் காக்கும் இயல்பு கொண்டதும், எல்லாரும் அடையக் கூடியதும் அனைத்துத் திருக்குணங்களும் நிறைந்ததுமான இடம் அர்ச்சாவதாரமே என்று தெளிந்துள்ளனர். பல இடங்களிலும் அர்ச்சாவதார நிலையிலுள்ள கண்ணனைப் பிரபத்தி செய்துள்ளனர் என்பதனைப் பாசுரங்களில் பரக்கக் காண முடிகின்றது.

> ''பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம், ஆவரண
> ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே
> வ்யூஹம்; பெருக்காறு போலே விபவங்கள்;
> அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்''
>
> (ஸ்ரீவசன. 39)

என்று ஐந்து நிலைகளைக் கூறிய பிள்ளை லோகாச்சாரியார் தேங்கின மடுக்களுக்கு அர்ச்சாவதார நிலையை ஒப்பிடுகிறார். மற்ற நிலைகளைப் பிள்ளை லோகாசாரியர் ஸ்ரீவசன பூஷணத்தில் விளக்கிக் கூறியுள்ளார்.

இறைவன் உறையும் தலங்கள் பல; திருக்கோயில்கள் எங்கும் உள்ளன: ஆதலால், இவற்றில் இறைவனை வழிபட

எளியது என்று விளக்கம் கூறப்படுகிறது. அர்ச்சையில் பிரபத்தி செய்வோர்களில் ஆழ்வார்கள் அடங்குவர். அவர்கள் இறைவனிடத்து அன்பு – பக்தி கொண்டவர்கள். பக்தியால் பரவசமடைந்து பிரபத்தி செய்யும் பொழுது இறைவனைப் பெற வேண்டும் என்று நினைக்கும் உணர்வே சிறந்த பக்தியாகும் என்று ஸ்ரீவசன பூஷணத்தில் (41,42,48) விளக்கம் கொடுக்கப் படுவது நோக்கத்தக்கது.

"இதுதான் பரவ்யூக விபவங்கள் போலன்றிக்கே
கண்ணாலே காணலாம்படி இருக்கும்" (மூமுட்சு. 140)

என்பதில் இறைவனை ஊனக் கண்ணாலே காண விரும்புவது அர்ச்சை நிலையில் ஆகும். ஆகவே,

"ஆழ்வார்கள் பல இடங்களிலும் பிரபத்தி
பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே" (ஸ்ரீவசன. 35)

என்று போற்றப்படுகிறது. ஆழ்வார்கள், தாம் செல்லும் தலங் களில் உள்ள இறைவனை கண்ணனாகக் கண்டு வழிபட்டு, அந்த அர்ச்சை நிலையில் மூழ்கிப் பாசுரங்கள் பாடி மகிழ்ந்துள்ளனர். அந்த அளவிற்கு இவ்வதாரத்தின் எளிமை பேசப்படுகிறது.

இறைவனைப் பற்றுமிடத்தில் வேண்டப்படும் குணங்கள் வாத்சல்யம் (கன்றிடத்தில் பசு இருக்கும் இருப்பு), சுவாமித்வம் (உடையவனாயிருக்கும் இருப்பு) சௌசீல்யம் (உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலத்தல்), சௌலப்யம் (எளியவனாக இருக்கும் இருப்பு) என்ற நான்கும், "இருட்டறையில் விளக்குபோலப் பிரகாசிப்பது இங்கே" (ஸ்ரீவசன.27) என்று ஸ்ரீவசனபூஷணம் குறிப்பிடுகிறது. ஆதலால்தான், "சௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்" என்று முமுட்சுப்படி (139) விளக்குகிறது. ஆகவே, ஆழ்வார்கள் அர்ச்சாவதார நிலையிலே சரண் அடைந்தது அவர்கள் அருளியுள்ள பாசுரங்கள் வழி அறிய வருகின்றது, காரணம், ஸ்ரீவைகுண்டத்தில் இருக்கும் ஸ்ரீமந் நாராயணனுக்குள்ள கல்யாண குணங்கள் யாவும் அர்ச்சை நிலையிலும் அடர்ந்துள்ளன என்பதால் ஆழ்வார்கள் அனைவரும் இந்நிலையிலுள்ள இறைவனிடத்துப் பிரபத்தி செய்து, மக்களையும் ஆற்றுப்படுத்தினர்.

அர்ச்சாவதாரமே எளிது என்று நம்மாழ்வார், குறிப்பிட் டுள்ளார் என்பதனை,

"செய்ய பரத்துவமாய் சிரார் வியூகமாய்
துய்ய விபவமுமாய்த் தோன்றிவற்றுள் எய்துமவர்க்
இந்நிலத்தில் அர்ச்சாவ தாரம் எளிதென்றாள்"
(திரு.நூ.26)

என்று திருவாய்மொழி நூற்றந்தாதியில் மணவாள மாமுனிகள் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

"சூரியனைப் போன்ற பேரொளியுடன் தன்னுடைய பக்தர்களை மனநிறைவு செய்வதற்காவென்றே அருள் நிறைந்த இறைவன், தனிப்பட்ட வடிவில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான்; கடவுள் வடிவமாக இருக்கிறான், கடவுளின் இந்த வெளிப்பாடு அவனுடைய அர்ச்சையாகிறது" என்ற கருத்து[5] அறியத்தக்கது. எளிதில் அடையக் கூடிய ஒன்றாக, அடியவர்களின் ஆசைக்கேற்ப சிறப்பான வடிவை மேற் கொள்கிறான் என்று

"தம ருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமரு கந்த தெப்பேர் மற்றப்பேர்–தமருகந்து
எவ்வண்ணம்............" (பொய்.மு.தி.44)

என்ற பாசுரத்தில் விளக்கியிருப்பது அர்ச்சாவதார சிறப்பு எனத் தெரிய வருகிறது. ஆழ்வார்கள் காலத்தில் இறைத்திருமேனிகளால் நிறுவப்பட்ட வழிபாட்டு புனிதத் தலங்கள் எண்ணிக்கையில் மிகுந்திருந்தன. ஆகவே, அர்ச்சை என்னும் இறைநிலையே பரவலாக வழிபடப்பெற்றது. ஆகவே திவ்விய தேசங்கள் பல உருவாயிற்று, சுருங்கக் கூறினால் நாலாயிரத்தின் பாசுரங்கள் யாவும் இந்த அர்ச்சாவதாரத்தைப் பற்றியனவேயாகும். அதிகமான திவ்விய தேசங்களையும், அங்கு எழுந்தருளியுள்ள அர்ச்சாவதார நிலையைப் பற்றிப் பாடிய பெருமை திருமங்கை ஆழ்வாரைச் சாரும். மற்ற ஆழ்வார்களை விட அதிகமான திவ்விய தேசங்களுக்கு மங்களாசாசனம் செய்தவர் திருமங்கை ஆழ்வார் என்பது அறியத்தக்கதாகும்.

ஆழ்வார்கள் அனைவரும் மங்களாசாசனம் செய்தது இந்த அர்ச்சாவதார நிலையினையே ஆகும். அவ்வாறு மங்களாசாசனம் செய்த திருப்பதிகள் நூற்றெட்டு என வைணவ மரபில் கூறப் படுகிறது. பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்[6] இதனைப் பற்றிப் பாடியுள்ளது ஈண்டு நினைக்கத்தக்கது.

மங்களாசாசனம்:

ஸ்ரீ வைஷ்ணவக் கொள்கைகளுள் மங்களாசாசனம் என்பது மிகச் சிறந்த தொண்டாகும். "அன்பு நிலைக்கு ஏற்ப பெருமானைக் கிட்டி, அவ்வெம்பெருமானுக்கு ஒரு குறையும் உண்டாகாமல், எல்லா நன்மைகளும் உண்டாக வேணும் என்று வேண்டிக் கொள்வதே"[7] மங்களாசாசனம் ஆகும்' என்று கூறுவர் மங்களாசாசனத்தின் சிறப்பினை ஸ்ரீ வசன பூஷணம் (244–247) சிறப்பாக எடுத்துரைத்துள்ளது.

ஆழ்வார்கள் எல்லோரும் இறைவனது திருவடிகளுக்கு மங்களாசாசனம் செய்துள்ளனர். அவர்களுள் பெரியாழ்வார் கண்ணனிடத்து அளவு கடந்த அன்புடையவர் ஆதலால் இறைவனுக்கே பல்லாண்டு பாடிய பெருமை உடையவர். "ஆழ்வார்கள் எல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்" (ஸ்ரீவசன. 250) என்று ஸ்ரீவசனபூஷணம் கூறுகிறது, நம்மாழ்வாருக்குப் பின்பு அவதரித்து இருந்தாலும், இவருக்குப் பெரியாழ்வார் என்ற திருநாமம் இவரது பரிவு விசித்திர மானதாலே ஏற்பட்டது என்று கூறப்படுகிறது.

"மங்களா சாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள் தங்க
ளார்வத்தளவு தானன்றிப் – பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர் பிரான்
பெற்றான் பெரியாழ்வா ரென்னும் பெயர்"

(உப. ரத். 18)

என்று சிறப்பாகப் பேசப்படுகிறது. மற்ற ஆழ்வார்கள், தலங்களிலுள்ள மூர்த்தியைப் பாடி பரவுதலே மங்களா சாசனமாகக் கொண்டிருந்தனர். ஆனால், பெரியாழ்வாருக்கு இருந்த தவிப்பு வேறு, கண்ணனுடைய வாழ்வைத் தம் வாழ்வாகக் கொண்டு, அவனுக்கு என்ன தீங்கு வருகிறதோ என்று மேன் மேலும் காப்பிடுவதே இவருடைய நோக்கமாக இருந்திருந்தது. கண்ணனது காட்சி இன்பமும் கைங்கரிய அனுபவமும் மங்களாசாசனத்தில் பாடி அனுபவிக்கிறார் ஆழ்வார் என்பது 'பல்லாண்டு' திருமொழி முழுதும் (1.1) தெரிய வருகிறது.

"மற்றைய ஆழ்வார்கள் ஏதோ சில சமயங்களில் பய சங்கையால் மங்களாசாசனம் செய்தனர். நம்மாழ்வார்

'ஊழிதோறும் ஓவாதே வாழிய' என்று மங்களா சாசனம் செய்தார். பெரியாழ்வார் திருப்பல்லாண்டு தொடங்கி அவ்வப் போது பொங்கும் பரிவால் பல்லாண்டு பாடினார். இவர்களது பரிவு வெள்ளம் இவர்களுக்குக் கழுத்தளவானால் இவருக்குக் கணுக்காலளவாகும்''[8] என்று பெரியாழ்வாரின் மங்களா சாசனத்தின் சிறப்பு பேசப்படுகிறது.

இவ்வாறு, பகவத் அனுபவத்தில் மற்றைய ஆழ்வார்கள் தோய்ந்திருப்பர்; ஆற்றாமை மிகுதியால் பெரிதும் துன்புறுவர். இவர்களுக்கு இறைவனிடமும் பாகவதர்களிடமும் பரிவுண்டு. ஆனால், பெரியாழ்வார், இறைவனுடைய இந்த சௌந்தர்யத்துக்கு என்னவருகிறதோ என்று கலங்கி, இறைவனுக்கும் இறைவனைப் பற்றியவர்களுக்கும் பல்லாண்டு பாடுவார் என்று ஸ்ரீவசனபூஷணம் விளக்கிக் (ஸ்ரீவசன. 253) கூறுகிறது. பெரியாழ்வாரின் மங்களாசாசனச் சிறப்பைத் திருவரங்கத்தமுதனார் குறிப்பிட்டுள்ளது[9] ஈண்டு நினைத்தற் பாலது. பிரேமத்தில் பெருஞ்சுழி படுகையாலே நித்தியனான இறைவன் நிலையைச் சிறிதும் நோக்கமாமல் பல்லாண்டு என்று மங்களாசாசனம் செய்தலையே இயல்பாகவுடையவர் பெரியாழ்வார் என்று அமுதனார் போற்றுகிறார்.

ஆழ்வார்கள் செய்யும் மங்களாசாசனம் திவ்விய தேசத்தின் சிறப்பையும், அம்மூர்த்தியின் பெருமைகளையும் கொண்டே அமைந்துள்ளது. அவ்வகையில், கண்ணன் எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசங்களானது ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டபெருமை உடையவையாகும். மற்ற வைணவத் தலங்களிலுள்ள பெருமானும் ஆழ்வார்களுக்குக் கண்ணனாகக் காட்சிக் கொடுத்திருப்பது அறியத்தக்க செய்தியாகும்.

**கண்ணனின் பல்வேறு பெயர்கள் சிறப்பு:**

இறைவனின் மேன்மைகளைக்காட்டிலும் அவனைக் குறிக்கும் திருநாமத்தின் மேன்மை உயர்ந்தது என்பர், கண்ணனுக்கு கிருஷ்ணன், கேசவன், தாமோதரன், கோவிந்தன், கோபாலன் போன்ற பல பெயர்களைக் குறிப்பிடுகின்றனர். கண்ணன் எங்கிருப்பினும், அவனது பெயரை இருந்த இடத்திலிருந்து கொண்டு அவனைச் சரணடைந்து உச்சரித்தாலோ அல்லது கூறினாலோ அவனருள் கிடைக்கும் என்பர். இதனை

"சொல்லுங் க்ரம மொழியச் சொன்னாலும்
தன் ஸ்வரூபம் கெட நில்லாது" (முமுட்சு. 17)

இவ்வாறு, கண்ணனது பெயர்ச் சிறப்பினால் ஏற்பட்ட பலன்களை ஆழ்வார் பாசுரங்கள் எடுத்துரைக்கின்றன. இறைத் திருநாமத்தின் மேன்மை மற்றும் பலன்கள் பற்றி முமுட்சுப்படி[10] சிறப்பாக எடுத்துரைக்கிறது.

கண்ணனது பல பெயர்களுள், 'கோவிந்தன்' என்ற பெயரின் பெருமையை, தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்துள்ளார்.

"மொய்த்தவல் வினையுள் நின்று
மூன்றெழுத் துடைய பேரால்
கத்திரபந்து மன்றே
பராங்கதி கண்டு கொண்டான்
இத்தனை யடிய ரானார்க்
கிரங்கும் நம் மரங்கனாய
பித்தனைப் பெற்று மந்தோ
பிறவியுள் பிணங்குமாறே" (திருமாலை. 4)

விஷ்ணு புராணத்தில் இடம்பெற்றுள்ள, க்ஷத்திரபந்துவின் நற்கதி பற்றிய செய்தியை இங்கு அருளியுள்ளார். அரசர்களில் மிகக் கொடியவனான க்ஷத்திரபந்து (கத்திரபந்து) என்பவன், மூன்று எழுத்துக்கள் கொண்ட 'கோவிந்தா' என்ற நாமத்தை அடிக்கடி சொல்லி நற்கதி எய்தினான் என்ற புராணச் செய்தியை ஆழ்வார் தமது பாசுரத்தில் அருளியுள்ளார்.

இவ்வாறு கண்ணன் தொலைவிலிருந்தாலும், அவனுடைய பெயருக்குப் பெருமை அதிகம் – பலன் அதிகம் என்பதனைத் திரௌபதியின் பக்திமூலம் அறியமுடிகிறது.

"அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி
நின்று உதவும்" (முமுட்சு. 15)
"திரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது
திருநாமமிறே" (முமுட்சு. 16)

என்று முமுட்சுப்படி 'கோவிந்த' நாமத்தின் பெருமையைக் காட்டுகிறது. திரௌபதி 'கோவிந்தா' எனக் கதறிக் கொண்டு, கண்ணன் சரண் பற்றினாள், அவனது அருள் கிடைத்த செயல் சிறப்பாகப் பேசப்பட்டு வருகிறது. இதனை,

"ஆறாகி இருதடங்கண் அஞ்சனவெம்
புனல் சோர அளகம் சோர
வேறான துகில் தகைந்த கைசோர
மெய்சோர வேறோர் சொல்லும்
கூறாமல் 'கோவிந்தா! கோவிந்தா!'
என்றரற்றினாள்" (வில்லி. சூதுப். 246)

என்று வில்லிபுத்தூரார் கூறுவதும் ஈண்டு ஒப்பு நோக்குதற்குரிய தாகும்.

ஆண்டாள், தனது திருமொழியில் "என் கோவிந்தன் குணம்பாடி ஆவி காத்திருப்பேன்" (நாச்.திரு. 8.3) என்று கூறு கையில் கண்ணனைப் பிரிந்த காலத்தில், அவனது கோவிந்த நாமத்தைச் சொல்லிப்பாடியே உயிர் தரித்திருப்பதாக் கூறுவது மூலம் இப்பெயரின் சிறப்பு தெரிய வருகிறது. "கூட்டிலிருந்த கிளி எப்போதும் கோவிந்தா! கோவிந்தா! என்றழைக்கும்" (நாச். 12.9) என்று ஆண்டாள் கூறுவதும் இதன்பாற்படும்.

'கோவிந்தன்' என்பது விஷ்ணுவைக் குறிக்கிறது. 'கோபன் என விஷ்ணுவைக் கூறுகிறது ருக் வேதம், 'பசுவைப் பரிபாலிப் பவன்' என்று பொருள் கூறப்படுகிறது. மேலும், ருக் வேதத்தில் இந்திரனுக்கு அடைமொழியாக 'கோவிந்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது[11] (பசுகாவலன்) என்று கூறப்படுகிறது. இவ்வாறு, கிருஷ்ண வழிபாடு பரவிய பொழுது – கிருஷ்ணன் கதை செல்வாக்குப் பெற்ற பொழுது கிருஷ்ணன் விஷ்ணுவோடு இனங்காணப்பட்டான். பிறகு, அவன் ஆயர் வாழ்க்கையோடு தொடர்புடையவனாக வாழ்ந்து வந்ததால், அவனுக்கு 'கோவிந்தன்' என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கக் கூடும். இருப்பினும் கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கி ஆயர்மக்களைக் காத்தருளியதால் 'கோவிந்தன்' என்று பட்டப்பெயர் ஏற்பட்டதாகக் கூறுவது பிற்காலத்தியமரபாயிற்று. இந்திரனால் கிருஷ்ணனுக்குக் 'கோவிந்தா' என்று பட்டப்பெயர் சூட்டப்பட்டது (கோவர்த்தன மலையைத் தூக்கி மக்களைக் காத்த செயலுக்காக) என்பது. பாகவத புராணத்தில் (10– பிருந்தாவனலீலை – 27:23) இடம்பெற்றிருப்பதே ஆகும். ஆகவே இந்திர வழிபாடு தாழ்ந்து கண்ணன் வழிபாடு செல் வாக்குப் பெறத் தொடங்கியதும் இந்திரனின் அடை மொழிப்

பெயரான 'கோவிந்' என்பது கிருஷ்ணனுக்கு ஏற்பட்டது என்று கருதுவதற்கு இடமுண்டு.

கிருஷ்ணனுக்குக் 'கேசவன்' என்ற பெயர் சிறப்பிற்குரிய தாகும்.

"கெடும் இடராயவெல்லாம் கேசவா என்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுக்கில்லார்"
(நம்.தி.வா.மொ. 10.2.1)

என்று நம்மாழ்வார் கூறியிருப்பது இப்பெயர் சிறப்பினைக் காட்டுகிறது. ஆண்டாளும், கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ' (திருப்.7) என்று கூறுவதும் ஈண்டு ஒப்பு நோக்கு தற்குரியது. 'கேசி என்ற அசுரனைக் கொன்றதால் கிருஷ்ணனுக் குக் கேசவன்' என்ற பெயர் ஏற்பட்டது என்று ஹரிவம்சம் (அத்.24) எடுத்துரைப்பது அறியத்தக்கது. இதே கருத்தை மகாபாரதம் நாரணீயப் பகுதியும் (சாந்திபருவம்) எடுத்தியம் புகிறது.

கிருஷ்ணார்ப்பம்' என்ற சொல்லின் சிறப்பினை, நமன், முற்கவன் என்பவர்களின் வரலாற்றின் மூலம் தொண்டரடிப் பொடியாழ்வார் எடுத்துரைக்கிறார்.

"நமனும் முற்கலனும் பேச
நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும்
நாமங்கள் உடைய நம்பி" (திருமாலை. 12)

என்று குறிப்பிட்டுள்ளார். 'முற்கலன்' என்ற பெரும்பாவியான ஒருவன் பசுவைத் தானம் செய்யும் பொழுது 'கிருஷ்ணாய எனக் கூறிக் கொடுத்தான். அத்திருநாமத்தின் விளைவு, அவன் இறந்த பொழுது, யமதூதர்கள் அவனை வரவேற்று மரியாதை செய்து அழைத்துச் சென்றதாகக் கூறப்படுகிறது. இச்செய்திக் குரிய காரணத்லதக் கேட்ட நரக உலகமே உய்வு பெற்றதாகவும் கூறப்படுகிறது. அந்த அளவிற்கு அப்பெயரின் பலன் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

கண்ணனின் பெயரைக் காரணமின்றிச் சொன்னாலும், தம் குழந்தைக்கு இட்டு அழைக்கினும், பரிகாசமாகவோ இழிவாகவோ கூறினாலும் அப்பெயரின் சிறப்பினால் அருள்

கிடைத்துவிடும் என்பதனைச் சிசுபாலன் போன்றோரின் வாழ்க்கை மூலம் அறிய முடிகிறது. ஏளனமாகப் பலமுறை கண்ணனைப் பற்றிக் கூறிக் கொண்டேயிருந்த சிசுபாலனுக்கு நற்கதி கிடைத்தது என்பது மகாபாரதத்தின் மூலம் அறிய முடிகிறது. இச்செய்தியினைப் பெரியாழ்வார்,

"பலபல நாழம் சொல்லிப்
பழித்தசிசு பாலன்தன்னை
அலவலை மைதவிர்த்த அழகன்"

(பெரியா. திரு. மொ. 4.3.5)

என்று போற்றியிருப்பது நோக்கத்தக்கது.

இறைவன் பெயர்களைத் தங்கள் பிள்ளைகட்கு இடாமல் வேறு பெயர்களைப் பல்வேறு காரணங்கட்காக இடும் மக்களை நோக்கிப் பெரியாழ்வார், உபதேசித்திருப்பதை அவரது பாசுரங் களில் காணலாம்.

"கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித்திருமினோ
நாயகன் நாரணன் தம்மன்னை நரகம் புகாள்"

(பெரியா. திரு. மொ. 4.6.1)

கேசவன், நாயகன், நாரணன் என்ற பெயர்களைத் தம் பிள்ளை கட்கு இட்டால் அக்குழந்தைகளைப் பெற்ற தாய்மார்கள் துர்க்கதியை அடையமாட்டார்கள் என்று கூறுகிறார். இதே கருத்துடைய செய்திகளை இப்பதிகம் முழுதும் வலியுறுத்திக் கூறியிருப்பது அறியத்தக்கது.

"மானிட சாதியில் தோன்றிற்றோர் மானிட சாதியை
மானிட சாதியின் பேரிட்டால் மறுமைக் கில்லை
வானுடை மாதவா கோவிந்தா வென்றழைத்தக்கால்
நானுடை நாரணன் தம்மன்னை நரம்புகாள்"

(பெரியா. திரு மொ. 4.6.4)

மானிடப் பெயரை விட இறைவன் பெயரே மறுஉலகப் பேற்றைத் தரும் என்று கூறியிருக்கிறார். இக்கருத்துடைய பெரியாழ்வாரின் மற்ற பாசுரங்களில் (4.4.5; 4.6 6; 4.6.8) இச்செய்தியினை வலியுறுத்தி உபதேசித்தருளியுள்ளார்.

அடுத்து, 'நம்பி' என்ற பெயரைத் தம் குழந்தைகளுக்கு இடுபவர்களைக் கண்டு பெரியாழ்வார் ஏளனம் செய்கிறார்,

'நம்பி' என்பது 'பூரணமானவன்' (குறைவற்றவன்) என்ற பொருளை உடையவனாக விளங்குவான் என நினைத்து, அப்பெயரைத் தம் குழந்தைகளுக்கு இடுகின்றனர் பெரியோர். அதனை, இழித்துப் பேசியதாக அவரது பாசுரங்கள் (4.6.8; 4.6.9) எடுத்துரைக்கின்றன.

"நம்பி பின்பியென்று நாட்டுமானிடப் பேரிட்டால்
நம்பும் பிம்பு மெல்லாம் நாலு நாளிலழுங்கிப் போம்
செம் பெருந்தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாள் நாரணன் தம்மன்னை நம்புகாள்"

(பெரியா. திரு. மொ. 4.6.8)

மானிடப் பெயர்கள் நான்கு நாட்களில் அழிந்து விடும். ஆதலால் கண்ணன் பெயரை இட்டால் நரகம் புகாது மறுபிறவிப் பேறு பெறலாம் என்று கூறி அறிவுறுத்துகிறார்.

'தாமோதரன்' என்ற பெயரும் கண்ணனைக் குறிப்பதாக அமைந்துள்ளது. கண்ணன் ஆயர்பாடியில் வளர்ந்து வந்த பொழுது, அங்குள்ள இடைச் சேரிப் பெண்களால் கொடுக்கப் பட்ட பெயராகும். கண்ணனுடைய குறும்புச் செயல்களைப் பற்றி, ஆயர்ப் பெண்கள் அசோதையிடம் முறையிட, அவள் கண்ணனை உரலோடு சேர்த்துத் தாம்புக் கயிற்றைக் கொண்டு, அவன் வயிற்றோடு கட்டியதால், அவனது வயிறு தழும்பு ஏறியதாகக் காணப்பட்டது. இத்தழும்பினால் 'தாமோதரன்' என்ற பெயர் ஏற்பட்டது என்பதனை ஹரிவம்சம் (அத். 7) மற்றும் பாகவத புராணத்தின் வழி அறியமுடிகிறது. "நோவ ஆய்ச்சி உரலோடாக்க இரங்கிற்றும்" (நம். தி. வா. மொ. 6.4.4) என்று நம்மாழ்வார் கூறுவதும் இப்பெயரைப் பற்றியே ஆகும்.

கண்ணனுக்கு, அவன் செய்த திருவிளையாடல்களின் (லீலைகள்) மூலம் பல பெயர்கள் வழங்கப்பட்டன. கண்ணனுக்கு வழங்கப்பட்ட பல பெயர்களைத் திவ்வியப் பிரபந்தம் குறிப்பிடுகிறது. அப்பெயர்களுக்குரிய விளக்கத்தினை ஆழ்வார்கள் குறிப்பிடவில்லை. பெயர்களின் சிறப்பினை – பெருமையினை எடுத்துக் கூறி, மக்களை வழிப்படுத்துவதாக அமைந்துள்ளது அறிய முடிகிறது. அச்சுதன், அமரர் ஏறு, ஆயர்தம் கொழுந்து, தண்துழாய் மாலை மார்பன், கற்றினம் மேய்த்த எந்தை, குடமாடு கூத்தன், வாசுதேவன், துவரைப்பிரான், மாயோன், மால், மாயவன், மதுசூதனன், தாமரைக் கண்ணன், கடல்

வண்ணன், கேசவன், என்று பல பெயர்கள் குறிப்பிட்டிருப்பதைக் காண முடிகிறது. நம்மாழ்வார் கண்ணா, கண்ணன் என்ற பெயர்களையே அதிகமாகப் பாசுரங்கள் தோறும் விளிப்பதும் பாடுவதுமான முறைகளில் அமைத்துள்ளதை அறிய முடிகிறது. திவ்வியப் பிரபந்தத்தில், நம்மாழ்வார் பாடிய பன்னிரு நாமப் பாட்டும் (நம் தி.வா.மொ.2.7) பெரியாழ்வார் பாடிய பன்னிரு பெயர்களும் (பெரியா.திரு.மொ.2.3) கண்ணனுடைய திருப் பெயர்களைக் கூறும் சிறப்பிற்குரிய பாசுரப்பகுதிகளாகும்.

கண்ணனது ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு சிறப்பினை எடுத்தியம்புவதாகக் கருதுகின்றனர் பெரியோர். அவனது பெயரைக் கூறிக் கொண்டிருந்தாலே பகவத் பக்தி ஏற்பட்டு அவனருளைப் பெற முடியும் என்பதனை வலியுறுத்திக் காட்டியுள்ளனர் ஆழ்வார்கள். அதற்கு உறரிவம்சம், பாகவத புராணம், விஷ்ணு புராணம் ஆகிய இதிகாச புராணக் கூறுகளைக் கொண்டு அவனது பெருமைகளைப் பாடியிருப்பது வழிபாட்டு முறைகளைக் காட்டுவதாக அமைகிறது. ஆழ்வார்கள் கண்ணனைப் பல வகைகளில் அனுபவித்து அவனருளைப் பெற்றுய்ந்த பிறகு, மக்கள் அவனருளைப் பெற திருநாமங்களின் சிறப்பினை எடுத்துரைத்திருப்பது அறியத்தக்கது.

**கண்ணனை வழிபடும் முறைகள்:**

**அ. பகவத் பக்தி:**

கண்ணன் பெயரைச் சொல்லி அழைத்தாலும், அல்லது உச்சரித்தாலும், அவனது திருவடியைச் சரண் புகுவதாலும் அவனிருக்கும் திவ்விய தேசம் நோக்கி தொழுவதாலும் அவனருளைப் பெற முடியும் என்பதனை ஆழ்வார்கள் வலியுறுத்திக் காட்டியுள்ளனர். அவனைப் பக்தியுடன் வழிபடுதலால், அவன் எல்லாப் பிணிகளையும் தீர்த்தருளும் மருந்தாக இருக்கிறான்; பாவங்களைச் செய்யும் ஐம்புலன்கள் நம்மைக் கெடுத்து அழிக்காமல் இருக்க தடுக்கிறான்; என்பதனை ஆழ்வார்கள் மக்களுக்கு உபதேசித்து வழிப்படுத்தியுள்ளனர். அவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களும் இத்தகைய பலன்கள் அளிக்கக் கூடியனவைகளாக அமைந்துள்ளன என்பதனையும் உணர்த்தியுள்ளனர்.

ஒவ்வொருவரும் தெய்வத்தோடு தொடர்பு கொண்டு வாழ வேண்டும் என்பதனைத் திருமழிசையாழ்வார், கூறுகிறார்.

"வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது" (நான்.திரு.63)

என்று தன் காலத்தை, அவனை வழிபடுதலிலே போக்கியதாகக் கூறியுள்ளார். மேலும், எளிய முறையில் அன்போடும் அவனைப் பூசித்தல் வேண்டும் என்பதனை,

"மனம் மாசுதீரும் அருவினையும் சாரா
தனம் ஆயதானே கைகூடும் – புனம் மேய
பூந்துழாயன் அடிக்கே போதொரு நீர் ஏந்தி
தாம்தொழா நிற்பர் தமர்" (பொய்.மு.தி.43)

பூசையின் போது அவனோடு ஒடுங்கி நிற்றலே முக்கியமானது! அப்பொழுது அவன் தரிசனத்தையும் எளிதில் பெறலாம் என்பதனையும் பொய்கையார் (50) வலியுறுத்தி அறிவுறுத்தி யிருப்பது நோக்கத்தக்கது இத்தகைய முறைகள் அர்ச்சாவதார நிலையிருக்கும் மூர்த்தியிடத்து நிகழ்த்துதலே சிறந்தது என்பதனை உபதேசித்து இருத்தல் அறிய முடிகிறது.

இறைவனை வழிபாடு செய்ய இயலாதோர், அவனது கழலினை மனதிற் கொண்டு அவனது நாமத்தை உச்சரித்து வழிபாடு செய்யலாம் என்பதனையும் அதனால் பெறப்போகும் பலன்களையும் ஆழ்வார்கள் வலியுறுத்திக் காட்டியிருப்பது, எளிமையான வழிபாட்டினைக் குறிப்பதாகக் கொள்ளமுடிகிறது. கலியுகத்தில், இறைவனது திருநாமங்களை உச்சரிப்பதே ஆன்மாக்களுக்குப் பேரின்பம் உண்டாக்கும் என்று கருதப்படுகிறது. அவனது நாமங்களை இடைவிடாது கூறுவது 'ஜெபம்' என்பர். ஜெபித்தல் என்பது மூன்று நிலைகளில் இருப்பதை ஆழ்வார்கள் பாசுரங்களிலிருந்து அறிய வருகிறது.

"கண்ணன் கழலினை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே"

(நம்.தி.வா.மொ.10.5.1)

என்று மன அளவில் ஜெபித்தலைக் குறிப்பிடுகிறார். அடுத்து, அமைதியாக இருந்து கொண்டு ஜெபம் செய்தலை,

"ஓதிநாமம் குளித்து உச்சிதன்னால் ஒளி மாமலர்ப்
பாதம் நாளும் பணிவோம் நமக்கே நலம்"

(பெரிய. திரு. மொ. 9.3.9)

என்று திருமங்கை ஆழ்வார் குறிப்பிட்டுள்ளார், வாய்விட்டு ஜெபித்தலை

"அருமா நிலம் அன்றளப்பான் குறள் ஆய்
அவுணன் பெருவேள்வியில் சென்றி ரந்த
பெருமான் திருநாமம் பிதற்றி நும்தம்
பிறவித்துயர் நீங்குவதும் என்னகிற்பீர்"

(பெரிய. திரு. மொ. 3.2.4)

என்ற பாசுரத்தானும் விளக்கப்படுகிறது. திருநாமம் இவ்வகைகளில் சொல்லி பிறவித்துயர் நீங்கிக் கொள்ள முடியும் என்பதனை ஆழ்வார்கள் பாசுரங்கள் உணர்த்துகின்றன. ஈண்டு, பகவத் கீதை சுலோகம் ஒன்றில்[12] திருநாமம் ஓதும் சிறப்பினைக் கண்ணன் கூறுவது நினைக்கத்தக்கது. இவ்வாறு, பகவத் பஜனை செய்துவரும் ஸ்ரீவைஷ்ணவர்களை நம்மாழ்வார் வாழ்த்திப் போற்றியுள்ளார். அவர்கள் செய்து வரும்,

"இடங்கொள் சமயத்தை யெல்லாம்
எடுத்துக் களைவன போல
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
கிடந்தும் இருந்தும் எழுந்தும்
கீதம் பலபல பாடி
நடந்தும் பறந்தும் குனித்தும்
நாடகம் செய்கின்ற னவே"

(நம். தி. வா. மொ. 5.2.4)

என்ற செயலைக் கண்டு மகிழ்ந்து கூறியிருப்பதன் மூலம் பகவத் பக்தியின் சிறப்பு தெரிய வருகிறது. மேலும், அத்தகைய சிறப்புடைய கண்ணனைப் பாடினால் இருமையின்பம் கிடைக்கும் (நம். தி. வா. மொ. 3.9.9); (9.1.6; 9.1.3; 9.1.9) அவனை ஏத்துதலால் நரகம் என்பதில்லை என்றும் (பூத. இ. தி. 93) ஆழ்வார்கள் வலியுறுத்திக் காட்டியுள்ளனர். கண்ணனை வணங்காத மனிதனை மதியாது இருத்தல் வேண்டும் என நம்மாழ்வார் குறிப்பிட்டிருப்பதும் (நம். தி. வா. மொ. 11.6.7) இதன்பாற்படும். ஐம்புலன்களும் கண்ணனைக் காணாது இருத்தலால் பயனில என்பதனை வலியுறுத்தி உபதேசித்திருப்பதை ஒரு பதிகம் (நம். தி. வா. மொ. 11-7) முழுவதிலும் அறியமுடிகிறது.

கண்ணன் அருளிய கீதையைக் கற்றால் மெய்ஞானம் கிடைக்கப் பெறும் என்பதனைத் திருமழிசையாழ்வார் குறிப்பிட்டுள்ளது சிறப்பிற்குரிய கருத்தாகும்.

"சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோ னாய்நின்ற மாயன், அன்
றோதிய வாக்கதனைக் கல்லார், உலகத்தில்
ஏதிலராய் மெய்ஞ்ஞான மில்" (நான். திரு. 71)

இறைவனின் சரமசுலோகமாகிய அந்தத் திருவாக்கை இவ்வுலகிலுள்ளோர் கல்லாதவர்களாய் இருந்தால் உணர்ச்சியற்ற பகவத் விரோதிகளாகக் கருதப்படுவர் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது.

இவ்வாறு, பிரபத்தி மார்க்கத்தில் பகவத் தொண்டு செய்வதில் குறிப்பாக திருநாமம் ஓதி சரணடைவதில் அதிகப் பலன் கிட்டும் என்பதனைக் கூறி மக்களை நெறிப்படுத்துவதாக ஆழ்வார்கள் பாசுரங்கள் அமைந்துள்ளன.

இறைவனுக்கும் இறைவனைச் சேர்ந்தவர்க்கும் கைங்கர்யம் (தொண்டு) செய்வது என்பது பக்தி வகையில் ஒன்றாகும். அன்பில் சிறந்த ஆழ்வார்கள் கைங்கர்யம் செய்தே வாழ்ந்து வந்தனர். பெரியாழ்வார் தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகியோர் 'மலர்க் கைங்கர்யம்' எனும் பகவத் தொண்டு புரிந்து வந்திருக்கின்றனர். நந்தவனம் அமைத்து மாலைகள் தொடுத்துக் கண்ணனுக்குத் தொண்டினைப் புரிந்து தமது பக்தியை வளர்த்துக் கொண்டனர். கண்ணனுக்குப் பிடித்தது மலர்கள் என்பது பாகவத புராணத்தின் வழி அறிய வருகிறது. 'வாசனைத் திரவியங்கள் மற்றும் பல வண்ணப் பூக்களை, மதுராவின் அரசனானக் கம்சனுக்குக் கொண்டு செல்லும் 'திரிவக்ரி' எனும் பெண்ணிடம் கண்ணன் அவற்றை விரும்பிக் கேட்டான். அப்பெண்ணும் கண்ணனுக்குக் கொடுத்து அலங்கரித்து மகிழ்ந்தாள். அந்த தொண்டினால் மகிழ்ந்த கண்ணன் அப்பெண்ணின் கூனலைச் சரிசெய்து, அழகிய தோற்றத்தைக் கொடுத்தருளினான், என்று பாகவத புராணத்திலிருந்து அறிய முடிகிறது. இது, பகவத் கைங்கரியத்தைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

ஆகவே, தொண்டு என்பது பல வகைகளில உள்ளது. கண்ணனது செயல்களைக் கொண்டே இக்கைங்கர்யத்தின் சிறப்பினை எடுத்துரைக்கலாம். தன் உடன் பிறந்தவனான பலராமனுக்குப் பாத சேவை செய்வது என்பது முற்பிறவியில் (இராம அவதாரத்தில்) இலக்குமணன் செய்த சேவைக்குப் பதில்மரியாதையாக, இப்பிறவியில் (கிருஷ்ணாவதாரத்தில்)

செய்ததாகக் கூறுவர். கண்ணனின் நண்பனான குசேலரின் பாதங்களைக் கண்ணன் ருக்மணியுடன் கழுவிய செயல் பிராமண சேவை என்று கூறலாம். அர்ச்சுனனுக்குத் தேரோட்டியாக (சாரதியாக) இருந்து, குதிரைகளையெல்லாம் கழுவிய செயல் களைத் தாஸ்ய சேவை என்று கூறலாம். கோகுலத்தில் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டு, அவைகளைப் பாதுகாத்த செயல் அக்குலத்திற்குரிய தொண்டாகும். இவ்வாறு, 'தொண்டு' என்பதன் சிறப்பினைக் கண்ணனே கற்பித்து அருளினான் என்று கூற வாய்ப்புள்ளது. இவற்றின் எதிரொலியாக பகவத் கீதையில் கூறப்பட்டுள்ள கர்மயோகம், பக்தியோகம் ஆகிய இரண்டினைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

ஆ. பாகவத பக்தி: (அடியவர்த் தொண்டு)

இறைவனை அடையும் நெறிகளுள் ஒன்றான பிரபத்தி மார்க்கத்தில் பகவத் பக்தி, பாகவத பக்தி என்ற இரண்டு வழி முறைகள் உள்ளன என்பது முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது. இறைவனுக்கு அடிமை செய்து கொண்டு அடியவராக இருப்பது மிகவும் ஏற்றமாகும். அவனடியார்களுக்கு அடிமை செய்து கொண்டு அடியவராக இருப்பது அதைவிட ஏற்றமாகும். இப்பக்தியைப் பற்றி ஆழ்வார்கள் பாசுரங்கள் வலியுறுத்திக் காட்டியுள்ளன. பகவத் கைங்காரியத்தைவிட பாகவத கைங்கர்யமே மிகவும் சிறந்தது என்பது வைணவக் கொள்கை களுள் ஒன்றாகும். இறைவனுக்கு அடியவராக ஆவதற்குக் குலம் தேவையில்லை. இறையன்பு கொண்டவர்கள் அவனருளைப் பெற முடியும் என்பதனை ஆழ்வார்களின் வாழ்க்கைப் பின்னணி உணர்த்துகின்றது. ஆழ்வார்கள் பன்னிருவர் பல்வேறு குலத்தைச் சார்ந்தவர்கள் எனினும், எக்குலத்தைச் சார்ந்தவராயினும் கண்ணன் அடியவர்களே உயர்ந்தவர்கள் என்று கூறப்படு கின்றனர். எனவே அவர்களைப் 'பாகவதர்கள்' என்று கூறுவர்.

"பழுதிலா ஒழுக லாற்றுப்
பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்களேலும்
எம்மடி யார்க ளாகில்
தொழு மினீர் கொடுமின் கொண்மின்!
என்று நின்னோடு மொக்க
வழிபட வருளி னாய் போன்ம்" (திருமாலை, 42)

என்று தொண்டரடிப் பொடியாழ்வார் குறிப்பிட்டுள்ளார். மேலும், அடியவர் உண்டு மிஞ்சிய சேடமே சிறந்தது என்றும் (41), அடியவர்களைப் பழிப்பவர் புலையவராவர் என்றும் (43), எடுத்துரைத்துள்ளார். இக்கருத்துடைய ஆசாரிய ஹிருதய சூத்திரம் ஒன்று ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கது.

"மிலேச்சனும் பக்தன் ஆனால் சதுர்வேதிகள்
அநுவர்த்திக்க அறிவு கொடுத்துக் குலனாதவத்
தோடு ஒக்கப் பூஜை கொண்டு பாவ நதீர்த்தப்
பிரசாதனாம் என்கிற திருமுகப் படியும்"

(ஆசா. ஹிரு. 85)

என்று விளக்கப்படுகிறது. அத்தகைய சிறப்புடைய அடியவர்களை நிந்திப்பவர்கள் தங்கள் பிராமணியம் கெட்டு கர்ம சண்டாளர்களாய்ப் போவார்கள் என்பதனையும் தொண்டரடிப் பொடியாழ்வார் சுட்டிக் காட்டியுள்ளார்.

"நுமர்களைப் பழிப்பராகில்
நொடிப்பதோ ரளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்" (திருமாலை. 43)

தூய அன்பு, பக்தி நெறி ஆகியன சமுதாயக் கட்டுக்களை வென்று சிறக்கும் தன்மையன என்பதனை நம்மாழ்வார்[13] உணர்த்துவது நோக்கத்தக்கது. தெய்வ அன்பில், சமுதாய மானது வேறுபாட்டை மறந்து ஒன்றாகக் கலந்து நிற்பதைக் காட்டுகிறது. "என்னைப் புகலடைவோர் – சரணமடைவோர் தாழ்ந்த பிறவிராயினும் இறுதியில் என்னைச் சேருகின்றனர்" என்ற கீதைச் சுலோகம் (10.32) இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. ஆகவே, பிறப்பு, குலம் என்ற வேறுபாடு காணாது இறைபக்தி உடையவர்கள் அடியவர்கள் என்ற உணர்வு ஏற்பட வேண்டும். அந்த அடியவர்களிடம் தொண்டுள்ளம் காட்டுவதே பாகவத பக்தியாகும் என்பது புலனாகின்றது.

அத்தகைய சிறப்பான மேன்மையுடைய பாகவத அடியார்களுக்கு அடிமை செய்தலே ஏற்றமானது என்ற உண்மையை நம்மாழ்வார் 'பயிலும் சுடரொளி' என்ற திருவாய் மொழிப் பதிகத்தில் (3 7)விளக்கியிருப்பது சிறப்பிற்குரியதாகும், கண்ணன் அடியார்களே எம்மையாள்பவர்; கண்ணன் அடியார்கள் நரகராயினும் தொழுகுலத்தவராவர்; கண்ணனை நினைத்துக் கொண்டிருப்பவரே எம்மை ஆள்பவராவர்; ஏழு தலைமுறைகள்

அடியவர்களாக இருப்பவர்களுக்கே நாம் அடிமையாக இருத்தல் அவசியம் என்று அடியவர் பக்தியை இப்பதிகத்தில் வெளிக் காட்டியுள்ளார். இப்பதிகத்தில்,''பாற்கடலில் பள்ளி கொள்ளும் பரமனை வணங்குவோர் தனக்குத்தலைவர் (சேஷன்), இவர்கள் எவ்வளவு தண்ணியரேனும் இவர்கட்குத் தலைவராயிருப்பதற் கான விரோதமானபிறப்பும் வேண்டாம்''[14] என்று நம்மாழ்வாா் அருளிச் செய்திருப்பது அவரது பாகவத பக்தியைச் சுட்டுகிறது. மேலும், நம்மாழ்வாரின் 'நெடுமாற்கடினம்' எனத் தொடங்கும் திருவாய்மொழிப் பதிகமும் (8.10) இப்பக்தியைப் பற்றியே பேசியுள்ளது. பாகவத கைங்கர்யமே புருஷார்த்தம் என்பதனையும், பகவத்பக்தியின் எல்லை நிலம் பாகவத பக்தி என்பதனையும் உணர்த்தியிருக்கக் காணமுடிகிறது. பகவத் பக்தியின் உறுதியை பாகவத பக்தியே உறுதிப்படுத்துகிறது என்ற கருத்தும் வலியுறுத்திக் குறிப்பிடப்பட்டுள்ளது.

''நீக்கி மில்லா அடியாரீதம்
அடியார் அடியார் அடியாரெங்
கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச்
செல்லும் நல்ல கோட்பாடே''

(நம்.தி.வா.மொ. 8.10.10)

என்று எடுத்துரைத்துள்ளது நோக்கத்தக்கது.

பாகவதர்களோடு கொள்ளும் சம்பந்தமானது, தாழ்ந்த பிறவியால் வந்த குற்றத்தைப் போக்கி, அவனையும் பாகவதனாக்குகிறது என்பதனை நன்குணர்ந்த குலசேகர ஆழ்வார் பாகவதர்களுடைய குழுவைச் சேவிப்பதாலன்றிக் கண்களுக்கு வேறு விமோசனம் என்பதே இல்லை என்று (பெருமாள் திரு.2) கூறுகிறார். அடியவருடைய அடியைத் தன் சென்னியில் அணிவதாகவும் (2.3) பெருமை கொள்கிறார். தம் மனம் தொண்டர்களையே வாழ்த்துவதாகவும் (2.4.) அவர்களை நினைத்து தன் மெய் சிலிக்கிறது என்றும் (2.5) தொண்டர்களையே தன் மனம் பக்தி செய்வதாகவும் (2.6) அடியாருக்களிடத்தே தான் அன்பு காட்டுவதாகவும் (2.7), தொண்டர்களை நினைத்தே தன் மனம் மயங்குவதாகவும் (2.8)தன்னுடையபாகவத பக்தியை வலியுறுத்திக்காட்டியுள்ளார். ஆகவே, அடியார்கள் என்பர் பித்தர்களல்லர் என்பதனையும்[15] சுட்டிக் காட்டியுள்ளார்.

திருமங்கை ஆழ்வாரின் 'கண் சோரா' என்று தொடங்கும் பெரிய திருமொழிப் (7.4) பதிகத்தில் எடுத்துரைத்துள்ள பாகவத பக்தியும் மேற்சொன்ன கருத்துக்களோடு ஒப்பு நோக்கத்தக்க தாகும்.

இத்தகைய சிறப்பாகக் கருதப்பட்டுவரும் பாகவதர்களிடத்து 'பாகவத அபசாரம்' என்பது காட்டுதல் கூடாது என்பதனை ஸ்ரீவசனபூஷணம் கூறுகிறது.

"அதிலே ஒன்று அவர்கள் பக்கல் ஜந்ம நிருபணம்"

(ஸ்ரீவசன. 195)

பகவதர்களுக்கு இறைவனோடுள்ள தொடர்பைக் கருதாமல் அவர்கள் பிறந்த குலத்தைக் கொண்டு இத்தகையவர் என்று ஆய்வது அபசாரமாகும் என்று விளக்கம் கூறப்படுகிறது. இவ்வாறு, பாகவத பக்தி மற்றும் பகவத் பக்தி இரண்டும் வழி பாட்டு நெறிகளைக் காட்டுகின்றன. ஆகவே இந்தக் பாகவத பக்தியே பகவத் பக்தி பெற வழியாகும்.

"உற்றதும் உன் அடியார்க் கடிமை

என்கிறபடியே இதிலே பாகவத

சேஷத்துவம் அநு சந்தேயம்" (முமுட்சு. 89)

என்று பிள்ளை லோகாசாரியார் கூறுவதும் ஈண்டு நோக்கத் தக்கது. அகங்காரமும் மமகாரமும் நீங்கிய நிலையில், திருநாமத்தைச் சொல்லுகையில் பாகவத கைங்கர்யம் தெளிவாக ஒளிருகின்றது என்பது அவர் கூறும் கருத்தாகும். பாகவத கைங்கர்யம் செய்வதில் இறைவன் மகிழ்கிறான் என்பது ஆழ்வார்கள் கண்ட பக்தி முறைகளில் ஒன்றாகக் கொள்ள முடிகிறது.

### இ. கண்ணன் தொடர்பான சடங்குகள்–விழாக்கள்:

பக்தி என்றாலே அதனோடு வழிபாட்டு முறைகளான விழாக்கள், சடங்குகள் ஆகியன சேர்ந்தே காணப்படுவதுண்டு. வழிபாடுகள் செய்வதன் மூலமும் தமது பக்தியை வெளிக்காட்ட முடியும். தமது மனதோடு கண்டு வரும் இறைவனை வழி பாடுகள் நிகழ்த்தி மற்றவர்களுக்கும் அவ்வனுபவம் பெற வழி செய்யும் வகைகளில் இவைகள் அமைந்து வருகின்றன. அர்ச் சாவதார மூர்த்திக்குத்தான் இத்தகைய முறைகளைக் கையாண்டு மனம் மகிழ்வு பெறமுடியும் என்பது தெரிய வருகிறது.

ஸ்ரீவைஷ்ணவக் கோயில்களில் நடைபெற்று வரும் விழாக்களுள் கிருஷ்ண ஜெயந்தி விழா சிறப்பானதாகும். கோயிலின் மூலமூர்த்திக்கு விசேஷ வழிபாடுகள் நடைபெறுவதுண்டு. உற்சவ மூர்த்தியைக் கண்ணன் போல் அலங்கரித்து வீதியுலா கொண்டு வருவதுண்டு அப்பொழுது 'உறியடி' செய்து மகிழ்வர். இதற்கு 'வெண்ணெய்த் தாழி உற்சவம்' என்று பெயர் கூறப் படுகிறது. இவ்வுற்சவம் நிகழ்ந்ததற்கான கல்வெட்டு ஒன்று (கி.பி.992) ஈரோடு அரங்கநாதர் கோயிலில் கிடைக்கப் பெற்றுள்ளது. "நாலூர் திருநாராயண விண்ணகரத்திலே முதலாம் இராஜராஜன் இம்மூர்த்திக்கு இறையிலியாக நிலம் வழங்கியிருந்தான். உற்சவர் பாலகிருஷ்ணனை எழுந்தருளுவித்து இவ்வுற்சவத்தை நிகழ்த்தினார்"[16] என்ற செய்தி தெரிய வருகிறது. இன்றும் வைணவ கோயில்களில் இவ்விழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. வைணவர்கள் வீடுகளிலும் 'கிருஷ்ணாட்டமி' சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

கிருஷ்ணன் பிறந்த நாளை முன்னிட்டு, அன்றைய நாளில் உறியடி நடைபெறும். கண்ணன், இளமையில் நிகழ்த்திய நிகழ்ச்சிகளை நினைப்பூட்டும் வகையில் இவ்விழா நடந்தேறி வருகிறது. குறிப்பாக, கண்ணன் உறிமீதுள்ள வெண்ணெய் எடுத்து உண்ட செயலை நினைவூட்டுவதாகக் கூறுவர். "இதற்குச் சிக்யோத்ஸவம்" என்று பெயர் வழங்கப்படுகிறது. ஸ்ரீநாராயணக் கவி அவர்களால் இயற்றப்பட்ட ஸ்ரீகிருஷ்ண சிக்யோத்ஸவம் எனும் மகாகாவியத்தில் உறியடி விழாவின் சிறப்பு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. தஞ்சைக்கருகிலுள்ள வரகூர் எனுமிடத்தில் இவ்விழா சிறப்பாகப் பத்து நாட்கள் நடைபெற்று வருகிறது. பாகவத புராணத்தில் கூறப்படும் கண்ணன் லீலைகள் அபிநயத்துடன் நிகழ்த்திக் காட்டப்படுகிறது. இவ்விழா, ஸ்ரீதீர்த்த நாராயண சுவாமிகளால் தொடங்கப்பட்டு, பின்பு கோபால பாகவதர், ஸ்ரீகிருஷ்ண பாகவதர் முதலிய பாகவதர்களால் பஜனை முதலான நிகழ்ச்சிகளோடு கொண்டாடப்பட்டு வந்திருக் கிறது"[17] என்று கூறுவது இவ்விழாவின் சிறப்பினைக் காட்டுவ தாகும். இன்றும் வைணவக் கோயில்களில் 'உறியடி'யை மறவாது செய்து வருகின்றனர். இவ்விழாவினைப் பற்றிய குறிப்பு ஆழ்வார்கள் பாசுரங்களில் கிடைக்கப்பெறவில்லை. ஆனால், கண்ணன் பிறந்த நாளின் சிறப்பினை பெரியாழ்வார்

பாடியிருப்பது அவரது பாசுரங்கள் வழி (பெரியா. திரு. 1.2) அறியத்தக்கது.

கண்ணனோடு தொடர்புடைய நோன்பு, திருப்பள்ளியெழுச்சி ஆகியன பற்றிய செய்திகள் திவ்வியப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன.

அ. பாவை நோன்பு:

மார்கழி மாதத்தில் கன்னிப் பெண்கள் அதிகாலையில் எழுந்து, தோழியரைத் துயிலுணர்த்தி, எல்லோருமாகச் சேர்ந்து நீர்நிலைக்குச் சென்று நீராடி. வண்டல் மண்ணில் பாவையுருச் செய்து அதனைக் காத்யாயினி தேவியாகப் பாவித்து, நாட்டில் மழை பொழியுமாறும், தமக்குத் தக்க கணவன் அமையுமாறும் தேவியை வேண்டி வழிபட்டு நோன்பு மேற்கொள்ளப்படுவதால் அவ்வழிபாடு காத்யாயினி வழிபாடு, என்றும் பாவை நோன்பு என்றும் மார்கழி நோன்பு என்றும் கூறப்படுகிறது. "கன்னிப் பெண்களால் மார்கழி மாதத்தில் தொடங்கப்பெற்று அம்மாதத்து பௌர்ணமியோடு முடிக்கப் பெறும் ஒரு விரதமாகும்"[18] என்று கூறப்படுகிறது.

பண்டைக் காலத்தில் செய்து வந்த தமிழர் வழிபாடெல்லாம் தனியொருவர் வழிபாடாகாமல் சமுதாயத்தின் நலன் கருதிய வழிபாடாக இருந்திருக்கிறது கன்னிப் பெண்கள் தனியாக தன்போகத்திற்கு நோன்பு நோற்காமல் மழைக்கென நோற்கும் நோன்பாக இருந்திருக்கிறது என்பது சங்க இலக்கியங்கள் வழி அறிய வருகின்றது. தைத்திங்களில் சிறுமியர் புரிந்த நீராட்டு, சமய அடிப்படையில் நிகழ்ந்ததே என்பதும், அவ்வழிபாட்டில் பெண்கள் நுண்மணலில் பாவையுருச் செய்து அதனைத் தேவி யாக நினைத்து வழிபட்டு வந்தனர் என்பதும், நற்றிணை, புற நானூறு, அகநானூறு முதலிய நூல்களிலிருந்து அறியமுடிகிறது. பிற்சங்க நூல்களான பரிபாடல் கலித்தொகை முதலிய நூல்களில் இந்நீராடடு (தைந்நீராட்டு) ஒரு நோன்பாக வளர்ச்சி பெற்றது. ஆகவே, தைந்நீராடல் என்பது ஒரு சமயவழக்காக இருந்த தோடன்றி, சமூகத்தில் பெரு வழக்கு பெற்றிருந்தது என்பதும் புலப்படுகிறது. தைந்நீராடல் என்று குறிக்கப்படும் அந்நீராட் டினை மார்கழியில் நிகழ்வதாகவும் பரிபாடல் கூறுகிறது. எனவே, மார்கழித் திங்கள் தொடங்கி தைத்திங்கள் வரை நடைபெற்ற தாகவும் அறிய வருகிறது. ஆகவே, சங்க காலத்தில், தைந்

நீராடல் என்பது சமூக வழக்கில் இருந்ததென்பதும். அதை யொட்டி மார்கழி மாதத்தில் மகளிர் நோன்பு நோற்றனர் என்பதும் ஈண்டு சுருக்கமாக நினைத்தற்பாலது.

வடமொழியிலுள்ள பாகவத புராணத்துள் பாவை வழிபாடு பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. (பாகவதம். 22-ஆம் அத்தியாயம்) மார்கழி மாதத்தில், கன்னிப் பெண்கள் காத்யாயினி நோன்பு நோற்றனர். கோகுலத்துப் பெண்கள், அதிகாலையில் எழுந்து, யமுனைத்துறையில் நீராடி, அங்குள்ள ஈரமணலில் காத்யாயினி தேவியின் உருவத்தை அமைத்து அதற்குச் சந்தனம் பூசி, மலரும் தளிரும் சூடி, பழங்கள் வைத்து பூசைசெய்து வழிபட்டுவந்திருக்கின்றனர். அப்பெண்கள், தங்கள் தோழியர்களை அவர்களின் வீடுகளில் சென்று, துயிலுணர்த்தி அழைத்துக் கொண்டு, கண்ணன் சரிதங்களைப் பாடிக்கொண்டு இத்தகைய வழிபாடு செய்து வந்தனர். காத்யாயினை வழிபட்டு, கண்ணனைத் தமக்கு நாயகனாகத் தந்தருளுமாறு வேண்டி நோன்பு நோற்றதாகப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது. இங்கு,அப்பெண்கள் பாவை நோன்பு நோற்றதாகக் குறிப்பிடப் படுகிறது, கண்ணனை மையமாக வைத்தே, அவனுக்குச் சிறப்பளிக்கும் வகையில் பாவை வழிபாட்டைக் கூறிச் செல்வதைப் பார்க்கும் பொழுது,துவாபர யுகத்தில் காத்யாயினி வழிபாடான தேவி வழிபாட்டில் கண்ணன் வழிபாடு கலந்து விட்டமை அறிய வருகிறது.

இவ்வாறு,கோகுலத்துப் பெண்கள் பாவை நோன்பு நோற்று, அதன் பயனாகக் கண்ணனை அடைந்து மகிழ்ந்த செய்தியை ஆண்டாளும் அறிந்திருந்தாள். அதன் விளைவாக, தானும் பாவை நோன்பு நோற்கத் தலைப்பட்டாள். அச்சூழலில் அவள் பாடியதே 'திருப்பாவைப் பனுவலாகும். ஆண்டாள் கண்ணனை மணாளனாகஅடைவதற்கு நிமித்தமாகக் காத்யாயினி நோன்பை நோற்க முற்பட்டாளாயினும், அவளது உள்ளம் முழுதும் கண்ணன்பால் ஒன்றிவிட்ட காரணத்தால் அவனையன்றி,வேறெந்தத் தெய்வத்தையும் அவள் நினைக்கவோ பாடவோ இயலாதவளாகி விடுகிறாள்.இந்த வகையில்ஆண்டாள் பாகவதத்தில் கூறப்பட்ட கோபியர்களை முற்றிலும் ஒத்து இருக்கிறாள். ஆகவே, பாவை நோன்பு என்ற பெயரில் அவள் முழுக்க முழுக்கக் கண்ணனையே வழிபடுகிறாள். இதனால்

திருப்பாவை காத்யாயினி வழிபாடாகவன்றிக் கண்ணன் வழிபாடாகவே மாறியுள்ள புதுமைக் காண முடிகிறது.

பாகவதத்தில் கன்னியர் செய்த பாவைவழிபாட்டு முறைகள் திருப்பாவையில் கூறப்படவில்லை. மார்கழி நீராடுவதற்காகத் தோழியரை அழைப்பதும், துயிலெழுந்து வாராதாரை அவர்கள் வீட்டு வாயிலிற் சென்று துயிலுணர்த்துவதும். பின்பு எல்லோரும் சேர்ந்து கண்ணனது திருமாளிகை வாயிலை அடைந்து அவனது புகழைப் பாடுதலும், வாழ்த்துதலுமான செய்திகளையே பாடியிருத்தல் நோக்கத்தக்கது. ஆனால்; பாசுரங்களின் ஈற்றில் வரும் 'எம்பாவாய்' என்ற தொடர், இடையே வரும் 'பாவைக்குச் செய்யும் கிரிசைகள்' (2), 'பாவைக்குச் சாற்றி நீராடினால் (3); பாவைக்களம் (13) என்னும் இத்தொடர்கள், ஆண்டாள் பாவை நோன்பு நோற்க எண்ணியிருக்கிறாள் என்பதை மட்டும் நமக்கு நினைப் பூட்டுவனவாக உள்ளனவே தவிர காத்யாயினி திருப்பெயர்களோ அத் தேவி, அடியவர்களுக்குப் புரிந்த அருட்செயல்கள் பற்றியோ திருப்பாவைப் பாசுரங்களில் சுட்டப்படவில்லை என்பது மனதிற் கொள்ளத்தக்கது.

கோகுலத்தில் கோபியர்கள் பாவை நோன்பு நோற்றதும் அவர்கள் கண்ணனுடன் சேர்ந்து இன்புற்றதும் ஆகிய செய்திகள் முதுபெண்டிர் வாயிலாகவும், புராணத்தின் மூலமாகவும் அறிந்திருந்த ஆண்டாள் அவையாவும் காலம் கடந்த நிகழ்ச்சிகள் என்பதை எண்ணினாள். இருப்பினும். ஆண்டாள் தான் வாழ்ந்து வரும் காலத்தைக் கடந்து கண்ணன் வாழ்ந்த துவாபர யுகத்திற்கும், கோகுலத்திற்கும் சென்றுவிடுகிறாள். இதனால், ஸ்ரீவில்லிபுத்தூரை திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களைக் கோகுலத்துக் கோபியர்களாகவும் தன்னை அவர்களில் ஒருத்தியாகவும்,வட பத்திர சாயியைக் கண்ணனாகப் பாவனை செய்து கொண்டும், அவனை அடைய மேற்கொள்ளும் அனுபவமே இப்பாவை நோன்பு அனுபவமாகும்.

தான் நோன்பு நோற்பதோடன்றி, மற்ற பெண்களுக்கும் உபதேசிப்பதாகவும் இவை அமைந்துள்ளன. இதற்குப் பாவை நோன்பு நோற்கும் முறைகளையும், அதனால் எய்தும் பலன் களையும் திருப்பாவையின் முதற் பகுதியில் உணர்த்தியிருப்பது

அறியத்தக்கது. கண்ணனை வழிபடுதலால் ஏற்படும் பயன்களை ஆங்காங்கே குறிப்பிட்டு காட்டியிருக்கிறாள்.

> 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
> நீராடப் போதுவீர்! (திருப்.1)

என்று, மார்கழியின் நன்னாளில் ஆண்டாள் தன் தோழியரை நீராட அழைப்பதாகத் தொடங்குகிறாள்.

பெண்களை மட்டும் அழைக்காது, உலகத்து மக்களையும் அழைத்துப் பாவை வழிபாட்டில் தாம் செய்யும் கிரியைகளைக் கேளீரோ (2) என்று சொல்லி அழைப்பதும் இதன்பாற்படும். இப்பாசுரத்தில் ஆண்டாள் கூறும் நோன்பு – ஒழுக்க முறைகள் செய்யத்தகுவன மற்றும் தவிர்க்கத்தகுவன என்ற இருமுறை களில் அமைந்துள்ளன.

> "... நாமும் நம் பாவைக்குச்
> செய்யும் கிரிசைகள் கேளீரோ; பாற்கடலுள்
> பையில் துயின்ற பரமன் அடிபாடி" (திருப். 2)

என்று செய்யத்தகுவன பற்றிக் குறிப்பிட்டுள்ளாள். அடுத்து,

> "நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
> மையிட்டு எழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
> செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்று ஏதோம்
> ஐயமும் பிச்சையும் ஆம்தனையும் கைகாட்டி
> உய்யுமாறு எண்ணி உகந்து ஏலோர் எம்பாவாய்!"
> (திருப். 2)

என்ற அடிகளில் நோன்பு நோற்கும் காலத்தில் தவிர்க்க வேண்டியன பற்றி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

நோன்பால் எய்தும் இம்மைப் பயன்களை வையகத்து வாழ்வார்களுக்கு எடுத்துரைப்பதும் ஈண்டு கூறத்தக்கது.

> "நாங்கள் நம்பாவைக்குச் சாற்றிநீராடினால்
> தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து"
> (திருப். 3)

என்று கூறியதோடு, நாட்டில் எல்லா வகையான வளங்களும் பெருகி மக்களின் வாழ்வு தழைக்கும் என்பதனையும் இப்பாசுரத்தில் உணர்த்தியுள்ளார்.

ஆண்டாள் நோன்பு நோற்கும் முறையையும் அதன் மறுமைப் பயன்களையும் கூறியிருப்பது வழிபாட்டு நெறிகளைக் குறிப்பிடுவதாகக் கொள்ளமுடிகிறது. நோன்பு நோற்கும் பொழுது உடல் தூய்மை, உள்ளத் தூய்மையுடனிருந்து இறைவனை மனமொழி மெய்களால் வழிபட வேண்டும் என்பதனைக் (திருப். 5) குறிப்பிடுகிறாள். வாயினால் பாடியும் கையால் அவன் திருவடிகளில் மலர் தூவியும் வழிபட்டால், நாம் அறியாமல் செய்துவிட்டனவும், இனிமேல் செய்யக் கூடியனவு மாகிய வினைகள் அனைத்தும் அகன்றுவிடும் என்பதனையும் வலியுறுத்திக் கூறியுள்ளாள். இவ்வாறு, கண்ணனிடம் வரம் வேண்டுவதாக ஆண்டாள் பாடியிருப்பதும் அறியத்தக்கது (திருப். 29)[19] கண்ணனுக்கு ஆட்செய்யும் பேற்றை இவ்வொரு பிறவிக்காக மட்டுமன்றி, ஆன்மாக்கள் எடுக்கின்ற ஏழேழ் பிறவிகளிலும் கண்ணனுக்குக் குற்றேவல் செய்யும் பேற்றை வேண்டுவதாக அப்பாசுரம் அமைந்துள்ளது. ஆண்டாள் வேண்டும் பேறு மற்றும் நோன்பு தனக்காகவோ தன்னுடன் பாவை நோன்பு நோற்கும் கோபியர் சார்பாகவோ மட்டும் வேண்டாமல், வையத்து வாழ்பவர் அனைவர் பொருட்டும் வேண்டுவதாக இப்பாசுரத்தைக் கொள்ளல் வேண்டும். கண்ணனுக்குக் குற்றேவல் புரிந்து கடைத்தேறும்படி ஆண்டாள் உலகோர் அனைவருக்கும் அறிவுறுத்துகிறாள்.

இவ்விதமாக ஆண்டாள் உபதேசித்துள்ள பாவை நோன்பானது துவாபர யுகத்திலும் நோற்கப்பட்டு வந்துள்ளது என்பதனைப் பார்க்கையில், இந்நோன்பு அத்தகைய பழமை யுடையது என்பது புராணத்தின் வழி புலனாகிறது. இதன் சிறப்பினை அறிந்த ஆண்டாள் கண்ணனை அடைய நோன்பு நோற்க முற்பட்டதன் விளைவு 'திருப்பாவை'-யின் மூலம் அறிய வருகின்றது. "மார்கழி நோன்பானது பெரியோர்களால் தேர்ந்து அனுஷ்டிக்கப்படுவதாக பெரியவாச்சான் பிள்ளை உரையில் கூறப்பட்டுள்ளது. இதனால், மார்கழி நோன்பு, வேதத்துள் விதிக்கப்பட்டிலது என்றும், ஆன்றோர்களால் நெடுங்காலமாக அனுஷ்டிக்கப்பட்டு வரும் சிறப்புடையது"[20] என்றும் கூறப்படுகிறது. இதனால், ஆண்டாள் மார்கழி நீராடுதலை "மேலையார் செய்வனகள்" (26) என்று குறிப்பிட்டுள்ளது இதன்பாற்படும். இத்தகைய சிறப்பு வாய்ந்த

ஆண்டாளின் திருப்பாவையை, வேதத்திற்கு மேலாக வைணவர்கள் மதிக்கின்றனர். இராமானுஜர் நாள்தோறும் திருப்பாவை ஓதி வந்தமையால், அவருக்குத் 'திருப்பாவை ஜீயர்' என்ற பெயர் ஏற்பட்டதும் இதன் சிறப்பைக் காட்டுகிறது.

இவ்வாறு, தொன்றுதொட்டு இருந்து வந்த பாவை நோன்பில் கண்ணன் வழிபாடு கலந்து விட்ட கருத்து ஆண்டாளின் திருப்பாவை மூலம் வெளிக் காட்ட முடிகிறது. கன்னிப்பெண்கள் பாவை நோன்பு நோற்கும் வழக்கம் இந்நாளில் பெரும்பாலும் மறைந்து விட்டபோதிலும், வைணவர்கள் திருப்பாவையை நாளுக்கொரு பாசுரமாக மார்கழி மாதம் முழுவதும் ஓதி வருவது கண்ணன் வழிபாட்டை உணர்த்துவதாகக் கூறலாம்.

**ஆ. திருப்பள்ளியெழுச்சி:**

இறைவனுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடிய பெருமை தொண்டரடிப் பொடியாழ்வாரைச் சாரும். பாவை நோன்பு, தூங்கும் பெண்களை எழுப்பி, இறையருளைப் பெற மேற்கொள்ளும் முறையைக் காட்டுகிறது. ஆனால், திருப்பள்ளி யெழுச்சி என்பது அரங்கநாதனை எழுப்பும் முறையைக் காட்டுகிறது.

சங்க காலத்தில் உறங்குகின்ற அரசனை அதிகாலையில் துயிலெழுப்புகின்ற முறையானது, பக்தி இயக்கக் காலத்தில் இறைவனை எழுப்புவதாக அமைந்து விட்டது உறங்கி எழும் மாந்தர் வைகறைத் தொழுதெழு எனும் முறையில் இறைவனைத் தொழுது எழுதல் இன்றியமையாததாகலின் அவன் அருளாலே அவன் தாள் வணங்கித் துயிலெழும் வழிபாட்டு நெறிமுறையினை மாந்தர்க்கு அறிவுறுத்தும் நோக்கத்துடன் ஆழ்வாரால் உணர்த்தப்பட்டது "திருப்பள்ளியெழுச்சி" என்ற பகுதியாகும்.

'அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே' என்று ஒவ்வொரு பாசுர இறுதியிலும் பாடி முடிக்கிறார். எல்லாச் சன்னதிகளிலும் வழிபடப்படும் திருப்பள்ளியெழுச்சி இது ஒன்றே ஆகும் என்று கூறப்படுகிறது. திருமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு நான்தோறும் வைகறையில் 'சுப்ரபாதம்' பாடுவது போன்று, ஒவ்வொரு வைணவக் கோயிலிலும் இத்திருப்பள்ளியெழுச்சி பாடவேண்டிய ஒன்றாகும் என்பதனை வலியுறுத்துக் கூறவே,

இப்பகுதி அமையப் பெற்றுள்ளது. சமுதாயத்தில் பெண்களை எழுப்பிய முறை போல, பக்தி காலத்தில் இறைவனை எழுப்புதல் சிறந்தது என்பதனை உபதேசித்து அருளியிருப்பது அறியத்தக்கது.

ஆண்டாளின் திருப்பாவையில் கண்ணனைத்துயிலுணர்த்தும் பாசுரங்களும் பள்ளியெழுச்சிப் பாடல்கள் என்று கூற இடமுள்ளது. ஆண்டாளின் பாசுரங்கள் சில (16–23) துயிலெழுப்பும் செய்திகளைக் குறிக்கின்றன. துயிலுணர்ந்து, ஒன்றாகக் கூடிய தோழியர் பின்னே வர, கண்ணனுடன் லீலைகள் புரிந்து மகிழும் ஆர்வத்துடன், ஆண்டாள் அவனையும் துயிலுணர்த்தி நீராட அழைத்துச் செல்ல எண்ணி அவனது திருமாளிகை நோக்கிப் புறப்பட்டு செல்வதாகப் பாசுரங்கள் அமைந்துள்ளன. அவ்வாறு, கண்ணனை எழுப்பிய முறையும் திருப்பள்ளியெழுச்சியைக் குறிக்கிறது. ஆகவே திருப்பள்ளி யெழுச்சி பாடிய சிறப்பு ஆண்டாளுக்கும் உண்டென்பது இங்கு நினைத்தற்பாலது.

**கண்ணனோடு தொடர்புடைய திவ்விய தேசங்கள்:**

வைணவத் திருப்பதிகள், ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்றவை நூற்றி எட்டாகும். திவ்வியப் பிரபந்தத்தில், கண்ணனோடு தொடர்புடைய தலங்கள் பற்றியும் ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்திருப்பது தெரிய வருகிறது. வழிபாட்டு நெறிகள் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றின் சிறப்பும் அடங்குகிறது. இம்மூன்றையும் முறையே அறிந்து கோவிலுக்குச் சென்று வழிபட்டு வரவேண்டும்[21] என்பது முன்னோர் கண்ட விதியாகும். இம்மூன்றும் உள்ள தலம் சிறப்பிற்குரிய தலமாகக் கருதப்பட்டும் வருகிறது. இதனை அடியொற்றியே ஆழ்வார்கள் அர்ச்சாவதாரத்தில் வழிபாட்டு நெறிகளை உணர்த்தியிருக்கக் காணமுடிகிறது. கண்ணன் எழுந்தருளியுள்ள தலங்களும் இம்மூன்றின் சிறப்பினை எடுத்துக்காட்டுவனவாக அமைந் துள்ளன என்பதனையும் ஆழ்வார்களே சுட்டிக்காட்டியுள்ளனர். திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்கள் தலங்களின் சிறப்பினை எடுத்துரைப்பனவாக அமைந்திருக்கக் காணமுடிகிறது. மற்ற ஆழ்வார்கள் கண்ணனின் திருத்தலப் பெயர்களைச் சுட்டிக் காட்டியுள்ளனரே தவிர தலச்சிறப்பினையும், அத்தலத்தினைத் தொழுவதால் ஏற்படும் பயன்களையும் எடுத்துக் கூறவில்லை என்பதும் ஈண்டு நினைக்கத்தக்கது. திருக்கோவிலூர்[22]

திருக்கண்ணபுரம்,[23] திருக்கண்ணங்குடி,[24] திருக்கண்ணமங்கை[25] ஆகியவற்றில் திருமங்கை ஆழ்வார் தலம், தீர்த்தம் மூர்த்தி ஆகிய மூன்றின் சிறப்பினை எடுத்துக்கூறிய தோடன்றி, இவற்றை வழிபடுவதால் ஏற்படும் பலன்களையும் உணர்த்தியிருக்கிறார். இத்தலங்களோடு ஆய்ப்பாடி, வடமதுரை, பிருந்தாவனம், துவரை, திருவதரி ஆகிய தேசங்களும் கண்ணனோடு தொடர்புடையனவாகும். இவைகள் வட நாட்டுத் திருத்தலங்களாகும். ஆனால் இத்தலங்களின் பெயரோடு கண்ணன் சிறப்பு கொடுக்கப்பட்டுள்ளதே தவிர தலச்சிறப்பு கூறப்படவில்லை.

இத்தலங்களுக்கு. நம்மாழ்வார் தவிர, மற்றைய ஆழ்வார்கள் ஆங்காங்கு நேரில் சென்று மங்களாசாசனம் பாடியுள்ளனர் என்று கூறப்படுகிறது. ஆகவே, ஆழ்வார்கள் உணர்த்தும் வழிபாட்டு நெறிகளுள், திவ்விய தேசங்களை வழிபடுவதும் பிரபத்தி மார்க்கத்தில் அடங்கியதே என்பதனை உணர்த்திக் காட்டியும், அத்தேசங்களுக்குச் சென்று வழிபாடு செய்யுங்கள் என்பதனை உபதேசித்தும் உள்ளது அறியத்தக்கது. இவற்றைத் தவிர, மற்ற தேசங்களில் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதார மூர்த்திகளைக் கண்ணனாகக் கண்டு அனுபவித்திருப்பதைத் திவ்வியப் பிரபந்தம் முழுவதும் பரக்கக் காணமுடிகிறது. ஆழ்வார்கள் கண்ணனை எவ்வகையெல்லாம் அனுபவிக்க முடியுமோ அந்த வகைகளிலெல்லாம் அனுபவித்து ஆழங்கால் பட்டிருந்தனர் என்பது இந்த வழிபாட்டு நெறிகள் உணர்த்தும் வகையிலிருந்து அறிய முடிகிறது.

## ஆழ்வார்கள் காட்டும் கண்ணன் - நாராயணன்:

ஆழ்வார்கள், பல திருத்தலங்களிலுள்ள அர்ச்சாவதார மூர்த்திகளை மங்களாசாசனம் செய்தருளும் பொழுது, அம்மூர்த்தியானது ஆழ்வார்களுக்கு இராமன், வராகன், நரசிங்கன், கண்ணன் என்ற வடிவங்களில் காட்சி கொடுத்திருக்கின்றது. அவ்வுருவங்களை தம் பக்தியால் கண்ட ஆழ்வார்கள், அவ்வவதாரங்களின் பெருமைகளை பாடி மகிழ்ந்துள்ளனர். குறிப்பாக,கண்ணன் அவதாரத்தின் பெருமைகளை அதிகமாகப் பாடி ஆழங்கால்பட்டு அனுபவித்துள்ளது அவர்கள் அருளிய பாசுரங்களிலிருந்து அறியவருகின்றது.

ஆழ்வார்கள் கண்ட அர்ச்சாவதார மூர்த்திகள் அவர்களுக்குக் கண்ணனாகக் காட்சி கொடுத்திருக்கின்றன. இதற்குப் மகா

பாரதம் மற்றும் புராணங்களின் தாக்கமே காரணமாகும். மேலும், கண்ணன் வழிபாடு மிகுந்த செல்வாக்கு அடைந்திருந்த காரணத்தாலும் கண்ணனது பெருமைகளை நன்கறிந்திருந்த தாலும் கண்ணனைப் பரம்பொருளாகவே கண்டிருக்கின்றனர். கண்ணனை ஒரு அவதாரமாகக் கூறப்பட்டிருப்பதைவிட நாராயணனாகவே - மாபெருந் தெய்வமாகவே பாடிப் பரவி யிருப்பது தெரிய வருகிறது. காரணம், கண்ணனது அழகில், திருவிளையாடல்களில் ஆழ்ந்து அனுபவித்து இருப்பதே இவ்வாறு பாடச் செய்துள்ளது என்று கூறலாம். மக்களுக்கு வழிபாட்டு நெறிகளை உணர்த்தியதோடன்றி, கண்ணனை நாராயணனாகக் குறிப்பிட்டுக் காட்டியும் உள்ளனர் என்பதற்குப் பாசுரங்களே சான்றுகளாகும். ஆழ்வார்களின் இந்த கண்ணன் பக்தியே இராமனுஜரையும் கவர்ந்துள்ளது. அதனால் எல்லாவற்றையும் கண்ணனுக்கே அர்ப்பணம் செய்திருக்கிறார் என்பதனை,

"சேமநல் வீடும் பொருளும் தருமமும் சீரியநற்
காமமும் என்றிவை நான்கென்பர்; நான்கினும்
கண்ணனுக்கே
ஆமது காமம் அறம் பொருள் வீடிதற்சென்றுரைத்தான்
வாமனன் சீலன் இராமனுசனிந்த மண்மிசையே"
(இராம. நூ. 40)

என்றடிகள் உணர்த்துகின்றன. ஆழ்வார்களின் கண்ணன் பக்தி இராமனுசரைக் கவர்ந்துள்ளது போல வட மாநிலங்களிலும் செல்வாக்குப் பெற்று இன்று உலகம் முழுவதிலும் பரவுவதற் கான வித்தாக அமைந்திருக்கிறது.

எல்லா உலகங்களையும் படைத்தவனாக-எல்லாப் பொருள் களையும் படைத்தவனாக - பஞ்சபூதங்களும் ஆனவனுமாக - ஆன்மாக்கள் அனைத்துள்ளும் உள்ளுறைபவனாகக் கண்ணன் இருக்கிறான் என்ற தத்துவத்தை ஆழ்வார்கள் குறிப்பிட்டுக் காட்டியுள்ளனர்.

"காக்கு மியல்வினன் கண்ணபெருமான்
சேர்க்கை செய்ததன் னுந்தி யுள்ளே
வாய்த்த திசைமுக விந்திரன் வானவர்
ஆக்கி னான் தெய்வவிலகுகளே"
(நம்.தி வா.மொ. 2.2.9)

என்ற பாசுரமும்,

"திசையும் திசையுறு தெய்வமும் தெய்வத்
திசையுங் கருமங்களெல்லாம் – அசைவில் சீர்க்
கண்ணன் நெடுமால் கடல்கடைந்த காரோத
வண்ணன் படைத்த மயக்கு" (பொய்.மு தி 7)

என்ற பொய்கையாழ்வார் பாசுரமும் ஸ்ரீபிரம்ம வைவார்த்தகப் புராணத்தோடு ஒப்பு நோக்கத்தக்கதாகும். பஞ்சபூதங்களுமாய்க் கண்ணன் இருக்கிறான் என்பதனை நம்மாழ்வார் குறிப்பிடுவதும் (நம். தி. வா. மொ. 3.6.5) இங்கு நினைக்கத்தக்கது. மேலும், ஆன்மாக்கள் அனைத்துமாக கண்ணன் இருக்கிறான் என்ற கருத்துடைய நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரம் (3.4) பாகவத புராணத்தின் கோட்பாட்டை ஈண்டு நினைப்பூட்டு வதாக உள்ளது. நம்மாழ்வாரின் கண்ணன் பக்தியானது, பித்தேறிய நிலையில் அமைந்திருப்பது போல தோன்றுகிறது. காரணம், கண்ணன் எங்கும் உள்ளான் (நம் தி.வா.மொ. 2.8.8) என்றும், கண்ணனைத் தவிர வேறு தெய்வமில்லை என்றும் சுட்டிக்காட்டியுள்ளார். ஆகவே, கண்ணன் ஊர் பரமபதமாகும்; கண்ணனே வைகுண்டபதியாகும்;கண்ணனே நாராயணனாவான்; என்பது நம்மாழ்வாரின் கோட்பாடாக இருக்கிறது என்று கூறுமளவிற்குக் கண்ணனை அனுபவித்து,அவனது பெருமைகளை மக்களுக்கு எடுத்துரைத்து வழிகாட்டியுள்ளார்.

திருமங்கை ஆழ்வார் கண்ணனை நாராயணனாகக் கருதி 'நமோ நாராயணா' என்ற நாமத்தினைப் பாடி அவனருளைப் பெற வழிகாட்டியிருப்பது (பெரிய.திரு.மொ.6.10) இங்கு நினைக் கத்தக்கது.

ஆயர்களின் பிள்ளையாய்ப் பிறந்த கண்ணனே இராமனாகவும் நரசிங்கனாகவும், வராகனாகவும் காட்சி தருகிறான் என்பதனைச் சுட்டிக் காட்டியுள்ளனர்.[26]

திருவேங்கடத்திலும் திருவரங்கத்திலும் எழுந்தருளி யிருப்பவன் கண்ணனே என்பதனை ஆழ்வார்களின் பாசுரங்கள்[27] குறிப்பிட்டுக் காட்டியுள்ளன.

இத்தகைய சிறப்புக்களும் பெருமைகளும் கொண்ட கண்ணனே நாராயணன் – மாபெருந்தெய்வம் – அவனைத் தவிர வேறு தெய்வமே இல்லை என்ற கருத்தினை மக்களுக்கு உணர்த்தியிருப்பது. தெரியவருகிறது.

"..........ஆலிலைச் சேர்ந்த வெம்
பெருமா மாயனை யல்லது
ஒருமா தெய்வம் மற்றுடையமோ யாமே"

(திருவாசி.7)

"நிறுத்திநும் உள்ளத்து கொள்ளும் தெய்வங்களும்
மையுய்யக் கொள்
மறுத்து மவனோடே கண்டீர் மார்க்கண்
டேயனும் கரியே
கறுத்த மனமொன்றும் வேண்டா கண்ணனல்
லால் தெய்வமில்லை
இறுப்பதெல் லாமவன் மூர்த்தியாயவர்க் கேயிறுமினே"

(நம்.தி.வா.மொ. 5.2.7)

என்று கண்ணனை நாராயணனோடு இணைத்துக் கருதியது புலப்படுகிறது. நாராயணனின் மேன்மைகளை அறிந்திருந்த முன்னோர்கள் (ரிஷிகள்) அப்பெருமைகளைக் கண்ணனிடத்தும் கண்டு மகிழ்ந்திருக்கின்றனர். அதனால் கண்ணனை நாராயணனாகவே கண்டு வழிபட்டிருக்கின்றனர் என்பதற்கு மகாபாரதம் நாராணீயப் பகுதியைச் (சாந்தி பருவம்) சான்றாக கொள்ளலாம். "இத்தை வேதங்களும் ருஷிகளும் ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் விரும்பினார்கள்" (முமுட்சு.13) என்ற முமுட்சுப்படி கருத்தும் இதனை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது.

தொகுப்புரை:

ஆழ்வார்கள் கண்ணனை பல்வகைகளில் அனுபவித்துள்ளதன் விளைவு மக்களுக்கு வழிபாட்டு நெறிகளாக உணர்த்தியுள்ளனர். இறைவனிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொள்ளும் சரணாகதி மார்க்கத்தையும் பக்தியையும் உணர்த்தி அவனருளைப் பெற வழிகாட்டியுள்ளனர்.

மனிதனாகப் பிறப்பெடுத்த ஒவ்வொருவரும் இந்த பிரபத்தி மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதே சிறந்தது என்பதனை வலியுறுத்திக் காட்டியுள்ளனர். குறிப்பாக அர்ச்சாவதாரத்திலே பிரபத்தி செய்வது தான் மனிதப்பிறவியின் பயன் என்றும் சுட்டிக் காட்டியுள்ளனர். பக்தி நெறிகளை எல்லாராலும் பின்பற்ற இயலாது என்பதால், இந்தப் பிரபத்தி மார்க்கத்தைச்

சிறப்பாக எடுத்துக் காட்டியுள்ளது திவ்வியப் பிரபந்தம் முழுவதிலும் பரக்கக் காண முடிகிறது.

பக்தி நெறிகளில் பூசை, வழிபாடு என்பன போன்ற செயல்கள் புறச்செயல்களாக - புற வழிபாடாக அமைகின்றன. கண்ணனது அருளைப் பெறவும், திருவடிப் பயனை எய்தவும், வழிபாடு செய்யும் முறைகள் பற்றியும் உணர்த்தியுள்ளனர். கலியுகத்தில், கண்ணனது திருநாமங்களை ஓதுவதாலும், அவனது பெருமைகளைப் பாடுவதாலும் ஏற்படும் பயன்களைச் சிறப்பாக எடுத்துரைத்துள்ளதும். நோக்கத்தக்கது. கண்ணனின் பல்வகைப் பெயர்களின் சிறப்பினை எடுத்துரைத்துள்ளதும் அறியத்தக்கது. கண்ணனின் பெயர்களைத் தம் குழந்தைகளுக்கு இடுவதால் ஏற்படும் பயன்களை எடுத்துக் கூறி அறிவுறுத்தியுள்ளனர்.

பக்தி முறைகளில் பகவத் பக்தி, பாகவத பக்தி இரண்டின் சிறப்பினை ஆழ்வார்கள் விளக்கியுள்ளனர். குறிப்பாக, பிரபத்தி மார்க்கத்தில் இவ்விரண்டு வழிகளும் அடங்குகின்றன. பகவத் தொண்டு (இறைத் தொண்டு) செய்து இறையருள் பெற்றதை பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் முதலியோர் களின் அனுபவமே காரணமாக அமைகின்றது. அதனால் தான் பகவத் தொண்டினை வலியுறுத்திக் காட்டியிருப்பது அறிய வருகின்றது.

பகவத் தொண்டினை விட பாகவத கைங்கரியமே (அடியவர்த் தொண்டு) சிறந்தது என்பது வைணவக் கொள்கை களுள் ஒன்றாகும். இறைவனுக்கு அடியவராக இருப்பதற்குக் குலம் தேவையில்லை. இறையன்பு கொண்டவர்கள் அவனருளைப் பெற முடியும், என்பதனை ஆழ்வார்களின் வாழ்க்கைப் பின்னணியே உணர்த்துகின்றது. அடியவர்களின் சிறப்புக்களை ஆழ்வார்களே எடுத்துரைத்துள்ளனர். அவர்களை நிந்திப்பதால் ஏற்படும் தீமைகளையும் உணர்த்தியுள்ளனர். ஆகவே பிறப்பு, குலம் என்ற வேறுபாடு காணாது, இறைபக்தி உடையவர்கள் எவராயினும் அடியவர்கள் என்று கொண்டு அடியவர்களிடத்து அடியவர்களாக இருந்து தொண்டுள்ளம் காட்டுவதே சிறந்த பாகவத பக்தியாகும் என்பதனைப் புலப்படுத்தியுள்ளனர், ஆகவே, பகவத் பக்தியின் உறுதியைப்

பாகவத பக்தியே உறுதிப்படுத்துகிறது என்று வழிகாட்டி யுள்ளனர்.

கண்ணனுக்கென்று கொண்டாடிவரும் கிருஷ்ண ஜெயந்தி திருவிழா பற்றியும், உறியடி உற்சவம் பற்றியும் இவ்வழிபாட்டு நெறிகள் உணர்த்துகின்றன. கோயில் வழிபாட்டினைக் குறிப்பதாக அமைகிறது. கண்ணனை அடைய – அவனருளைப் பெற பாவை நோன்பு பற்றிய விளக்கங்களை ஆண்டாள் பாசுரங்கள் கொண்டு விளக்கப்பட்டுள்ளன. பாகவத புராணத்தில் கூறப்பட்ட காத்யாயினி வழிபாடு, சங்க கால சமூகத்தில் வழக்கிலிருந்து வந்த பாவை நோன்பு ஆகிய இரண்டினைப் பற்றியும் ஆண்டாள் அறிந்திருத்தலின் விளைவு, அவள் கண்ணனோடு ஒன்றுசேர பாவை நோன்பினை மேற்கொண்டிருக் கிறாள். ஆண்டாளது பாவை நோன்பானது கண்ணனைத் துதிபாடுதலையே மையமாகக் கொண்டு அமைந்துள்ளது. காத்யாயினி வழிபாடு – பாவை நோன்பில் கண்ணன் வழிபாடு கலந்து விட்டதை அறிய முடிகிறது. அந்நோன்பினை மேற் கொள்ளும் முறைகளையும், அதனால் ஏற்படும் பலன்களையும் எடுத்துக்கூறி, உலகத்து மக்களை ஆற்றுப்படுத்துவதாக அறிவுறுத்துவதாக ஆண்டாள் பாசுரங்கள் அமைந்துள்ளன.

ஆழ்வார்கள் இத்தகைய வழிபாட்டு நெறிகளை உணர்த்திய தோடன்றி தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூன்றின் சிறப்பினையும் வழிபாட்டு நெறிமுறைகளாகக் குறிப் பிட்டுள்ளனர். கண்ணன் உறைந்திருக்கும் திவ்விய தேசங்களை மங்களாசாசனம் செய்துள்ளமை இதைக்காட்டுகிறது.

இவ்வாறு. ஆழ்வார்கள் கண்ணனைத் தாம் அனுபவித்து ஆழங்கால் பட்டதோடன்றி, உலகத்து மக்களையும் அவனருளைப் பெற அழைப்பதாகவும் நெறிப்படுத்துவதாகவும் அவர்கள் உணர்த்திய வழிபாட்டு நெறிகள் அமைந்துள்ளன.

## அடிக்குறிப்புக்கள்

1. அ. இமயம் என்பது அகிம்சை, சத்தியம், திருடாமை, காமத்தை அடக்குதல், பொருளைச் சேர்க்க முற்படாமை.

   ஆ. நியமம் என்பது, தூய்மை, உள்ளத்தைக் கொண்டு மனநிறைவு பெறுதல், விரதம், தவம் முதலியன செய்தல், எல்லாச் செயல்களையும் இறைவனிடம் ஒப்படைத்தல்.

   இ. ஆசனம் என்பது, பதுமாசனம் முதலிய ஆசனங்கள்.

   ஈ. பிராணாயாமம் என்பது மூச்சையடக்குதல்.

   உ. பிரத்தியாகாரம் என்பது புலன்களை உலக விஷயங் களினின்றும் திருப்புதல்.

   ஊ. தாரணை என்பது இறைவனுடைய திருமேனியை மனத்திற் கொள்ளுதல்.

   எ. தியானம் என்பது இடைவிடாது இறைவனை நினைத்தல்.

   ஏ. சமாதி என்பது இறைவனை நேரில் கண்டாற் போன்ற நிலையினை அடைதல் (ந. சுப்புரெட்டியார்., முக்தி நெறி., ப. 94.)

2. ந. சுப்புரெட்டியார்., முக்தி நெறி., ப. 95.
3. ப. அருணாசலம்., வைணவ சமயம்., ப. 54.
4. தெ. பொ. மீ. மணி விழா மலர்., ப. 88.
5. இந்திரா பார்த்தசாரதி., தமிழிலக்கியங்களில் வைணவம்., ப. 180.
6. "ஈரிருபதாஞ் சோழ மீரொன்பதாம் பாண்டி
   யோர் பதின் மூன்றாமலை டோரிரண்டாஞ் – சீர்நடுநா
   டாறோ டீ ரெட்டுத் தொண்டை யவ் வட நாடாறிரண்டு
   கூறு திரு நாடொன்றாக் கொள்" (அஷ்ட. நூற்றி. 6)
7. உ. வே. வேங்கடாசாரியார் சுவாமிகள்., சைவமும் வைணவமும்., ப. 237.
8. ஸ்ரீவசன., சூ.எ. 251, 252., பக். 135 – 136.

9. "சேராத காதல் பெருஞ்சுழிப் பால், தொல்லை
மாலையொன்றும்
பாராதவனைப் பல்லாண்டு என்று காப்பிடும்
பான்மையான்"
(அஷ்ட. இராமா. 15)

10. முமுட்சு., சூத். எ. 7 – 21., பக். 12 – 16.

11. கு. அருணாசலக் கவுண்டர்., தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்., ப. 14.

12. பகவத் கீதை., அத். 9; சு.எ. 14., ப. 86.

13. "குலம்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ்இழிந்து எத்தனை
நலம்தா னிலாத சண்டாளச் சண்டாளர்களாகிலும்
வலம் தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற்கு
ஆள் என்று உள்
கலந்தார் அடியார்தம் அடியார் எம் அடிகளே"
(நம். தி. வா. மொ. 3.7.9)

14. ஸ்ரீவசன., சூ. எ. 226., ப. 118.

15. "மொய்த்துக் கண்பனி சோர மெய்கள்
சிலிர்ப்பஏங்கி யிளைத்து நின்று
எய்த்துக்கும்பிடு நட்டமிட்டெழுந்
தாடிப்பாடியி றைஞ்சி என்
அத்தனச்ச ரங்கனுக் கடி
யார்களாகி அவனுக்கே
பித்தராமவர் பித்தரல்லர்கள்
மற்றையார் முற்றும் பித்தரே" (பெருமாள். திரு. 2.9)

16. கு. அருணாசலக் கவுண்டர்., தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்., ப. 9.

17. A. Ramaswami Ayyar., *Sri Krishna Sikyostsava Prabanda.*, P. VIII.

18. மு. இராகவையங்கார்., ஆழ்வார்கள் கால நிலை., ப. 116.

19. "சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து, உன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றமேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து, நீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது,
இற்றைப் பறைகொள்வா னன்று காண்கோவிந்தா
எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம்"
(திருப். 29)

20. ஆர். வீரபத்திரன்., பாவை நோன்பு – வரலாறும் இலக்கிய மரபுகளும்., ப. 68.
21. "மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாயத் தொடங்கினார்க்கு வார்த்தைச் சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"
(தாயு. பராபரக். 154)
22. பெரிய. திரு. மொ. 2.10., திருநெடுந். 6,7,17,23.
23. பெரிய. திரு. மொ. 8.1 – 8.10. நம். தி. வா. மொ. 9.10., பெரு. திரு. 8.
24. பெரிய. திரு. மொ. 9.1.
25. பெரிய. திரு. மொ. 7.10., 10.1.1., 11.6.7., சிறிய. தி. ம. 71.
26. பூத. இ. திரு. (29); பேய். மூ. திரு. (51); பேய். மூ. திரு. (42,65); பேய். மூ. திரு. (54); பேய். மூ. திரு. (49).
27. பெரிய. திரு. மொ. 1.8., பேய். மூ. திரு. 68 பெரிய. திரு. மொ. 5.6., பூத. இ. திரு. 28.

# தொகுப்புரை

"நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் கண்ணன்" என்னும் நோக்கில் நிகழ்த்தப் பெற்ற இவ்வாய்வின், முடிபுக் கருத்துக்கள் கீழ்வருமாறு தொகுத்துரைக்கப்படுகின்றன.

சமயப் பண்பாடுகளில் மிகப் பழமை வாய்ந்த நம் நாட்டில், தொன்று தொட்டு வரும் வைதிக சமயங்களில் வைணவ சமயம் ஒன்றாகும். இதற்கு, வேதங்களும் இதிகாச புராணங்களும் சிறந்த சான்று நூல்களாகக் கொள்ளப்பட்டு வருகின்றன.

1. வேத காலத்திற்கு முற்பட்டதாக மாயோன் வழிபாடு உருவாகியிருக்கிறது என்று கருதப்பட்டு வருகிறது. முல்லை நிலத்திற்குரிய தெய்வமாக மாயோன் போற்றப்பட்டு வந்திருக்கிறான் எனவே, தொல்காப்பியக் காலத்திற்கு முன்பே கண்ணன் வழிபாடு இருந்திருக்க வேண்டும் என்று அறிய வாய்ப்புள்ளது. மாயோன் என்பதும் கண்ணன் என்பதும் ஒரே பெயரைக் குறிப்பவை என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது.

2. சங்க இலக்கியங்கள் சமயச் சார்பற்றவை என்னும் சமயச் சிந்தனை அற்றவை அல்ல. சங்க நூல்களில் கிடைத்துள்ள திருமால் பற்றிய குறிப்புக்களில் கண்ணன் பற்றிய செய்திகள் சிறப்பாகப் பேசப்பட்டு வந்திருக்கின்றன. கிருஷ்ணனின் நிறம், பெயர், திருவிளையாடல்கள் ஆகிய செய்திகள் பற்றிச் சங்கப் புலவர்கள் அறிந்திருக்கின்றனர். அச்செய்திகளை உவமைகளாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். என்னும், அவைகள் இதிகாச புராணங்களோடு ஒத்து இயைவனவாக அமைந்துள்ளன.

அ) சங்கப் பாடல்களில் கண்ணனோடு பலராமன் இணைத்தே பேசப்பட்டு வந்திருக்கிறான். இருவரையும் இருபெருந்தெய்வமாகப் போற்றியதோடு அன்றி, சிவன் முருகன் வணக்கத்தோடு ஒத்தும் போற்றி வந்திருக்கின்றனர். அவர்களிருவரும் ஒன்றாக இணைந்து கோயில் கொண்டிருந்தனர் என்பதற்கான சான்று பரிபாடலில் கிடைக்கின்றது. இதனால் கிருஷ்ண

பலராமன் வணக்கம் சங்க காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்திருக்கிறது.

ஆ) திருமால் பற்றிய தத்துவ வளர்ச்சியும், அவதாரக் கருத்துக்களும் பரிபாடல் காலத்தில் உச்சநிலை எய்தி இருந்தன. எனவே, தமிழக வைணவ-இடைக்கால வைணவ வளர்ச்சிக்குப் பரிபாடல் வழி வகுத்துக் கொடுத்துள்ளது. கண்ணன் விஷ்ணுவோடு இணைத்துப் பேசப்பட்டுப் பெருந்தெய்வ நிலைக்குஉயர்ந்திருக்கிறான் என்பது தெரிய வருகிறது.

இ) தமிழ் இலக்கியங்களில் மட்டுமன்றி, சமண பௌத்த இலக்கியங்களான - பண்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி முதலியவற்றில் கண்ணன் பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் கண்ணனின் ஆயர்பாடிச் செயல்கள் அதிகம் இடம் பெறத் தொடங்கியுள்ளன. இதன் வளர்ச்சியாக ஆழ்வார்கள் கண்ணனின் பிள்ளைமைச் செயல்களில் ஆழங்கால்பட்டிருப்பது அறிய வருகின்றது.

ஈ) கண்ணன் நாராயணனாகப் போற்றப்பட்டு வந்திருக்கிறான் என்பதற்குச் சிலப்பதிகாரம் சான்றாகும்.

உ) அரசனை மாயோனோடு ஒப்பிட்டுக் காணும் முறை சங்க காலத்தில் இருந்திருக்கிறது. ஆனால், காப்பிய காலத்தில் இந்நிலை மாறி, சாதாரண மனிதனுடன் மாயவனை ஒப்பிட்டுக் காணும் வழக்கு இருந்திருக்கிறது (கோவலன், சீவகன் இவர்களைக் கண்ணனோடு ஒப்பிடுதல்),

ஊ) கண்ணன் பலராமன் இவர்களோடு நப்பின்னை என்பவளையும் இணைத்துப் பேசிய முறையானது முதல் முதலில் காப்பியங்களில் காண முடிகிறது. மூவரும் குரவைக் கூத்து ஆடியதாகக் குறிப்பிடப்படுகிறது.

எ) கண்ணனும் பலராமனும் இணைந்து கோயில் கொண்டிருந்த வழக்கானது சிலப்பதிகார காலத்தில் வழக்கற்றுவிட்டது. காவிரிப்பூம்பட்டினத்தில் இருவரும்

தனித்தனியேகோயில் இருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது இக்காலத்தைத் தொடர்ந்து, பலராமனைப் பற்றிய கருத்துக்கள் அதிகம் செல்வாக்குப் பெறவில்லை.

ஏ) சங்க காலத்தைவிட, காப்பிய காலத்தில் கண்ணனின் பெருமை சிறப்பாகப் பேசப்பட்டு வந்திருக்கிறது. எனவே, தொடக்கத்தில் கண்ணன் வழிபாடு ஓரினத்தார்க்கு ஒரு குறிப்பிட்ட நிலத்தார்க்கு உரியதாய் இருந்து பின்னர் அனைத்து நிலத்தார்க்கும் உரியதாய், காலப் போக்கில் வைணவ மரபில் கலந்து பெருந்தெய்வ நிலைக்கு உயர்ந்து விட்டதைக் காண முடிகிறது.

3. சங்க காலத்தில் முகிழ்ந்த வைணவ சமயம் பல்லவர் காலத்தில் பக்தி இயக்கமாக வளர்ந்து, ஆழ்வார்களால் செல்வாக்குப் பெற்று பரவியுள்ளது.

அ) நாராயண – விஷ்ணுவின் பல்வேறு அவதாரங்கள் மற்றும் அவ்வவதாரங்களின் வழிபாடுகள் இவற்றைச் சுற்றியே வைணவம் வளர்ந்துள்ளது. வைணவத்திற்குப் பாகவதம், பாஞ்சராத்திரம், ஏகாந்திகம், சாத்வதம், வைணவம் என்று பல பெயர்கள் ஏற்பட்டன. இவற்றுள் பாகவதர்கள் என்பது கிருஷ்ணனை வழிபடுவோரைக் குறிப்பிடுகின்றது என்று கூறப்படுகின்றது. கிருஷ்ணன் வைணவச் சமயக் கடவுளாகக் கருதப்பட்ட பிறகு, பாகவத சமயம் வைணவ சமயமாகப் பரிணமிக்கத் தொடங்கியது. இதனால், பாகவதர்கள் வைணவர் களாயினர்.

ஆ) அவதாரக் கோட்பாட்டைத் தனது அடிப்படைகளில் ஒன்றாகக் கொண்ட வைணவ சமயம் மானுட நிலையினை உணர்வுப் பூர்வமாக வெளிப்படுத்தும் இலக்கியங்களைத் தோற்றுவித்துள்ளது என்பதனைத் திவ்வியப் பிரபந்தம் வெளிப்படுத்துகிறது.

4. ஆழ்வார்கள் அனைவரும் கிருஷ்ணாவதாரத்தில் ஆழங் கால்பட்டு அனுபவித்திருக்கின்றனர். அவ்வவதாரம் ஆழ்வார்கள் காலத்திற்கு அண்மையில் நிகழ்ந்ததாகக் கருதப்படுவதால், அவர்களுக்குக் கிருஷ்ணவதாரத்தின் மீது மிகுந்த ஈடுபாடு ஏற்பட்டிருந்திருக்கிறது.

அ) திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களில் பரக்கக் காணப் படுவது கண்ணன் திருவிளையாடல்களே ஆகும். அவைகளைக் கண்ணன் செய்த குறும்புகள், கண்ணனது வீரதீரச் செயல்கள், கண்ணன் இறைமைத் தன்மை, பாசுரங்களில் இடம்பெறும் கண்ணன் பற்றிய தமிழ் நாட்டு வழக்குகள் என்ற நான்கு பார்வைகளில் பிரித்து, ஆழ்வார்கள் அனுபவித்தது சிறப்பாக எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

ஆ) ஆழ்வார்களால் அனுபவிக்கப்பட்ட கண்ணன் திருவிளையாடல்கள், மகாபாரதம், ஹரிவம்சம், விஷ்ணுபுராணம், பாகவத புராணம் ஆகியவற்றின் கருத்துக்களோடு ஒத்து இயைவனவாக அமைந்துள்ளன. ஆழ்வார்களின் நோக்கம் கண்ணனது லீலைகளைப் பாடி மகிழ்வதே என்று கூறுமளவிற்கு அந்த லீலைகளில் திளைத்து, மோகித்துக் கிடந்திருக்கின்றனர். அந்த அளவிற்குக் கண்ணனது இளமையழகும் தெய்வீகக் குறும்புகளும் அவர்களது உள்ளத்தைக் கவர்ந்திருக் கின்றன.

இ) புராணங்களில் குறிப்பிடப்படாத சில கூறுகள் தமிழ் நாட்டு வழக்குகளாக இருந்திருக்கின்றன. குருந்தொசித்தல், குரவைக் கூத்து, குடக்கூத்து, நப்பின்னைத் திருமணம், ததிபாண்டவன் கதை முதலிய சரிதங்கள் தமிழ் நாட்டில் வழங்கி வந்திருந்ததை ஆழ்வார்களும் குறிப்பிட்டிருக்கின்றனர். எந்த வித அடிப்படைச் சான்றும் கிடைக்கப்பெறாத இக்கூறுகள் பண்டைக் காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததைப் பக்தி இயக்கக் காலத்தில் ஆழ்வார்கள் வெளிப்படுத்தி யுள்ளமை, அவற்றின் சிறப்பினைக் காட்டுகிறது.

5. ஆழ்வார்கள் கண்ணனது திருவிளையாடல்களைப் பாடிப் பரவுதல் என்பது ஒரு வகை பக்தி அனுபவமாகும். இதன் விளைவாக, மேலும் அவர்கள் பக்தி நெறியில் ஈடுபட்டுத் தமது பக்தி அனுபவங்களை வெளிப்படுத்தவும், கண்ணனை அகப் பொருள் தலைவனாகக் கொண்டு அகப்பொருள் அனுபவங் களைப் பாடுதற்கும், தாம் பெற்ற இன்பங்கள்—அனுபவங்கள்

உலகத்தினரும் பெற வேண்டும் என்ற நோக்கில் வழிபாட்டு நெறிகளை உணர்த்தவும் கிருஷ்ணாவதாரம் இடமளித்துள்ளது. இக்கோணங்களில் கண்ணனது சிறப்புக்கள் இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன.

அ) இறைவனைப் பாடுவது என்பது இறைவன் திருக்கோயில்கள், இறையழகு இவற்றைப் பாடுவதோடன்றி இறையனுபவத்தைப் பாடுவது என்பது பக்தி இலக்கியத்தின் நோக்கமாகும். அந்த வகையில், பேரழகனாக விளங்கும் கண்ணனால் கவரப்பட்டு, புலன்கள் அனைத்தும் இறைபக்தியில் ஈடுபட்டு நிற்கும் உணர்வினை – அனுபவத்தை ஆழ்வார்களிடத்துக் காணமுடிகிறது.

ஆ) கண்ணனை மனக் கண்ணால் கண்ட மாத்திரத்தில் அவனருளால் ஞானம் பெற்று, மானுட உடம்பில், ஒருவன் இறைவனுடன் கலந்து திவ்விய ஞானம் பெற முடியும் என்பதற்கு ஆழ்வார்களின் பக்திப் பனுவல்கள் சான்றாக அமைகின்றன. அந்த அளவிற்குப் புவனசுந்தரனாகப் போற்றப்பட்டு வரும் கண்ணனின் அழகினைப் பல்வகைகளில் பாடி மகிழ்திருக்கின்றனர்,

6) பக்தி இலக்கியங்களில் அகப்பொருள் கலந்து பாடுதல் என்பது ஒரு மரபாகப் பின்பற்றப்பட்டு வருகிறது. அவ்வகையில், வைணவப் பக்தி இலக்கியமான ஆழ்வார்களின் பக்திப் பனுவல்கள் விலக்கல்ல. நாயக-நாயகி பாவம் சிறப்பிடம் பெற்றாலும், ஆழ்வார்கள் தோழி, தாய் என்ற நிலைகளிலும் நின்று பாடுதலை தமது அகப்பொருள் அனுபவங்களாகக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கச் செய்தியாகும்.

அ) ‘உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தும் பெண்களே; பரமபுருஷன் ஒருவன் மட்டுமே ஆண்’ என்ற வைணவக் கொள்கை கிருஷ்ணாவதாரத்திற்குப் பொருந்துவதாகிறது. கிருஷ்ணன் குறும்புகள் செய்தது அதிகமாக பெண்களிடத்திலாகும். பரமான்மா மற்றும் ஜீவான்மாவிற்குமிடையே உள்ள உறவினை விளக்குவதாகக் கிருஷ்ணாவதாரம் அமைந்துள்ளது. இதனை நன்கு அறிந்திருந்த ஆழ்வார்கள் தலைவி நிலையோடு

நின்று விடாது, தாய் தோழி என்ற பாவனைகளிலும் பாடியிருத்தல் இதன்பாற்படுகிறது.

ஆ) ஆழ்வார்கள் பாடிய அகப்பொருள் பாசுரங்களில் புணர்ச்சி நிலையிலானப் பாசுரங்களை விட பிரிவுநிலை பாசுரங்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. பிரிவுத் துயரில்தான், ஆன்மா, இறைவனோடு. கூட வேண்டும் என்ற ஆசை வலிமை பெறுகிறது என்பது விளக்கப் படுகிறது.

இ) அகப்பொருள் மரபினை அடியொற்றிப் பாடியிருப் பினும் சுவைக்காக – பக்தியின் அனுபவத்தை வலியுறுத்துவதற்காக அம்மரபில் சில புதுமைக் கூறுகளையும் பயன்படுத்தியிருக்கின்றனர். கண்ணனை மையமாக வைத்துப் பாடுவதால், கோபிகை பாவனையிலும் நின்று பாடியிருத்தல் சிறப்பான செய்தியாகும்.

ஈ) ஆண்டாளின் காதல் அனுபவத்தில் மேற்கொள்ளப் பட்டுள்ள கனவு காணும் நிலையானது, ஒரு புதிய உத்தியாகும். கண்ணனைத் திருமணம் செய்து கொள்வதாகக் கனவு காணும் நிலை, பிற பக்திப் பாடல்களைக் காட்டிலும் மாறுபட்டுக் காணப்படுகிறது. தமிழிலிருந்த அகப்பொருள் பாடல்களில் இது போன்று திருமணச் சடங்குகள் கனவின் மூலம் கூறப்படவில்லை என்பதால் புதிய அனுபவமாகக் கொள்ள முடிகிறது.

உ) திவ்வியப் பிரபந்தத்தில் காணப்படும் தூதுப் பாசுரங்களும் ஒரு புதிய கோணத்தில் அமைந்துள்ளன. பறவைகளைத் தலைவனிடத்துத் தூது விடும் அக இலக்கிய மரபினைப் பின்பற்றி, இறைவனின் நிலைகளான பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய நிலைகளிலும் தூது அனுப்பும் முறை ஒரு புதிய சிந்தனையாக உள்ளது.

ஊ) ஆழ்வார்கள் காட்டியுள்ள அகப்பொருள் சிந்தனையில் நற்றாய் பேசுமிடங்கள் குறிப்பிடத்தக்கன, செவிலித் தாயின் பங்கு அதிகமாகக் காணப்படும் அக இலக்கிய மரபினை அடியொற்றி ஆழ்வார்கள், பாசுரங்களில்

செவிலித்தாய்க்கு இடமே இன்றி, நற்றாய் பங்கு அதிகமாகக் குறிப்பிடுவது புதிய செய்தியாகும். மேலும், தாய் தலைவனிடத்துத் தலைவியின் காதல் நிலையினைப் பற்றி எடுத்துக் கூறுவதும், தலைவனது நிலையினைப் பழிப்பதுமான கூறுகள் அகத்திணை மரபுகளில் காணப்படாத ஒரு புதிய நோக்காகும்.

எ) திருமங்கை ஆழ்வார் ‘மடல்’ எனும் துறையைப் பெருக்கித் தனியே பிரபந்தமாக உருவாக்கிய நிலை தமிழ் அக இலக்கியத்தில் நிகழ்ந்த ஒரு புதிய மாற்றம் ஆகும். பெண்கள் மடலூர்வதாக அச்சுறுத்துவது அகப்பொருள் துறையைச் சார்ந்தது என்றாலும், வடமொழி மரபினை மனத்திற்கொண்டு, காதல் உறுதியை வெளிப்படுத்தப்பயன்படுத்திய முறை புதிய சிந்தனையாக அமைந்துள்ளது.

7 ஆழ்வார்கள் பழைய தமிழ் மரபுகளைப் பின்பற்றி அம்மரபுகளுக்கு அடங்கியும், அம்மரபுகளிலிருந்து சற்று விலகி ஒரு புதிய சிந்தனையில் பாடியிருப்பதும் அறியத்தக்கது. இது ஒரு புதிய மரபாக தோற்றம் பெற்று, இலக்கிய வரலாற்றில் ஒரு வளர்ச்சி உண்டாக வழி ஏற்படுகிறது என்ற எண்ணத்திற்கு ஆழ்வார்களின் அகப்பொருள் அனுபவங்கள் இடமளித்துள்ளன. ஆழ்வார்களின் இந்த அகப்பொருள் கூறுகள், சிற்றின்பத்தைப் பாடுவதாகக் கொள்ளாது. பேரின்ப நிலையை எய்துவதற்கான பாடல்கள் என்று கொள்ளுதல் சிறப்பானதாகும். அந்த அளவிற்குக் கண்ணனது ஆண்மையும், வடிவழகும், சில குணமும் அவர்களை இந்தப் பெண் நிலைக்கு இட்டுச் சென்றிருக்கின்றது.

8. ஆழ்வார்கள் கண்ணனைப் பல்வகைகளில் அனுபவித்துள்ளமை விளைவாக மக்களுக்கு வழிபாட்டு நெறிகளை உணர்த்தியிருக்கின்றனர். கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம் என்னும் இந்நெறிகளுள் ஒன்றாகப் பக்தியைக் குறிப்பிட்டிருந்தனர். இறைவனிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொள்ளும் சரணாகதி மார்க்கத்தினைப் பக்தியோடு இணைத்துக் காட்டியுள்ளனர். மனிதப் பிறவியின் பயன் பிரபத்திச் செய்வதே என்பதனை வலியுறுத்திக் காட்டியுள்ளனர்.

அ) கண்ணனது அருளைப் பெறவும், திருவடிப்பயன் எய்தவும், வழிபாடு செய்யும் முறைகள் பற்றியும், ஆழ்வார்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். குறிப்பாக கலியுகத்தில் கண்ணனது திருநாமங்களை ஓதுவதாலும் அவனது பெருமைகளைப் பாடுவதாலும் ஏற்படும் பலன்களைச் சிறப்பாக எடுத்துரைத்துள்ளனர்.

ஆ) பக்தி முறைகளில் பகவத் பக்தி, பாகவத பக்தி இந்த இரண்டின் சிறப்பினை ஆழ்வார்கள் விளக்கியுள்ளனர். பிரபத்தி மார்க்கத்தில், இவ்விரண்டும் அடங்குகிறது. பகவத் பக்தியைக் காட்டிலும் பாகவத பக்தியே (அடியவர்த் தொண்டு) சிறந்தது என்ற வைணவக் கொள்கையினை வலியுறுத்திக் காட்டியுள்ளனர். இறையருளைப் பெற பிறப்பு, குலம் என்ற வேறுபாடு காணாது, உண்மையான இறையன்பு கொள்ளுதலே சிறப்புடைத்து என்பதும் புலப்படுத்தப்பட்டுள்ளது.

இ) மார்கழி மாத நோன்பான பாவை நோன்பு பற்றியும் விளக்கப்பட்டுள்ளது. ஆண்டாளது பாவை நோன்பு, கண்ணனைத் துதி பாடுதலை மையமாகக் கொண்டு அமைந்துள்ளது. அந்நோன்பு மேற்கொள்ளும் முறையினையும், அதனால் ஏற்படும் பலன்களையும் எடுத்துக் கூறி உலகத்து மக்களை ஆற்றுப்படுத்துவதாகப் பாவை நோன்புப் பாசுரங்கள் அமையப் பெற்றுள்ளன. இவ்வகையில், காத்யாயினி வழிபாட்டில் – பாவை நோன்பில் கண்ணன் வழிபாடு கலந்து விட்டதைக் காணமுடிகிறது. இதனால், வைணவர்கள் திருப்பாவையை நாளுக்கொரு பாசுரமாக மார்கழி மாதம் முழுவதும் ஓதி வருவது கண்ணன் வழிபாட்டை உணர்த்துகிறது.

9. கண்ணனின் திருவிளையாடல்களைப் பாடி அனுபவித்த ஆழ்வார்கள் கண்ணனை நாராயணனாக – பிரபஞ்ச கர்த்தாவாகப் போற்றி வந்துள்ளமை பாசுரங்கள் வழி அறிய முடிகிறது.

10. ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்தருளிய, திவ்விய தேசங்களில் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதார மூர்த்திகளைக்

கண்ணனாகக் கண்டு பாசுரங்கள் பாடியிருக்கின்றனர். கலியுகத்தில் இறைவனின் ஐவகை நிலைகளுள் அர்ச்சாவதார நிலையே சிறப்பாகப் போற்றப்பட்டு வருகிறது என்பதனை ஆழ்வார்கள் வலியுறுத்திக் காட்டியிருக்கின்றனர். கண்ணனை எவ்வகையெல்லாம் அனுபவிக்க முடியுமோ அந்த அளவிற்கு ஆழங்கால்பட்டு அவனருளைப் பெற முடியும் என்பதனை உறுதிப்படுதியிருப்பது ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் மூலம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இதனால் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் பொதுமக்கள் பக்தி இலக்கியமாக-பிரபத்தி இலக்கியமாகப் போற்றப்பட்டு வருகிறது.

# துணைநூற்பட்டியல்

**மூலநூல்:**

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (பாகம்.- 1) தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை, மறுபதிப்பு - 1991.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (பாகம் - 2) தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை, மறுபதிப்பு - 1991.

**உரைநூல்கள்:**

இயற்பா ஆயிரத்தின் முதல் ஸம்புடம் (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கராசாரியார்., (உ.ஆ) கிருந்த மாலா ஆபீஸ். காஞ்சிபுரம், நான்காம் பதிப்பு - 1960.

திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவெழுக் கூற்றிருக்கை, சிறிய திருமடல் - பெரிய திருமடல் (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கராசாரியார். (உ.ஆ) கிருந்த மாலா ஆபீஸ், காஞ்சிபுரம், ஐந்தாம் பதிப்பு - 1980

திருமங்கை மன்னன் அருளிய பெரிய திருமொழி (3,4,5 - பத்துக்கள்) (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கரா சாரியார்., (உ.ஆ) கிருந்த மாலா ஆபீஸ், காஞ்சிபுரம், மூன்றாம் பதிப்பு - 1953

திருமங்கை மன்னன் அருளிய பெரிய திருமொழி (6,7,8,9 - பத்துக்கள்) (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கரா சாரியார்., (உ.ஆ) கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம், மூன்றாம் பதிப்பு - 1956.

திருமங்கை மன்னன் அருளிய பெரிய திருமொழி (10, 11 - பத்துக்கள்) (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கரா சாரியார், (உ.ஆ) கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம், மூன்றாம் பதிப்பு - 1956.

திருமங்கை மன்னன் அருளிய சிறிய திருமடல் (திவ்யார்த்த தீபிகை உரை) கிருஷ்ணசுவாமி அய்யங்கார். எஸ். (பதி. ஆ) ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்ஸனம் வெளியீடு, திருச்சி, இரண்டாம் பதிப்பு – 1975.

திருமழிசைப்பிரான் அருளிச் செய்த திருச்சந்த விருத்தம் (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கராசாரியார். (உ.ஆ) கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம், 1976.

திருவாய்மொழி (பகுதி. 1 – முதற்பத்து) (ஈட்டின் தமிழாக்கம்) புருஷோத்தமநாயுடு, பு ரா., சென்னைப் பல்கலைக் கழகம், நான்காம் பதிப்பு – 1980.

திருவாய்மொழி (பகுதி 3 – மூன்றாம் பத்து) (ஈட்டின் தமிழாக்கம்) புருஷோத்தமநாயுடு, பு. ரா., சென்னைப் பல்கலைக் கழகம், நான்காம் பதிப்பு – 1939.

திருவாய்மொழி (பகுதி. 6 - ஆறாம் பத்து) (ஈட்டின் தமிழாக்கம்) புருஷோத்தமநாயுடு, பு. ரா., சென்னைப் பல்கலைக் கழகம். மூன்றாம் பதிப்பு – 1989.

திருவாய்மொழி (பகுதி 7 – ஏழாம் பத்து) (ஈட்டின் தமிழாக்கம்) புருஷோத்தமநாயுடு, பு. ரா., சென்னைப் பல்கலைக் கழகம். மூன்றாம் பதிப்பு – 1989.

திருவாய்மொழி (பகுதி 8 – எட்டாம் பத்து) (ஈட்டின் தமிழாக்கம்) புருஷோத்தநாயுடு, பு. ரா., சென்னைப் பல்கலைக்கழகம், மூன்றாம் பதிப்பு – 1957.

திருவாய்மொழி (பகுதி. 9 – ஒன்பதாம் பத்து) (ஈட்டின் தமிழாக்கம்) புருஷோத்தமநாயுடு, பு. ரா., சென்னைப் பல்கலைக்கழகம், மூன்றாம் பதிப்பு – 1989.

நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாசிரியமும் பெரிய திருவந்தாதியும் (திவ்யார்த்த தீபிகை உரை) பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார்., (உ.ஆ) (பதிப்பு இல்லை) (ஆண்டு இல்லை)

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம் வேங்கடசாமிரெட்டியார்.,கி, (உ.ஆ) ஸ்ரீமத் ஆண்டவன் பெரியாசரமம், திருச்சி. 1984

பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும் (முதல் இருநூறு பாசுரங்கள்) ஞானசுந்தரம், தெ, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், மறுபதிப்பு - 1989

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், எஸ்., (பதி. ஆ) ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்ஸனம் வெளியீடு, திருச்சி. இரண்டாம் பதிப்பு - 1975.

பெரியாழ்வார் அருளிச்செய்த திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கரா சாரியார்., (உ.ஆ) கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம், ஐந்தாம் பதிப்பு - 1972.

முதல் திருவந்தாதியும் இரண்டாம் திருவந்தாதியும் (திவ்யார்த்த தீபிகை உரை) அண்ணங்கராசாரியார்., (உ.ஆ) கிரந்த மாலா ஆபீஸ், காஞ்சிபுரம், ஐந்தாம் பதிப்பு - 1973.

இதிகாசம் மற்றும் புராணங்கள்

புராண ரத்தினம் என்னும் ஸ்ரீ விஷ்ணு புராணம் ஸ்ரீநிவாச ராகவாசாரியார்., (தமிழாக்கம்) பி. இரத்தின நாயக்கர் அண்ட் சன்ஸ் சென்னை, 1969.

வியாசர் அருளிய காபாரதம் (இரண்டாம் பகுதி) நடராஜன், அ. லெ., (தமிழாக்கம்) அருணா பப்ளி கேஷன்ஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு - 1964.

வியாசர் அருளிய மகாபாரதம் (மூன்றாம் பகுதி) நடராஜன், அ. லெ., (தமிழாக்கம்) அருணா பப்ளி கேஷன்ஸ், சென்னை, 1964.

வியாசர் அருளிய மகாபாரதம் (நான்காம் பகுதி) நடராஜன், அ. லெ., (தமிழாக்கம்) அருணா பப்ளி கேஷன்ஸ், சென்னை, 1964.

ஸ்ரீமத் பகவத் கீதை அண்ணா., (உ.ஆ), ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை, ஆறாம் பதிப்பு - 1975.

ஸ்ரீமத் பாகவத ஸாரம் (முதல் பாகம்) அண்ணா., (உ. ஆ), ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை, ஆறாம் பதிப்பு - 1965.

ஸ்ரீமத் பாகவத ஸாரம் (இரண்டாம் பாகம்) அண்ணா., (உ.ஆ), ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை, ஆறாம் பதிப்பு - 1966,

ஹரிவம்சம் (முதல் பாகம்) ராமானுஜய்யங்கார், வ. வே. எஸ். குரு அச்சகம், சென்னை, 1993.

இலக்கியங்கள்

அஷ்டபிரபந்தம் (இரண்டாம் தொகுதி) பிள்ளைப் பெருமாள் ஐய்யங்கார், கோபாலகிருஷ்ணமாசாரியர், வை. மு. (உ. ஆ) வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி, நான்காம் பதிப்பு - 1966.

கம்பர் இயற்றிய கம்பராமாயணம் (ஆரணிய காண்டம்) (முதற் பகுதி) அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1963.

கலித்தொகை நச்சினார்க்கினியர், (உ.ஆ) கழக வெளியீடு, சென்னை, ஏழாம் பதிப்பு, 1967.

சிலப்பதிகாரம் சோமசுந்தரனார், பொ. வே., (உ ஆ) கழக வெளியீடு, சென்னை, 1977.

சீவக சிந்தாமணி நச்சினார்க்கினியர்., (உ.ஆ), கபீக அச்சகம், சென்னை, ஏழாம் பதிப்பு, 1969.

தண்டியலங்காரம் இராமலிங்கத் தம்பிரான். கொ., (உ.ஆ) கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு - 1969.

தாயுமானவர் பாடல்கள் இரத்தின நாயக்கர் சன்ஸ், திருமகள் விலாசம், சென்னை, 1957.

திருக்குறள் வரதராசனார். மு., (உ.ஆ), கழக வெளியீடு, சென்னை, 1980.

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் சைவ சித்தாந்த சமாஜம், 1935.

திருமந்திரம் மூவாயிரம் இராமநாதப் பிள்ளை, ப., (உ ஆ) கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு - 1980.

தொல்காப்பியம் (பொருளதிகாரம்) நச்சினார்க்கினியர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1967.

பத்துப்பாட்டு (முதல் பகுதி) சோமசுந்தரனார். பொ. வே., (உ.ஆ) கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1973.

பத்துப்பாட்டு (இரண்டாம் பகுதி) சோமசுந்தரனார். பொ. வே., (உ.ஆ) கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1973.

பதினெண்கீழ்க்கணக்கு கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1970.

பரிபாடல் சோமசுந்தரனார். பொ. வே., (உ.ஆ.) கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1975,

பிங்கல நிகண்டு பிங்கல முனிவர்., கழக வெளியீடு, சென்னை, 1968.

மணிமேகலை சோமசுந்தரனார். பொ. வே. (உ.ஆ.), கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1971.

**தமிழ் நூல்கள்**

அக்னிஹோத்ரம் ராமாநுஜதாதாசாரியார்., 'வரலாற்றில் பிறந்த வைணவம்', ஸ்ரீ சாரங்கபாணி சுவாமி தேவஸ்தானம், கும்பகோணம், 1973.

அரங்கராஜன், இரா., 'திருவாய்மொழிப் பேருரையாளர் நம்பிள்ளை உரைத்திறன்' அமுத நிலையம், சென்னை 1986.

அருணாசலம்., 'வைணவ சமயம்', பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1982.

அருணாசலம்., 'பக்தி இலக்கியம்' (பதிப்பு இல்லை) (ஆண்டு இல்லை)

அருணாசலம்பிள்ளை. மு., தொல்காப்பியம் அகத்திணை இயல் உரைவளம்' மதுரைப் பல்கலைக்கழகம், 1975.

அருணாசலக்கவுண்டர். கு,, 'தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்', சமுதாயம் பிரசுராலயம், கோவை, 1982.

இந்திரபவாநி. வ., 'சங்க நூல்களில் கிருஷ்ண வழிபாடு' International Printers & Publishers, Madras. 1985.

இந்திரா பார்த்தசாரதி., வெங்கடராமன். சு. (தமிழாக்கம்) 'தமிழிலக்கியங்களில் வைணவம்', தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1992.

இராகவையங்கார்.மு., 'ஆராய்ச்சித் தொகுதி', தமிழ்ப் பல்கலைத் தமிழ், தஞ்சாவூர். 1984.

இராகவையங்கார் மு., 'ஆழ்வார்கள் காலநிலை', மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

இராசமாணிக்கனார். மா., மொஹஞ்சோதாரோ அல்லது சிந்து வெளி நாகரிகம்', கழக வெளியீடு, சென்னை, 1972.

இராதாகிருஷ்ணன்., (பதி.ஆ.), கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருளியல் இயல் வரலாறு', தொகுதி.1., அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1970.

இராமஸ்வாமி சாஸ்திரி வி.எஸ் , ஸ்ரீகிருஷ்ண சரித்திர விமர்சம்', தமிழ்ச்சங்க பிரசுரம், மதுரைத் தமிழ்ச் சங்க முத்திராசாலை, 1938.

குலசேகரன். எஸ் , 'வைணவத்தின் ஆழ்வார்கள் காலநிலை', திருமகள் வெளியீடு, சென்னை, 1988.

சாமிநாத ஐயர். உ வே., 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்', சென்னை ஆனந்தா அச்சுக்கூடம், 1929.

சித்பவானந்தர் சுவாமி., கண்ணன் என்னும் கடவுள்' ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, எட்டாம் பதிப்பு, 1991.

சித்பவானந்தர் சுவாமி , 'ஸ்ரீமத் பகவத் கீதை' ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, இருபத்திரண்டாம் பதிப்பு, 1994.

சிவத்தம்பி. கா , 'தமிழிலக்கியத்தில் மதமும மானுடமும்'. (இலக்கிய விமர்சனம்), தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1983.

சுப்பு ரெட்டியார். ந.,'முத்திநெறி', பாரி நிலையம், சென்னை, 1982.

சுப்பு ரெட்டியார். ந., 'விட்டு சித்தன் விரித்த தமிழ்', பாரி நிலையம், சென்னை, 1987.

சுப்பு ரெட்டியார். ந , 'வைணவ உரைவளம்', பாரி நிலையம், சென்னை, 1985.

சுவிரா ஜெயஸ்வால் , 'வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்', நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1991.

ஞானசுந்தரம். தெ , 'வைணவ உரைவளம்', தாயம்மை பதிப்பகம், சென்னை, 1989.

தாமோதரன் கு.. 'ஆழ்வார் திருவுள்ளம்', பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1978.

திருநாவுக்கரசு க. த., 'வாழ்வும் இலக்கியமும்', மணியகம், கோட்டூர்த் தோட்டம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1979.

